கழக வெளியீடு : கககக

உ

ஆதிபகவன் துணை

திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த

# திருக்குறள்

மூலமும் பரிமேலழகருரையும்



ஏனை உரையாசிரியர் உரையும் விளக்கமும்

அருஞ்சொற்பொருளகராதியும்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.,

திருநெல்வேலி–6. சென்னை–1

1967

உ

ஆதிபகவன் துணை

# பதிப்புரை

உலகில் மக்களறியுமாறு உண்மையுணர்த்தும் ஆசிரியர் இரு பெரும் பிரிவினுள் அடங்குவர். அவருள் வினையினீங்கி விளங்கிய அறிவினையுடையார் ஒருவகையர். அம்மெய்யறிவுடையரல்லராய் அளவை முறைப்படி நுணுகி ஆராய்ந்து அறியும் கருவியறிவினையுடையார் மற்றொரு வகையர், இவ்விருவகையினருள் இந்நூலாசிரியராகிய திருவள்ளுவர்போன்றார் முதற்பிரிவினருளடங்குவர். தமிழ் இலக்கண இலக்கிய நூல்களுக்கு உரையாசிரியர்களாய் உரையெழுதிய ஆசிரியர் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் முதலியவர்கள் இரண்டாவது பிரிவினருள் அடங்குவர். இவர்கள் ஆழ்ந்தகன்ற நுண்ணிய ஆராய்ச்சி அறிவுடையவர்களாவர்.

இவ்வாராய்ச்சியறிவில் எவர் எந்தெந்த நிலையில் ஒன்றை நோக்கினாரோ அவர் [illegible]தனையே அறியவல்லவர். ஒருவர் ஒருநிலையில் நின்று ஒன்றே நோக்கியறிந்த உண்மையைப் பிறரொருவர் பிறிதொருநிலையில் நின்று அறியவல்லாரல்லர். அதுவன்றி, ஆராய்ச்சி அறிவாளர்க்கு எவ்வகையான உள்ளச்சார்பும் உள்ளத்தடிப்பும் (Prejudice) உண்மையறிதற்குத் தடையாயுள்ளன. இத்தடைகள் முற்றும் நீங்கியவர்களை உலகிலுள்ள ஆராய்ச்சி அறிவாளரிற் காண்பதரிது.

திருக்குறளுக்குப் பத்து உரைகள் எழுதப்பட்டனவாக நாம் அறிகின்றோம். அவற்றுள் இதுவரை இரண்டு உரைகளே அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளன. அவ்விரண்டு உரைகளிலும் பரிமேலழகர் உரையே மிகச் சிறந்ததென்பதற்கு ஐயமின்று.

ஆசிரியர் பரிமேலழகர் பெரும்பகுதியான குறட்பாக்களில் எளிதில் விளங்காத மிக நுண்ணிய கருத்துக்களைக் கற்பார் யாவர்க்கும் விளங்கத் தெரிக்கும் நுண்மாண் நுழைபுலம் உடையவர் என்பது தெள்ளிதிற் புலனாம். ஆனால், இதுபற்றி அவர் எழுதிய உரைகளெல்லாம் நூலாசிரியரின் உண்மைக் கருத்துக்களை முற்றும் விளக்குவனவென்று கொள்ளுதல் தமிழறிஞர்களின் [illegible]ராய்ச்சியறிவு வளர்ச்சிக்குத் தடைசெய்வதாகும்.

யாதாமொரு குறட்பாவுக்குப் பரிமேலழகர் எழுதிய உரை பொருத்தமுடைய தன்றென்று ஆராய்ச்சியாளர்களின் அறிவிற்குப் புலப்பட்டால் அவ்வுரை எவ்வாறு பொருத்தமில்லையென்று தக்க காரணங்காட்டித் தமது கருத்தை அறிவிப்பதே உண்மையையறியும் முறைமையாம். பரிமேலழகர் உரையை மறுக்கக் கூடாதென்று பிடிவாதமாய்க் கொள்ளும் கொள்கையானது மாண்புடைத்தன்று.

மேலே கூறிய காரணங்களால் பரிமேலழகர் கண்ட உரைக்கு மாறுபாடாகக் காணப்படும் உரைகளிற் சிற்சில தமிழுலகுக்குப் பயன்படுமாறு இந்நூலிற் பிற்சேர்க்கையாக (அநுபந்தமாக)க் குறிக்கப்பெற்றுள்ளன. இதனுடன் "அருஞ்சொற் பொருள் அகரவரிசை" யொன்றுங் குறள் எண்களுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றது. மாணவர்கட்கும் ஆராய்ச்சியாளர்கட்கும் இவை பெரிதும் பயன்படுமென்று நம்புகின்றோம்.

ஆசிரியர் வள்ளுவர்பெருமான் மக்களெல்லாம் அறநெறியொழுகிப் பெரும்பயனடைய வேண்டுமென்னும் பெருநோக்குடன் செய்தருளிய இந்நூலைக் கற்பார் பலரும் எளிதிற் பெற்றுப் புலமை யடையவேண்டி மிகவுங் குறைந்த விலைக்கு அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றோம்.

இந்நூலைச் செவ்விய முறையில் அச்சிடுவதற்கு, நீண்ட காலமாகத் தங்கள்நுண்ணறிவாற் கண்ட அரும்பெருங் கருத்துக்களைத் திரட்டித் திருக்குறள் ஆராய்ச்சி முன்னுரையும் குறள் மாறுபாட்டுரைகளிற் சிலவும் எழுதி யுதவிய திருவாளர் தூ. சு. கந்தசாமி முதலியார், எம்.எ. அவர்கட்கும், திருக்குறட் பாயிரக் கருத்தும், குறள் மாறுபாட்டுரைகளிற் சிலவும் எழுதித் தந்த திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. எ. அவர்கட்கும், அருஞ்சொற் பொருளகரவரிசையைத் திருத்தம் செய்து தந்த திருவாளர் வே. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்கட்கும், அச்சியற்றுங்காற் பிழைபார்த்துதவிய காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை பி. எ. அவர்கட்கும் இக்கழகத்தின் நன்றி உரியதாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்


| | பக்கம் |
|---|---|
| ஆராய்ச்சி முன்னுரை | ௭ |
| அதிகார அகரவரிசை | ௧௭ |
| உரைப்பாயிரம் | ௧ |
| அறத்துப்பால் | |
| ௧. பாயிரம் | ௩ |
| ௨. இல்லறவியல் | ௧௯ |
| ௩. துறவறவியல் | ௮௬ |
| ௪. ஊழியல் | ௧௪௦ |
| பொருட்பால் | |
| ௧. அரசியல் | ௧௪௫ |
| ௨. அங்கவியல் | ௨௩௯ |
| ௩. ஒழிபியல் | ௩௫௯ |
| காமத்துப்பால் | |
| ௧. களவியல் | ௪௦௭ |
| ௨. கற்பியல் | ௪௩௬ |
| உரைச் சிறப்புப்பாயிரம் | ௫௦௭ |
| திருவள்ளுவமாலை | ௫௦௮ |
| ஆசிரியர் திருப்பெயர்களும் நூலின் திருப்பெயர்களும் | ௫௨௬ |
| திருக்குறட் பாயிரக் கருத்து | ௫௨௭ |
| சில குறட்பாக்களுக்கு ஏனை உரையாசிரியர் உரையும் விளக்கமும் | ௫௩௩ |
| அருஞ்சொற்பொருள் அகரவரிசை | ௫௩௯ |
| பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை | ௫௬௧ |

# ஆராய்ச்சி முன்னுரை

[சாத்தூர், வழக்கறிஞர்

திரு. தூ. சு. கந்தசாமி முதலியார் அவர்கள், எம். ஏ.]

திருவள்ளுவர் ஓர் உலக கவி: உலக கவிகளுள்ளும் அவர் தலைசிறந்த கவி. அவருள்ளத்துத் தோன்றிய கருத்துக்கள் உலக மக்க ளனைவருடைய உள்ளங்களையும் கவரும் நலமுடையன. எவராயினும் அவர்தம் அழகிய கருத்துக்களைச் செவியுறின், அவற்றின் அமைந்துள்ள நுட்பத்தையும் திட்பத்தையும் மாண்பையும் கண்டு வியவாதிரார். ஆசிரியர் தம்மறிவின் உச்சியினின் றோதுகிறாராதலின், அவர் கூறும் மொழிகள் என்றும் பொய்யா மொழிகள்; உள்ளுள்ளிருந்தெழும் கருத்துக்களை உணர்த்துகிறாராதலின், அவர் மொழிகள் உண்மை மொழிகள். ஊழிபல செல்லினும், அவர் மொழிகள் படிப்போருள்ளத்தைக் குழைவிக்கும்; கருதுவோருள்ளத்தில் மெய்ம்மையையும் அறத்தையும் நாட்டும்; நவில்வார் நெஞ்சத்தில் நவில்தொறும் நவில்தொறும் நயத்தினை நல்கும்; அவர் கூறும் பொன்மொழிகள் எந்நாட்டிற்கும் செல்சார்புடையன; ஒரு நாட்டிற்கு மட்டும் செல்சார்புடையனவல்ல. அவர் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளின் பொருள்நலத்தையறிந்து நுகர்ந்த வேற்றுநாட்டாரெல்லாரும், அக்குறளைத் தம்தம் மொழிகளில் மொழிபெயர்த்துத் தத்தம் நூற்செல்வங்களைப் பெருக்கினர். அதனைப் பயின்ற நூலாசிரியர்கள் அதன் பொருள் நலத்தையும், சொன்னலத்தையும் தம் நூல்களில் பயன்படுத்திக் கொண்டுள்ளார்கள். உலக கவிகளனைவரும் கலைச்செல்வர்: எனினும் ஏனைய உலக கவிகள் பொருட் பரப்பின் ஒருமருங்கே பற்றி நூல் செய்துள்ளார்கள்; நம் பெருங் கவி பொருட்பரப்பின் எம்மருங்கும்பற்றி நூல் செய்துள்ளார்.

திருவள்ளுவர் தமிழணங்கு பெற்ற தவப்புதல்வர். அவர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய புலவர் என, அறிஞர் சிலர் கருதுகின்றனர். சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் திருக்குறள் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. [illegible]ந்தனார் தம் 'மணிமேகலை'யில் 'தெய்வம் தொழா அள்' என்ற குற[illegible]டுத்துக் கூ[illegible], நம் தெய்வப்புலவரைப் 'பொய்யில் புலவன்' [illegible]னச் சுட்டிப் [illegible]ோந்தமை தமிழுலகம் நன்கறிந்த தொன்று. பண்டை வழக்கின்படி தம் காலத்துத் தோன்றிய ஒரு கவி, எவ்வளவு சிறப்புற்றிருப்பினும் அக் கவியை ஒருவரும் மிகப் புகழ்வதில்லை. ஆகவே, சாத்தனார் காலத்துக்கு மிகமிக முற்பட்ட காலத்தே

திருவள்ளுவர் திருக்குறளைச் செய்தாராதல்வேண்டும். அன்றியும், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் பாடிய புறநானூற்றுச் செய்யுளொன்றில் அப்புலவர் திருக்குறளிற் சிறந்த குறளும்; திருவள்ளுவர் மதியிலச்சினையை யுடையதுமாகிய 'எந்நன்றி கொன்றார்க்கும்' என்ற குறளைத் தம் பாட்டிற்கேற்றாங்கு மாற்றிப் பாடித் திருக்குறணூலை 'அறம்' எனச் சிறப்பித்து,

"நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம் பாடிற்றே யாயிழை கணவ"

என அழகுறக் கவி செய்துள்ளார். செய்ந்நன்றி கோறலை உய்வில்லதொரு குற்றமெனத் திருவள்ளுவர் திருக்குறளிற் கூறியதனையே ஆலத்தூர்கிழார் இக்கவியில் கூறுகிறார். அக் குற்றத்தை வேறு அற நூலாசிரியர் எவரும் அங்ஙனம் கண்டித்துக் கூறவில்லை. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனும் ஆலத்தூர்கிழாரும் ஒரே காலத்தவரென மதிக்க இடமுண்டு.

புறநானூற்றுள் காக்கைபாடினியார் பாடிய 'நரம்பெழுந் துலறிய' என்ற செய்யுளில் வரும் 'ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே' என்ற சொற்றொடர்க்கும், "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச், சான்றோ னெனக்கேட்ட தாய்" என்ற குறளில் வரும் 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்' என்ற சொற்றொடருக்கும் பெரிதும் ஒற்றுமையுளது. அவ்வொற்றுமையைக் கண்ட திரு. K. N. சிவராசபிள்ளை அவர்கள் காக்கைபாடினியாரைப் பின்பற்றித் திருவள்ளுவர் அச் சொற்றொடரைத் தம் திருக்குறளில் அமைத்துக் கொண்டிருப்பதாகக் கருதுகிறார்கள். காக்கைபாடினியார் திருவள்ளுவரைப் பின்பற்றி அச் சொற்றொடரை யமைத்துக் கொண்டாராகல் வேண்டும். திருவள்ளுவர் பிற்காலத்தவர் எனப் பிள்ளையவர்கள் கருதினமையால், காக்கைபாடினியாரை அவர் பின்பற்றிக் குறள் செய்தாரெனக் கூறினார்கள். தங் கொள்கையை நாட்டத் தக்க ஏது ஒன்றும் பிள்ளையவர்கள் காட்டவில்லை. திருவள்ளுவர் கூறிய சொற்றொடரின் வழித்தாயது காக்கைபாடினியார் சொற்றொடர் என்ற மெய்ம்மை, முன்னையதின் பொதுத்தன்மையையும், பின்னையதின் சிறப்புத் தன்மையையும் நோக்குவார்க்கு வெளியாம். ஆனால் ஆலத்தூர் கிழார், திருவள்ளுவரைப் பின்பற்றிச் செய்யுள் செய்துளார் என்பது, இரண்டு செய்யுட் பகுதிகளையும் ஒப்பு நோக்குவார்க்குப் புலனாம். அன்றியும், ஆலத்தூர்கிழார் தாம் வேறு ஓர் அறநூலின் கொள்கையை மேற்கொண்டு செய்யுள் செய்துளார் என்று குறிப்பால் கூறுகிறார். அந் நூல் திருக்குறள் என்று மேலே காட்டப்பட்டது. குளமுற்

றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டின் முற்பகுதி யெனவும்; காக்கைபாடினியார் காலம் கி. பி. முதல் நூற்றுண்டின் பிற்பகுதி யெனவும் திரு. சிவராச பிள்ளையவர்கள் கருதுகிருர்கள்.

காக்கைபாடினியார், ஆலத்தூர்கிழார் ஆகிய புலவர்கள் காலத்திற்கு மிக முற்பட்ட காலத்தே திருக்குறள் தோன்றியிருத்தல் வேண்டும். கௌதமபுத்தர் கொள்கைகளைத் திருவள்ளுவர் கண்டிருக்கிருராதலின், திருவள்ளுவர் புத்தர் காலத்துக்குப் பிற்பட்டுத் தோன்றிக் காக்கைபாடினியார் காலத்துக்கு முற்பட்டு வாழ்ந்துளார் என்பது பெறப்படுகின்றது. ஆகவே, திருவள்ளுவர் காலம் கி. மு. மூன்றும் நூற்றுண்டெனக் கொள்ளின் அது மெய்யாகும்.

ஒழுக்கங் கூறவந்த நூல்கள் பல. அவற்றுட் பல காலச் செலவில் வழக்கு வீழ்ந்தன; பெயரளவில் மட்டும் போற்றப்படுவன. திருக்குறள் தோன்றிப் பன்னூறு ஆண்டுகள் சென்றன. ஆயினும், அஃது இன்றும் பெருவழக்கிற்றுயுளது; மக்கள் தங்கள் வாழ்க்கையைச் செலுத்திப் பயனடையப் பெரிதும் உதவி செய்கின்றது. அறத்தின் வேரையும் அதன் உயிர்ப்பையும் பற்றி ஆசிரியர் திருவள்ளுவர் நூல் செய்துள்ளாராதலின், அஃது என்றும் நின்று நிலவுவதாயும், என்றும் இன்பம் பெருக்குவதாயும் விளங்குகின்றது. அறத்தின் பரிசை உள்ளவாறு விரித்துரைப்பதில் திருக்குறள் இணையற்ற நூல். உலகத்துத் தோன்றிய அறநூல்கள் எல்லாவற்றுள்ளும் அறத்தை, எஞ்சாது முழுதுற விரித்த பேரறநூல் இஃதொன்றே என்று கொள்ளலாம். அறம் மிக விரிந்தது; பெருங்கடலினும் மிகப் பரந்தது; அது பல விதிகளுக்கும், அவையினும் பலவாய விலக்குகளுக்கும் இடங்கொடுத்து நிற்பது; ஆதலான்; அறத்தை முழுதுறக் கூறல் யார்க்கும் முடியாதென மேல்நாட்டாசிரியர்கள் மலைவெய்துகின்றனர். அவர்கள் திருக்குறளை உள்ளவாறறியின் பிறரெவர்க்கு முடியாத தொன்றை நம்மாசிரியர் அழகுறச் செய்து முடித்திருத்தலைக் கண்டின்புறுவர். அறம் பற்றிய பற்பல பொருள்களும் மிக விளக்கமுறத் திருக்குறளில் கூறப்பட்டுள்ளன. அறமாவது யாது? அதனைச் செய்வது எங்ஙனம்? எதனை நோக்கி அது செய்யப்படும்? ஒருவனுல் செய்யப்படும் வினை அறவினையா என்று ஆராய்வதற்கு முன் அஃது எத்தகைய வினையாயிருத்தல் வேண்டும்? அறவினையைச் செய்ய விரும்புவான் அதனை யறியுமாறு யாங்ஙனம்? செய்யத்தகும் வினைகள் பலவாயவழி ஒருவன் எத்தகைய வினையைச் செய்தல் வேண்டும்? எதனை ஒருவுதல் வேண்டும்? என்ற இன்னோரன்ன அறம்பற்றிய பல வினுக்களுக்குத் தக்க விடைகளைத் திருக்குறளிலன்றி வேறெந்நூலிலும் காண்பதரிது.

அறவொழுக்கம் கூறப்புகும் ஆசிரியர்க்குத் தாம் கூறும் அற நெறியைப் பிறர் யாரும் எளிதில் அறிந்துகொள்ளும்படி உள்ளவாறு புனைந்துரையின்றிக் கூறுதல் கடன். உண்மையை மயங்க வைப்பதால், புனைந்துரை அறநூலில் இடம்பெறாதென்க. அறவுண்மையைக் காணவொட்டாது மயக்கம் செய்யுமாயின், கவிநயம் பற்றி யுரைக்கப்படும் அணிகளும் அறநூலின்கண் வரின் இடைப் பிறவரலாக நோக்கப்படும். கவிகளுட் கவியாம் நம் ஆசிரியரும் அறம் பொருள்களை யுரைக்குங்கால் கவிநயம் பெருகக் காட்டாமைக்குக் காரண மதுவேதான். சிற்சில விடங்களில் நம் தெய்வப் புலவர் புனைந்துரையில் திளைப்பதுபோற் காணப்படினும், நுனித்து நோக்கின் ஆண்டு மவர் புனைந்துரைக்கவில்லை என்பது வெளியாகும். சிலரால் புனைந்துரைகளாகக் கருதப்படுபவற்றை யாராயின், அவை அறப்பொருளை மயக்காது விளக்குவதைக் காணலாம்; அவற்றுட் சில இம்மியும் புனைந்துரைக் கலப்பின்றி, முற்றிலும் மெய்யுரைகளாக விளங்குவதையும் காணலாம்.

"செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது"

என்னும் குறளை நோக்குக.

'தான் யாதோர் உதவியும் முன் ஒருவனுக்குச் செய்யா திருக்குங்கால், அவன் தனக்குச் சிறியதோர் உதவிசெய்யினும் அச்சிறிய உதவிக்குக் கைம்மாறாகத்தான் மண்ணுலகையும் விண்ணுலகையும் அவனுக்கொருங்கே சேர்த்துக்கொடுப்பினும், அவ்வுலகங்கள் அச் சிற்றுதவிக்கு நேராகா' எனத் திருவள்ளுவர் இக் குறளிற் கூறுங்கால், புனைந்துரையை அவர் கையாளவில்லையா எனச் சிலர் வினவலாம். இக் குறட்பொருளின்கட் கடுகளவும் புனைந்துரையில்லை யெனத் துணிந்து கூறுதல் கூடும். இவ்வுரை புனைந்துரையேயன்று; மெய்யுரை; இரண்டும் இரண்டும் சேரின் நான்காமெனக் கூறுவது, கணித முறையில் எவ்வளவு மெய்யுரையோ, அவ்வளவு மெய்யுரை. அவ்வுரையைச் சிறிது ஆராய்வோம். சாத்தன் கொற்றனுக்கு உதவி யொன்றும் செய்யாதிருக்குங்கால் சாத்தனது கடும்பசியைத் தீர்க்கக் கொற்றன் நான்கணாக்கள் பெறுமுணவளிக்கிறான். பசிப்பிணி தீரப்பெற்ற சாத்தன் பிறிதொரு காலத்திலொரு நூறாயிரம் வெள்ளிக்காசுகள் கொற்றனுக்குக் கொடுக்கிறான். நூறாயிரம் வெள்ளிக் காசுகளும் நான்கணாக்களுக்கு நிகராகா. நிகராகாமை எங்ஙனமெனிற் காட்டுதும். கொற்றன் நான்கணா உதவி செய்தக்கால் சாத்தன் செய்த உதவியொன்றுமில்லை. சாத்தன் செய்த உதவியோடு கொற்றன் உதவியை ஒப்புநோக்கிக் கணிதவாய்பாட்டிற் கூறுதும்: சாத்தன் உதவி $=0$; கொற்றன் உதவி $=$ ரூ. $\frac{1}{4}$.

அஃதாவது 0: ¼. அங்ஙனமே கொற்றன் உதவியோடு சாத்தன் உதவியை ஒப்புநோக்கிக் கணிதவாய்பாட்டிற் காணுதும். அது ரூ. ¼: ரூ. 100000: அஃதாவது ¼: 100000. 0: ¼ = எண்ணிலி (infinity). ¼: 100000 = 400000 நான்குநூறாயிரம் எண்ணிலிக்குச் சற்றும் நேரிலாதென்பது புகழோ? புகழன்று; உண்மை ஆதலின். மேல் நோக்காகக் காண்பார்க்குப் புனைந்துரையாகக் காணப்பட்ட வுரை முற்றிலும் மெய்யுரையாயுள்ளதைக் காண்க. நம் தெய்வப்புலவர் கவியாதலாலும், கலைவலாராதலாலும் தாம் கூறும் பொருள்களைக் கலைக்கண் கொண்டு நோக்கிக் கவினாக் கொண்டுரைப்பர்.

திருவள்ளுவரோதியருளிய அறநெறி பிறர் கூறிய அறநெறிகள் எல்லாவற்றினும் மிகச் சிறந்தது. அறத்தின் முதல், வினை செய்வா னுள்ளக்கருத்திலா, அல்லது அவன் செய்யும் வினையிலா தங்கியுளதென வாராயப் புகுந்தாரெல்லாந் தம்முண் மாறுபட்டு அவற்றுள் ஒரோ வொன்றுபற்றிச் சாதித்துள்ளார்கள். வினை செய்வா னுளம் மாசின்றியிருக்கு மளவுக்குத்தான் அறம் உளதென்றும், வினைசெய்ய ஒல்லாவழி உளத்தானும் அறம் செய்யலாமென்றும் நம்மாசிரியர் கூறியுள்ளார். அக்கூற்றி னுட்பம் மிக அழகுடையது. 'வாய்மை' 'இன்சொல்'லை நம்மாசிரியர் வரையறை செய்து காட்டியருளிய திறத்தை நோக்குக. அவற்றை யங்ஙனம் திட்பமுறக் கூறிய தனிச்சிறப்புத் திருவள்ளுவர்க்கே யுரியது. வாய்மையை நிகழ்ந்தது கூறல் என்றும், இன்சொல்லைச் செவிக்கினிமை பயக்கும் சொல்லென்றும் பிறர் கூறுநிற்க, அவற்றை முறையே 'யாதொன்றும் தீமையிலாத சொலல்' என்றும், 'ஈரமளைஇப் படிறிலவாம் செம்பொருள் கண்டார் வாய்ச் சொல்' என்றும் நம்மாசிரியர் விளக்கிக் காட்டியுள்ளார். இங்ஙனம் விளக்கிக் காட்டல் 'செம்பொருள் கண்டா'ராகிய நம்மாசிரியர்க் கன்றி யார்க்குத்தான் இயலும்?

ஒருவன் இடையறாது நல்லொழுக்கத்தில் ஒழுகி, அந் நல்லொழுக்கத்தினின்றும் மறந்தும் வழுவாது நிற்றல்வேண்டுமென யாப்புறுத்தி 'ஒழுக்கமுடைமை'யெனத் தனியதிகாரம் திருவள்ளுவர் வகுத்துரைத்துள்ளார். இடையறா நல்லொழுக்கத்தில் நிற்றல் அறத்திற்கு வித்தாம் என்றும், ஒரோவொருகால் நல்வினை செய்தலால் பெருநலமாம் அறம் விளையாதென்றும் நம்மாசிரியர் கூறியுள்ளதன் சிறப்பை நோக்குக. பல்வேறொழுக்கங்களை விதந்து கூறிய ஆசிரியர், ஒழுக்கமுடைமையெனத் தனிவேறதிகாரம் வகுத்து, ஒழுக்கத்தை யென்று மொருவன் தனக்குடைமையாகக் கொள்ளவேண்டுமென்று உய்த்துணர வைத்துள்ளார்.

திருக்குறள் முழுதும் அறநூல் என முன்னர்க் கூறப்பட்டது. மனம் மொழி மெய்களுள் ஒல்லுமவற்றா னெல்லாம், ஒல்லுமறவினைகளெல்லாவற்றையும், இடையறாது, செல்லுமிடங்களிலெல்லாம் செய்கவெனக் கூறி, அறத்தைச் செய்யுமாற்றைக் கூறுமுகத்தால் அறத்தின் உண்மை யுருவத்தை ஆசிரியர் முழுதுறக் கூறியிருத்தல் காண்க. குற்றங்கள் தன்கண் நிகழாமற் குறிக்கொண்டு ஒருவன் காத்தல் வேண்டுமென்று கூறி, வாக்கால் நிகழுங் குற்றங்களனைத்தையும், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என வகைப்படுத்தி, அவற்றைவெவ்வே றதிகாரங்களில் அகப்படுத்தி ஆசிரியர் கூறியிருப்பதும், திருக்குறளின் முழுதறத் தன்மைக்குக் கரியாம். அறம்செய்வான் மறவிவழிப்புகாது, தீயவினைகளினின்றும், தீய குணங்களினின்றும் தன்னைக் குறிக்கொண்டு காத்தல் வேண்டுமென்றும், ஏற்ற இடங்களில் எல்லாம் ஒல்லும் அறவினைகள் எல்லாவற்றையும் நினைவுகூர்ந்து செய்தல் வேண்டுமென்றும் ஆசிரியர் உய்த்துணரவைத்திருப்பதும் அதற்கு மற்றொரு சான்று. பயனில சொல்லுதலா லுண்டாம் இழிவும், சொல்லாமையால் வரும் உயர்வும் திருக்குறளில் மிகத் திட்பமாகக் கூறப்பட்டுள்ளன. 'பயனில் சொல்லை'க் குற்றங்களுட்படுத்தி யிங்ஙனம் கண்டித்துரைத்த அற நூலாசிரியர்கள் யாமறிந்தவரை வேறெவரு மிலர்; வேறெந் நாட்டிலு மிலர். பயனில சொல்லுதலாலும், பயனில செய்தலாலுமே, பயனுடையனவற்றைச் சொல்லவும் செய்யவும் இடம் வாய்க்கப்பெறாது பலர் வருந்துகின்றார்கள் என்னும் உண்மையை அறிபவர்க்குத்தான் பயனில் சொல்லலை யாசிரியர் கண்டிப்பதன் கருத்தும் நுட்பமும் வெளியாம்.

நீதியுரைப்பதில் நம் தெய்வப்புலவர்க் கீடாகும் பெரும் புலவரைக் காண்பதரிது. தனக்கொருவன் தீமைசெய்தால் அவனை யொறுத்தல் வேண்டுமெனப் பலரும், அத்தீமையைப் பொறுத்தல் வேண்டுமென வேறு சிலரும் கூற, நம்மாசிரியர் அத்தீமையை யப்பொழுதே மறத்தல் வேண்டுமென்றும், தீமைசெய்தான் தன்னுள் நாணுமாறு அவனுக்கும் பெருநலம் தரும் செயலைப் புரிகவென்றும் ஓதியருளித் தனிச் சிறப்பாம் வென்றி கொண்டனர். 'நன்றல்ல தன்றே மறப்பது நன்று' என்றும், 'இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு' என்றும், 'இன்னா செய்தாரை யொறுத்தல், அவர்நாண நன்னயம் செய்து விடல்' என்றும் ஆசிரியர் கூறிய மொழிகள் உலகம் பொன்றினும் பொன்றாப் பொன்மொழிகள். 'இன்னா செய்தாரை ஒறுத்தல் வேண்டு' மென்பார் மதத்தைத் தழுவுவார்போல், அவரை யொறுக்குமாறாவது அவர்க்குக் கழிபெரு நலம் தரும் செயலைப் புரிதலென்பார், 'நன்னயம் செய்து' என்றும், நலம் செய்தோமென்றும் எண்ணாது, அவர் செய்த தீமையையும் அப்பொழுதே

மறந்து விடுக என்பார், 'விடல்' என்றும் ஆசிரியர் கூறியுள்ளதன் நுட்பத்தையும், பெருவனப்பையும் நோக்குங்கால், அறிஞர் கூட்டம் பெருமகிழ்வெய்தும்.

நம்மாசிரியர் ஒரு பெருங்கவி. கவி, தான் புறவுலகிற் காணும் காட்சிகளின் நலங்களைத் தன் அகக் கண்ணிலும் கண்டுகளிப் பெய்தி, அக் காட்சிகளை நலமுறத் தன்னுள்ளக் கிழியினுருவெழுதிப் பார்த்து அவ்வுருவத்தைத் தக்க சொற்களால் அழகு மினிமையுமுடைய சொற்படம் செய்து, கவியாக்கித் தருகின்றான். அச் சொற்படம், அதனை யாக்கியோன் உளத்திற்கண்ட உருவப் படத்தைப் பிறரும் பிறிதொரு காலத்தும் கண்டின்புறுமாறு செய்யுமாற்றலுடையதாய், இன்னிசைப் பிண்டமாய், கலைக் கொழுந்தாய், வனப்பிற்குறையுளாய், காலத்திற் கழியாததாய், இடத்தால் தடையுறாததாய் விளங்கும். அத்தகைச்சொற்படங்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு மிளிர்வது நம் திருக்குறள்.

> "மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
> பலர்காணும் பூவொக்கு மென்று,"
>
> "இரப்ப னிரப்பாரை யெல்லாம் இரப்பிற்
> கரப்பார் இரவன்மின் என்று,"
>
> "கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
> போக்கு மதுவிளிந் தற்று,"
>
> "எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
> பழிகாணேன் கண்ட விடத்து,"

என்ற குறள்களில் ஆசிரியருடைய கவிநயங்களைக் காணலாம். நம் புலவர் பெருமானுடைய கவிநலங்களை இன்பத்துப்பாலிற் பல விடங்களிற் காணலாம்.

கவிமன்னர் கவிநயம் காட்ட விரும்பினால், பிறர் கவியழகு காணாத சிறு செய்தியையும் தங்கள் கவிச்சுவைக்கு நிலைக்களமாக வாங்கிக் கவி புனைவர். இளங்குதலைச்சிறார் மழலைமொழியைப் பன்னாளும் பலரும் கேட்டுளார். ஆனால் அம்மழலைமொழிபற்றி நம் தெய்வவருட் கவி, செய்யுள் செய்வதை நோக்குக.

> "குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
> மழலைச்சொற் கேளா தவர்"

என்ற திருக்குறளைக் கேளாதாரில்லை. இசைக் கருவிகளுள் குழலும் யாழும் மிகச் சிறப்புடையன; அவையினும் இனியன தம் மக்கள் மழலைமொழிகள் என்ற பொருளை நம்மாசிரியர் கூறியுள்ள

சிறப்பியல்பை யாராய்க. இடையினம் மருவப்பெற்றுச் செய்யுள் செய்த இன்னோசையும், "கேளாதவர்...இனிதென்ப" என எதிர் மறையிற் கூறிப் பொருள் நயமும் ஆசிரியர் விளைத்துளார்.

'என்னைமுன் னில்லன்மின்' 'செல்லாமை யுண்டே லெனக் குரை' என்ற குறள்கள் நாடகத் தனியுரைகளாக விளங்குகின்றன.

நம் கவிமன்னர் நகைச்சுவையையும் காட்டியுள்ளார். ஆசிரியர் நகைச்சுவையுள் பெருகச் சிரித்தற்கிடமில்லை. அளவே சிரித்தற்கும் முறுவலித்து நகுதற்கும் இடமுண்டு. நகைச்சுவை மணக்கும் கவிகளில் நச்சுத்தன்மை இல்லை.

"தேவரனையர் கயவர்"

"நன்றறிவாரிற் கயவர் திருவுடையர்"

"பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்

பீழை தருவதொன் றில்"

என்ற குறள்களில் வரும் நகைச்சுவை மிக வழகுடையது. நம் மாசிரியர் எடுத்தாளும் சொற்கள், அழகுவாய்ந்தன; இனிய வோசையுடையன; பொருட் செறிவுடையன: நவின்றோர்க் கினிமை பயப்பன; குறுகிய வுருவத்தன. அத்தகைய சொற்களைத் தொகுத்துத் திருவள்ளுவர் குறள்வெண்பாக்கள் பாடுகின்றாராக வின் அவை மிக வழகுடையவனவாய் விளங்குகின்றன. குறளில் வரும் ஒரு சொல்லையேனும் அக்குறளின் பொருளழகையும், சொல்லின்பத்தையும் சிதைக்காது, அதன் இடத்தைவிட்டுப் பெயர்க்கவோ அகற்றவோ அதற்குப் பதிலாக வேறொரு சொல் லைப் பெய்துரைக்கவோ யார்க்கும் முடியாது: தாஜ்மஹால் உருவ உயர்மாடத்தின் சுவர்களிலுள்ள சலவைக்கற்களில் ஒன்றைக் கையாலசைத்தெடுக்க ஒருவர்க்கு முடியினும் முடியும்; நம் திருவள்ளுவர் குறள்வெண்பாவிலுள்ள எச்சொல்லையும் யார்க்கும் அசைக்கவும் முடியாது. ஆதலால் திரிபின்றியும் சிதைவின்றியும் விளங்கும் உலகநூல்களில் திருக்குறள் தலைநின்றது. அங்ஙனம் அது விளங்குதலே தேவர் கலைவன்மைக்கும் கவிநலத்திற்கும் தக்க சான்று. இவ்வன்மையை யறியாதார் சிலர் திருக்குறளுருவத் தைத் திருத்தியும் மாற்றியும் வடுப்படுத்த முற்பட்டு இடர்ப்பட்ட னர். திருக்குறளில் காணப்படும் பாட பேதங்கள் மிகச் சிலவே யாம்.

திருவள்ளுவருடைய உவமையணிகள் பேரழகுடையன; என்றும் மாறாப் புதுமையாம் நலமுடையன. கவிகள் சிலர் கூறும் உவமை முதற்கண் கேட்டக்கால் அழகுடையனவாய்க் காணப்

படும்; பின் பலமுறை கேட்டக்கால் அவ்வழகினை யிழந்து நிற்கும். நம்மாசிரியருடைய உவமைகளைப் பலமுறை ஒருவர் படித்தாலும், அவை நவில்தொறும் நயம் பயப்பன; அவை அறிஞர்க்கென்றும் இன்ப மூட்டுவன.

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு,"

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை,"

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று."

திருவள்ளுவரில் பிறிதுமொழிதல் முதலிய பொருளணிகளும் சொற்பொருட்பின்வருநிலை முதலிய சொல்லணிகளும் அழகு செய்கின்றன.

"பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்,"

"நுனிக்கொம்ப ரேறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்,"

"இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து,"

என்ற குறள்களில் பிறிது மொழிதலாகிய அணி பிறங்குவது காண்க.

'சொல்லுக சொல்லை' என்ற குறளிலும், 'பற்றுக பற்றற்றான் பற்றினை' என்ற குறளிலும் சொற்பொருட் பின்வருநிலையணி வந்துள்ளது.

ஆசிரியர் தம் உள்ளத்தெழுந்த கருத்துக்களைக் குறள்வெண்பாவின் றுணைகொண்டு வெளிப்படுத்துகிறார். குறள்வெண்பாவினுருவம் மிகக் குறுகியது. திருவள்ளுவர்க்கன்றி ஏனையோருக்குத் தம் கருத்துக்களை வெளிப்படுத்தத் தகுந்த கருவியாக அதனையமைத்துக்கொள்ள முடியாது. நம்மாசிரியர் அதனைத் தம்முள்ளத்தெழுந்த ஆழ்ந்தகன்ற நுண்பொருள்களைத் தாங்கி யுய்க்கும் வனப்பு மிக்கினிய ஊர்திகளாக ஆக்கியுள்ளார்; அத்தகைய குறள்களைக் கவிநலன்களா லலங்கரித்து முள்ளார்.

அரசியலைப்பற்றி யாசிரியர் கூறியுள்ள கருத்துக்கள் தமிழர் நாகரிகத்திற்கு ஏற்றம் தருவன. அரசியற் செய்திகளனைத்தையும்

திருவள்ளுவர் அழகொழுகக் கூறியுள்ளார். நாட்டிற்கரசன் இன்றியமையாது வேண்டப்படுவான் என்னும் உண்மையை 'ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே, வேந்தமை வில்லாத நாடு' என்ற குறளில் உணர்த்தியுள்ளார். நாட்டிற்கு அரசன் இன்றியமையாது வேண்டப்படுபவன் என்றும், அரசன் காவற் சாகாடுகைத்தற்கண் பெரியோரைத் துணைக்கொள்ள வேண்டு மென்றும்; நாடு நாடா தற்கு நாடா வளமுடையதாய், தக்காரையும் தாழ்விலாச் செல்வரையும் தன்னகத்தே யுடையதாய், பசியும் பிணியும் சேரப்பெறாத தாயிருக்க வேண்டுமென்றும் ஆசிரியர் கூறும் உண்மைகள் உன்னற்பாலன. திருக்குறளில் நுவலப்படும் அரசியற் கருத்துக்கள் பல, உலகம் அமைதிபெற்று இன்பநலம் அடைதற்கு எற்ற முறைகளாயுள்ளன.

திருக்குறள், அறத்தினை உணரத் தலைப்படுவார்க்கு ஒரு பேரற நூல்; அரசியலை யறிய விரும்புவார்க்கோர் அரசியல் நூல்; ஞானத்தை விரும்புவார்க்கு ஒரு ஞான நூல்; கவிச்சுவை விரும்புவார்க்கொரு காவியம்; காமச்சுவை விரும்புவார்க்கொரு காமநூல்; பேரின்பம் விரும்புவார்க்கொரு பேரின்ப நூல்; வாழ்க்கை நெறியறிய விரும்புவார்க்கொரு வாழ்க்கை வழிகாட்டு நூல். அந்நூலைப் பயில்வார் பெரும்புலமையும் ஒட்பமும் பெறுவர்; அதன் நெறியின்கண் வாழ்பவரே 'வாழுநம்' என்னும் செருக்குடன் வாழ்ந்து, இம்மையில் இன்புற்றுப் பின் வீடுபேறடைவர்.

---

# அதிகார அகரவரிசை

[எண்கள் பக்கங்களைக் குறிக்கும்.]


| அதிகாரம் | பக்கம் | அதிகாரம் | பக்கம் |
|---|---|---|---|
| அடக்கமுடைமை | சஎ | கண்விதுப்பழிதல் | சசசு |
| அமைச்சு | உஙக | கயமை | ச0க |
| அரண் | உஎக | கல்லாமை | கருசு |
| அருளுடைமை | அசு | கல்வி | கரு0 |
| அலரறிவுறுத்தல் | சஙக | கள்ளாமை | க0க |
| அவர்வயின்விதும்பல் | சஎஅ | கள்ளுண்ணாமை | ஙசகூ |
| அவாவறுத்தல் | கஙரு | கனவுநிலையுரைத்தல் | சருக |
| அவையஞ்சாமை | உஎஉ | காதற்சிறப்புரைத்தல் | சஉங |
| அவையறிதல் | உசுக | காலமறிதல் | கஅசு |
| அழுக்காறாமை | சு0 | குடிசெயல்வகை | ஙஅங |
| அறன்வலியுறுத்தல் | கரு | குடிமை | ஙருக |
| அறிவுடைமை | கருக | குறிப்பறிதல் (பொருள்) | உசுரு |
| அன்புடைமை | உக | குறிப்பறிதல் (காமம்) | சகக |
| ஆள்வினையுடைமை | உஙஉ | குறிப்பறிவுறுத்தல் | சஅங |
| இகல் | ஙஉ0 | குற்றங்கடிதல் | கசுரு |
| இடனறிதல் | கஅஅ | கூடாநட்பு | ங0க |
| இடுக்கணழியாமை | உஙசு | கூடாவொழுக்கம் | கூஎ |
| இரவச்சம் | ஙகூஅ | கேள்வி | கருஎ |
| இரவு | ஙகூச | கொடுங்கோன்மை | உக0 |
| இல்வாழ்க்கை | கக | கொல்லாமை | ககஎ |
| இறைமாட்சி | கசரு | சான்றாண்மை | ஙசுக |
| இனியவைகூறல் | ஙஎ | சிற்றினஞ்சேராமை | கஎஉ |
| இன்னாசெய்யாமை | ககங | சுற்றந்தழால் | ககூக |
| ஈகை | எக | சூது | ஙரு0 |
| உட்பகை | ஙஙக | செங்கோன்மை | உ0எ |
| உழவு | ஙஅஎ | செய்ந்நன்றியறிதல் | ச0 |
| உறுப்புநலனழிதல் | சசுஎ | சொல்வன்மை | உசங |
| ஊக்கமுடைமை | உஉரு | நகையணங்குறுத்தல் | ச0சு |
| ஊடலுவகை | ரு0உ | தவம் | கூங |
| ஊழ் | கச0 | தனிப்படர்மிகுதி | சருஉ |
| ஒப்புரவறிதல் | எசு | தீநட்பு | ங0க |
| ஒழுக்கமுடைமை | ரு0 | தீவினையச்சம் | எஉ |
| ஒற்றாடல் | உஉக | துறவு | உஉக |
| கடவுள் வாழ்த்து | ங | தூது | உருக |
| கண்ணோட்டம் | உகஅ | தெரிந்துசெயல்வகை | கஎக |

| அதிகாரம் | பக்கம் |
|---|---|
| தெரிந்துதெளிதல் | ௧௯௨ |
| தெரிந்துவினையாடல் | ௧௯௬ |
| நடுவுநிலைமை | ௪௩ |
| நட்பாராய்தல் | ௨௯௯ |
| நட்பு | ௨௯௫ |
| நலம்புனைந்துரைத்தல் | ௪௨0 |
| நல்குரவு | ௩௯0 |
| நன்றியில்செல்வம் | ௩௭௬ |
| நாடு | ௨௭௬ |
| நாணுடைமை | ௩௮0 |
| நாணுத்துறவுரைத்தல் | ௪௨௭ |
| நிலையாமை | ௧௨௧ |
| நிறையழிதல் | ௪௭௯ |
| நினைந்தவர் புலம்பல் | ௪௫௫ |
| நீத்தார் பெருமை | ௧௧ |
| நெஞ்சொடுகிளத்தல் | ௪௭௧ |
| நெஞ்சொடுபுலத்தல் | ௪௯0 |
| பகைத்திறந்தெரிதல் | ௩௨௭ |
| பகைமாட்சி | ௩௨௪ |
| பசப்புறுபருவரல் | ௪௪௮ |
| படர்மெலிந்திரங்கல் | ௪௪0 |
| படைச் செருக்கு | ௨௯௧ |
| படைமாட்சி | ௨௮௭ |
| பண்புடைமை | ௨௭௩ |
| பயனிலசொல்லாமை | ௬௯ |
| பழைமை | ௩0௨ |
| பிரிவாற்றாமை | ௪௩௬ |
| பிறனில்விழையாமை | ௫௩ |
| புகழ் | ௮௨ |
| புணர்ச்சிமகிழ்தல் | ௪௧௪ |
| புணர்ச்சிவிதும்பல் | ௪௮௬ |
| புதல்வரைப்பெறுதல் | ௨௬ |
| புலவி | ௪௯௪ |
| புலவி நுணுக்கம் | ௪௯௮ |
| புலான்மறுத்தல் | ௯0 |
| புல்லறிவாண்மை | ௩௧௭ |
| புறங்கூறாமை | ௬௬ |
| பெண்வழிச்சேறல் | ௩௩௮ |
| பெரியாரைத் துணைக்கோடல் | ௧௬௮ |
| பெரியாரைப்பிழையாமை | ௩௪௩ |
| பெருமை | ௩௬௬ |
| பேதைமை | ௩௧௩ |
| பொச்சாவாமை | ௨0௩ |
| பொருள்செயல்வகை | ௨௮௩ |
| பொழுதுகண்டிரங்கல் | ௪௬௩ |
| பொறையுடைமை | ௫௭ |
| மடியின்மை | ௨௨௬ |
| மருந்து | ௩௫௩ |
| மன்னரைச்சேர்ந்தொழுகல் | ௨௬௨ |
| மானம் | ௩௬௨ |
| மெய்யுணர்தல் | ௧௩0 |
| வரைவின்மகளிர் | ௩௪௨ |
| வலியறிதல் | ௧௮0 |
| வாய்மை | ௧0௫ |
| வாழ்க்கைத் துணைநலம் | ௨௩ |
| வான்சிறப்பு | ௭ |
| விருந்தோம்பல் | ௩௩ |
| வினைசெயல்வகை | ௨௫௪ |
| வினைத்திட்பம் | ௨௫௧ |
| வினைத்தூய்மை | ௨௪௭ |
| வெகுளாமை | ௧0௯ |
| வெஃகாமை | ௬௩ |
| வெருவந்தசெய்யாமை | ௨௧௪ |

உ

திருச்சிற்றம்பலம்

# திருக்குறள்

## பரிமேலழகருரை

### உரைப்பாயிரம்

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமிலின்பத்தழிவில்வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. அவற்றுள், வீடென்பது சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்.

அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம் வழக்கு, தண்டமென மூவகைப்படும்.

அவற்றுள், ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங்களின் வழுவா தொழுகுதல்.

வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே எனதென தென்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முண் மாறுபட்டு அப்பொருண் மேற் செல்வது, அது கடன்கோடன்முதற் பதினெட்டுப் பதத்ததாம்.

தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற்பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக ஒறுத்தல்.

இவற்றுள், வழக்குந் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவதல்லது ஒழுக்கம்போல மக்களுயிர்க்கு உறுதிபயத்தற் சிறப்பிலவாகலானும், அவைதாம் நூலானேயன்றி உணர்வுமிகுதியானுந் தேயவியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை யொழித்து, ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து எல்லார்க்கும் ஒத்தலிற்பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி இல்லறந் துறவறமென இருவகை நிலையால் கூறப்பட்டது

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடுஞ் செய்யப்படுவதாகலின், அதனை முதற்கட் கூறுவான் தொடங்கி,எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

———

# க. அறத்துப்பால்

## ௧. பாயிரவியல்

### அதிகாரம் க—கடவுள் வாழ்த்து

[அஃதாவது, கவி தான் வழிபடுகடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை யென அறிக; என்னை? சத்துவ முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இயைபுண்டாக லான். அம்மூன்று பொருளையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரை யும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாழ்த்து அம் மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரென உணர்க.]

1 க. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

(இதன் பொருள்) எழுத்து எல்லாம் அகர முதல-எழுத்துக்க ளெல்லாம் அகரமாகிய முதலை யுடையன; உலகு ஆதிபகவன் முதற்று-அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து.

இது தலைமைபற்றிவந்த எடுத்துக் காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தா னன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலானுங் கொள்க. தமிழெழுத் துக்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி, 'எழுத் தெல்லா' மென்றார். ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன் முடிபு. உலகென்றது ஈண்டுயிர்கண்மே னின்றது. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின், 'ஆதிபகவன் முதற்றே' யென உலகின்மேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதிபகவனென்பது கருத்தாகக் கொள்க. ஏகாரம் தேற்றத் தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுளதுண்மை கூறப் பட்டது. (க)

௨. கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

(இ - ள்.) கற்றதனால் ஆய பயன் என் - எல்லா நூல்களையுங் கற்றவர்க்கு அக்கல்வியறிவானாய பயன் யாது?; வால் அறிவன் நற்றாள் தொழாஅர் எனின் - மெய்யுணர்வினை யுடையானது நல்ல தாள்களைத் தொழாராயின்.

எவனென்னும் வினாப்பெயர் என்னென்றாய், ஈண்டின்மை குறித்து நின்றது. கொல்லென்பது அசைநிலை. பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், 'நற்றா' ளென்றார். ஆகம அறிவிற்குப் பயன், அவன் தாளைத் தொழுது பிறவியறுத்த லென்பது இதனாற் கூறப் பட்டது. (௨)

௩. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(இ - ள்.) மலர்மிசை ஏகினான் மாண்அடி சேர்ந்தார் - மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார்; நிலமிசை நீடு வாழ்வார் - எல்லா உலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார்.

அன்பான் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், 'ஏகினா'னென இறந்தகாலத்தாற் கூறினார்; என்னை? ' வாராக்காலத்தும் நிகழுங்காலத்தும், ஓராங்கு வரூஉம் வினைச்சொற்கிளவி, இறந்தகாலத்துக் குறிப்பொடு கிளத்தல்,விரைந்தபொருள என்மனார் புலவர்''* என்பதோத்தாகலின். இதனைப்''பூமேனடந்தான்'' என்பதொரு பெயர்பற்றிப் பிறிதொரு கடவுட்கேற்றுவாருமுளர். சேர்தல்-இடைவிடாது நினைத்தல். (௩)

௪. வேண்டுதல்வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

(இ - ள்.) வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந் தார்க்கு-ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலுமில்லாதவன் அடியைச் சேர்ந்தார்க்கு; யாண்டும் இடும்பை இல-எக்காலத்தும் பிறவித் துன்பங்கள் உளவாகா.

பிறவித் துன்பங்களாவன: தன்னைப்பற்றி வருவனவும், பிற உயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவு

* தொல்காப்பியம், வினையியல் - ௪௪

மென மூவகையான் வருந்துன்பங்கள்: அடி சேர்ந்தார்க்கும் அவ் விரண்டு* மின்மையின், அவை காரணமாக வரும் மூவகைத் துன் பங்களும் இலவாயின. (ச)

ரு. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(இ - ள்.) இருள் சேர் இருவினையும் சேரா - மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை யென்னும் இரண்டு வினையும் உள வாகா; இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு-இறைவ னது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து.

இன்ன தன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை 'இரு'ளென்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாக லான் 'இருவினையுஞ் சேரா' வென்றுங் கூறினார். இறைமைக் குணங்க ளிலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறு கின்ற புகழ்கள் பொருள்சேராவாகலின், அவை முற்றவுமுடைய இறைவன் புகழே 'பொருள்சேர் புக' ழெனப்பட்டது. புரிதல்- எப்பொழுதுஞ் சொல்லுதல். (ரு)

சூ. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(இ - ள்.) பொறி வாயில் ஐந்து அவித்தான் - மெய், வாய், கண், மூக்குச் செவி யென்னும் பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் அறுத்தானது; பொய்தீர் ஒழுக்கநெறி நின்றார்- மெய்யான ஒழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார், நீடு வாழ் வார் - பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார்.

புலன்கள் ஐந்தாகலான், அவற்றின்கட் செல்கின்ற அவாவும் ஐந்தாயிற்று. 'ஒழுக்கநெறி' ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமை யின், ஆண்டையாறனுருபு செய்யுட்கிழமைக்கண் வந்தது "கபில ரது பாட்டு" என்பதுபோல. இவை நான்கு பாட்டானும் இறை வனை நினைத்தலும் வாழ்த்தலும் அவனெறி நிற்றலுஞ் செய்தார் வீடுபெறுவரென்பது கூறப்பட்டது. (சூ)

எ. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

(இ - ள்.) தனக்கு உவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால் - ஒருவாற்றானுந் தனக்கு நிகரில்லாதவனது தாளைச்

* வேண்டுதலும் வேண்டாமையும்.

சேர்ந்தார்க்கல்லது; மனக்கவலை மாற்றல் அரிது - மனத்தின்கண் நிகழுந் துன்பங்களை நீக்குதல் உண்டாகாது.

"உறற்பால - தீண்டா விடுத லரிது"* என்றாற்போல ஈண்டு அருமை இன்மைமேனின்றது. தாள்சேராதார் பிறவிக்கேதுவாகிய காம வெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின், பிறந்து அவற்றான் வருந் துன்பங்களுள் அழுந்துவ ரென்பதாம். (எ)

அ. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

(இ - ள்.) அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால் - அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது; பிறஆழி நீந்தல் அரிது - அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது.

அறம், பொருள், இன்பமென உடனெண்ணப்பட்ட மூன்றனுள், அறத்தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் பிறவெனப்பட்டன. பலவேறு வகைப்பட்ட அறங்களெல்லாவற்றையுந் தனக்கு வடிவாகவுடையனாதலின், 'அறவாழியந்தண'னென்றார். 'அறவாழி' யென்பதனைத் தரும சக்கரமாக்கி அதனையுடைய அந்தணனென் றுரைப்பாரு முளர். அப்புணையைச் சேராதார் கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவராகலின், 'நீந்தலரி' தென்றார். இஃதேகதேச வுருவகம். (அ)

௯. கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

(இ - ள்.) கோள் இல் பொறியின் குணம் இல - தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள்போலப் பயன்படுதலுடையவல்ல; எண்குணத்தான் தாளை வணங்காத் தலை - எண்வகைப்பட்ட குணங்களையுடையானது தாள்களை வணங்காத தலைகள்.

எண்குணங்களாவன; தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை எனவிவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது. அணிமாவை முதலாகவுடையன எனவும், கடையிலா அறிவை முதலாகவுடையன எனவும் உரைப்பாரு முளர்.

* நாலடியார் : ௧0௧.

காணாத கண் முதலியனபோல வணங்காத தலைகள் பயனில வெனத் தலைமேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும், இனம் பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனிலவென்பதூஉங் கொள்க. இவை மூன்று பாட்டானும் அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலுஞ் செய்யாவழிப் படுங்குற்றங் கூறப் பட்டது. (கூ)

௨௦ கo. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

(இ - ள்.) இறைவன் அடி (சேர்ந்தார்) பிறவிப் பெருங்கடல் நீந்துவர் - இறைவனடி யென்னும் புணையைச் சேர்ந்தார் பிறவி யாகிய பெரியகடலை நீந்துவர்; சேராதார் நீந்தார்-அதனைச் சேரா தார் நீந்தமாட்டாராய் அதனுள் அழுந்துவர்.

காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், 'பிறவிப் பெருங்கட'லென்றார். சேர்ந்தாரென்பது சொல்லெச்சம். உலகியல்பைநினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவி யறுதலும், அவ்வாறன்றி மாறிநினைப்பார்க்கு அஃதறாமையுமாகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன. (கo)

---

## அதி. உ—வான்சிறப்பு

[அஃதாவது, அக்கடவுளதாணையான் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

1 கக. வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று.

(இ - ள்.) வான் நின்று உலகம் வழங்கி வருதலால் - மழை இடையறாதுநிற்ப உலகம் நிலைபெற்று வருதலான்; தான் அமிழ்தம் என்று உணரல்பாற்று - அம்மழைதான் உலகத்திற்கு அமிழ்த மென்று உணரும் பான்மையை யுடைத்து.

நிற்பவென்பது நின்றெனத் திரிந்து நின்றது. 'உலக' மென்றது ஈண்டு உயிர்களை. அவை நிலைபெற்று வருதலாவது, பிறப்பு இடையறாமையின் எஞ்ஞான்றும் உடம்போடு காணப்பட்டு வருதல். அமிழ்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின், உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை 'அமிழ்தமென் றுணர்க' என்றார். (க)

2 கஉ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

(இ - ள்.) துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கி - உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கி; துப்பார்க்குத் துப்பு ஆயதூஉம் மழை - அவற்றை உண்கின்றார்க்குத் தானும்உணவாய் நிற்பதூஉம் மழை.

தானு முணவாதலாவது தண்ணீரா யுண்ணப்படுதல். சிறப்புடைய உயர்திணைமேல் வைத்துக் கூறினமையின் அஃறிணைக்கும் இஃதொக்கும். இவ்வாறு உயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கிவருதலுடையவாயின வென்பதாம். (உ)

3 கந. விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின் றுடற்றும் பசி.

(இ - ள்.) விண் இன்று பொய்ப்பின் - மழைவேண்டுங் காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின்; விரி நீர் வியன் உலகத்துள் - கடலாற் சூழப்பட்ட அகன்ற உலகத்தின்கண்: நின்று உடற்றும் பசி - நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.

கடலுடைத்தாயினும் அதனாற் பயனில்லை யென்பார் 'விரிநீர் வியனுலகத்'தென்றார். உணவின்மையின், பசியான் உயிர்கள் இறக்குமென்பதாம். (ந)

4 கச. ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

(இ - ள்.) உழவர் ஏரின் உழாஅர் - உழவர் ஏரானுழுதலைச் செய்யார்; புயல் என்னும் வாரி வளம் குன்றிக்கால் - மழையென்னும் வருவாய் தன் பயன் குன்றின்.

குன்றியக்கா லென்பது குறைந்து நின்றது. உணவின்மைக்குக் காரணங் கூறியவாறு. (ச)

5 கரு. கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

(இ - ள்.) கெடுப்பதூஉம்-பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம்; கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதூஉம் - அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப்

பெய்து முன் கெடுத்தாற்போல எடுப்பதூஉம்; எல்லாம் மழை - இவையெல்லாம் வல்லது மழை.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. 'ஆங்' கென்பது மறுதலைத் தொழிலுவமத்தின்கண் வந்த உவமச்சொல். கேடும் ஆக்கமும் எய்துதற்குரியார் மக்களாதலின், 'கெட்டார்க்' கென்றார். 'எல்லா'மென்றது அம்மக்கள் முயற்சிவேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல்கள் தாம் பலவாதல் நோக்கி. 'வல்ல' தென்பது அவாய் நிலையான் வந்தது. மழையினதாற்றல் கூறியவாறு. (ரு)

கசு. விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது.

(இ - ள்.) விசும்பின் துளிவீழின் அல்லால்-மேகத்தின் துளி வீழிற் காண்பதல்லது, மற்று ஆங்கே பசும்புல் தலைகாண்பு அரிது-வீழாதாயின், அப்பொழுதே பசும்புல்லினது தலையையுங் காண்டல் அரிது.

'விசும்பு' ஆகுபெயர். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது: ஓரறிவுயிரும் இல்லையென்பதாம். (சு)

கஎ. நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.

(இ - ள்.) நெடும் கடலும் தன் நீர்மை குன்றும் - அளவில்லாத கடலும் தன்னியல்பு குறையும்; எழிலிதான் தடிந்துநல்காது ஆகி விடின்-மேகந்தான் அதனைக் குறைத்து அதன்கட் பெய்யாது விடுமாயின்.

உம்மை சிறப்பும்மை. தன்னியல்பு குறைதலாவதுநீர்வாழுயிர்கள் பிறவாமையும், மணி முதலாயின படாமையுமாம் ஈண்டுக் குறைத்தலென்றது முகத்தலை. அது ''கடல்குறை படுத்தநீர் கல் குறைபட வெறிந்து''* என்பதனாலும் அறிக. மழைக்கு முதலாய கடற்கும் மழை வேண்டுமென்பதாம். இவை ஏழு பாட்டானும் உலக நடத்தற்கேதுவாதல் கூறப்பட்டது. (எ)

கஅ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

(இ - ள்.) வானோர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாது - தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும்

* பரிபாடல்-20.

விழவும் பூசையும் நடவாது; வானம் வறக்குமேல்-மழை பெய்யாதாயின்.

நைமித்திகத்தோடு கூடிய நித்தியமென்றுராகலின், 'செல்லா' தென்றுர். உம்மை சிறப்பும்மை. நித்தியத்திற் ருழ்வுதீரச்செய்வது நைமித்திக மாதலின், அதனை முற்கூறினுர். (அ)

௧௯. தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(இ - ள்.) வியன் உலகம் தானம் தவம் இரண்டும் தங்கா-அகன்ற உலகின்கண் தானமும் தவமுமாகிய இரண்டறமும் உளவாகா; வானம் வழங்காதெனின் - மழை பெய்யாதாயின்.

தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல் முதலாயின. பெரும்பான்மைபற்றித் தானம் இல்லறத்தின்மேலும் தவம் துறவறத்தின்மேலும் நின்றன. (௯)

௨0. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(இ - ள்.) யார் யார்க்கும் நீர் இன்று உலகு அமையாது எனின்-எவ்வகை மேம்பாட்டார்க்கும் நீரையின்றி உலகியல்அமையாதாயின்; ஒழுக்கு வான் இன்று அமையாது - அந்நீர் இடையறுதொழுகும் ஒழுக்கும் வானையின்றி யமையாது.

பொருளின்பங்களை உலகியலென்றுர்,அவை இம்மைக்கண்ணவாகலின். இடையறுதொழுகுதல் எக்காலத்தும் எவ்விடத்தும்உளதாகல். நீரின்றமையாதுலகென்பது எல்லாரானுந் தெளியப்படுதலின், அதுபோல ஒழுக்கும் வானின்றமையாமைதெளியப்படுமென்பார், நீரின்றமையா துலகெனி' னென்றுர். இதனை நீரையின்றி யமையாதுஉலகாயின் எத்திறத்தார்க்கும்மழையையின்றிஒழுக்கம் நிரம்பாதென உரைப்பாரு முளர். இவை மூன்று பாட்டானும் அறம்பொருளின்பங்கள் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.(௧0)

---

அதி. ௩—நீத்தார்பெருமை

[அஃதாவது, முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறுணர்த்துவார் அவராகலின், இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.]

உக. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு.

(இ - ள்.) ஒழுக்கத்து நீத்தார் பெருமை - தமக்குரிய ஒழுக்கத்தின்கண்ணே நின்று துறந்தாரது பெருமையை; விழுப்பத்து வேண்டும் பனுவல் துணிவு - விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிதென விரும்பும் நூல்களது துணிவு.

தமக்கு உரிய ஒழுக்கத்தின்கண்ணே நின்று துறத்தலாவது, தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவாதொழுக அறம் வளரும்; அறம்வளரப் பாவந்தேயும்; பாவந்தேய அறியாமை நீங்கும்; அறியாமை நீங்க நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன்மாலையவாய இம்மைமறுமையின்பங்களின் உவர்ப்பும், பிறவித் துன்பங்களுந் தோன்றும்; அவை தோன்ற வீட்டின்கண் ஆசையுண்டாம்; அஃதுண்டாகப் பிறவிக்குக்காரணமாகிய பயனின் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய யோக முயற்சி யுண்டாம்; அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும்; ஆகலான் இவ்விரண்டு பற்றையும் இம்முறையே யுவர்த்து விடுதலெனக் கொள்க. பனுவலெனப் பொதுப்படக் கூறியவதனான், ஒன்றையொன்றொவ்வாத சமயநூல்களெல்லாவற்றிற்கும் இஃது ஒத்த துணிவென்பது பெற்றாம். செய்தாரது துணிவு பனுவன்மேல் ஏற்றப்பட்டது. (க)

உஉ. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

(இ - ள்.) துறந்தார் பெருமை துணைக்கூறின் - இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையை இவ்வளவென்று எண்ணாற் கூறி யறியலுறின், அளவுபடாமையான்; வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டு அற்று - இவ்வுலகத்துப் பிறந்திறந்தாரை எண்ணி இத்துணையரென அறியலுற்றாற் போலும்.

முடியாதென்பதாம். கொண்டாலென்னும் வினையெச்சம் 'கொண்'டெனத் திரிந்து நின்றது. (உ)

3 உங. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(இ - ள்.) இருமை வகை தெரிந்து - பிறப்பு வீடென்னும் இரண்டனது துன்பவின்பக் கூறுபாடுகளை ஆராய்ந்தறிந்து, ஈண்டு அறம் பூண்டார் பெருமை-அப்பிறப்பறுத்தற்கு இப்பிறப்பின்கண் துறவறத்தைப் பூண்டாரது பெருமையே; உலகு பிறங்கிற்று - உலகின்கண் உயர்ந்தது.

"தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல 'இருமை' யென்றது ஈண்டு எண்ணின்கண் நின்றது. பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது. இதனால், திகிரியுருட்டி உலகமுழுதாண்டஅரசர் முதலாயினர் பெருமை பிரிக்கப்பட்டது. இவை மூன்று பாட்டானும் நீத்தார்பெருமையேஎல்லாப்பெருமையினும் மிக்கதென்பது கூறப்பட்டது. (ங)

4 உச. உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

(இ - ள்.) உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்-திண்மை யென்னுந் தோட்டியால் பொறிகளாகிய யானையைந்தனையும் தத்தம் புலன்கண்மேற் செல்லாமற் காப்பான்; வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து-எல்லா நிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் வீட்டு நிலத்திற்கு ஒரு வித்தாம்.

இஃதேகதேச வுருவகம். திண்மை ஈண்டு அறிவின்மேற்று. அந்நிலத்திற்சென்று முளைத்தலின், 'வித்'தென்றார். ஈண்டுப் பிறந்திறந்துவரும் மகனல்லன் என்பதாம். (ச)

5 உரு. ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

(இ - ள்.) ஐந்து அவித்தான் ஆற்றல்-புலன்களிற் செல்கின்ற அவாவைந்தினையும் அடக்கினனது வலிக்கு; அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி-அகன்ற வானத்துள்ளார் இறைவனாகிய இந்திரனே அமையுஞ் சான்று.

ஐந்தும் என்னும் முற்றும்மையும் ஆற்றற்கென்னும் நான்கனுருபும் செய்யுள்விகாரத்தாற் றொக்கன. தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று அவித்தவனதாற்றல் உணர்த்தினனாகலின், 'இந்திரனே சாலுங் கரி'யென்றார். (ரு)

உசு. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(இ - ள்.) செயற்கரிய செய்வார் பெரியர் - ஒத்த பிறப்பின ராய மக்களுள் செய்தற்கெளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர்; செயற்கரிய செய்கலாதார் சிறியர் - அவ்வெளிய வற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டாதார் சிறியர்.

செயற்குஎளியவாவன மனம்வேண்டியவாறே அதனைப்பொறி வழிகளால் புலன்களிற் செலுத்தலும், வெஃகலும், வெகுடலும் முதலாயின. செயற்கு அரியவாவன இயமம் நியமம் முதலாயஎண் வகை யோகவுறுப்புக்கள். நீரிற் பலகான் மூழ்கல்* முதலாய "நாலிரு வழக்கிற் றாபத பக்க" மென்பாருமுளர்: அவை நியமத் துள்ளே அடங்கலின், நீத்தாரது பெருமைக்கு ஏலாமையறிக. (சு)

உஎ. சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.

(இ - ள்.) சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின் வகை - சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமுமென்று சொல் லப்பட்ட தன்மாத்திரைகள் ஐந்தனது கூறுபாட்டையும்; தெரி வான் கட்டே உலகு - ஆராய்வான் அறிவின்கண்ணதே உலகம்.

அவற்றின் கூறுபாடாவன: பூதங்கட்கு முதலாகிய அவைதாம் ஐந்தும், அவற்றின்கண் தோன்றிய அப்பூதங்கள் ஐந்தும், அவற் றின் கூறாகிய ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்து மாக இருபதுமாம். 'வகைதெரிவான்கட்'டென உடம்பொடு புணர்த்ததனால், தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற்கருவி யாகியமான் அகங்கார மனங்களும் அவற்றிற்கு முதலாகியமூலப் பகுதியும்பெற்றாம். தத்துவம் இருபத்தைந்தனையுந் தெரிதலாவது மூலப் பகுதி ஒன்றிற்றோன்றிய தன்மையிற் பகுதியே யாவதல்லது விகுதியாகாதெனவும், அதன்கட் டோன்றிய மானும், அதன்கட் டோன்றிய அகங்காரமும், அதன்கட் டோன்றிய தன்மாத்திரை களுமாகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும் தங்கண்தோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலுமுடையவென வும், அவற்றின்கண் தோன்றிய மனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும்பூதங்களுமாகிய பதினாறும் தங்கண் தோன்று வன இன்மையின் விகுதியேயாவதல்லது பகுதியாகாவெனவும், புருடன் தான் ஒன்றிற்றோன்றாமையானும் தங்கண் தோன்றுவன

* புறப்பொருள் வெண்பாமாலை, வாகைத்திணை : கசு

இன்மையானும் இரண்டுமல்லனெனவும் சாங்கியநூலுள் ஓதிய வாற்ருன் ஆராய்தல். இவ்விருபத்தைந்துமல்லது உலகெனப் பிறிதொன்றில்லையென உலகினதுண்மையறிதலின், அவனறிவின் கண்ணதாயிற்று, இவை நான்கு பாட்டானும் பெருமைக்கேது ஐந்தவித்தலும் யோகப்பயிற்சியும் தத்துவ உணர்வுமென்பது கூறப்பட்டது. (எ)

உஅ. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(இ - ள்,) நிறைமொழி மாந்தர் பெருமை-நிறைந்தமொழி யினையுடைய துறந்தாரது பெருமையை; நிலத்து மறைமொழி காட்டிவிடும் - நிலவுலகத்தின்கண் அவராணையாகச் சொல்லிய மந்திரங்களே கண்கூடாகக் காட்டும்.

'நிறைமொழி' யென்பது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடும் மொழி. காட்டுதல் பயனுன் உணர்த்துதல். (அ)

உகூ. குணமென்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது.

(இ - ள்.) குணம் என்னும் குன்று ஏறி நின்ருர் வெகுளி - துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்ற முனிவரது வெகுளி; கணமேயும் காத்தல் அரிது - தானுள்ளவளவு கணமேயாயினும் வெகுளப் பட்டாரால் தடுத்தல் அரிது.

சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைக் குன்ருக உருவகஞ் செய்தார். குணம் சாதியொருமை. அநாதியாய் வருகின்றவாறுபற்றி ஒரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் 'கணமேயு' மென்றும், நிறைமொழி மாந்தராகலின் 'காத்தலரி' தென்றும் கூறினர். இவை இரண்டு பாட்டானும் அவராணை கூறப்பட்டது. (கூ)

௩௦. அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

(இ - ள்.) எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் - எல்லாவுயிர்கண்மேலும் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுக லான்; அந்தணர் என்போர் அறவோர் - அந்தணரென்று சொல் லப்படுவார் துறவறத்தினின்றவர்.

பூணுதல் விரதமாகக் கோடல் அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப்பெயராகலின், அஃது அவ்வருளுடையார்மேலன்றிச் செல்லாதென்பதுகருத்து. அவ்வாறு ஆணையுடையாராயினும் உயிர்கண்மாட்டு அருளுடைய ரென்பது இதனாற் கூறப்பட்டது. (௩0)

---

## அதி. ௪—அறன்வலியுறுத்தல்

அதிகாரம் 4.

[அஃதாவது, அம்முனிவரான் உணர்த்தப்பட்ட அம்மூன்றனுள் ஏனைப் பொருளும் இன்பமும் போலாது, அறன், இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தலான், அவற்றின் வலியுடைத்தென்பது கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும் அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல"* என்றார் பிறரும்.]

1 ௩௧. சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு.

(இ - ள்.) சிறப்பு ஈனும்-வீடுபேற்றையுந் தரும்; செல்வமும் ஈனும் - துறக்கம் முதலிய செல்வத்தையுந் தரும்; உயிர்க்கு அறத்தின் ஊங்கு ஆக்கம் எவன்-ஆதலான் உயிர்கட்கு அறத்தின் மிக்க ஆக்கம் யாது?

எல்லாப்பேற்றினுஞ் சிறந்தமையின், வீடு 'சிறப்' பெனப்பட்டது. ஆக்கந் தருவதனை 'ஆக்க' மென்றார். ஆக்கம்-மேன்மேலுயர்தல். ஈண்டுயிரென்றது மக்களுயிரை சிறப்புஞ் செல்வமும் எய்துதற்குரியது. அதுவேயாகலின். இதனால் அறத்தின்மிக்க உறுதி இல்லையென்பது கூறப்பட்டது. (௧)

2 ௩௨. அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

(இ - ள்.) அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை - ஒருவனுக்கு அறஞ் செய்தலின் மேற்பட்ட ஆக்கமுமில்லை; அதனை மறத்தலின் ஊங்கு கேடு இல்லை-அதனை மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை.

---

* புறநானூறு—௩௧.

'அறத்தினூஉங் காக்கமுமில்லை' யென மேற்சொல்லியதனையே அனுவதித்தார், அதனாற்கேடுவருதல் கூறுதற்பயனோக்கி. இதனால் அதுசெய்யாவழிக் கேடுவருதல் கூறப்பட்டது. (உ)

ங௩. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாஞ் செயல்.

(இ - ள்.) ஒல்லும் வகையான்-தத்தமக்கியலுந் திறத்தான்; அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல் - அறமாகிய நல்வினையை ஒழியாதே அஃதெய்தும் இடத்தானெல்லாஞ் செய்க.

இயலுந்திறமாவது இல்லறம் பொருளளவிற் கேற்பவும், துறவறம்: யாக்கைநிலைக்கேற்பவுஞ்செய்தல், ஓவாமை-இடைவிடாமை. எய்துமிடமாவன மனம் வாக்குக் காயமென்பன. அவற்றாற் செய்யும் அறங்களாவன, முறையே, நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலுமென இவை. இதனான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது. (ங)

ங௪. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

(இ - ள்.) மனத்துக்கண் மாசு இலன் ஆதல்-அவ்வாற்றான் அறஞ்செய்வான் தன் மனத்தின்கட் குற்றமுடையன் அல்லனாக; அனைத்து அறன் - அவ்வளவே அறமாவது; பிற ஆகுல நீர-அஃதொழிந்த சொல்லும் வேடமும் அறமெனப்படா, ஆரவார நீர்மைய.

'குற்றம்' தீயன சிந்தித்தல். பிறரறிதல்வேண்டிச் செய்கின்றனவாகலின், 'ஆகுல நீர' வென்றார். மனத்து மாசுடையனாயவழி அதன் வழியவாகிய மொழி மெய்களாற் செய்வன பயனிலவென்பதூஉம் பெறப்பட்டது. (௪)

ங௫. அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்.

(இ - ள்.) அழுக்காறு - பிறராக்கம் பொறாமையும்; அவா-புலன்கண்மேற் செல்கின்ற அவாவும்; வெகுளி - அவையேதுவாகப் பிறர்பால் வரும் வெகுளியும்; இன்னாச்சொல் - அதுபற்றி வருங் கடுஞ்சொல்லுமாகிய; நான்கும் இழுக்கா இயன்றது அறம் - இந் நான்கினையுங் கடிந்து இடையறாது நடந்தது அறமாவது.

இதனன் இவற்றெடு விரவியியன்றது அறமெனப்படாதென் பதூஉங் கொள்க. இவை இரண்டு பாட்டானும் அறத்தின தியல்பு கூறப்பட்டது. (ரு)

ங௬. அன்றறிவாம் என்னு தறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்ருத் துணை.

(இ - ள்.) அன்று அறிவாம் என்னது அறம் செய்க - யாம் இதுபொழுது இளையமாகலின் இறக்குஞான்று செய்துமெனக் கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க; அது பொன்றுங்கால் பொன்ருத் துணை - அவ்வாறு செய்த அறம் இவ்வுடம்பினின்றும் உயிர்போங் காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம்.

'மற்'றென்பது அசைநிலை. 'பொன்ருத் துணை' யென்ருர், செய்த உடம்பழியவும் உயிரோடு ஒன்றி ஏனை உடம்பினுஞ் சேறலின். இதனன் இவ்வியல்பிற்ருய அறத்தினை நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்கவென்பது கூறப்பட்டது. (௬)

ங௭. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானே டூர்ந்தான் இடை.

(இ - ள்.) அறத்து ஆறு இது என வேண்டா - அறத்தின் பயன் இதுவென்று யாம்ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா; சிவிகை பொறுத்தானேடு ஊர்ந்தான் இடை சிவிகையைக் காவுவானேடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னனே உணரப் படும்.

பயனை 'ஆறு' என்ருர், பின்னதாகலின். 'என' வென்னுமெச் சத்தாற் சொல்லாகிய ஆகமவளவையும், 'பொறுத்தானே டூர்ந்தானிடை' யென்றதனற் காட்சியளவையும் பெற்ரும். உணரப்படு மென்பது சொல்லெச்சம். இதனற் 'பொன்ருத் துணை'யாதல் தெளிவிக்கப்பட்டது. (௭)

ங௮. வீழ்நாள் படாஅமை நன்ருற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல்.

(இ - ள்.) வீழ் நாள் படாமை நன்று ஆற்றின் - செய்யாது கழியும் நாளுளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின்; அஃது ஒருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல் - அச்செயல் அவன் யாக்கையோடு கூடுநாள் வரும் வழியை வாராமல் அடைக்குங் கல்லாம்.

ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகைவினையும் உள்ளதுணையும், உயிர் யாக்கையோடுங் கூடிநின்று அவ்வினைகளது இருவகைப்

பயனையும் நுகருமாகலான், அந்நாள் முழுவதும் 'வாழ்நா'ளெனப் பட்டது. குற்றங்கள் ஐந்தாவன; அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன: இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேச மென்பர். வினை இரண்டாவன: நல்வினை, தீவினை என்பன. பயன் இரண்டாவன: இன்பந் துன்ப மென்பன. இதனால் அறம், வீடுபயக்கு மென்பது கூறப்பட்டது (அ)

௩௯. அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழும் இல.

(இ - ள்.) அறத்தான் வருவதே இன்பம்-இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது; மற்ற எல்லாம் புறத்த - அதனோடு பொருந்தாது வருவனவெல்லாம் இன்பமாயினுந் துன்பத்தினிடத்த; புகழும் இல - அதுவேயுமன்றிப் புகழு முடையவல்ல.

ஆனுருபு ஈண்டுடனிகழ்ச்சிக்கண் வந்தது, "தூங்குகையா னோங்கு நடைய"* என்புழிப்போல. 'இன்பம்' காமநுகர்ச்சி: அஃதாமாறு காமத்துப்பாலின் முதற்கட் சொல்லுதும். † இன் பத்திற் புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தான் வரும் பிறனில் விழைவுமுதலாயின அக்கணத்துள் இன்பமாய்த் தோன்றுமாயினும் பின் துன்பமாய் விளைதலின், 'புறத்த' வென்றார். அறத்தோடு வாராதன புகழுமில எனவே வருவது புகழுமுடைத்தென்பது பெற்றாம். இதனான் அறஞ்செய்வாரே இம்மையின்பமும் புகழும் எய்துவரென்பது கூறப்பட்டது. (கூ)

௪௦. செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி.

(இ - ள்.) ஒருவற்குச் செயற்பாலது அறனே-ஒருவனுக்குச் செய்தற்பான்மையது நல்வினையே; உயற்பாலது பழியே - ஒழிதற் பான்மையது தீவினையே.

'ஒரு' மென்பன இரண்டும் அசைநிலை. தேற்றேகாரம் பின்னுங் கூட்டப்பட்டது. பழிக்கப்படுவதனைப் 'பழி' என்றார் இதனாற் செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன. (௪0)

பாயிரவியல் முற்றிற்று.

---

* புறநானூறு: ௨௨. † "ஈண்டின்பமென்றது ஒருகாலத் தொரு பொருளான் ஐம்புலன் நுகர்தற்சிறப்புடைத்தாய காமவின் பத்தினை."

## ௨. இல்லறவியல்

### அதி. ரு—இல்வாழ்க்கை

[அஃதாவது, இல்லாளோடு கூடிவாழ்தலினது சிறப்பு. இன்னிலை அறஞ்செய்தற்குரிய இருவகை நிலையுள் முதலாதலின், இஃது அறன்வலியுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.]

சக. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

(இ - ள்.) இல்வாழ்வான் என்பான் - இல்லறத்தோடு கூடி வாழ்வானென்று சொல்லப்படுவான்; இயல்பு உடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை - அறவியல்பினையுடைய ஏனை மூவர்க்கும் அவர் செல்லும் நல்லொழுக்க நெறிக்கண் நிலைபெற்ற துணையாம்.

'இல்' லென்பது ஆகுபெயர். 'என்பா' னெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது. ஏனை மூவராவர், ஆசாரியனிடத்தினின் றோதுதலும் விரதங் காத்தலுமாகிய பிரமசரிய ஒழுக்கத்தானும், இல்லைவிட்டு வனத்தின்கண் தீயொடு சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கத்தானும், முற்றத்துறந்த யோகவொழுக்கத்தானும் என இவர்; இவருள் முன்னை இருவரையும் பிறர்மதமேற்கொண்டு கூறினார். இவர், இவ்வொழுக்க நெறிகளை முடியச்செல்லுமளவும் அச் செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலிய உதவி அவ்வந் நெறிகளின் வழுவாமற் செலுத்துதலான், 'நல்லாற்றின் நின்ற துணை' என்றார்.

சஉ. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

(இ - ள்) துறந்தார்க்கும் - களைகணானவரால் துறக்கப்பட்டார்க்கும்; துவ்வாதவர்க்கும் நல்கூர்ந்தார்க்கும்; இறந்தார்க்கும் - ஒருவருமின்றித் தன்பால்வந்து இறந்தார்க்கும்; இல்வாழ்வான் என்பான் துணை - இல்வாழ்வானென்று சொல்லப்படுவான் துணை.

துறந்தார்க்குப் பாவமொழிய அவர் களைகணாய்நின்றுவேண்டுவன செய்தலானும், துவ்வாதவர்க்கு உணவு முதலிய கொடுத்த

லானும், இறந்தார்க்கு நீர்க்கடன் முதலிய செய்து நல்லுலகின்கண் செலுத்தலானும் 'துணை' என்றார். இவை இரண்டு பாட்டானும் இன்னிலை எல்லா உபகாரத்திற்கும் உரித்தாதல் கூறப்பட்டது.(உ)

3 ௪௩. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை.

(இ - ள்.) தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற - பிதிரர் தேவர் விருந்தினர் சுற்றத்தார் தானென்று சொல்லப்பட்ட, ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை - ஐந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவாமற் செய்தல்இல்வாழ்வானுக்குச்சிறப்புடைய அறமாம்.

பிதிரராவார் படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதொரு கடவுட்சாதி; அவர்க்கிடம் தென்திசையாதலின், 'தென் புலத்தா' ரென்றார் 'தெய்வ' மென்றது சாதியொருமை. 'விருந்' தென்பது புதுமை; அஃது ஈண்டு ஆகுபெயராய்ப் புதியராய் வந்தார்மேல் நின்றது; அவர் இருவகையர்: பண்டறி வுண்மையிற் குறித்து வந்தாரும்; அஃதின்மையிற் குறியாது வந்தாருமென. ஒக்கல் - சுற்றத்தார். எல்லா அறங்களும் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின், தன்னை ஓம்பலும் அறனாயிற்று. 'என்ற' வென்பது விகாரமாயிற்று 'ஆங்கு' அசை. ஐவகையும் அறஞ் செய்தற் கிடனாகலின் 'ஐம்புல' மென்றார். அரசனுக்கு இறைப் பொருள் ஆறிலொன்றாயிற்று, இவ்வைம்புலத்திற்கும் ஐந்துகூறு வேண்டுதலான் என்பதறிக. (௩)

6 ௪௪. பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

(இ - ள்.) பழி அஞ்சிப் பாத்து ஊண் வாழ்க்கை உடைத்தாயின் - பொருள் செய்யுங்கால் பாவத்தை அஞ்சி யீட்டி, அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினார்க்கும், தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டலை ஒருவன் இல்வாழ்க்கை உடைத்தாயின்; வழி எஞ்ஞான்றும் எஞ்சல் இல் - அவன் வழி உலகத்து எஞ்ஞான்றும் நிற்றலல்லது இறத்தலில்லை.

பாவத்தான் வந்த பிறன் பொருளைப் பகுத்துண்ணின், அறம் பொருளுடையார் மேலும், பாவந் தன்மேலுமாய் நின்று வழியெஞ்சுமாகலின், 'பழியஞ்சி' என்றார். வாழ்வான துடைமை வாழ்க்கைமேல் ஏற்றப்பட்டது. (௪)

சரு. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

(இ - ள்.) இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயின் - ஒருவன் இல்வாழ்க்கை தன் துணைவிமேற் செய்யத்தகும் அன்பினையும். பிறர்க்குப் பகுத்துண்டலாகிய அறத்தினையு முடைத்தாயின் அது பண்பும் பயனும்-அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம்.

நிரனிறை. இல்லாட்குங் கணவற்கும் நெஞ்சொன்றுகாவழி இல்லறங் கடைபோகாமையின், அன்புடைமை பண்பாயிற்று; அறனுடைமை பயனாயிற்று. இவை மூன்று பாட்டானும் இன்னிலையில் நின்றான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது. (ரு)

சசா. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்.

(இ - ள்.) இல்வாழ்க்கை அறத்தாற்றின் ஆற்றின்-ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவனாயின்; புறத்தாற்றில் போய்ப் பெறுவது எவன் - அவன் அதற்குப் புறமாகிய நெறியிற் போய்ப் பெறும் பயன் யாது?

'அறத்தா' றென்பது பழியஞ்சிப் பகுத்துண்டலும், அன்புடைமையுமென மேற்சொல்லிய ஆறு. 'புறத்தாறு' இல்லை விட்டு வனத்துச் செல்லும் நிலை. அந்நிலையின் இது பயனுடைத் தென்பார், 'போஒய்ப் பெறுவதெவ' னென்றார். (சா)

சஎ. இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.

(இ - ள்.) இல்வாழ்க்கைஇயல்பினான் வாழ்பவன் என்பான் - இல்வாழ்க்கைக்கண் நின்று அதற்குரிய இயல்போடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவான்; முயல்வாருள் எல்லாம் தலை - புலன்களை விடமுயல்வா ரெல்லாருள்ளும் மிக்கவன்.

முற்றத்துறந்தவர் விட்டமையின், 'முயல்வா' ரென்றது மூன்றாநிலையில் நின்றாரை. அந்நிலை தான் பலவகைப்படுதலின் 'எல்லாருள்ளு' மெனவும், முயலாது வைத்துப் பயனெய்துதலின் 'தலை' யெனவுங் கூறினார். (எ)

சஅ. ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

(இ - ள்.) ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை - தவஞ் செய்வாரையுந் தத்தம் நெறியின்கண் ஒழுகப்பண்ணித் தானுந் தன்னறத்தில் தவருத இல்வாழ்க்கை; நோற்பாரின் நோன்மை உடைத்து - அத்தவஞ்செய்வார் நிலையினும் பொறை யுடைத்து.

பசி முதலிய இடையூறு நீக்கலின், 'ஆற்றி னொழுக்கி' யென் ருர். நோற்பா ரென்பது ஆகுபெயர். நோற்பார் நிலைக்கு அவர் தம்மையுற்ற நோயல்லது இல்வாழ்வார் நிலைபோற் பிறரையுற்ற நோயும் பொறுத்தலின்மையின், 'நோற்பாரின் நோன்மையுடைத்' தென்ருர். (அ)

சகூ. அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

(இ - ள்.) அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே - இருவகை யறத்தினும் நூல்களான் அறன் என்று சிறப்பித்துச் சொல் லப்பட்டது இல்வாழ்க்கையே; அஃதும் பிறன் பழிப்பது இல் லாயின் நன்று - ஏனைத் துறவறமோவெனின், அதுவும் பிற ஞற் பழிக்கப்படுவதில்லையாயின், அவ்வில்வாழ்க்கையோடு ஒரு தன்மைத்தாக நன்று.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனுற் பிரிக்கப்பட்டது துறவறமாகலின், 'அஃது' என்னுஞ் சுட்டுப்பெயர் அதன்மேல் நின்றது. 'பிறன்பழிப்ப' தென்றது கூடாவொழுக்கத்தை. துறவறம், மனத்தையும் பொறிகளையும் ஒறுத்தடக்கவல்ல அருமை யுடைத்தாய வழியே, அவற்றை யொறுக்க வேண்டாது ஐம்புல இன்பங்களாரத்துய்க்கும் எண்மையுடைய இல்வாழ்க்கையோடு அறமென ஒருங்கெண்ணப்படுவ தென்றவாருயிற்று. இவை நான்கு பாட்டானும் இன்னிலையே பயனுடைத்தென இதன் சிறப் புக் கூறப்பட்டது. (கூ)

ருo. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(இ - ள்.) வாழ்வாங்கு வையத்துள் வாழ்பவன் - இல்லறத் தோடு கூடிவாழும் இயல்பினுல் வையத்தின்கண் வாழ்பவன்; வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும் - வையத்தானே யெனினும் வானின்கண் உறையுந் தேவருள் ஒருவனுக வைத்து நன்கு மதிக்கப்படும்.

பின் தேவனய் அவ்வறப்பயன் நுகர்தல் ஒருதலையாகலின், 'தெய்வத்துள் வைக்கப்படு' மென்ருர். இதனுன் இன்னிலையது

மறுமைப்பயன் கூறப்பட்டது. இம்மைப் பயன் புகழ்; அதனை இறுதிக்கண்* கூறுப. (௧0)

---

## அதி. ௬—வாழ்க்கைத்துணை நலம்

[அஃதாவது, அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

௫௧. **மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

(இ - ள்.) மனைத் தக்க மாண்பு உடையளாகித் தற்கொண்டான் வளத்தக்காள்-மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகளை யுடையளாய்த் தன்னைக்கொண்டவனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையையுடையாள்; வாழ்க்கைத் துணை - அதற்குத் துணை.

நற்குணங்களாவன: துறந்தார்ப்பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டருளுடைமையும் முதலாயின. நற்செய்கைகளாவன: வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்துகடைப்பிடித்தலும் அட்டிற்றொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலாயின வருவாய்க்குத்தக்க வாழ்க்கையாவது முதலை யறிந்து அதற்கியைய அழித்தல். அதனால் இவ்விரண்டு நன்மையுஞ் சிறந்தன வென்பது கூறப்பட்டது. (௧)

௫௨. **மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல்.**

(இ - ள்.) மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்-மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள் ஒருவனில்லாளிடத் தில்லையாயின்; வாழ்க்கை எனைமாட்சித்தாயினும் இல்-அவ்வில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சிமையுடைத்தாயினும் அஃதுடைத்தன்று.

இல்லையென்றார், பயன்படாமையின். (௨)

௫௩. **இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்**
**இல்லவள் மாணக் கடை.**

(இ - ள்.) இல்லவள் மாண்பு ஆனால் இல்லது என் - ஒருவனுக்கு இல்லாள் நற்குண நற்செய்கையள் ஆயினக்கால் இல்லாத

---

* அதி. ௨௪—புகழ்.

தியாது? இல்லவள் மாணுக்கடை உள்ளது என்-அவள் அன்னள் அல்லாக்கால் உள்ளது யாது?

மாண்பெனக் குணத்தின்பெயர் குணிமேல்நின்றது. இவை இரண்டு பாட்டானும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது இல்லாளது மாட்சியே பிற அல்ல வென்பது கூறப்பட்டது. (௩)

ருசு. பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.

(இ - ள்.) பெண்ணின் பெருந்தக்க யாஉள-ஒருவன் எய்தும் பொருள்களுள் இல்லாளின்மேம்பட்ட பொருள்கள் யாவையுள; கற்பு என்னும் திண்மை யுண்டாகப் பெறின் - அவண்மாட்டுக் கற்பென்னும் கலங்காநிலைமை யுண்டாகப்பெறின்?

கற்புடையாள்போல அறமுதலிய மூன்றற்கும் ஏதுவாவன பிறவின்மையின், 'யாவுள' வென்றார். இதனாற் கற்புநலத்தது சிறப்புக் கூறப்பட்டது. (௪)

ருரு. தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

(இ - ள்.) தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள் பெய் என - பிறதெய்வந் தொழாது தன்றெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள் பெய்யென்று சொல்ல; மழை பெய்யும் - மழை பெய்யும்.

தெய்வந்தொழுதற்கு மனந் தெளிவது துயிலெழுங்காலத்தாகலின் 'தொழுதெழுவா' ளென்றார். 'தொழாநின்' றென்பது 'தொழு' தெனத் திரிந்துநின்றது தெய்வந்தான் ஏவல் செய்யுமென்பதாம். இதனாற் கற்புடையவள தாற்றல் கூறப்பட்டது. (௫)

ருசு. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(இ - ள்.) தற்காத்துத் தற்கொண்டான் பேணி-கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துத் தன்னைக்கொண்டவனையும் உண்டி முதலியவற்றாற் பேணி; தகைசான்ற சொல் காத்து - இருவர்மாட்டும் நன்மையமைந்த புகழ் நீங்காமற் காத்து, சோர்வு இலாள் பெண் - மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடியுடையாளே பெண்ணாவாள்.

தன்மாட்டுப் புகழாவது வாழுமூர் கற்பால் தன்னைப் புகழ்வது. சோர்வு - மறவி. இதனுல் தற்புகழ்தற் சிறப்புக் கூறப்பட்டது. (சு)

ருஎ. சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.

(இ - ள்.) மகளிர் சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் - மகளிரைத் தலைவர் சிறையாற் காக்கும் காவல் என்ன பயனைச் செய்யும்; நிறை காக்கும் காப்பே தலை-அவர் தமது நிறையாற் காக்கும் காவலே தலையாய காவல்.

'சிறை' : மதிலும். வாயில்காவலும் முதலாயின.'நிறை' நெஞ்சைக் கற்புநெறியினிறுத்தல். காவலிரண்டினும் நிறைக்காவலில் வழிஏனைச் சிறைக்காவலாற் பயனில்லையென்பார், 'நிறைகாக்குங் காப்பே தலை'யென்றூர். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனுல் தற்காத்தற் சிறப்புக் கூறப்பட்டது. (எ)

ருஅ. பெற்ருற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

(இ - ள்.) பெண்டிர் பெற்ருன் பெறின்-பெண்டிர், தம்மையெய்திய கணவனை வழிபடுதல் பெறுவராயின்; புத்தேளிர் வாழும் உலகு பெருஞ் சிறப்புப் பெறுவர்-புத்தேளிர் வாழுமுலகின்கண் அவராற் பெருஞ்சிறப்பினைப் பெறுவர்.

'வழிபடுத' லென்பது சொல்லெச்சம். இதனுல் தற்கொண்டாற் பேணிய மகளிர் புத்தேளிராற் பேணப்படுவரென்பது கூறப்பட்டது. (அ)

ருகூ. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

(இ - ள்.) புகழ்புரிந்த இல் இலோர்க்கு - புகழை விரும்பிய இல்லாளை இல்லாதார்க்கு; இகழ்வார் முன் ஏறுபோல் பீடு நடை இல்லை - தம்மை இகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்க ஏறுபோல நடக்கும் பெருமிதநடை இல்லை.

புரிந்த வென்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தாற் ருெக்கது. பெருமிதமுடையானுக்குச் சிங்கவேறு நடையான் உவமமாகலின் 'ஏறுபோ'லென்ருர். இதனுல் தகைசான்ற சொற்காவாவழிப்படுங் குற்றங் கூறப்பட்டது. (கூ)

கூ0. மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

(இ - ள.) மங்கலம் என்ப மனைமாட்சி - ஒருவற்கு நன்மையென்று சொல்லுவர் அறிந்தோர் மனையாளது நற்குண நற்செய்கைகளை; அதன் நன்கலம் (என்ப) நன்மக்கட்பேறு - அவை தமக்கு நல்ல அணிகலமென்று சொல்லுவர் நல்ல புதல்வரைப் பெறுதலை.

அறிந்தோரென்பது எஞ்சி நின்றது. 'மற்று' அசைநிலை. இதனால் வாழ்க்கைத் துணைக்கு ஆவதோரணிநலங் கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது. (க0)

———

## அதி. எ—புதல்வரைப் பெறுதல்.*

[அஃதாவது, இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப் படூஉங் கடன் மூன்றனுள், முனிவர்கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியானும். தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலானுமல்லது இறுக்கப்படாமையின், அக்கடன் இறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல். அதிகார முறைமை மேலே பெறப்பட்டது.]

கூக. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(இ - ள்.) பெறுமவற்றுள் - ஒருவன் பெறும் பேறுகளுள்; அறிவு அறிந்த மக்கட்பேறு அல்ல பிற - அறிய வேண்டுவன அறிதற்குரிய மக்களைப் பெறுதலல்லது பிற பேறுகளை; யாம் அறிவது இல்லை - யாம் மதிப்பதில்லை.

'அறிவ'தென்பது அறிதலைச் செய்வதென அத்தொழின்மேல் நின்றது. காரணமாகிய உரிமை காரியமாகிய அறிதலைப் பயந்தே விடுமாதலான், அத்துணிவுபற்றி'அறிந்த'வென இறந்தகாலத்தாற் கூறினர். 'அறிவறிந்த' வென்றதனன், 'மக்க' ளென்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது. இதனற் புதல்வர்ப் பேற்றினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

கூஉ. எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

* 'மக்கட்பேறு' என்பதும் பாடம்.

(இ - ள்.) எழுபிறப்பும் தீயவை தீண்டா - வினைவயத்தாற் பிறக்கும் பிறப்பேழின்கண்ணும் ஒருவனைத் துன்பங்கள் சென்றடையா; பழி பிறங்காப் பண்பு உடை மக்கள் பெறின் - பிறராற் பழிக்கப்படாத நற்குணங்களையுடைய புதல்வரைப்பெறுவானாயின்.

அவன் தீவினை வளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரைப் பெறுவனாயி னென்றவாறாயிற்று. பிறப்பேழாவன; 'ஊர்வ பதினொன்று மொன்பது மானுடம், நீர்பறவை நாற்காலோர் பப்பத்துச் - சீரிய, பந்தமாந் தேவர் பதினாலயன் படைத்த அந்தமில்சீர்த் தாவரநா லைந்து.'' தந்தை தாயர் தீவினை தேய்தற்பொருட்டு அவரை நோக்கிப் புதல்வர் செய்யுந் தான தருமங்கட்கு அவர் நற்குணங் காரணமாகலின், பண்பென்னுங் காரணப்பெயர் காரியத்தின் மேனின்றது. (உ)

சுஙு. தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம வினையான் வரும்.

(இ - ள்.) தம் மக்கள் தம்பொருள் என்ப - தம்புதல்வரைத் தம்பொருளென்று சொல்லுவர் அறிந்தோர்; அவர் பொருள் தந்தம் வினையான் வரும் - அப்புதல்வர் செய்தபொருள் தம்மை நோக்கி அவர் செய்யும் நல்வினையானே தம்பால்வரும் ஆதலான்.

'தந்தம் வினை' யென்புழித் தொக்குநின்ற ஆறும்வேற்றுமை ''முருகனது குறிஞ்சிநிலம்'' என்புழிப்போல உரிமைப் பொருட்கண் வந்தது. பொருள் செய்த மக்களைப் பொரு'ளென உபசரித்தார். இவை இரண்டு பாட்டானும் நன்மக்கட் பெற்றார் பெறும் மறுமைப்பயன் கூறப்பட்டது. (ங)

சுச. அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

(இ - ள்.) அமிழ்தினும் ஆற்ற இனிதே - சுவையான் அமிழ்தத்தினும் மிகவினிமை யுடைத்து; தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ் - தம் மக்களது சிறுகையா னளாவப்பட்ட சோறு.

சிறுகையா னளாவலாவது ''இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும், நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தல்.''* (ச)

சுரு. மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

---

* புறநானூறு - கஅஅ

(இ - ள்.) உடற்கு இன்பம் மக்கள் மெய் தீண்டல்-ஒருவன் மெய்க்கின்பமாவது மக்களது மெய்யைத் தீண்டுதல், செவிக்கு இன்பம் அவர் சொல் கேட்டல் - செவிக்கின்பமாவது அவரது சொல்லைக் கேட்டல்.

'மற்று' வினைமாற்று. மக்களது மழலைச் சொல்லேயன்றி அவர் கற்றறிவுடையராய்ச் சொல்லுஞ்சொல்லும்இன்பமாகலின், பொதுப்படச் 'சொல்' லென்றார். 'தீண்டல்' 'கேட்ட' லென்னுங் காரணப் பெயர்கள் ஈண்டுக் காரியங்களின்மேல் நின்றன. (ரு)

சுசு. குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.

(இ - ள்.) குழல் இனிது யாழ் இனிது என்ப - குழலிசை யினிது யாழிசை யினிதென்று சொல்லுவர்; தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர் - தம் புதல்வருடைய குதலைச் சொற்களைக் கேளாதவர்.

'குழல்' 'யாழ்' என்பன ஆகுபெயர். கேட்டவர் அவற்றினும் மழலைச்சொல் இனிதென்ப ரென்பது குறிப்பெச்சம். இனிமை மிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்புவகையானுங் கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் இம்மைப்பயன் கூறப்பட்டது. (சு)

சுஎ. தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.

(இ - ள்.) தந்தை மகற்கு ஆற்றும் நன்றி - தந்தை புதல்வனுக்குச் செய்யும் நன்மையாவது; அவையத்து முந்தி இருப்பச் செயல் - கற்றாரவையின்கண் அவரினும் மிக்கிருக்குமாறு கல்வியுடையனாக்குதல்.

பொருளுடையனாக்குதல் முதலாயின துன்பம் பயத்தலின் நன்மையாகாவென்பது கருத்து. இதனால் தந்தை கடன் கூறப்பட்டது. (எ)

சுஅ. தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

(இ - ள்.) தம் மக்கள் அறிவுடைமை - தம் மக்களதறிவுடைமை: மாநிலத்து மன் உயிர்க்கெல்லாம் தம்மின் இனிது - பெரிய நிலத்து மன்னுநின்ற உயிர்கட்கெல்லாம் தம்மினும் இனிதாம்.

ஈண்டறிவென்றது, இயல்பாகிய அறிவோடுகூடிய கல்வியறிவினை. 'மன்னுயி' ரென்றது ஈண்டறிவுடையார்மேல் நின்றது, அறிவுடைமை கண்டின்புறுதற்கு உரியார் அவராகலின். இதனால் தந்தையினும் அவையத்தார் உவப்பரென்பது கூறப்பட்டது. (அ)

கூகூ. ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

(இ - ள்.) ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும்-தான்பெற்ற பொழுதை மகிழ்ச்சியினும் மிக மகிழும்; தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய் தன் மகனைக் கல்வி கேள்விகளான் நிறைந்தானென்று அறிவுடையோர் சொல்லக் கேட்ட தாய்.

கவானின்கண் கண்ட பொது உவகையினுஞ் சால்புடையனெனக் கேட்ட சிறப்புவகை பெரிதாகலின் 'பெரிதுவக்கு' மெனவும்,பெண்ணியல்பால் தானாகஅறியாமையிற்'கேட்டதாயென'வுங் கூறினார். 'அறிவுடையா' ரென்பது வருவிக்கப்பட்டது; சான்றோனென்றற் குரியர் அவராகலின். தாயுவகைக்களவின்மையின் அஃதிதனாற் பிரித்துக் கூறப்பட்டது (க)

எ0. மகன் தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்லெனும் சொல்.

(இ - ள்.) தந்தைக்கு மகன் ஆற்றும் உதவி - கல்வியுடையனாக்கிய தந்தைக்கு மகன் செய்யும் கைம்மாறாவது; இவன் தந்தை என் நோற்றான்கொல் எனும் சொல் - தன்னறிவும் ஒழுக்கமுங் கண்டார் இவன் தந்தை இவனைப் பெறுதற்கு என்ன தவஞ் செய்தான் கொல்லோ வென்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல்.

'சொல்' லென்பது நிகழ்த்துதலாகிய தன் காரணந் தோன்ற நின்றது. நிகழ்த்துதல் - அங்ஙனஞ் சொல்ல வொழுகல். இதனாற் புதல்வன் கடன் கூறப்பட்டது (க0)

---

## அதி. அ - அன்புடைமை

[அஃதாவது, அவ்வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். இல்லறம் இனிது நடத்தலும் பிற உயிர்கண்மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயனாகலின் இது வேண்டப்பட்டது. வாழ்க்கைத் துணைமேல் அன்பில்வழி இல்லற மினிது நடவாமை, "அறவோர்க் களித்தலு மந்தணர்

ஓம்பலுந், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை"* என்பதனுலும், அதனுல் அருள்பிறத்தல் "அருளென்னும் அன்பீன் குழவி"† என்பதனுலும் அறிக.]

எக. அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

(இ - ள்.) அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ-அன்பிற்கும் பிறரறியாமலடைத்துவைக்குந் தாழுளதோ?; ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்-தம்மால் அன்பு செய்யப்பட்டாரது துன்பங்கண்டுழி அன்புடையார் கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே உண்ணின்ற அன்பினை எல்லாரும் அறியத் தூற்றும் ஆதலான்.

உம்மை சிறப்பின்கண் வந்தது. ஆர்வலரது புன்மை, கண்ணீர் மேல்ஏற்றப்பட்டது. காட்சியளவைக் கெய்தாதாயினும் அனுமான அளவையான் வெளிப்படும் என்பதாம். இதனுல் அன்பினதுண்மை கூறப்பட்டது.
(க)

எஉ. அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

(இ - ள்.) அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர்-அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானுந் தமக்கே உரியர்; அன்புடையார் என்பும் பிறர்க்கு உரியர்-அன்புடையார் அவற்றுனே யன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர்.

ஆனுருபுகளும் பிரிநிலையேகாரமும் விகாரத்தாற் ருெக்கன. 'என்பு' ஆகுபெயர். 'என்புமுரிய' ராதல், "தன்னகம் புக்க குறுநடைப் புறவின், தபுதியஞ்சிச் சீரை புக்கோன்"‡ முதலாயினுர்கட் காண்க.
(உ)

எங. அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு.

(இ - ள்.) ஆர்உயிர்க்கு என்போடு இயைந்ததொடர்பு-பெறுதற்கரிய மக்களுயிர்க்கு உடம்போடு உண்டாகிய தொடர்ச்சியினை; அன்போடு இயைந்த வழக்கு என்ப - அன்போடு பொருந்துதற்கு வந்த நெறியின் பயன் என்று சொல்லுவர் அறிந்தோர்.

* சிலப்பதிகாரம், கொலைகளக்காதை, வரி, எக-எங.
† குறள் : எுள. ‡ புறநானூறு : சங.

பிறப்பினதருமை பிறந்த உயிர்மேல் ஏற்றப்பட்டது. 'இயைந்த' என்பது உபசார வழக்கு. 'வழக்கு' ஆகு பெயர். உடம்போடு இயைந்தல்லது அன்பு செய்யலாகாமையின், அது செய்தற் பொருட்டு இத்தொடர்ச்சி யுளதாயிற்றென்பதாம். ஆகவே, இத் தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமை என்றாயிற்று. (௩)

எ௪. அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

(இ - ள்.) அன்பு ஆர்வமுடைமை ஈனும் - ஒருவனுக்குத் தொடர்புடையார் மாட்டுச்செய்த அன்பு அத்தன்மையாற் பிறர் மாட்டும் விருப்பமுடைமையைத் தரும்; அது நண்பு என்னும்நாடாச் சிறப்பு ஈனும் - அவ்விருப்பமுடைமைதான் அவற்குப் பகையும் நொதுமலும் இல்லையாய் யாவரும் நண்பென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத் தரும்.

'உடைமை' உடையனுந் தன்மை. யாவரு நண்பாதல் எல்லாப் பொருளும் எய்துதற்கேதுவாகலின், அதனை 'நாடாச் சிறப்பு' என்றார். (௪)

எ௫. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு.

(இ - ள்.) அன்பு உற்று அமர்ந்த வழக்கு என்ப-அன்புடையராய் இல்லறத்தோடு பொருந்திய நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர்; வையகத்து இன்பு உற்றார் எய்தும் சிறப்பு-இவ் வுலகத்து இல்வாழ்க்கைக்கணின்று இன்பநுகர்ந்து அதன்மேல் துறக்கத்துச் சென்றெய்தும் பேரின்பத்தினை.

'வழக்கு' ஆகுபெயர். இல்வாழ்க்கைக்கணின்று மனைவியோடும் மக்களோடும் ஒக்கலோடுங் கூடி இன்புற்றார் தாஞ்செய்த வேள்வித்தொழிலால் தேவராய் ஆண்டு மின்புறுவராகலின், 'இன்புற்றா ரெய்துஞ் சிறப்பு' என்றார். தவத்தால் துன்புற்றெய்துந் துறக்க இன்பத்தினை ஈண்டு, மின்புற்றெய்துதல் அன்பானன்றி இல்லை என்பதாம். (௫)

எ௬. அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

(இ - ள்.) அன்பு சார்பு அறத்திற்கே என்ப அறியார்-அன்பு துணையாவது அறத்திற்கே என்று சொல்லுவர் சிலரறியார்; மறத்

திற்கும் அஃதே துணை - ஏனை மறத்திற்கும் அவ்வன்பே துணையாவது.

ஒருவன் செய்த பகைமைபற்றி உள்ளத்து மறம் நிகழ்ந்துழி அவனை நட்பாகக் கருதி அவன்மேல் அன்பு செய்ய அது நீங்குமாகலின், மறத்தை நீக்குதற்குந் துணையாம் என்பார், 'மறத்திற்கு மஃதே துணை' என்றார், ''துன்பத்திற் கியாரே துணையாவார்''* என்புழிப்போல. இவை ஐந்து பாட்டானும் அன்பினது சிறப்புக் கூறப்பட்டது. (சு)

எள. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

(இ - ள்.) என்பு இலதனை வெயில்போலக் காயும்-என்பில்லாத உடம்பை வெயில் காய்ந்தாற்போலக் காயும்; அன்புஇலதனை அறம்-அன்பில்லாத உயிரை அறக்கடவுள்.

'என்பில' தென்றதனன் உடம்பென்பதூஉம், 'அன்பில' தென்றதனன் உயிரென்பதூஉம் பெற்றும். வெறுப்பின்றி எங்குமொரு தன்மைத்தாகிய வெயிலின் முன் என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய அறத்தின் முன் 'அன்பில்லது' தன்னியல்பாற் கெடும் என்பதாம் அதனைக் 'காயு' மென வெயிலறங்களின்மேல் ஏற்றினர். அவற்றிற்கும் அவ்வியல் புண்மையின். இவ்வாறு, ''அல்லவை செய்வார்க் கறங் கூற்றம்''† எனப் பிறருங் கூறினர். (எ)

எஅ. அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.

(இ ள்.) அகத்து அன்பு இல்லா உயிர் வாழ்க்கை - மனத்தின்கண் அன்பில்லாத உயிர் இல்லறத்தோடு கூடி வாழ்தல்; வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று·வன்பாலின்கண் வற்றலாகிய மரந் தளிர்த்தாற் போலும்.

கூடாதென்பதாம். 'வன்பால்' வன்னிலம். 'வற்ற' லென்பது பால்விளங்கா அஃறிணைப் படர்க்கைப் பெயர். (அ)

எசு. புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு.

(இ - ள்.) யாக்கையகத்து உறுப்புஅன்பு இலவர்க்கு யாக்கையகத்தின்கணின்று இல்லறத்திற் குறுப்பாகிய அன்புடையரல்லா

* திருக்குறள் : கஉகக. † நான்மணிக்கடிகை ; அசு.

தார்க்கு; புறத்து உறுப்பு எல்லாம் எவன் செய்யும்-ஏனைப் புறத் தின்கணின்று உறுப்பாவனவெல்லாம் அவ்வறஞ் செய்தற்கண் என்ன உதவியைச் செய்யும்?

'புறத்துறுப்' பாவன: இடனும், பொருளும், ஏவல்செய்வாரு முதலாயின. துணையொடுகூடாதவழி அவற்றாற் பயனின்மையின் 'எவன் செய்யு' மென்றார். உறுப்புப் போறலின். 'உறுப்' பெனப் பட்டன யாக்கையிற்கண் முதலிய உறுப்புக்களெல்லாம் என்ன பயனைச் செய்யும், மனத்தின்கண் ணுறுப்பாகிய அன்பிலாதார்க் கென்றுரைப்பாருமுளர். அதற்கு இல்லறத்தோடு யாதும் இயைபில்லாமை அறிக. (௯)

அ௦. அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்கு
　　என்புதோல் போர்த்த உடம்பு

(இ - ள்,) அன்பின் வழியது உயிர்நிலை-அன்பு முதலாக அதன் வழிநின்ற உடம்பே உயிர்நின்ற உடம்பாவது; அஃது இலார்க்கு உடம்பு என்பு தோல் போர்த்த - அவ்வன்பில்லா தார்க்கு உளவான உடம்புகள் என்பினைத் தோலாற் போர்த்தன வாம், உயிர் நின்றனவாகா.

இல்லறம் பயவாமையின் அன்னவாயின. இவை நான்கு பாட் டானும் அன்பில்வழிப்படுங் குற்றங் கூறப்பட்டது. (௧௦)

———

## அதி. ௯—விருந்தோம்பல்

[அஃதாவது, இருவகை விருந்தினரையும்* புறந்தருதல். தென் புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாதாரை நினைந்து செய்வன வாகலானும், பின் னைய இரண்டும் பிறர்க்கீத லன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலா யிற்று. வேறாகாத அன்புடை யிருவர் கூடியல்லது செய்யப் படாமையின், இஃது அன்புடைமையின் பின் வைக்கப் பட்டது.]

அ௧. இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
　　வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ - ள்.) இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம் - மனைவி யோடும் வனத்திற் செல்லாது இல்லின்கணிருந்து பொருள்களைப்

* குறள், ௪௩—உரை.

போற்றி வாழுஞ் செய்கையெல்லாம்; விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு - விருந்தினரைப் பேணி அவர்க்குபகாரஞ் செய்தற் பொருட்டு.

எனவே, வேளாண்மை செய்யாவழி இல்லின்கண் இருத்தலும் பொருள் செய்தலுங் காரணமாக வருந் துன்பச் செய்கைகட்கெல்லாம் பயனில்லை யென்பதாம். (க)

அ௨. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) சாவா மருந்து எனினும்-உண்ணப்படும் பொருள் அமிர்தமே யெனினும், விருந்து புறத்ததாத் தான் உண்டல் - தன்னை நோக்கி வந்த விருந்து தன்னில்லின் புறத்ததாகத் தானே உண்டல்; வேண்டற்பாற்று அன்று-விரும்புதன் முறைமை யுடைத்தன்று.

'சாவா மருந்து' சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. விருந்தின்றியே ஒருகால் தானுண்டலைச் சாவா மருந்தென்பர் உளராயினும், அதனையொழிகவென் றுரைப்பினும் அமையும். இவை இரண்டுபாட்டானும் விருந்தோம்பலின் சிறப்புக்கூறப்பட்டது.(உ)

அ௩. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

(இ - ள்.) வரு விருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை - தன்னை நோக்கி வந்த விருந்தை நாடோறும் புறந்தருவானது இல் வாழ்க்கை; பருவந்து பாழ்படுதல் இன்று-நல்குரவான் வருந்திக் கெடுதலில்லை.

நாடோறும் விருந்தோம்புவானுக்குஅதனாற் பொருள் தொலையாது மேன்மேற் கிளைக்கு மென்பதாம். (௩)

அ௪. அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்.

(இ - ள்.) செய்யாள் அகன் அமர்ந்து உறையும்-திருமகள் மனமகிழ்ந்து வாழாநிற்கும்: முகன் அமர்ந்து நல்விருந்து ஓம்புவான் இல் - முகம் இனியனாய்த் தக்க விருந்தினரைப் பேணுவானது இல்லின்கண்.

மனமகிழ்தற்குக் காரணம் தன் செல்வம் நல்வழிப்படுதல். தகுதி, ஞான வொழுக்கங்களான் உயர்தல். பொருள் கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு. (௪)

அரு. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

(இ - ள்.) விருந்து ஓம்பி மிச்சில் மிசைவான் புலம்-முன்னே விருந்தினரை மிசைவித்துப்பின் மிக்கதனைத் தான் மிசைவானது விளைபுலத்திற்கு; வித்தும் இடல் வேண்டுமோ - வித்திடுதலும் வேண்டுமோ? வேண்டா.

'கொல்'லென்பது அசைநிலை. தானே விளையுமென்பது குறிப்பெச்சம், இவை மூன்று பாட்டானும் விருந்தோம்புவார் இம்மைக்கண் எய்தும் பயன் கூறப்பட்டது. (ரு)

அசு. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

(இ - ள்.) செல் விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்து இருப்பான் - தன்கட்சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக்கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண்ண விருப்பான்; வானத்தவர்க்கு நல்விருந்து - மறுபிறப்பில் தேவனாய் வானினுள்ளார்க்கு நல்விருந்தாம்.

'வருவிருந்' தென்பது இடவழுவமைதி. 'நல்விருந்து' எய்தா விருந்து. இதனான் மறுமைக்கண் எய்தும் பயன் கூறப்பட்டது (சு)

அஎ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

(இ - ள்.) வேள்விப்பயன் இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை-விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் இன்ன வளவிற்று என்பதோர் அளவுடைத்தன்று; விருந்தின் துணைத்துணை-அதற்கு அவ்விருந்தின் தகுதியளவே அளவு.

ஐம்பெரு வேள்வியி னொன்றாகலின் 'வேள்வி' யென்றும், பொருளளவு "தான்சிறி தாயினுந் தக்கார்கைப்பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்து விடும்"* ஆதலின், 'இனைத் துணைத்தென்ப தொன்றில்லை' யென்றுங் கூறினார். இதனான் இருமையும் பயத்தற்குக் காரணங் கூறப்பட்டது (எ)

அஅ. பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

* நாலடியார் - ௩அ.

(இ - ள்.) பரிந்து ஓம்பிப் பற்று அற்றேம் என்பர்-நிலையாப் பொருளை வருந்திக் காத்துப் பின் அதனை யிழந்து இது பொழுது யாம் பற்றுக்கோடிலமாயினேமென்று இரங்குவர். விருந்து ஓம்பி வேள்வி தலைப்படாதார் - அப்பொருளான் விருந்தினரை ஓம்பி வேள்விப் பயனை யெய்தும் பொறியிலாதார்.

''ஈட்டிய ஒண்பொருளைக் காத்தலு மாங்கே கடுந்துன்பம்''* ஆகலின். 'பரிந்தோம்பி' யென்றார். 'வேள்வி' ஆகுபெயர். (அ)

அகூ. உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.

(இ - ள்.) உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா மடமை-உடைமைக் காலத் தின்மையாவது விருந்தோம்பலை இகழும் பேதைமை; மடவார்கண் உண்டு-அஃது அறிந்தார்மாட்டு உளதாகாது, பேதையர்மாட்டேயுளதாம்.

'உடைமை' பொருளுடையனுந் தன்மை. பொருளாற் கொள்ளும் பயனை இழப்பித்து உடைமையை இன்மையாக்கலின். மடமையை 'இன்மை' யாக உபசரித்தார், பேதைமையான் விருந் தோம்பலை இகழிற் பொருள் நின்ற வழியும் அதனுற் பயனில்லை யென்பதாம். இவை இரண்டு பாட்டானும் விருந்தோம்பாவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது. (கூ)

கூ0. மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இ - ள்.) அனிச்சம் மோப்பக் குழையும் - அனிச்சப்பூ மோந்துழியன்றிக் குழையாது; விருந்து முகம் திரிந்து நோக்கக் குழையும் - விருந்தினர் முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர்.

'அனிச்சம்' ஆகுபெயர். சேய்மைக்கட் கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன் பட்டவழி நன்றாற்றலு மென விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்முகம் இல்வழிச் சேய்மைக் கண்ணே வாடி நீங்குதலின், தீண்டிய வழியல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லிய ரென்பதாம், இதனுன் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டுமென்பது கூறப்பட்டது. (க0)

---

* நாலடியார் - உஅ0

## அதி. ௧௦—இனியவைகூறல்

[அஃதாவது, மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல், இதுவும் விருந்தோம்பு வார்க்கு இன்றியமையாதாகலின், விருந்தோம்பலின் பின் வைக்கப்பட்டது.]

௯௧. இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(இ-ள்.) இன்சொல் - இன்சொலர்வன; ஈரம் அளைஇப் படிறு இலவாம் செம்பொருள் கண்டார்வாய்ச்சொல்-அன்போடு கலந்து வஞ்சனையிலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார்வாயிற் சொற்கள்.

'ஆல்' அசைநிலை. அன்போடு கலத்தல் - அன்புடைமையை வெளிப்படுத்தல். படிறின்மை வாய்மை. மெய்யுணர்ந்தார் நெஞ் சிற்கெல்லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றலின் 'செம்பொரு' ளெனப்பட்டது. இலவாஞ் சொல்லென இயையும். 'வாய்' என வேண்டாது கூறினர், தீயசொற் பயிலாவென்ப தறிவித்தற்கு - இதனான் இன்சொற்கிலக்கணங் கூறப்பட்டது. (௧)

௯௨. அகன்அமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்.

(இ-ள்.) அகன் அமர்ந்து ஈதலின் நன்று - நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டிய பொருளைக் கொடுத்தலினும் நன்று; முகன் அமர்ந்து இன்சொலனாகப்பெறின் - கண்டபொழுதே முகமினிய னாய் அதனோடு இனிய சொல்லையு முடையனாகப் பெறின்.

இன்முகத்தோடு கூடிய இன்சொல் ஈதல் போலப் பொருள் வயத்ததன்றித் தன்வயத்ததாயினும். அறநெஞ்சுடையார்க்கல்லது இயல்பாக இன்மையின், அதனினும், அரிதென்னுங் கருத்தான், 'இன்சொல னாகப்பெறி'னென்றார். (௨)

௯௩. முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம்.

(இ-ள்.) முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி - கண்ட பொழுதே முகத்தான் விரும்பி இனிதாக நோக்கி; அகத்தான் ஆம் இன்சொலினதே அறம் - பின் நண்ணியவழி மனத்துடனாகிய இனிய சொற்களைச் சொல்லுதலின் கண்ணதே அறம்.

'நோக்கி' யென்னும் வினையெச்சம் இன்சொலெனை அடை யடுத்து நின்ற முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது. ஈதலின் கண்ணதன் றென்றவாறு. இவை இரண்டு பாட்டானும் இன்முகத் தோடுகூடிய இன்சொல் முன்னரே பிணித்துக்கோடலில் விருந் தோம்புதற்கட் சிறந்த தென்பது கூறப்பட்டது. (௩)

கூ௪. துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

(இ - ள்.) யார்மாட்டும் இன்பு உறூஉம் இன்சொலவர்க்கு- எல்லார்மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லை யுடை யார்க்கு; துன்பு உறூஉம் துவ்வாமை இல்லாகும் - துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு இல்லையாம்.

நா முதலிய பொறிகள் சுவை முதலிய புலன்களை நுகராமை யுடைமையின், 'துவ்வாமை' யென்றார். 'யார்மாட்டும் இன் புறூஉம் இன்சொலவர்க்கு'ப் பகையும் நொதுமலுமின்றி உள்ளது நண்பேயாம்; ஆகவே, அவர் எல்லாச் செல்வமும் எய்துவ ரென் பது கருத்து. (௪)

கூ௫. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

(இ - ள்.) ஒருவற்கு அணி பணிவு உடையன் இன்சொல னுதல்-ஒருவனுக் கணியாவது தன்னாற் றாழப்படுவார்கட்டாழ்ச்சி யுடையனாய் எல்லார்கண்ணும் இனிய சொல்லையுமுடையனாதல்; பிற அல்ல-இவை இரண்டுமன்றி மெய்க்கணியும் பிற அணிகள் அணியாகா.

இன்சொலனாதற் கினமாகலின், பணிவுடைமையும் உடன் கூறினார். 'மற்று' அசைநிலை. வேற்றுமை யுடைமையாற் 'பிற' வெனவும், இவைபோலப் பேரழகு செய்யாமையின் 'அல்ல' வெனவுங் கூறினார். இவை இரண்டு பாட்டானும் இனியவை கூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது. (௫)

கூ௬. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

(இ - ள்.) நல்லவை நாடி இனிய சொலின்-பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ் சொற்களை மனத்தானாராய்ந்து இனிய வாக ஒருவன் சொல்லுமாயின்; அல்லவை தேய அறம் பெருகும் - அவனுக்குப் பாவங்கள் தேய அறம் வளரும்.

தேய்தல் தன் பகையாகிய அறம் வளர்தலிற் றனக்கு நிலையின்றி மெலிதல். "தவத்தின்முன் நில்லாதாம் பாவம்"* என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங்காலும் கடியவாகச்சொல்லின், அறனுகாதென்பதாம். இதனுன் மறுமைப்பயன் கூறப்பட்டது. (சு)

சுஎ. நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல்.

(இ - ள்) நயன் ஈன்று நன்றி பயக்கும் - ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையு முண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும்; பயன் ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல் - பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப் பண்பின் நீங்காத சொல்.

நீதி உலகத்தோடு பொருந்துதல். 'பண்' பென்பது ஈண்டதிகாரத்தான் இனிமைமேனின்றது. தலைப்பிரிதல் ஒரு சொன்னீர்மைத்து. (எ)

சுஅ. சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.

(இ - ள்.) சிறுமையுள் நீங்கிய இன்சொல்-பொருளாற் பிறர்க்கு நோய் செய்யாத இனியசொல்; மறுமையும் இம்மையும் இன்பம் தரும்-ஒருவனுக்கு இருமையினும் இன்பத்தைப் பயக்கும்.

மறுமையின்பம் பெரிதாகலின், முற்கூறப்பட்டது. இம்மையின்பமாவதுஉலகம் தன்வயத்ததாகலான் நல்லனவெய்தி இன்புறுதல். இவை இரண்டு பாட்டானும் இருமைப்பயனும் ஒருங்கெய்துதல் வலியுறுத்தப்பட்டது. (அ)

சுசு. இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(இ - ள்.) இன்சொல் இனிது ஈன்றல் காண்பான்-பிறர் கூறும் இன்சொல் தனக்கின்பம் பயத்தலை அனுபவித் தறிகின்றவன்; வன்சொல் வழங்குவது எவன்கொல்-அது நிற்கப் பிறர் மாட்டு வன்சொல்லைச் சொல்லுவது என்ன பயன் கருதி?

'இனி'தென்றது வினைக்குறிப்புப்பெயர். கடுஞ்சொற் பிறர்க்கும் இன்னுதாகலின், அது கூறலாகாதென்பது கருத்து. (கூ)

* நாலடியார் — ருக.

௧00. இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.

(இ - ள்.) இனிய உளவாக இன்னாத கூறல்-அறம் பயக்கும் இனிய சொற்களும் தனக் குளவாயிருக்க அவற்றைக் கூறாது பாவம் பயக்கும் இன்னாத சொற்களை ஒருவன் கூறுதல்; கனி இருப்பக் காய் கவர்ந்தற்று இனிய கனிகளும் தன்கைக்கணுளவா யிருக்க அவற்றை நுகராது இன்னாத காய்களை நுகர்ந்ததனோ டொக்கும்.

'கூற' லென்பதனாற் சொற்களென்பது பெற்றாம். பொருளை விசேடித்துநின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ் சென்றன. 'இனிய கனிக' ளென்றது, ஔவையுண்ட நெல்லிக்கனி* போல அமிழ்தாவனவற்றை. 'இன்னாத காய்க' ளென்றது, காஞ்சிரங் காய்போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற் சொல்லுதல் முடிவிற் றனக்கே இன்னா தென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் இன்னாத கூறலின் குற்றம் கூறப்பட்டது. (௧0)

## அதி. ௧௧—செய்ந்நன்றியறிதல்

———

[அஃதாவது, தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம்வழுவாதார்க்கு உய்தியில்குற்றம் செய்ந் நன்றி கோறலே யாகலின் அதனைப் பாதுகாத்துக் கடிதற் பொருட்டு, இஃதினியவை கூறலின் பின் வைக்கப்பட்டது.

௧0௧. செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

(இ - ள்.) செய்யாமல் செய்த உதவிக்கு-தனக்கு முன்னோ ருதவி செய்யாதிருக்க ஒருவன் பிறருக்குச் செய்த உதவிக்கு; வையகமும் வானகமும் ஆற்றல் அரிது-மண்ணுலகும் விண்ணுல குங் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஒத்தலரிது.

கைம்மாறுகளெல்லாம் காரணமுடையவாகலின், காரணமில் லாத உதவிக்கு ஆற்றாவாயின. செய்யாமைச் செய்த உதவியென்று பாடமோதி, மறித்துதவமாட்டாமை யுள்ளவிடத்துச் செய்தவுதவி யென்றுரைப்பாரு முளர். (௧)

௧0௨. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

* சிறுபாணாற்றுப்படை வரி, ௧00 - ௧0௧ புறநானூறு - ௯௧.

(இ - ள்.) காலத்தினுல் செய்த நன்றி-ஒருவனுக்கு இறுதி வந்த வெல்லேக்கண் ஒருவன் செய்த உபகாரம்; சிறிது எனினும் ஞாலத்தின் மாணப் பெரிது - தன்னை நோக்கச் சிறிதாயிருந்த தாயினும் அக்காலத்தை நோக்க நிலவுலகத்தினும் மிகப் பெரிது.

அக்கால நோக்குவ தல்லது பொருணேக்க லாகா தென்ப தாம். 'காலத்தினு' லென்பது வேற்றுமை மயக்கம். (உ)

கoரு. பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது.

(இ - ள்.) பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்-இவர்க்கு இது செய்தால் இன்னது பயக்குமென்று ஆராய்தலில ராய்ச் செய்த உதவியாகிய ஈரமுடைமையை ஆராயின்; நன்மை கடலின் பெரிது - அதனன்மை கடலினும் பெரிதாம்.

இவை மூன்று பாட்டானும் முறையே காரணமின்றிச் செய் ததூஉம், காலத்தினுற் செய்ததூஉம், பயன்றூக்காராய்ச் செய் ததூஉம் அளவிலவாதல் கூறப்பட்டது. (ரு)

கoசு. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

(இ - ள்.) தினைத்துணை நன்றி செயினும் - தமக்குத் தினை யளவிற்றுய உபகாரத்தை ஒருவன்செய்தானுயினும்; பனைத்துணை யாக்கொள்வர் பயன்தெரிவார்-அதனை அவ்வளவிற்ருகக் கருதாது பனையளவிற்ருகக் கருதுவர் அக்கருத்தின் பயன் தெரிவார்.

'தினை' 'பனை'யென்பன சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சில அளவை. அக்கருத்தின் பயனுவது அங்ஙனங் கருதுவார்க்கு வரும் பயன். (சு)

கoரு. உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(இ - ள்.) உதவி உதவி வரைத்து அன்று - கைம்மாருன உதவிகாரணத்தானும் பொருளானும் காலத்தானுமாகிய மூவகை யானும் முன்செய்த உதவியளவிற்றன்று; உதவிசெய்யப்பட்டார் சால்பின் வரைத்து - அதனைச் செய்வித்துக் கொண்டவர்தம் அமைதி யளவிற்று.

சால்பு எவ்வளவு பெரிதாயிற்று உதவியும் அவ்வளவு பெரிதா மென்பார், 'சால்பின்வரைத்' தென்ருர். இவை இரண்டுபாட்

டானும் மூன்றுமல்லாத உதவி மாத்திரமும் அறிவார்க்குச் செய்த வழிப் பெரிதாமென்பது கூறப்பட்டது. (ரு)

௧0௬. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

(இ - ள்.) துன்பத்துள் துப்பு ஆயார் நட்புத் துறவற்க - துன்பக்காலத்துத் தனக்குப் பற்றுக் கோடாயினரது நட்பை விடா தொழிக; மாசு அற்றார் கேண்மை மறவற்க அறிவொழுக்கங்களிற் குற்றமற்றாரது கேண்மையை மறவா தொழிக.

'கேண்மை' கேளாந்தன்மை. இம்மைக்குறுதி கூறுவார் மறு மைக் குறுதியும் உடன் கூறினார். (௬)

௧0௭. எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

(இ - ள்.) தங்கண் விழுமம் துடைத்தவர் நட்பு-தங்கணெய்திய துன்பத்தை நீக்கினவருடைய நட்பினை; எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் - எழுமையினையுடைய தம் எழுவகைப் பிறப்பினும் நினைப்பர் நல்லோர்.

'எழுமை' யென்றது வினைப்பயன்றொடரும் ஏழு பிறப்பினை; அது வளையாபதியுட் கண்டது. எழுவகைப்பிறப்பு மேலே யுரைத்தாம்.* விரைவுதோன்றத் 'துடைத்தவ' ரென்றார். நினைத்தலாவது துன்பந் துடைத்தலான் அவர்மாட்டுளதாகிய அன்பு பிறப்புத்தோறுந் தொடர்ந்து அன்புடையராதல். இவை இரண்டு பாட்டானும் நன்றி செய்தாரது நட்பு விடலாகா தென்பது கூறப்பட்டது. (எ)

௧0௮. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

(இ - ள்.) நன்றி மறப்பது நன்று அன்று - ஒருவன் முன் செய்த நன்மையை மறப்பது ஒருவற்கு அறனன்று; நன்றல்லது அன்றே மறப்பது நன்று - அவன் செய்த தீமையைச் செய்த பொழுதே மறப்பது அறன்.

இரண்டும் ஒருவனாற் செய்யப்பட்ட வழி மறப்பதும் மறவாததும் வகுத்துக் கூறியவாறு. (அ)

௧0௯. கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

* திருக்குறள் - ௬௨.

(இ - ள்-) கொன்று அன்ன இன்னா செயினும் - தமக்கு முன்னொரு நன்மை செய்தவர் பின் கொன்றாலொத்த இன்னாதவற்றைச் செய்தாராயினும்; அவர் செய்த நன்று ஒன்று உள்ளக் கெடும் - அவையெல்லாம் அவர் செய்த நன்மை யொன்றனையும் நினைக்க இல்லையாம்.

தினைத்துணை பனைத்துணையாகக் கொள்ளப்படுதலின், அவ்வொன்றுமே அவற்றையெல்லாங் கெடுக்கு மென்பதாம். இதனான் நன்றல்லது அன்றே மறக்குந் திறங் கூறப்பட்டது. (௯)

௧௧0. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(இ - ள்.) எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம்- பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தினீங்கும் வாயிலுண்டாம்; செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வு இல்லை-ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃதில்லை.

பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலை யறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், குரவர்த் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல்.* இதனாற் செய்ந்நன்றி கோறலின் கொடுமை கூறப்பட்டது. (௧0)

---

## அதி. ௧௨—நடுவுநிலைமை

[அஃதாவது, பகை நொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்பநிற்கு நிலைமை. இது, நன்றி செய்தார்மாட்டு அந்நன்றியினை நினைத்தவழிச் சிதையுமன்றே அவ்விடத்துஞ் சிதையலாகாதென்றற்கு, செய்ந்நன்றி யறிதலின் பின் வைக்கப்பட்டது.

௧௧௧. தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

(இ - ள்.) தகுதிஎன ஒன்றே நன்று - நடுவு நிலைமையென்று சொல்லப்படும் ஓரறமுமே நன்று; பகுதியான் பாற்பட்டு ஒழுகப் பெறின் - பகை நொதுமல் நட்பென்னும் பகுதிதோறும் தன் முறைமையை விடாதொழுகப் பெறின்.

---

* புறநானூறு - ௩௪.

தகுதியுடையதனைத் 'தகுதி' யென்றார், ''ஊரானோர் தேவ குலம்'' என்பது போலப் பகுதியான் என்புழி ஆனுருபு தோறு மென்பதன் பொருட்டாய் நின்றது. பெறினென்பது அவ்வொழுக் கத் தருமைதோன்ற நின்றது. இதனான் நடுவு நிலைமையது சிறப்புக் கூறப்பட்டது. (க)

௧௧௨. செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

(இ - ள்.) செப்பம் உடையவன் ஆக்கம் - நடுவுநிலைமையை யுடையவனது செல்வம்; சிதைவு இன்றி எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து - பிறர் செல்வம்போல் அழிவின்றி அவன் வழியினுள் ளார்க்கும் வலியாதலை யுடைத்து.

விகாரத்தாற்றொக்க எச்சவும்மையான் இறக்குந்துணையும் அவன் றனக்கும் ஏமாப்புடைத் தென்பது பெற்றாம். அறத்தோடு வருதலின், அன்னதாயிற்று. தானிறந்துழி எஞ்சி நிற்பதாகலின் 'எச்ச' மென்றார். (உ)

௧௧௩. நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே யொழிய விடல்.

(இ . ள்.) நன்றே தரினும் - தீங்கன்றி நன்மையே பயந்த தாயினும்; நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை அன்றே ஒழிய விடல் - நடுவுநிற்றலை யொழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப் பொழுதே யொழிய விடுக.

நன்மை பயவாமையின், 'நன்றே தரினு'மென்றார். இகத் தலானென்பது இகந்தெனத் திரிந்துநின்றது. இவை இரண்டு பாட்டானும் முறையே நடுவுநிலைமையான் வந்த செல்வம் நன்மை பயத்தலும், ஏனைச்செல்வம் தீமைபயத்தலுங் கூறப்பட்டன. (ங)

௧௧௪. தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

(இ - ள்.) தக்கார் தகவிலர் என்பது - இவர் நடுவுநிலைமை யுடையர், இவர் நடுவுநிலைமை யிலரென்னும் விசேடம்; அவரவர் எச்சத்தால் காணப்படும் - அவரவருடைய நன்மக்களது உண்மை யானும் இன்மையானும் அறியப்படும்.

தக்கார்க் கெச்சமுண்டாதலும் தகவிலார்க் கில்லையாதலும் ஒருதலையாகலின், இருதிறத்தாரையும் அறிதற்கு அவை குறி

யாயின. இதனுல் தக்காரையுந் தகவிலாரையும் அறியுமாறு கூறப்பட்டது. (சு)

கககு. கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்ருேர்க் கணி.

(இ - ள்.) கேடும் பெருக்கமும் இல் அல்ல - தீ வினையாற் கேடும் நல்வினையாற் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடந்தன; நெஞ்சத்துக் கோடாமை சான்ருேர்க்கு அணி - அவ்வாற்றை யறிந்து அவை காரணமாக மனத்தின்கட் கோடாமையே அறிவா னமைந்தார்க்கு அழகாவது.

அவை *காரணமாகக் கோடுதலாவது அவை இப்பொழுது வருவனவாகக் கருதிக் கேடு வாராமையைக் குறித்தும் பெருக்கம் வருதலைக் குறித்தும் ஒருதலைக்கண் நிற்றல். அவற்றிற்குக் காரணம் பழவினையே கோடுதலன்று என உண்மை யுணர்ந்து நடுவுநிற்றல். சால்பினை யழகு செய்தலின், 'சான்ருேர்க் கணி'யென்ருர். (ரு)

ககசு. கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

(இ - ள்.) தன் நெஞ்சம் நடுவு ஒரீஇ அல்லசெயின்-ஒருவன் தன்னெஞ்சம் நடுவுநிற்றலை யொழிந்து நடுவல்லவற்றைச் செய்ய நினைக்குமாயின்; யான் கெடுவல் என்பது அறிக. அந்நினைவை யான் கெடக் கடவே னென்றுணரும் உற்பாதமாக அறிக.

நினைத்தலும் செய்தலோ டொக்குமாகலின், 'செயின்'னென்ருர். (சு)

ககஎ. கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

(இ - ள்) நடுவாக நன்றிக்கண் தங்கியான் தாழ்வு-நடுவாக நின்று அறத்தின் கண்ணே தங்கினவனது வறுமையை; கெடுவாக வையாது உலகம் - வறுமையென்று கருதார் உயர்ந்தோர்.

'கெடு' வென்பது முதனிலைத் தொழிற் பெயர். செல்வ மென்று கொள்ளுவரென்பது குறிப்பெச்சம். இவை மூன்று பாட்டானும் முறையே கேடும் பெருக்கமும் கோடுதலான் வாரா என்பதூஉம், கோடுதல் கேட்டிற் கேதுவாம் என்பதூஉம், கோடாதவன் தாழ்வு கேடன் றென்பதூஉம் கூறப்பட்டன. (எ)

* கேடும் பெருக்கமும்.

௧௧௮. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(இ - ள்.) சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் - முன்னே தான் சமனாக நின்று பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்குந் துலாம்போல; அமைந்து ஒருபால் கோடாமை சான்றோர்க்கு அணி - இலக்கணங்களா னமைந்து ஒரு பக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு அழகாம்.

உவமையடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட் கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற்கோடாமையும் உவமைக் கண்ணும் கூட்டி, சான்றோர் சீர்தூக்கலாவது தொடை விடை *களாற் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறுணர்தலாகவும் 'ஒருபாற் கோடாமை' யாவது அவ்வுள்ளவாற்றை மறையாது பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதலாகவும் உரைக்க. இலக்கணங்களா னமைதல் இருவழியும் ஏற்பன கொள்க. (௮)

௧௧௯. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.

(இ - ள்.) செப்பம் சொல் கோட்டம் இல்லது-நடுவுநிலைமையாவது சொல்லின்கட் கோடுதலில்லாததாம்; உள் கோட்டம் இன்மை ஒருதலையாப் பெறின் - அஃதன்னதாவது மனத்தின்கட் கோட்ட மின்மையைத் திண்ணிதாகப் பெறின்-

'சொல்' ஊழான் அறுத்துச் சொல்லுஞ் சொல். காரணம் பற்றி ஒருபாற் கோடாத மனத்தோடு கூடுமாயின், அறங்கிடந்த வாறு சொல்லுதல் நடுவுநிலைமையா மெனவே, அதனோடு கூடாதாயின் அவ்வாறு சொல்லுதல் நடுவுநிலைமை யன்றென்பது பெறப்பட்டது. (௯)

௧௨௦. வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்.

(இ - ள்.) பிறவுந் தமபோல் பேணிச் செயின் - பிறர் பொருளையுந் தம் பொருள் போலப் பேணிச் செய்யின்; வாணிகம் செய்வார்க்கு வாணிகம்-வாணிகஞ் செய்வார்க்கு நன்றாய வாணிகமாம்.

'பிறவுந் தமபோற் செய்த' லாவது கொள்வது மிகையுங் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்ப நாடிச் செய்தல். இப்பாட்டு

* புறப்பொருள் வெண்பாமாலை, வாகை - ௧௯.

மூன்றனுள், முன்னைய இரண்டும் அவயத்தாரை நோக்கின; ஏனையது வாணிகரை நோக்கிற்று; அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறாகச் சிறந்தமையின். (௧0)

———



## அதி. ௧௩—அடக்கமுடைமை

[அஃதாவது, மெய், மொழி, மனங்கள் தீநெறிக்கட் செல்லாது அடங்குத லுடையனாதல். அஃது ஏதிலார் குற்றம்போற் றன் குற்றமும் காணும்* நடுவுநிலைமை யுடையாற்காகலின் இது நடுவுநிலைமையின் பின் வைக்கப்பட்டது]

௧௨௧. அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

(இ - ள்.) அடக்கம் அமரருள் உய்க்கும்-ஒருவனை அடக்கமாகிய அறம் பின் தேவருலகத் துய்க்கும்; அடங்காமை ஆர் இருள் உய்த்து விடும் - அடங்காமையாகிய பாவம் தங்குதற்கரிய இருளின்கட் செலுத்தும்.

'இரு'ளென்பது ஒரு நரகவிசேடம். "எல்லாம், பொருளிற் பிறந்து விடும்"† என்றாற்போல 'உய்த்துவிடு' மென்பது ஒரு சொல்லாய் நின்றது. (௧)

௧௨௨. காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு.

(இ - ள்.) உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை - உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வமில்லை; அடக்கத்தைப் பொருளாக் காக்க - ஆகலான் அவ் வடக்கத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு அழியாமற் காக்க.

உயிரென்பது சாதி யொருமை. அஃது ஈண்டு மக்களுயிர் மேல் நின்றது; அறிந்தடங்கிப் பயன்கொள்வது அதுவேயாகலின். (௨)

௧௨௩. செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்
தாற்றின் அடங்கப் பெறின்.

(இ - ள்.) அறிவு அறிந்து ஆற்றின் அடங்கப் பெறின்- அடங்குதலே நமக்கு அறிவாவ தென்றறிந்து நெறியானே ஒரு

* குறள் - ௧௧௰.     † நான்மணிக்கடிகை - எ.

வன் அடங்கப்பெறின்; செறிவு அறிந்து சீர்மை பயக்கும்-அவ்வடக்கம் நல்லோரான் அறியப்பட்டு அவனுக்கு விழுப்பத்தைக் கொடுக்கும்.

இல்வாழ்வானுக்கு அடங்கு நெறியாவது மெய்ம்முதன் மூன்றும் தன் வயத்தவாதல். (ந)

கஉச. நிலையின் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

(இ - ள்.) நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம் - இல்வாழ்க்கையாகிய தன்நெறியின் வேறுபடாது நின்று அடங்கினவனது உயர்ச்சி; மலையினும் மாணப் பெரிது - மலையினுயர்ச்சியினுப் மிகப் பெரிது.

'திரியா தடங்கு'தல் பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல். 'மலை' ஆகுபெயர். (ச)

கஉரு. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

(இ - ள்.) பணிதல் எல்லார்க்கும் நன்றாம் - பெருமிதமின்றி யடங்குதல் எல்லார்க்கும் ஒப்ப நன்றே யெனினும்; அவருள்ளும் செல்வர்க்கே செல்வந் தகைத்து - அவ்வெல்லாருள்ளுஞ் செல்வமுடையார்க்கே வேறொரு செல்வமாஞ் சிறப்பினை யுடைத்து.

பெருமிதத்தினைச் செய்யுங் கல்வியுங் குடிப்பிறப்பு முடையார் அஃதின்றி அவை தம்மானே யடங்கியவழி அவ்வடக்கஞ் சிறந்து காட்டாதாகலின், 'செல்வர்க்கே செல்வந் தகைத்'தென்றார். செல்வத் தகைத்தென்பது மெலிந்து நின்றது பொதுவென்பாரையுமுடம்பட்டுச் சிறப்பாதல் கூறியவாறு. இவை ஐந்து பாட்டானும் பொதுவகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது. (டு)

கஉசு. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

(இ - ள்.) ஆமைபோல் ஒருமையுள் ஐந்து அடக்கல் ஆற்றின் - ஆமைபோல ஒருவன் ஒரு பிறப்பின்கண் ஐம்பொறிகளையும் அடக்க வல்லனாயின்; எழுமையும் ஏமாப்பு உடைத்து அவ்வண்மை அவனுக்கு எழுபிறப்பின்கண்ணும் அரணாதலையுடைத்து.

ஆமை ஐந்துறுப்பினையும் இடர் புகுதாமல் அடக்குமாறு போல இவனும் ஐம்பொறிகளையும் பாவம் புகுதாமல் அடக்க வேண்டுமென்பார் 'ஆமைபோ' லென்றார். ஒருமைக்கட் செய்த

வினையின் பயன் எழுமையுந் தொடரு மென்பது இதனானறிக. இதனான் மெய்யடக்கங் கூறப்பட்டது. (சு)

கஉஎ. யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(இ-ள்.) யா காவாராயினும் நா காக்க-தம்மாற் காக்கப் படுவன எல்லாவற்றையும் காக்கமாட்டாராயினும் நாவொன் றினையுங் காக்க; காவாக்கால் சொல்லிழுக்குப்பட்டுச் சோகாப்பர்- அதனைக் காவாராயிற் சொற்குற்றத்தின்கட் பட்டுத் தாமே துன் புறுவர்.

'யா' வென்பது அஃறிணைப்பன்மை வினாப்பெயர். அஃது ஈண்டு எஞ்சாமையுணர நின்றது. முற்றும்மை விகாரத்தாற் றொக் கது. சொற்குற்றம் சொல்லின்கட் டோன்றுங் குற்றம். அல் லாப்பர், செம்மாப்பர் என்பனபோலச் 'சோகாப்ப' ரென்பது ஒரு சொல். (எ)

கஉஅ. ஒன்றானுந் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்.

(இ-ள்.) தீச்சொற் பொருட்பயன் ஒன்றானும் உண்டாயின்- தீயவாகிய சொற்களின் பொருள்களாற் பிறர்க்கு வருந்துன்ப மொன்றாயினும் ஒருவன் பக்கலுண்டாவதாயின்; நன்று ஆகாதாகி விடும்-அவனுக்குப்பிற அறங்களாலுண்டான நன்மைதீதாய் விடும்.

தீய சொல்லாவன: தீங்கு பயக்கும் பொய், குறளை, கடுஞ் சொல் லென்பன. ஒருவன் நல்லவாகச் சொல்லுஞ் சொற்களின் கண்ணே ஒன்றாயினுந் தீச்சொற்படும் பொருளினது பயன் பிறர்க் குண்டாவதாயி னென்றுரைப்பாரு முளர்.* (அ)

கஉகூ. தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.

(இ-ள்.) தீயினால் சுட்ட புண் உள் ஆறும்-ஒருவனை யொரு வன் றீயினாற் சுட்ட புண் மெய்க்கட் கிடப்பினும் மனத்தின்கண் அப்பொழுதே ஆறும்; நாவினால் சுட்ட வடு ஆறாது- அவ்வா றன்றி வெவ் வுரையுடைய நாவினாற் சுட்ட வடு அதன்கண்ணும் எஞ்ஞான்றும் ஆறாது.

ஆறிப்போதலால் தீயினாற் சுட்டதனைப் 'புண்' ணென்றும், ஆறாது கிடத்தலால் நாவினாற்சுட்டதனை 'வடு' வென்றுங் கூறினார். தீயும் வெவ்வுரையுஞ் சுடுதற்றொழிலான் ஒக்குமாயினும், ஆறாமை

* மணக்குடவர்.

யால் தீயினும் வெவ்வுரை கொடிதென்பது போதரலின், இது குறிப்பான் வந்த வேற்றுமை யலங்காரம். இவை மூன்று பாட்டானும் மொழியடக்கம் கூறப்பட்டது. (கூ)

கஙo. கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

(இ - ள்.) கதம் காத்துக் கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி-மனத்தின்கண் வெகுளி தோன்றுமற் காத்துக் கல்வியுடையனு யடங்குதலை வல்லவனது செவ்வியை; அறம் பார்க்கும் ஆற்றின் நுழைந்து - அறக்கடவுள் பாராநிற்கும் அவனை யடையும் நெறியின் கட்சென்று.

அடங்குதல் மனம் புறத்துப் பரவாது அறத்தின்கண்ணே நிற்றல். 'செவ்வி' தன்குறை கூறுதற்கேற்ற மனமொழி முகங்கள் இனியனுங் காலம். இப்பெற்றியானை அறந்தானே சென்றடையும் என்பதாம். இதனுன் மனவடக்கங் கூறப்பட்டது. (க0)

---

## அதி. கச—ஒழுக்கமுடைமை

[அஃதாவது, தத்தம் வருணத்திற்கும் நிலைக்குமோதப்பட்ட ஒழுக்கத்தினை யுடையராதல். இது, மெய்ம் முதலிய அடங்கினுர்க் கல்லது முடியாதாகலின், அடக்கமுடைமையின் பின்வைக்கப் பட்டது.]

கஙக. ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

(இ - ள்.) ஒழுக்கம் விழுப்பம் தரலான் - ஒழுக்கம் எல்லார்க்குஞ் சிறப்பினைத் தருதலான்; ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் - அவ்வொழுக்கம் உயிரினும் பாதுகாக்கப்படும்.

உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் ஒப்ப விழுப்பந் தருதலின் பொதுப்படக் கூறினர். சுட்டு வருவிக்கப்பட்டது. அதனுல் அங்ஙனம் விழுப்பந் தருவதாயது 'ஒழுக்க' மென்பது பெற்றும். உயிர் எல்லாப் பொருளினுஞ் சிறந்ததாயினும் ஒழுக்கம்போல விழுப்பந் தாராமையின், 'உயிரினும் ஓம்பப்படு' மென்றார். (க)

கஙஉ. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.

(இ - ள்.) ஒழுக்கம் ஓம்பிப் பரிந்து காக்க - ஒழுக்கத்தினை ஒன்றுனும் அழிவுபடாமற் பேணி வருந்தியுங் காக்க; தெரிந்து

ஓம்பித் தேரினும் துணைஅஃதே-அறங்கள் பலவற்றையுமாராய்ந்து இவற்றுள் இருமைக்குந் துணையாவது யாதென்று மனத்தை யொருக்கித் தேர்ந்தாலும் துணையாய் முடிவது அவ்வொழுக்கமே யாகலான்.

'பரிந்து' மென்னு மும்மை விகாரத்தாற் றொக்கது. இவை இரண்டு பாட்டானும் ஒழுக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது. (உ)

கநங. ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

(இ - ள்,) ஒழுக்க முடைமை குடிமை-எல்லார்க்குந் தத்தம் வருணத்திற்கேற்ற ஒழுக்கமுடைமைகுலனுடைமையாம்; இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்-அவ் வொழுக்கத்தில் தவறுதல் அவ் வருணத்தில் தாழ்ந்த வருணமாய்விடும்.

பிறந்த வருணத்துள் இழிந்த குலத்தாராயினும் ஒழுக்க முடையராக உயர்குலத்தராவராகலின், குடிமையாமென்றும், உயர்ந்த வருணத்துப் பிறந்தாராயினும், ஒழுக்கத்தில் தவறத், தாழ்ந்த வருணத்தராவராகலின் 'இழிந்த பிறப்பாய் விடு' மென்றுங் கூறினர். உள்வழிப்படுங் குணத்தினும் இல்வழிப்படுங் குற்றம் பெரிதென்றவாறு. பயன் இடையீடின்றி யெய்துதலின், அவ்விரைவுபற்றி அவ் வேதுவாகிய வினைகளே பயனாக ஓதப் பட்டன. (ங)

கநச. மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(இ - ள்.) ஓத்துமறப்பினும் கொளலாகும்-கற்றவேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணங் கெடாமையிற் பின்னும் அஃதோதிக்கொளலாம்; பார்ப்பான் பிறப்பு ஒழுக்கங் குன்றக்கெடும் - அந்தணனது உயர்ந்த வருணம் தன்னொழுக்கங் குன்றக் கெடும்.

மறந்தவழி இழிகுலத்தனா மாகலின், மறக்கலாகாதென்னுங் கருத்தான் 'மறப்பினு' மென்றார். சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின், இஃது ஏனைய வருணங்கட்கும் கொள்ளப் படும். (ச)

கநரு. அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு.

(இ - ள்.) அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று - அழுக்காறுடையான் மாட்டு ஆக்கமில்லாதாற்போல; ஒழுக்கம் இலான்கண் உயர்வு இல்லை-ஒழுக்கமில்லாதவன் மாட்டும் உயர்ச்சி யில்லை.

உவமையான் ஒழுக்க மில்லாதவன் சுற்றத்திற்கும் உயர்ச்சி யில்லை யென்பது பெற்ரும்; என்னை? ''கொடுப்ப தழுக்கறுப் பான் சுற்ற''*மும் நல்கூர்தலின். 'உயர்வு' உயர்குலமாதல். (ரு)

கநசு. ஒழுக்கத்தி னெல்்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

(இ-ள்.) ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர்-செய்தற்கருமை நோக்கி ஒழுக்கத்திற் சுருங்கார் மனவலியுடையார்; இழுக்கத்தின் ஏதம் படுபாக்கு அறிந்து - அவ் விழுக்கத்தால் தமக்கிழி குலமாகிய குற்றமுண்டாமாற்றை அறிந்து.

ஒழுக்கத்திற் சுருக்கம் அதனை யுடையார்மேலேற்றப்பட்டது. கொண்டவிரதம் விடாமைபற்றி, 'உரவோ' ரென்ருர். (சு)

கநஎ. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி.

(இ-ள்.) ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர் - எல்லாரும் ஒழுக்கத்தானே மேம்பாட்டை எய்துவர்; இழுக்கத்தின் எய்தாப் பழி எய்துவர் - அதனினின்றிழுக்குதலானே தாம் எய்துதற்குரித்தல்லாத பழியை எய்துவர்.

பகைபற்றி அடாப்பழி கூறியவழி அதனையும் இழுக்கம் பற்றி உலகம் அடுக்குமென்று கொள்ளுமாகலின், 'எய்தாப்பழி' எய்துவ ரென்ருர். இவை ஐந்து பாட்டானும் ஒழுக்கம் உள்வழிப்படுங் குணமும் இல்வழிப்படுங் குற்றமுங் கூறப்பட்டன. (எ)

கநஅ. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

(இ-ள்.) நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகும்-ஒருவனுக்கு நல்லொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்; தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும் - தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினுந் துன்பம் பயக்கும்.

'நன்றிக்கு வித்தாகு' மென்றதனுல் தீயொழுக்கம் பாவத்திற்குக் காரணமாதலும், 'இடும்பைதரு' மென்றதனுல் நல்லொழுக்கம் இன்பந் தருதலும். பெற்ரும், ஒன்று நின்றே ஏனையதை முடிக்குமாகலின். இதனுற் பின்விளைவு கூறப்பட்டது. (அ)

* குறள் - கசுசு.

கநகூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

(இ - ள்.) வழுக்கியும் தீய வாயால் சொலல் - மறந்துந் தீய சொற்களைத் தம் வாயாற்சொல்லுந்தொழில்கள்; ஒழுக்கம்உடையவர்க்கு ஒல்லா - ஒழுக்கமுடையவர்க்கு முடியா.

தீய சொற்களாவன: பிறர்க்குத் தீங்கு பயக்கும் பொய் முதலியனவும், வருணத்திற்கு உரியவல்லனவுமாம். அவற்றது பன்மையாற் சொல்லுதற்றொழில் பலவாயின. 'சொலல்' சாதி யொருமை. சொலலெனவே அமைந்திருக்க, 'வாயா' லென வேண்டாது கூறினர், நல்ல சொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு. இதனை வடநூலார் 'தாற்பரிய' மென்ப. (கூ)

கசo. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(இ - ள்.) உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார் - உலகத்தோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதார்; பல கற்றும் அறிவிலாதார் - பல நூல்களையுங் கற்றாராயினும் அறிவிலாதார்.

'உலகத்தோடு பொருந்த ஒழுகுத'லாவதுஉயர்ந்தோர்பலரும் ஒழுகியவாற்றான் ஒழுகுதல். அறநூல் சொல்லியவற்றுள் இக் காலத்திற்கு ஏலாதன ஒழிந்து சொல்லாதனவற்றுள் ஏற்பன கொண்டு வருதலான், அவையும் அடங்க 'உலகத்தோ டொட்ட' வென்றும், கல்விக்குப் பயன் அறிவும், அறிவிற்குப் பயன் ஒழுக்கமு மாகலின், அவ்வொழுகுதலைக் கல்லாதார்'பலகற்றும் அறிவிலாதா' ரென்றுங் கூறினர். ஒழுகுதலைக் கற்றலாவது அடிப்படுதல்; இவை இரண்டு பாட்டானும் சொல்லானுஞ் செயலானும்வருமொழுக்கங் களெல்லாம் ஒருவாற்றால் தொகுத்துக் கூறப்பட்டன. (கo)

---

## அதி. கரு—பிறனில் விழையாமை

[அஃதாவது, காம மயக்கத்தாற் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. இஃது, ஒழுக்கமுடையார்மாட்டே நிகழ்வதாகலின், ஒழுக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.]

கசக. பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.

(இ - ள்.) பிறன்பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை - பிறனுக்குப் பொருளாந் தன்மையை யுடையாளைக் காதலித்

தொழுகுகின்ற அறியாமை; ஞாலத்துஅறம்பொருள் கண்டார்கண் இல் - ஞாலத்தின்கண் அறநூலையும் பொருணூலையும் ஆராய்ந் தறிந்தார்மாட்டில்லை.

'பிறன்பொருள்' பிறனுடைமை. 'அறம்பொரு' ளென்பன ஆகுபெயர். செவ்வெண்ணின் தொகை தொக்குநின்றது. இன்ப மொன்றையே நோக்கும்இன்பநூலுடையார்இத்தீயொழுக்கத்தை யும் பரகீய *மென்று கூறுவராகலின், 'அறம் பொருள் கண்டார் கணில்'லென்றார். எனவே, அப்பேதைமையுடையார் மாட்டு அற மும் பொருளும் இல்லையென்பது பெறப்பட்டது. (க)

கசஉ. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

(இ - ள்.) அறன் கடை நின்றாருள் எல்லாம்-காமங் காரண மாகப் பாவத்தின்கண் நின்றா ரெல்லாருள்ளும், பிறன்கடை நின்றாரின் பேதையார் இல் - பிறனில்லாளைக் காதலித்து அவன் வாயிற்கட்சென்று நின்றார்போலப் பேதையாரில்லை.

அறத்தின் நீக்கப்பட்டமையின், 'அறன்கடை' யென்றார்; அறன்கடை நின்ற பெண்வழிச் செல்வாரும், வரைவின் மகளி ரோடும் இழிகுல மகளிரோடுங் கூடி இன்பநுகர்வாரும்போல அறமும் பொருளும் இழத்தலேயன்றிப் 'பிறன்கடை நின்றார்' அச்சத்தால் தாங் கருதிய இன்பமும் இழக்கின்றா ராகலின், 'பேதையாரில்' லென்றார்; எனவே, இன்பமு மில்லை யென்பது பெறப்பட்டது. (உ)

கசங. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

(இ - ள்.) தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார்-தம்மை ஐயுறாதாரில்லாள் கண்ணே பாவஞ்செய்தலை விரும்பியொழுகுவார் விளிந்தாரின் வேறு அல்லர் மன்ற - உயிருடையரேனும், இறந் தாரே யாவர்.

அறம் பொருளின்பங்களாகிய பயன் உயிரெய்தாமையின் 'விளிந்தாரின் வேறல்ல' ரென்றும், அவர் 'தீமை புரிந்தொழுகு' வது இல்லுடையவரது தெளிவுபற்றி யாகலின் 'தெளிந்தாரில்' லென்றுங் கூறினார். (ங)

கசச. எனைத்துணைய ராயினும் என்னாந் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

* பரகீயம் - பிறர்க்குரியது.

(இ - ள்.) எனைத் துணையர் ஆயினும் என்னும் - எத்துணைப் பெருமையுடையராயினும் ஒருவர்க்கு யாதாய் முடியும்; தினைத் துணையும் தேரான் பிறன் இல் புகல் - காம மயக்கத்தால் தினையளவுந் தம் பிழையை ஓராது பிறனுடைய இல்லின்கட் புகுதல்?

இந்திரன் போல எல்லாப் பெருமையும் இழந்து சிறுமையெய்தல் நோக்கி, 'என்னு' மென்றார். 'என்னீ ரறியாதீர் போல இவை கூறி, நின்னீர வல்ல நெடுந்தகாய்'* என்புழிப்போல உயர்த்தற்கட் பன்மை யொருமை மயங்கிற்று. 'தேரான் பிற' னென்பதனைத் தம்மை ஐயுறாத பிறனென்றுரைப்பாருமுளர். (ச)

கசரு. எளிதென இல்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

(இ - ள்.) எளிது என இல் இறப்பான்-எய்துத லெளிதென்று கருதிப் பின் விளைவு கருதாது பிறனில்லின்கண் இறப்பான்; விளியாது எஞ்ஞான்றும் நிற்கும் பழி எய்தும்-மாய்தலின்றி எஞ்ஞான்றும் நிலைநிற்கும் குடிப்பழியினை யெய்தும்.

இல்லின்கண் இறத்தல் இல்லாள்கண் நெறிகடந்துசேறல். (ரு)

கசசு. பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

(இ - ள்.) இல் இறப்பான்கண் - பிறனில்லாள்கண் நெறி கடந்து செல்வானிடத்து; பகை பாவம் அச்சம் பழி என நான்கும் இகவாவாம்-பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியு மென்னும் இந்நான்கு குற்றமும் ஒருகாலும் நீங்காவாம்.

எனவே இருமையுமிழத்தல் பெற்றும் இவை ஆறு பாட்டானும் பிறனில் விழைவான்கட் குற்றங் கூறப்பட்டது. (சு)

கசஎ. அறனியலான் இல்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

(இ - ள்.) அறன் இயலான் இல்வாழ்வான் என்பான்-அறனுகியஇயல்போடு கூடி இல்வாழ்வா னென்று சொல்லப்படுவான்; பிறன் இயலாள் பெண்மை நயவாதவன் - பிறனுக் குரிமை பூண்டு அவனுடைய இயல்பின் கண்ணே நிற்பாளது பெண்டன்மையை விரும்பாதவன்.

---

* கலித்தொகை, பாலைக்கலி - ரு.

ஆனுருபு ஈண்டு உடனிகழ்ச்சிக்கண் வந்தது. இல்லறஞ் செய்வா னெனப் படுவான் அவனே என்பதாம். (எ)

கசஅ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ ஆன்ற வொழுக்கு.

(இ - ள்.) பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை - பிறன் மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண்டகைமை; சான்றோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு - சால்புடையார்க்கு அறனுமாம், நிரம்பிய ஒழுக்கமுமாம்.

புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகை யாகிய காமம் அடக்குதற் கருமையின் அதனை யடக்கிய ஆண்மை யைப் 'பேராண்மை' யென்றார். 'ஒன்றோ' வென்பது எண் ணிடைச்சொல். செய்தற்கரிய அறனும் ஒழுக்கமும் இதனைச் செய்யாமையே பயக்கு மென்பதாம். (அ)

கசகூ. நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.

(இ - ள்.) நாம நீர் வைப்பின் - அச்சந் தருங் கடலாற் சூழப்பட்ட உலகத்து; நலக்கு உரியார் யார் எனின் - எல்லா நன்மைகளும் எய்துதற்குரியார் யாவரெனின்; பிறற்கு உரியாள் தோள் தோயாதார் - பிறனொருவனுக்கு உரிமையாகியாளுடைய தோளைச் சேராதார்.

அகலம், ஆழம், பொருளுடைமை முதலியவற்றான் அளவிடப் படாமையின், 'நாமநீ' ரென்றார். நலத்திற்கென்பது 'நலக்' கெனக் குறைந்து நின்றது. உரிச்சொல் ஈறு திரிந்து நின்றது.* இருமையினும் நன்மை யெய்துவ ரென்பதாம். (கூ)

கரு௦. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

(இ - ள்.) அறன் வரையான் அல்ல செயினும் - ஒருவன் அறத்தைத் தனக்குரித்தாகச் செய்யாது பாவங்களைச் செய்யு மாயினும்; பிறன் வரையாள் பெண்மை நயவாமை நன்று - அவனுக் குப் பிற னெல்லைக்கண் நிற்பாளது பெண்மையை விரும்பாமை யுண்டாயின், அது நன்று.

இக்குணமே மேற்பட்டுத் தோன்று மென்பதாம். இவை நான்கு பாட்டானும் பிறனில் விழையாதான்கட் குணங் கூறப் பட்டது. (க௦)

* 'நாம்' என்றது 'நாம' எனத் திரிந்து நின்றது.

31-24

## அதி. கரு—பொறையுடைமை

[அஃதாவது, காரணம்பற்றியாதல் மடமையானுதல் ஒருவன் தமக்கு மிகைசெய்தவழித் தாமும் அதனை அவன்கட் செய்யாது பொறுத்தலை யுடையராதல். நெறியினீங்கிய செய்தாரையும் பொறுக்க வேண்டுமென்றற்கு, இது பிறனில் விழையாமையின் பின் வைக்கப்பட்டது.]

கருக. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

(இ - ள்.) அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல - தன்னை யகழ்வாரை வீழாமற் றாங்கு நிலம்போல ; தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை-தம்மை அவமதிப்பாரைப் பொறுத்தல் தலையாய அறம்.

இகழ்தல் மிகையாயின செய்தலும், சொல்லுதலும். (க)

கருஉ. பொறுத்த லிறப்பினை யென்றும் அதனை
மறத்த லதனினும் நன்று.

(இ - ள்.)என்றும் இறப்பினைப் பொறுத்தல் - பொறை நன்றாகலால், தாமொறுத்தற்கு இயன்ற காலத்தும் பிறர் செய்த மிகையைப் பொறுக்க; அதனை மறத்தல் அதனினும் நன்று - அதனை உட்கொள்ளாது அப்பொழுதே மறத்தல் பெறின் அப் பொறையினும் நன்று.

மிகை யென்றது மேற்சொல்லிய இரண்டனையும். பொறுக்குங்காலும் உட்கொள்ளப்படுதலின், மறத்தலை 'அதனினு நன்' றென்றார். (உ)

கருங.*இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

(இ - ள்.) இன்மையுள் இன்மை விருந்து ஒரால்-ஒருவனுக்கு வறுமையுள் வைத்து வறுமையாவது விருந்தினரை யேற்றுக் கொள்ளாது நீக்குதல் ; வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை-அதுபோல வன்மையுள் வைத்து வன்மையாவது அறிவின்மையான் மிகை செய்தாரைப் பொறுத்தல்.

இஃதெடுத்துக்காட்டுவமை. அறனல்லாத விருந்தொரால் பொருளுடைமை யாகாதவாறு போல, 'மடவார்ப்பொறை'யும் மென்மையாகாதே வன்மையா மென்பது கருத்து. (ங)

* 'உடைமையு ளின்மை விருந்தோம்பல்'—குறள். அசு.

கருச. நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

(இ - ள்.) நிறையுடைமை நீங்காமை வேண்டின் - ஒருவன் சால்புடைமை தன்கணின்று நீங்காமை வேண்டுவனுயின்; பொறையுடைமை போற்றி ஒழுகப்படும் - அதனுற் பொறையுடைமை தன்கண் அழியாமற் காத்தொழுகப்படும்.

பொறையுடையாற் கல்லது சால்பில்லை யென்பதாயிற்று. இவை நான்கு பாட்டானும் பொறையுடைமையது சிறப்புக் கூறப் பட்டது. (ச)

கருரு. ஒறுத்தாரை யொன்ருக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

(இ - ள்.) ஒறுத்தாரை ஒன்ருக வையார் - பிறன் தமக்குத் தீங்கு செய்தவழிப் பொருது அவனை யொறுத்தாரை அறிவுடையார் ஒரு பொருளாக மனத்துக் கொள்ளார்; பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து வைப்பர் - அதனைப் பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து கொள்வர்

ஒறுத்தவர்தாமும் அத்தீங்கு செய்தவனே டொத்தலின், 'ஒன்ருக வையா' ரென்ருர். பொதிந்து வைத்தல், சால்புடைமை பற்றி இடைவிடாது நினைத்தல். (ரு)

கருசு. ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

(இ - ள்.) ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் - தமக்குத் தீங்கு செய்தவனை யொறுத்தார்க்கு உண்டாவது அவ் வொரு நாளை இன்பமே; பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்-அதனைப் பொறுத்தார்க்கு உலகம் அழியுமளவும் புகழுண்டாம்

'ஒருநாளை யின்பம்' அந்நாளொன்றினும் கருதியது முடித்தே மெனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம். ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றுமாகலின், ஏற்புடை யுலகென்னுஞ் சொல் வருவித்துரைக்கப்பட்டது. (சு)

கருஎ. திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(இ - ள்.) திறன் அல்ல தன் பிறர் செய்யினும் - செய்யத் தகாத கொடியவற்றைத் தன்கட் பிறர் செய்தாராயினும்;

நோநொந்து அறன் அல்ல செய்யாமை நன்று - அவர்க்கு அதனுல் வருந் துன்பத்திற்கு நொந்து தான் அறனல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் ஒருவனுக்கு நன்று.

உம்மை சிறப்பும்மை. துன்பத்திற்கு நோதலாவது "உம்மை, எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்"* என்று பரிதல். (எ)

கருஅ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

(இ - ள்.) மிகுதியான் மிக்கவை செய்தாரை - மனச்செருக்காற் றங்கட் டீயவற்றைச் செய்தாரை; தாம் தம் தகுதியான் வென்றுவிடல் - தாம் தம்முடைய பொறையான் வென்றுவிடுக.

தாமும் அவர்கட் டீயவற்றைச் செய்து தோலாது, பொறையான் அவரின் மேம்பட்டு வெல்க என்பதாம். இவை நான்கு பாட்டானும் பிறர் செய்தன பொறுத்தல் சொல்லப்பட்டது. (அ)

கருகூ. துறந்தாரின் தூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னுச்சொல் நோற்கிற் பவர்.

(இ - ள்.) துறந்தாரின் தூய்மை உடையர்-இல்வாழ்க்கைக்கணின்றேயும் துறந்தார்போலத் தூய்மையுடையார்; இறந்தார் வாய் இன்னுச்சொல் நோற்கிற்பவர் - நெறியைக் கடந்தார்வாய் இன்னுத சொல்லைப் பொறுப்பவர்.

'தூய்மை' மனமாசின்மை. 'வாயென வேண்டாது கூறினுர், தீய சொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியத னிழிபு முடித்தற்கு.' (கூ)

கசூ0. உண்ணுது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னுச்சொ னேற்பாரிற் பின்.

(இ - ள்.) உண்ணுது நோற்பார் பெரியர் - விரதங்களான் ஊணைத் தவிர்ந்து உற்ற நோயைப் பொறுப்பார் எல்லாரினும் பெரியர்; பிறர் சொல்லும் இன்னுச் சொல் நோற்பாரிற் பின் - அவர் பெரியராவது தம்மைப் பிறர் சொல்லும் இன்னுதசொல்லைப் பொறுப்பாரிற் பின்.

'பிறர்' அறிவிலாதார், நோலாமைக் கேதுவாகிய இருவகைப் பற்ரேடு நின்றே நோற்றலின். 'இன்னுச்சொல் நோற்பாரிற் பின்' னென்ருர். இவை இரண்டு பாட்டானும் பிறர் மிகைக்கச் சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது. (க0)

* நாலடியார் - ருஅ.

35·7

## அதி. கஎ—அழுக்காறாமை

[இதனுள் அழுக்கா றென்பது ஒரு சொல். அதற்குப் பொருள்* மேலே யுரைத்தாம். அச் சொற் பின் னழுக்காற்றைச் செய்யாமை யென்னும் பொருள்பட எதிர்மறை யாகாரமும் மகர வைகார விகுதியும் பெற்று அழுக்காறாமை யென நின்றது. இப் பொறாமையும் பொறைக்கு மறுதலையாகலின், இதனை விலக்குதற்கு இது பொறையுடைமையின் பின் வைக்கப்பட்டது.]

கசுக. ஒழுக்காறுக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு.

(இ-ள்.) ஒருவன் தன் நெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு - ஒருவன் தன் னெஞ்சத்தின்கண் அழுக்கா றென்னுங் குற்றமில்லாத இயல்பினை; ஒழுக்காறுக் கொள்க - தனக்கோதிய ஒழுக்க நெறியாக் கொள்க.

இயல்பு அறிவோடு கூடிய தன்மை. அத் தன்மையும் நன்மை பயத்தலின், ஒழுக்கநெறிபோல உயிரினும் ஓம்புக என்பதாம். (க)

கசுஉ. விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

(இ-ள்.) யார்மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின் - யாவர்மாட்டும் அழுக்காற்றினின்று நீங்குதலை ஒருவன் பெறுமாயின்; விழுப்பேற்றின் அஃது ஒப்பது இல்லை - மற்றவன் பெறுஞ் சீரிய பேறுகளுள் அப்பேற்றினை யொப்பதில்லை.

அழுக்காறு பகைவர்மாட்டும் ஒழிதற்பாற் றென்பார், 'யார் மாட்டு' மென்றார். 'அன்மை' வேறுதல். இவை இரண்டு பாட்டானும் அழுக்காறின்மையது குணங் கூறப்பட்டது. (உ)

கசுங. அறனுக்கம் வேண்டாதான் என்பான் பிறனுக்கம்
பேணு தழுக்கறுப் பான்.

(இ-ள்.) அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான்-மறுமைக்கும் இம்மைக்கும் அறமுஞ் செல்வமுமாகிய உறுப்புக்களைத் தனக்கு வேண்டாதானென்று சொல்லப்படுவான்; பிறன் ஆக்கம் பேணுது அழுக்கறுப்பான் - பிறன் செல்வங் கண்டவழி அதற்கு உவவாது அழுக்காற்றைச் செய்வான்.

---

* குறள் - ௫௫. † குறள் - கங்க.

அழுக்கறுத்த லெனினும் அழுக்கா றெனினும் ஒக்கும். அழுக்காறு செய்யின் தனக்கே ஏதமா மென்பதாம். (௩)

௱௬௪. அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) அழுக்காற்றின் அல்லவை செய்யார் - அழுக்காறு ஏதுவாக அறனல்லவற்றைச் செய்யார் அறிவுடையார்; இழுக்காற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து-அத் தீநெறியால் தமக் கிருமையினுந் துன்பம் வருதலை யறிந்து.

'அறனல்லவை' யாவன: செல்வம் கல்வி முதலியனவுடையார்கண் தீங்கு நினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம். (௪)

௱௬௫. அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

(இ - ள்.) ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது - அழுக்காறு பகைவரை யொழிந்துங் கேடு பயப்ப தொன்றாகலின்; அழுக்காறு உடையார்க்கு அதுசாலும்-அவ்வழுக்கா றுடையார்க்குப் பகைவர் வேண்டா, கேடு பயத்தற்கு அதுதானே யமையும்.

அதுவே யென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது. (௫)

௱௬௬. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் - ஒருவன் பிறர்க்குக்கொடுப்பதன்கண் அழுக்காற்றைச் செய்வானது சுற்றம்; உடுப்பதும் உண்பதும் இன்றிக் கெடும் - உடுக்கப்படுவதும் உண்ணப்படுவதுமின்றிக் கெடும்.

கொடுப்பதன்கண் அழுக்கறுத்தலாவது கொடுக்கப்படும் பொருள்களைப்பற்றிப் பொறாமை செய்தல். சுற்றங்கெடுமெனவே, அவன் கேடு சொல்லாமையே பெறப்பட்டது. பிறர்பேறு பொறாமை தன் பேற்றையே யன்றித் தன் சுற்றத்தின் பேற்றையும் இழப்பிக்கு மென்பதாம், (௬)

௱௬௭. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

(இ - ள்.) அழுக்காறு உடையானை-பிறராக்கங் கண்டவழிப் பொறாமை யுடையானை; செய்யவள் அவ்வித்துத் தவ்வையைக் காட்டிவிடும்-திருமகள் தானும் பொறாது தன் தவ்வைக்குக் காட்டி நீங்கும்.

'தவ்வை' மூத்தவள். 'தவ்வையைக் காட்டி' யென்பது "அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானே,"* என்பது போல உருபுமயக்கம். மனத்தைக் கோடுவித்து அழுக்காறுடையன் ஆயினானை யென்றுரைப்பாரு முளர். (எ)

கஎஅ. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

(இ-ள்.) அழுக்காறு என ஒரு பாவி - அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி; திருச்செற்றுத் தீயுழி உய்த்து விடும்-தன்னையுடையானை இம்மைக்கட் செல்வத்தைக் கெடுத்து, மறுமைக்கண் நரகத்திற் செலுத்திவிடும்.

பண்பிற்குப் பண்பி யில்லையேனும், தன்னை யாக்கினானை இருமையுங் கெடுத்தற் கொடுமைபற்றி, அழுக்காற்றினைப் 'பாவி' என்றார், கொடியானைப் பாவி யென்னும் வழக்குண்மையின். இவை ஆறு பாட்டானும் அழுக்காறுடைமையது குற்றங் கூறப் பட்டது. (அ)

கஎகூ. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

(இ-ள்.) அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் - கோட்டத்தினைப் பொருந்திய மனத்தை யுடையவன தாக்கமும்; செவ்வியான் கேடும் நினைக்கப்படும்-ஏனைச் செம்மையுடையவனது கேடும் உளவாயின், அவை ஆராயப்படும்.

'கோட்டம்' ஈண்டழுக்காறு. 'உளவாயி' னென்பது எஞ்சி நின்றது ஆக்கக் கேடுகள் கோட்டமுஞ் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின், அறிவுடையரால் இதற்கேது வாகிய பழவினை யாதென் றாராயப்படுதலின், 'நினைக்கப்படு' மென்றார். "இம்மைச் செய்தன யானறி நல்வினை, உம்மைப் பயன்கொலொருதனி யுழந்தித் திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது"† என நினைக்கப்பட்டவா றறிக. (கூ)

கஅ௦. அழுக்கற் றகன்றாரும் இல்லையஃ தில்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரு மில்.

(இ-ள்.) அழுக்கற்று அகன்றாரும் இல்லை-அழுக்காற்றைச் செய்து பெரிய ராயினாரு மில்லை; அஃது இல்லார் பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல் - அச் செயலிலாதார் பெருக்கத்தின் நீங்கினாரு மில்லை.

---

* கலித்தொகை, மருதம் - எ.

† சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை—வரி கூக - கூங.

இவை இரண்டு பாட்டானும் கேடு மாக்கமும் வருதற்கேது ஒருங்கு கூறப்பட்டது. (கO)

---

## அதி. கஅ—வெஃகாமை

[அஃதாவது, பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை பிற ருடைமை கண்டவழிப் பொறுமையே யன்றி அதனைத் தான் வெளவக் கருதுதலுங் குற்றமென்றற்கு இஃது அழுக்காறாமையின் பின் வைக்கப்பட்டது.]

களக. **நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்**
**குற்றமும் ஆங்கே தரும்.**

(இ - ள்.) நடுவு இன்றி நன்பொருள் வெஃகின் - பிறர்க் குரியன கோடல் நமக்கு அறனன் றென்னும் நடுவு நிலைமை யின்றி அவர் நன்பொருளை ஒருவன் வெஃகுமாயின்; குடி பொன்றிக் குற்றமும் ஆங்கே தரும் - அவ் வெஃகுதல் அவன் குடியைக் கெடச் செய்து, பல குற்றங்களையும் அப்பொழுதே அவனுக்குக் கொடுக்கும்.

குடியை வளரச்செய்து பல நன்மையும் பயக்கு மியல்புபற்றி வெஃகி னென்பார், 'நன்பொருள் வெஃகி' னென்றார். பொன்ற வென்பது, 'பொன்றி' யெனத் திரிந்து நின்றது. 'செய்' தென்பது சொல்லெச்சம். (க)

களஉ. **படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்**
**நடுவன்மை நாணு பவர்.**

(இ - ள்.) படு பயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார் - பிறர் பொருளை வெளவினால் தமக்கு வரும் பயனை விரும்பி, அது வெளவுதற்குப் பழியின்கண்ணே படுஞ்செயல்களைச் செய்யார்; நடுவு அன்மை நாணுபவர் - நடுவு நிலைமை யன்மையை அஞ்சு பவர்.

'நடுவு' ஒருவன் பொருட்குப் பிறன் உரிய னல்ல னென்னும் நடுவு. (உ)

களங. **சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர்.**

(இ - ள்.) சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யார் - பிறர் பால் வெளவிய பொருளால் தாமெய்தும் நிலையில்லாத இன்பத்தை விரும்பி அவர்மாட்டு அறனல்லாத செயல்களைச்

செய்யார் ; மற்றின்பம் வேண்டுபவர் - அறத்தான் வரும் நிலையுடைய இன்பத்தைக் காதலிப்பவர்.

பாவத்தான் வருதலின் அப்பொழுதே யழியு மென்பார், 'சிற்றின்ப' மென்றார். மற்றை யின்ப மென்பது 'மற்றின்ப' மென நின்றது. (௩)

௧௭௪. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

(இ - ள்.) இலம் என்று வெஃகுதல் செய்யார் - யாம் வறிய மென்று கருதி அது தீர்தற்பொருட்டுப் பிறர் பொருளை விரும்புதல் செய்யார் ; புலம் வென்ற புன்மையில் காட்சியவர்-ஐம்புலன் களையும் வென்ற குற்றமில்லாத காட்சியினையுடையார்.

வெல்லுதல் பாவநெறிக்கட் செல்லவிடாமை. 'புலம்வென்ற புன்மையில் காட்சியவர்க்'கு வறுமை யின்மையின் வெஃகுதலு மில்லையாயிற்று. 'புன்மையில் காட்சி' பொருள்களைத் திரிபின்றி யுணர்தல். (௪)

௧௭௫. அஃகி யகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(இ - ள்.) அஃகி அகன்ற அறிவு என்னும் - நுண்ணிதாய் எல்லா நூல்களினுஞ் சென்ற தம்மறிவு என்ன பயத்ததாம் ? ; வெஃகி யார்மாட்டும் வெறிய செயின் - பொருளை விரும்பி யாவர்மாட்டும் அறிவோடு படாத செயல்களை அறிவுடையார் செய்வராயின்.

'யார்மாட்டும் வெறிய செய்த' லாவது தக்கார்மாட்டும் தகாதார் மாட்டும் இழிந்தனவும் கடியனவும் முதலியன செய்தல். அறிவிற்குப் பயன் அவை செய்யாமையாகலின், 'அறிவென்னு' மென்றார். (௫)

௧௭௬. அருள்வெஃகி யாற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(இ - ள்.) அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான். அருளாகிய அறத்தை விரும்பி அதற்கு வழியாகிய இல்லறத்தின்கணின்றவன் ; பொருள் வெஃகி பொல்லாத சூழக் கெடும் - பிறர் பொருளை யவாவி அதனை வருவிக்கும் குற்றநெறிகளை எண்ணக் கெடும்.

இல்லற நெறியால் அறிவு முதிர்ந்துழியல்லது துறக்கப் படாமையின், அதனைத் துறவறத்திற்கு ஆறென்றார். கெடுதல்

இரண்டறமுஞ் சேர விழத்தல். சூழ்ந்த துணையானே கெடு மெனவே, செய்தாற்கெடுதல் சொல்லாமையயே பெறப்பட்டது. (சு)

கஎஎ. **வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்**
**மாண்டற் கரிதாம் பயன்.**

(இ - ள்.) வெஃகி ஆம் ஆக்கம் வேண்டற்க-பிறர்பொருளை யவாவிக்கொண்டு அதனுலாகின்ற ஆக்கத்தை விரும்பாதொழிக; விளைவயின் பயன் மாண்டற்கு அரிதாம் - பின் அனுபவிக்குங்கால் அவ் வாக்கத்தின் பயன் நன்ருதலில்லை ஆகலான்.

'விளை' யென்பது முதனிலைத் தொழிற்பெயர். இவை ஏழு பாட்டானும் வெஃகுதலின் குற்றங் கூறப்பட்டது. (எ)

கஎஅ. **அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை**
**வேண்டும் பிறன்கைப் பொருள்.**

(இ - ள்.) செல்வத்திற்கு அஃகாமை யாதெனின்-சுருங்கன் மாலைத்தாகிய செல்வத்திற்குச் சுருங்காமைக் காரணம் யாதென்று ஒருவன் ஆராயின்; பிறன் வேண்டும் கைப்பொருள் வெஃகாமை - அது பிறன் வேண்டும் கைப்பொருளைத் தான் வேண்டாமையாம்.

'அஃகாமை' ஆகுபெயர். வெஃகாதான் செல்வம் அஃகா தென்பதாயிற்று. (அ)

கஎகூ. **அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேருந்**
**திறனறிந் தாங்கே திரு.**

(இ - ள்.) அறன் அறிந்து வெஃகா அறிவுடையார்-இஃதற னென்றறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரை; திரு திறன் அறிந்து ஆங்கே சேரும் - திருமகள் தானடைதற்காங் கூற்றினை யறிந்து அக்கூற்ருனே சென்றடையும்.

அடைதற்காங் கூறு காலமும், இடனும், செவ்வியும் முதலாயின. இவை இரண்டு பாட்டானும் வெஃகாமையின் குணங் கூறப்பட்டது. (கூ)

கஅ0. **இறலீனும் எண்ணுது வெஃகின் விறலீனும்**
**வேண்டாமை என்னுஞ் செருக்கு.**

(இ - ள்.) எண்ணுது வெஃகின் இறல் ஈனும் - பின் விளைவு தறியாது ஒருவன் பிறன் பொருளை வெளவக் கருதின் அக்கருத்து அவனுக்கிறுதியைப் பயக்கும்; வேண்டாமை என்னும் செருக்கு

விறல் ஈனும் - அப்பொருளை வேண்டாமை யென்னுஞ் செல்வம் வெற்றியைப் பயக்கும்.

பகையும் பாவமும் பெருக்கலின் 'இறலீனு' மென்றும், அப் பொருளை வேண்டி உழல்வோர் யாவரையுங் கீழ்ப்படுத்தலின் 'விறலீனு' மென்றுங் கூறினர். 'செருக்கு' ஆகுபெயர். இதனால் அவ்விருமையும்* ஒருங்கு கூறப்பட்டன. (௧0)

## அதி. ௧௯—புறங்கூறாமை

[அஃதாவது, காணாதவழிப் பிறரை இகழ்ந்துரையாமை. மொழிக் குற்றம் மனக்குற்றமடியாக வருதலான், இஃது அழுக் காறாமை வெஃகாமைகளின் பின் வைக்கப்பட்டது.]

௧அ௧. அறங்கூறா னல்ல செயினும் ஒருவன்
புறங்கூறா னென்றல் இனிது.

(இ - ள்.) ஒருவன் அறம் கூறான் அல்ல செயினும் - ஒருவன் அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங்களைச் செய்யு மாயினும்; புறங் கூறான் என்றல் இனிது - பிறனைப் புறங்கூறா னென்று உலகத்தாராற் சொல்லப்படுதல் நன்று.

புறங்கூறாமை அக் குற்றங்களான் இழிக்கப்படாது மேற் பட்டுத் தோன்று மென்பதாம். இதனால் அவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது. (௧)

௧அ௨. அறனழீஇ யல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

(இ - ள்.) அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீது - அற னென்பதொன்றில்லையென அழித்துச்சொல்லி அதன்மேற் பாவங் களைச் செய்தலினுந் தீமையுடைத்து; புறன் அழீஇப் பொய்த்து நகை - ஒருவனைக் காணாதவழி இகழ்ந்துரையால் அழித்துச் சொல்லிக் கண்டவழி அவனோடு பொய்த்து நகுதல்.

உறழ்ச்சி நிரனிறை வகையாற் கொள்க. அழித்தல் - ஒளி யைக்†கோறல். (௨)

௧அ௩. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும்.

* வெஃகுதலின் குற்றமும் வெஃகாமையின் குணமும்.

† குறள் ௧௭௧ உரை.

(இ - ள்.) புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின்-பிறனைக் காணாதவழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற் கினியனாகப் பொய்த்து ஒருவன் உயிர்வாழ்தலின்; சாதல் அறம் கூறும் ஆக்கம் தரும் - அது செய்யாது சாதல் அவனுக்கு அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைக் கொடுக்கும்.

பின் புறங்கூறிப் பொய்த்த லொழிதலின், 'சாதல்' ஆக்கந்தரு மென்றார். 'ஆக்கம்' அஃதொழிந்தார் மறுமைக்க ணெய்தும்பயன் 'அறம்' ஆகுபெயர். 'தரு' மென்பது இடவழுவமைதி. (௩)

கஅச. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

(இ - ள்.) கண் நின்று கண் அறச் சொல்லினும் - ஒருவ னெதிரே நின்று கண்ணோட்டமறச் சொன்னானாயினும்; முன் இன்று பின் நோக்காச் சொல் சொல்லற்க - அவன் எதிரின்றிப் பின்வருங் குற்றத்தை நோக்காத சொல்லைச் சொல்லா தொழிக.

'பின்' ஆகுபெயர். சொல்வான்றொழில் சொன்மே லேற்றப் பட்டது. இவை மூன்று பாட்டானும் புறங்கூற்றினது கொடுமை கூறப்பட்டது. (௪)

கஅரு. அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

(இ - ள்.) அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை-புறஞ் சொல்லுவானொருவன் அறனை நன்றென்று சொல்லினும், அது தன் மனத்தானாய்ச் சொல்லுகின்றா னல்ல னென்பது; புறஞ் சொல்லும் புன்மையால் காணப்படும் - அவன் புறஞ்சொல்லு தற்குக் காரணமான மனப்புன்மையானே அறியப்படும்.

மனந்தீதாகலின், அச்சொற் கொள்ளப்படா தென்பதாம். (௫)

கஅசா. பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளுந்
திறன்தெரிந்து கூறப் படும்.

(இ - ள்.) பிறன் பழி கூறுவான் - பிறனொருவன் பழியை அவன் புறத்துக் கூறுமவன், தன் பழி யுள்ளும் திறன் தெரிந்து கூறப் படும் - தன் பழி பலவற்றுள்ளும் உளையுந் திறமுடைய வற்றைத் தெரிந்து அவனாற் கூறப்படும்.

புறத் தென்பது அதிகாரத்தாற் பெற்றாம். இது வருகின்ற வற்றிற்கு மொக்கும். 'திறன்' ஆகுபெயர். தன்னைப் புறங்கூறிய

வாறு கேட்டான், அக்கூறியார்க்கு அவ்வளவன்றி அவன் இறந்து பட்டு உளையுந் திறத்தனவாகிய பழிகளை நாடி எதிரே கூறுமாக லின், 'திறன் தெரிந்து கூறப்படு' மென்றார். (௬)

௧௮௭. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

(இ - ள்.) பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் - தம்மைவிட்டு நீங்குமாற்றால் புறங்கூறித் தங் கேளிரையும் பிரியப்பண்ணுவர்; நகச் சொல்லி நட்பாடல் தேற்றாதவர் - கூடி மகிழுமாறு இனிய சொற்களைச் சொல்லி அயலாரோடு நட்பாடலை அறியாதார்.

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. கேளிரையும் பிரிப்ப ரென்ற கருத்தான், அயலாரோடு மென்பது வருவித்துரைக்கப் பட்டது. அறிதல் தமக்குறுதியென் றறிதல். "கடியு - மிடந் தேற்றாள் சோர்ந்தனள் கை"* என்புழிப் போலத் தேற்றாமை தன் வினையாய் நின்றது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவ ரென்பது கருத்து. (எ)

௧௮௮. துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

(இ - ள்.) துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார் - தம் மொடு செறிந்தாரது குற்றத்தையும் அவர்புறத்துத் தூற்றும் இயல் பினையுடையார்; ஏதிலார் மாட்டு என்னை கொல் - அயலார் மாட்டுச் செய்வது யாது கொல்லோ!

'தூற்றுதல்' பலருமறியப் பரப்புதல். அதனிற் கொடியது பிறிதொன்று காணாமையின், 'என்னைகொ' லென்றார். 'செய்வ' தென்பது சொல்லெச்சம். என்னர்கொ லென்று பாடமோதி, எவ்வியல்பினராவ ரென்றுரைப்பாரு முளர். (அ)

௧௮௯. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(இ - ள்.) புறன்நோக்கிப் புன்சொல் உரைப்பான் பொறை- பிறர் நீங்கின வளவு பார்த்து அவர் பழித்துரையை உரைப்பானது உடற் பாரத்தை; வையம் அறன் நோக்கி ஆற்றுங்கொல்-நிலம் இக் கொடியது பொறுத்தலே எனக்கறமாவதெனக் கருதிப் பொறுக்கின்றது போலும்.

* கலித்தொகை, மருதம் - உஎ.

எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற்கரிதென்னுங் கருத்தால், 'அறனோக்கி யாற்றுங்கொ' லென்றார். இவை ஐந்து பாட்டானும் புறங்கூறுவார்க் கெய்துங் குற்றங் கூறப்பட்டது. (கூ)

கசூ0. ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு.

(இ-ள்.) ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்-ஏதிலாரைப் புறங்கூறுவார் அதற்கு அவர் குற்றங் காணுமாறு போலப் புறங் கூறலாகிய தங் குற்றத்தையுங் காண வல்லராயின்; மன்னும் உயிர்க்குத் தீது உண்டோ - அவர் நிலைபேறுடைய உயிர்க்கு வருவதொரு துன்பமுண்டோ?

நடுவுநின்று ஒப்பக்காண்டல் அருமை நோக்கிக் 'காண்கிற்பி' னென்றும், கண்டவழி யொழிதலிற் பாவமின்றாம் ஆகவே, வரும் பிறவிகளினுந் துன்பமில்லை யென்பது நோக்கி, உயிர்க்குத் 'தீதுண்டோ' வென்றுங் கூறினார். இதனாற் புறங்கூற் றொழிதற்கு உபாயங் கூறப்பட்டது. (க0)

---

## அதி. உ0—பயனிலசொல்லாமை

[அஃதாவது, தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் லென வாக்கின் கண் நிகழும் பாவநான்கனுள், பொய் துறந்தார்க்கல்லது ஒரு தலையாகக் கடியலாகாமையின், அஃதொழித்து இல்வாழ்வா ராற் கடியப்படும் ஏனை மூன்றனுள், கடுஞ்சொல் இனியவை கூறலானும், குறளை புறங்கூறாமையானும் விலக்கி நின்ற பயனில் சொல் இதனான் விலக்குகின்றாராகலின், இது புறங் கூறாமையின் பின் வைக்கப்பட்டது.]

கசூக. பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

(இ-ள்.) பல்லார் முனியப் பயன் இல சொல்லுவான் - அறிவுடையார் பலருங் கேட்டு வெறுப்பப் பயனிலவாகிய சொற்களைச் சொல்லுவான்; எல்லாரும் எள்ளப்படும் - எல்லாரானும் இகழப்படும்.

அறிவுடையார் பலரும் வெறுப்பவே ஒழிந்தாரானும் இகழப் படுதலின், 'எல்லாரு மெள்ளப்படு' மென்றார். மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது. (க)

கசுஉ. பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

(இ - ள்.) பயன் இல பல்லார்முன் சொல்லல் - பயனில வாகிய சொற்களை அறிவுடையார் பலர் முன்பே ஒருவன் சொல்லு தல்; நயன் இல நட்டார்கண் செய்தலின் தீது-விருப்பமிலவாகிய செயல்களைத் தன் நட்டார்மாட்டுச் செய்தலினும் தீது.

'விருப்பமில' வெறுப்பன. இச் சொல் அச் செயலினும் மிக இகழ்ப்பாடு பயக்கு மென்பதாம். (உ)

கசுங. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை.

(இ - ள்.) பயன்இல பாரித்து உரைக்கும் உரை - பயனில வாகிய பொருள்களை ஒருவன் விரித்துரைக்கும் உரைதானே; நயன் இலன் என்பது சொல்லும் - இவன் நீதியில னென்பதனை உரைக்கும்.

உரையால் இவன் 'நயனில' னென்ப தறியலாமென்பார், அதனை உரைமேலேற்றி உரைசொல்லும் என்றார். (ங)

கசுச. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து.

(இ - ள்.) பயன் சாராப் பண்பு இல் சொல் பல்லா ரகத்து- பயனொடுபடாத பண்பில் சொற்களை ஒருவன் பலரிடைச் சொல்லு மாயின், நயன் சாரா நன்மையின் நீக்கும். அவை அவர் மாட்டு நீதியொடு படாவாய், அவனை நற்குணங்களின் நீக்கும்,

'பண்பு' இனிமையும்மெய்ம்மையும் முதலாய சொற்குணங்கள். 'சொல்லுமாயி' னென்பதும், 'அவர்மாட்'டென்பதும், எச்சமாக வருவிக்கப்பட்டன. (ச)

கசுரு, சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

(இ - ள்.) பயன் இல நீர்மையுடையார் சொலின்-பயனில வாகிய சொற்களை இனிய நீர்மையுடையார் சொல்லுவராயின்

சீர்மை சிறப்பொடு நீங்கும் - அவரது விழுப்பமும் அதனுல் வரும் நன்கு மதிக்கற்பாடும் உடனே நீங்கும்.

'நீர்மை'* நீரின் தன்மை. 'சொலி' னென்பது சொல்லா மையை விளக்கிற்று. (ரு)

கசுசு. பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

(இ - ள்.) பயன் இல் சொல் பாராட்டுவானை மகன் எனல் - பயனில்லாத சொற்களைப் பலகாலுஞ் சொல்லுவானை மகனென்று சொல்லற்க; மக்கட் பதடி எனல் - மக்களுட் பதரென்று சொல்லுக.

'அல்' விகுதி வியங்கோள் முன் எதிர்மறையினும், பின் உடம்பாட்டினும் வந்தது. அறிவென்னும் உள்ளீடின்மையின், 'மக்கட் பதடி' யென்முர். இவை ஆறு பாட்டானும் பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றங் கூறப்பட்டது. (சு)

கசுஎ. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்ருேர்
பயனில சொல்லாமை நன்று.

(இ - ள்.) நயன் இல சான்ருேர் சொல்லினும் சொல்லுக - நீதியொடு படாத சொற்களைச் சான்ருேர் சொன்ருராயினும், அஃதமையும்; பயன் இல சொல்லாமை நன்று - அவர் பயனில வற்றைச் சொல்லாமை பெறின், அது நன்று.

'சொல்லினு' மெனவே, சொல்லாமை பெறப்பட்டது. 'நயனில' வற்றினும் 'பயனில' தீய வென்பதாம். (எ)

கசுஅ. அரும்பய னுயும் அறிவினர் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

(இ - ள்.) அரும் பயன் ஆயும் அறிவினர் - அறிதற்கரிய பயன்களை ஆராயவல்ல அறிவினையுடையார்; பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார் - மிக்க பயனுடைய வல்லாத சொற்களைச் சொல்லார்.

அறிதற்கரிய பயன்களாவன வீடுபேறும், மேற்கதிச் செலவும் முதலாயின. பெரும்பயனில்லாத எனவே, பயன் சிறிதுடை யனவும் ஒழிக்கப்பட்டன. (அ)

கசுகூ. பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்.

*நீர்மை - குணம்.

(இ-ள்.) பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் - பயனின் நீங்கிய சொற்களை மறந்துஞ் சொல்லார்; மருள் தீர்ந்த மாசு அறு காட்சியவர் - மயக்கத்தின் நீங்கிய தூய அறிவினையுடையார்.

தூயவறிவு - மெய்யறிவு. 'மருடீர்ந்த' வென்னும் பெயரெச்சம் 'காட்சியவ' ரென்னுங் குறிப்புப்பெயர் கொண்டது இவை மூன்று பாட்டானும் பயனில சொல்லாமையின் குணங் கூறப்பட்டது. (௯)

உ00. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

(இ-ள்.) சொல்லின் பயனுடைய சொல்லுக - சொற்களிற் பயனுடைய சொற்களைச் சொல்லுக; சொல்லின் பயனில்லாச் சொல். சொல்லற்க - சொற்களிற் பயனில்லாத சொற்களைச் சொல்லாதொழிக.

'சொல்லி' னென்பது இருவழியும் மிகையாயினும், சொற்பொருட் பின்வருநிலை யென்னும் அணிநோக்கி வந்தது, "வைகலும் வைகல் வரக்கண்டும்"* என்பதுபோல. இதனாற் சொல்லப் படுவனவும் படாதனவும் நியமிக்கப்பட்டன. (௧0)

## அதி. உக—தீவினையச்சம்

[அஃதாவது, பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனுன் மெய்யின்கண் நிகழும் பாவங்களெல்லாந் தொகுத்து விலக்குகின்ருராகலின், இது பயனிலசொல்லாமையின் பின் வைக்கப்பட்டது.]

உ0௧. தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

(இ-ள்.) தீவினை யென்னும் செருக்கு - தீவினை யென்று சொல்லப்படும் மயக்கத்தை: தீவினையார் அஞ்சார் - முன் செய்த தீவினையுடையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர் - அஃதிலராகிய சீரியார் அஞ்சுவார்.

'தீவினை யென்னும் செருக்கெனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது; மேற்ருெட்டுச் செய்து கைவந்தமையான் 'அஞ்சா' ரென்றும், செய்தறியாமையான் 'அஞ்சுவ' ரென்றுங் கூறினர். (௧)

*நாலடியார் - ௫௧.

உ0உ. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

(இ - ள்.) தீயவை தீய பயத்தலால்-தனக்கின்பம் பயத்தலைக் கருதிச் செய்யுந் தீவினைகள் பின் அஃதொழித்துத் துன்பமே பயத்தலான்; தீயவை தீயினும் அஞ்சப்படும்-அத்தன்மையவாகிய தீவினைகள் ஒருவனால் தீயினும் அஞ்சப்படும்.

பிறிதொரு காலத்தும் பிறிதொரு தேயத்தும் பிறிதோருடம் பினுஞ் சென்று சுடுதல் தீக் கின்மையின், 'தீயினு மஞ்சப்படுவ' தாயிற்று. (உ)

உ0ங. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

(இ - ள்.) அறிவினுள் எல்லாம் தலை என்ப - தமக்குறுதி நாடும் அறிவுக ளெல்லாவற்றுள்ளும் தலையாய அறிவென்று சொல்லுவர் நல்லோர்; செறுவார்க்கும் தீய செய்யாவிடல் - தம்மைச் செறுவார்மாட்டுந் தீவினைகளைச் செய்யாது விடுதலை.

விடுதற்குக் காரணமாகிய அறிவை 'விட'லென்றும் செயத்தக்குழியுஞ் செய்யா தொழியவே தமக்குத் துன்பம் வாராதென உய்த்துணர்தலின். அதனை 'அறிவினு ளெல்லாந் தலை' யென்றுங் கூறினர். செய்யாதென்பது கடைக்குறைந்து நின்றது. இவை மூன்று பாட்டானும் தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது கூறப்பட்டது. (ங)

உ0ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(இ - ள்.) பிறன் கேடு மறந்தும் சூழற்க-ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணா தொழிக; சூழின் சூழ்ந்தவன் கேடு அறம் சூழும் - எண்ணுவானாயின், தனக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும்.

'கே'டென்பன ஆகுபெயர் சூழ்கின்றபொழுதே தானும் உடன் சூழ்தலின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது பெறப்பட்டது. அறக்கடவுள் எண்ணுதலாவது அவன்கெடத் தான் நீங்க நினைத்தல். தீவினை எண்ணலு மாகாதென்பதாம். (ச)

உ0ரு. இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) இலன் என்று தீயவை செய்யற்க - யான் வறியனென்று கருதி அது தீர்தற்பொருட்டுப் பிறர்க்குத் தீவினைகளை

ஒருவன் செய்யாதொழிக; செய்யின் பெயர்த்தும் இலன் ஆகும் - செய்வானயின், பெயர்த்தும் வறியனும்.

அத்தீவினையாற் பிறவிதோறும் இலனு மென்பதாம். அன் விகுதிமுன் தனித்தன்மையினும், பின்படர்க்கை யொருமையினும் வந்தது. தனித்தன்மை "உளனுவென் னுயிரையுண்டு"* என்பத ஞனும் அறிக. 'மற்று' அசைநிலை. இல†மென்று பாடமோது வாரும் உளர். பொருளால் வறியனெனக் கருதித் தீயவை செய் யற்க, செய்யின் அப்பொருளானேயன்றி நற்குண நற்செய்கை களானும் வறியனுமென்றுரைப்பாரும் உளர். (ரு)

உ0சு. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்.

(இ - ள்.) நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான் - துன்பஞ்செய்யுங் கூற்றவாகிய பாவங்கள் தன்னைப் பின்வந்து வருத்துதலை வேண்டாதவன்; தீப்பால தான் பிறர்கண் செய் யற்க - தீமைக்கூற்றவாகிய வினைகளைத் தான் பிறர்மாட்டுச் செய்யாதொழிக.

செய்யின், அப்பாவங்க ளடுதல் ஒருதலை என்பதாம். (சு)

உ0எ. எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

(இ - ள்.) எனைப் பகை உற்றாரும் உய்வர் - எத்துணைப் பெரிய பகை யுடையாரும் அதனை ஒருவாற்றால் தப்புவர்; வினைப் பகை வீயாது பின்சென்று அடும் - அவ்வாறன்றித் தீவினையாகிய பகை நீங்காது புக்குழிப் புக்குக் கொல்லும்.

"வீயா—துடம்பொடு நின்ற உயிரு மில்லை"‡என்புழியும் வீயாமை நீங்காமைக்கண் வந்தது. (எ)

உ0அ. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று.

(இ - ள்.) தீயவை செய்தார் கெடுதல் - பிறர்க்குத் தீவினை களைச் செய்தார் தாங் கெடுதல் எத்தன்மைத்தெனின்; நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று - ஒருவ னிழல் நெடிதாகப் போயும் அவன்றன்னை விடாது வந்து அடியின்கண் தங்கிய தன்மைத்து.

---

* கலித்தொகை, குறிஞ்சி-உஉ. † மணக்குடவர்.

‡ புறநானூறு - ௩சுகூ.

இவ்வுவமையைத் தன்காலம் வருந்துணையும் புலனுகாது உயிரைப்பற்றி நின்று அது வந்துழி உருப்பதாய தீவினையைச் செய்தார் பின் அதனுற் கெடுதற்கு உவமையாக்கி உரைப்பாரு முளர். அஃதுரையன்றென்பதற்கு அடியுறைந்த நிழல்தன்னை வீய்ந்தற்றென்னுது 'வீயாதடியுறைந்தற்' றென்ற பாடமே கரியாயிற்று. மேல் 'வீயாது பின் சென்றடு மென்முர், *ஈண்டு அதனை உவமையான் விளக்கினுர் (அ)

உ0கூ. தன்னைத்தான் காதல னுயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

(இ - ள்.) தன்னைத்தான் காதலன் ஆயின் - ஒருவன், தன்னைத்தான் காதல் செய்தலுடையனுயின்; தீவினைப்பால் எனைத்து ஒன்றும் துன்னற்க - தீவினையாகிய பகுதி எத்துணையுஞ் சிறிய தொன்ருயினும் பிறர்மாட்டுச் செய்யாதொழிக.

நல்வினை தீவினை யென வினைப்பகுதி இரண்டாகலின், 'தீவினைப்பா' லென்முர். பிறர்மாட்டுச் செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம் பயத்தல் விளக்கினுராகலின், 'தன்னைத்தான் காதலனுயி' னென்முர்; இவை ஆறு பாட்டானும் பிறர்க்குத் தீவினை செய்யிற் ருங்கெடுவரென்பது கூறப்பட்டது. (கூ)

உக0. அருங்கேடன் என்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.

(இ - ள்.) மருங்கு ஓடித் தீவினை செய்யான் எனின் - ஒருவன் செந்நெறிக்கண் செல்லாது கொடுநெறிக்கண் சென்று பிறர் மாட்டுத் தீவினைகளைச் செய்யானுயின்; அருங்கேடன் என்பது அறிக - அவனை அரிதாகிய கேட்டையுடைய னென்பதறிக.

அருமை - இன்மை. 'அருங்கேட'னென்பதனைச் "சென்று சேக்கல்லாப் புள்ள உள்ளில், என்றூழ் வியன்குளம்"† என்பது போலக் கொள்க. 'ஓடி' யென்னும் வினையெச்சம் 'செய்யா' னெனும் எதிர்மறைவினையுட் செய்தலோடு முடிந்தது. இதனுல் தீவினை செய்யாதவன் கேடில•னென்பது கூறப்பட்டது. (க0)

---

* குறள் - உ0எ. † அகநானூறு - சஉ.

## அதி. ௨௨—ஒப்புரவறிதல்

[அஃதாவது; உலக நடையினை யறிந்து செய்தல். உலக நடை வேத நடைபோல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே யறிந்து செய்யுந் தன்மைத்தாகலின், ஒப்புரவறித லென்றார். மேல் மன மொழி மெய்களால் தவிரத் தகுவன கூறினார். இனிச் செய்யத் தகுவனவற்றுள் எஞ்சி நின்றன கூறுகின்றா ராகலின், இது தீவினையச்சத்தின் பின்வைக்கப்பட்டது.]

௨௧௧. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு.

(இ-ள்.) மாரிமாட்டு உலகு என் ஆற்றும்-தமக்கு நீருதவு கின்ற மேகங்களினிடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்யா நின்றன; கடப்பாடு கைம்மாறு வேண்டா - ஆகலான், அம்மேகங் கள் போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்குவன வல்ல.

'என்னாற்று' மென்ற வினா யாதுமாற்றா வென்பது தோன்ற நிற்றலின், அது வருவித்துரைக்கப்படும். தவிருந் தன்மையவல்ல வென்பது 'கடப்பா' டென்னும் பெயரானே பெறப்பட்டது. செய்வாரது வேண்டாமையைச்செய்யப்படுவனமேல் ஏற்றினார். (௧)

௨௧௨. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ-ள்.) தக்கார்க்கு - தகுதியுடையார்க்காயின்; தாள் ஆற்றித் தந்தபொருள் எல்லாம்-முயறலைச் செய்தீட்டியபொருண் முழுதும்; வேளாண்மை செய்தற் பொருட்டு - ஒப்புரவு செய்தற் பயத்தவாம்.

பிறர்க் குதவாதார்போலத் தாமேஉண்டற்பொருட்டும் வைத் திழத்தற்பொருட்டும் அன்றென்பதாயிற்று. (௨)

௨௧௩. புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

(இ-ள்.) புத்தேள் உலகத்தும் ஈண்டும் - தேவருலகத்தும் இவ்வுலகத்தும்; ஒப்புரவின் நல்ல பிற பெறல் அரிது - ஒப்புரவு போல நல்லன பிற செயல்களைப் பெறுத லரிது.

ஈவாரும் ஏற்பாருமின்றி எல்லோரும் ஒருதன்மையராதலின் 'புத்தேளுலகத்' தரிதாயிற்று; யாவர்க்கும் ஒப்பது இதுபோற் பிறிதொன் றின்மையின், இவ்வுலகத் தரிதாயிற்று. பெறற்கரி

தென்று பாடமோதிப் பெறுதற்குக் காரணம் அரிதென்றுரைப் பாருமுளர். இவை மூன்று பாட்டானும் ஒப்புரவினது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

உகச. ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

(இ - ள்.) உயிர் வாழ்வான் ஒத்தது அறிவான் - உயிரோடு கூடிவாழ்வானவான் உலக நடையினை யறிந்து செய்வான்; மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்- அஃதறிந்து செய்யாதவன் உயிருடையனேயாயினும், செத்தாருள் ஒருவனாகக் கருதப்படும்.

உயிரினறிவுஞ் செயலுங் காணாமையின், 'செத்தாருள் வைக் கப்படு' மென்றார். இதனால் உலகநடைவழு, வேதநடை வழுப் போலத் தீர்திற னுடைத்தன் றென்பது கூறப்பட்டது. (௪)

உகரு. ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

(இ - ள்.) உலகு அவாம் பேரறிவாளன் திரு-உலகநடையை விரும்பிச் செய்யும் பெரிய அறிவினை யுடையவனது செல்வம்; ஊருணி நீர் நிறைந்தற்று - ஊரின் வாழ்வார் தண்ணீருண்ணுங் குளம் நீர் நிறைந்தாற்போலும்.

நிறைத லென்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத் தின்மே லேற்றப்பட்டது. பாழ்போகாது நெடிது நின்று எல்லார்க் கும் வேண்டுவன தப்பாதுதவு மென்பதாம். (௫)

உகசு. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்.

(இ - ள்.) செல்வம் நயனுடையான்கண் படின் - செல்வம் ஒப்புரவு செய்வான்கண்ணே படுமாயின்; பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்று-அது பயன்படு மரம் ஊர் நடுவே பழுத்தாற்போலும்.

உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின் அதனையே 'நய' னென்றார்; எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுக்கு மென்ப தாம். (௬)

உகஎ. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

(இ - ள்.) செல்வம் பெருந்தகையான்கண் படின் - செல்வம் ஒப்புரவு செய்யும் பெரிய தகைமையை யுடையான்கண்ணே படு

மாயின்; மருந்து ஆகித் தப்பா மரத்தற்று-அஃது எல்லா உறுப்பும் பிணிகட்கு மருந்தாய்த் தப்பாத மரத்தை ஒக்கும்.

'தப்புத'லாவது கோடற்கரிய இடங்களின் நின்ருதல், மறைந்து நின்ருதல், காலத்தான் வேறுபட்டாதல் பயன்படாமை. தன் குறை நோக்காது எல்லார் வருத்தமுந் தீர்க்குமென்பதாம். இவை மூன்று பாட்டானும் கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது. (எ)

உகஅ. இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(இ - ள்.) இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்; செல்வஞ் சுருங்கிய காலத்தும் ஒப்புரவு செய்தற்குத் தளரார் - கடன் அறி காட்சியவர்-தாஞ்செய்யத் தகுவனவற்றை அறிந்த இயற்கை யறிவுடையார்.

பிறவெல்லாம் ஒழியினும், இஃதொழியா ரென்பதாம். (அ)

உகக. நயனுடையான் நல்கூர்ந்தா னுதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

(இ - ள்.) நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல்-ஒப்புரவு செய்தலையுடையான் நல்கூர்ந்தானுதலாவது; செயும்நீர செய்யாது அமைகலா ஆறு-தவிராது செய்யும் நீர்மையையுடைய அவ்வொப்புரவுகளைச் செய்யப்பெருது வருந்துகின்ற இயல்பாம்.

தானுகர்வன நுகரப்பெருமையன் றென்பதாம். இவை இரண்டு பாட்டானும் வறுமையான் ஒப்புர வொழிதற்பாற்றன் றென்பது கூறப்பட்டது. (க)

உ௨௦. ஒப்புரவி னுல்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

(இ - ள்.) ஒப்புரவினுல் கேடுவரும் எனின்-ஒப்புரவு செய்தலான் ஒருவனுக்குப் பொருட்கேடு வருமென்ப ருளராயின்; அஃது ஒருவன் விற்றுக் கோள் தக்கது உடைத்து - அக்கேடு தன்னை விற்ருயினுங் கொள்ளுந் தகுதியை யுடைத்து.

தன்னை விற்றுக்கொள்ளப் படுவதொரு பொருளில்லையன்றே? இஃதாயின் அதுவுஞ் செய்யப்படுமென்றது, புகழ்பயத்தல் நோக்கி. இதனுல் ஒப்புரவினுற் கெடுவது கேடன்றென்பது கூறப்பட்டது. (௰)

———

## அதி. உ௩—ஈகை

[அஃதாவது, வறியராய் ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். இது மறுமை நோக்கியதாகலின் இம்மை நோக்கிய ஒப்புரவறித லின் பின் வைக்கப்பட்டது.]

உஉக. வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

(இ - ள்.) வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை-ஒரு பொருளு மில்லாதார்க்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது; மற்று எல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து - அஃதொழிந்த எல்லாக் கொடையுங் குறி யெதிர்ப்பை கொடுக்கு நீர்மையையுடைத்து.

ஒழிந்த கொடைகளாவன வறியரல்லாதார்க்கு ஒரு பயனோக் கிக் கொடுப்பன. 'குறியெதிர்ப்பை'யாவது அளவு குறித்து வாங்கி அவ் வாங்கியவாறே எதிர் கொடுப்பது. 'நீர' தென்புழி அது வென்பது பகுதிப்பொருள் விகுதி. பின்னுந் தன்பால் வருதலின், 'குறியெதிர்ப்பை நீர துடைத்' தென்றார். இதனால் ஈகைய திலக் கணங் கூறப்பட்டது (க)

உஉஉ. நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

(இ - ள்.) கொளல் நல்லாறு எனினும் தீது - ஏற்றல் வீட் டுலகிற்கு நல்ல நெறியென்பார் உளராயினும்அது தீது; மேலுலகம் இல் எனினும் ஈதலே நன்று - ஈந்தார்க்கு அவ்வுலகெய்துதலில்லை யென்பார் உளராயினும் ஈதலே நன்று.

'எனினு மென்பது இருவழியும் அங்ஙனம் கூறுவாரின்மை விளக்கி நின்றது. பிரிநிலை ஏகாரத்தால் பிறவறங்களின் ஈதல் சிறந்ததென்பது பெற்றாம். நல்லது கூறுவார் தீயதும் உடன் கூறினார். (உ)

உஉ௩. இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள.

(இ - ள்.) இலன் என்னும் எவ்வம் உரையாமை-யான்வறிய னென்றுஇரப்பான் சொல்லும் இளிவரவைத் தான் பிறர்கட்சொல் லாமையும்; ஈதல் - அதனைத் தன்கட் சொன்னார்க்கு மாற்றா தீதலும்; உள குலன் உடையான் கண்ணே - இவை இரண்டுமுள வாவன குடிப்பிறந்தான்கண்ணே-

மேற்றீதென்றது ஒழிதற்கும் நன்றென்றது செய்தற்கு முரியவனை உணர்த்தியவாறு. இனி 'இலனென்னு மெவ்வ முரையாமை யீத'லென்பதற்கு அவ்விளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்த லெனவும், அதனைப் பின்னும் பிறனொருவன்பாற் சென்று அவனுரையா வகையாற் கொடுத்தலெனவும், யான் இதுபொழுது பொருளுடையே னல்லேன் எனக் கரப்பார் சொல்லும் இளிவரவைச் சொல்லாது கொடுத்தலெனவும்* உரைப்பாரு முளர். அவர் 'ஈத' லென் பதனைப் பொருட்பன்மைபற்றி வந்த பன்மையாக உரைப்பர். (௩)

உ௨௪. இன்னு திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணு மளவு.

(இ - ள்.) இரக்கப்படுதல் இன்னாது-இரத்தலேயன்றி இரக்கப்படுதலும் இனிதன்று; இரந்தவர் இன்முகம் காணும் அளவு-ஒருபொருளை யிரந்தவர் அது பெற்றதனால் இனிதாகிய அவர் முகங்காணு மளவும்.

எச்சவும்மையும் முற்றும்மையும் விகாரத்தாற் றொக்கன; இரக்கப்படுதல் இரப்பார்க்கு ஈவலென்றிருத்தல். அதனை 'இன்னா' தென்றது, "எல்லா—மிரப்பார்க்கொன் றீயாமை"† கூடுங் கொல்லோவென்னும் அச்சநோக்கி. எனவே, எல்லாப்பொருளும் ஈதல்வேண்டு மென்பது பெறப்பட்டது. (௪)

உ௨௫. ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

(இ - ள்.) ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல் - தவத்தான்வலியார்க்கு வலியாவது தம்மையுற்றபசியைப்பொறுத்தல்; அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின் - அவ்வலிதான் அங்ஙனம் பொறுத்தற்கரிய பசியை ஈகையான் ஒழிப்பாரது வலிக்குப் பின்.

தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதா ராற்றலின், தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பாராற்றல் நன்றென்பதாம். (௫)

உ௨௬. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(இ - ள்.) அற்றார் அழி பசி தீர்த்தல் - வறியாரது மிக்க பசியை அறனோக்கித் தீர்க்க; பொருள் பெற்றான் ஒருவன் வைப்

* மணக்குடவர். † நாலடியார் - கசஎ.

புழி அஃது - பொருள் பெற்றான் ஒருவன் அதனைத் தனக்குதவ வைக்குமிடம் அவ் வறமாகலான்.

எல்லா நன்மைகளும் அழிய வருதலின், 'அழிபசி' யென்றார். 'அறநோக்கி' யென்பது எஞ்சிநின்றது. 'அற்றா ரழிபசி தீர்த்த' பொருள் பின் தனக்கே வந்துதவு மென்பதாம். (சு)

உஉஎ. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

(இ - ள்.) பாத்து ஊண் மரீஇயவனை - எஞ்ஞான்றும் பகுத்துண்டல் பயின்றவனை; பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது - பசி யென்று சொல்லப்படுந் தீய நோய் தீண்டுத லில்லை.

இவ்வுடம்பினின்று ஞான ஒழுக்கங்களை அழித்து அதனால் வரும் உடம்புகட்குந் துன்பஞ் செய்தலின், 'தீப்பிணி' யெனப் பட்டது, தனக்கு மருத்துவன் தானாகலின், பசிப்பிணி நணுகா தென்பதாம். இவை ஆறு பாட்டானும் ஈதலின் சிறப்புக் கூறப் பட்டது. (எ)

உஉஅ. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(இ - ள்.) தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர் - தாமுடைய பொருளை ஈயாது வைத்துப் பின் இழந்துபோம் அருளிலாதார்; ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல் - வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து, அவர் உவத்தலான் அருளுடையா ரெய்தும் இன்பத்தினைக் கண்ட[illegible]யார் கொல்லோ !

'உவக்கு' மென்பது காரணத்தின்கண் வந்த பெயரெச்சம்; அஃது 'இன்ப மென்னுங் காரியப்பெயர் கொண்டது. அறிந்தா ராயின், தாமும் அவ்வின்பத்தை எய்துவதல்லது வைத்திழவா ரென்பது கருத்து. (அ)

உஉகூ. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

(இ - ள்.) நிரப்பிய தாமே தமியர் உணல் - பொருட்குறை நிரப்பவேண்டி வறியார்க்கீயாது தாமே தனித்துண்டல்; இரத்த லின் இன்னாது மன்ற - ஒருவருக்குப் பிறர்பாற் சென்று இரத்தலி னும் இன்னாது ஒருதலையாக.

பொருட்குறை நிரப்பலாவது, ஒரோவெண்களைக் குறித்து அத்துணை ஈட்டுதுமென ஈட்டத்தையே மேற்கொண்டு இவறிக்

கூட்டுதல். தனித்தல் பிறரை யொழித்தல். இரத்தற்குள்ளது அப்பொழுதை யிளிவரவே; பின் நல்குர வில்லை; தமியருண்டற்கு அவை இரண்டு முளவாமாகலின், 'இரத்தலி னின்னு' தென்றார். 'நிரப்பிய' வென்பதற்குத் தேயடி உணவுகளை*யென் றுரைப்பாரு முளர். (கூ)

உகூ0. சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈத லியையாக் கடை.

(இ - ள்.) சாதலின் இன்னாதது இல்லை - ஒருவற்குச் சாதல் போல இன்னாத தொன்றில்லை; அதூஉம் ஈதல் இயையாக்கடை இனிது - அத்தன்மைத்தாகிய சாதலும் வறியார்க்கொன் றீதன் முடியாதவழி இனிது.

பிறர்க்குப் பயன்படாத உடற்பொறை நீங்குதலான், 'இனி' தென்றார். இவை மூன்று பாட்டானும் ஈயாமையின் குற்றங் கூறப்பட்டது. (க0)

---

## அதி. உச—புகழ்

[அஃதாவது, இல்வாழ்க்கை முதல் ஈகை ஈறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின் கண் நிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி. இது, பெரும் பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன்பின் வைக்கப் பட்டது.]

உகூக. ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை உயிர்க்கு.

(இ - ள்.) ஈதல்-வறியார்க் கீக; இசைபட வாழ்தல்-அதனாற் புகழுண்டாக வாழ்க; அது அல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை - அப் புகழல்லது மக்களுயிர்க்குப் பயன் பிறிதொன் றில்லை யாதலான்.

இசைபட வாழ்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிற காரணங் களும் உளவேனும் "உணவின் பிண்ட முண்டி முதற்று"† ஆக லின் ஈதல் சிறந்ததென்பதற்கு ஞாபகமாக 'ஈத' லென்றார். 'உயிர்க்' கென்பது, பொதுப்படக் கூறினாரேனும் விலங்குயிர் கட் கேலாமையின், மக்களுயிர்மேல் நின்றது. (க)

உகூஉ. உரைப்பா ருரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்.

---

*மணக்குடவர். †புறநானூறு - கஅ.

(இ - ள்.) உரைப்பார் உரைப்பவை எல்லாம் - உலகத்து ஒன்றுரைப்பார் உரைப்பனவெல்லாம்; இரப்பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ் - வறுமையான் இரப்பார்க்கு அவர் வேண்டிய தொன்றை ஈவார்கண் நிற்கும் புகழாம்.

புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும்* அவற்றுள் 'உரைப்பா ருரைப்பவை' யென எல்லார்க்குமுரிய வழக்கினையே எடுத்தாராயினும் இனம்பற்றிப் புலவர்க்கே யுரிய செய்யுளுங் கொள்ளப்படும்; படவே, பாடுவார் பாடுவனவெல்லாம் புகழாமென்பதூஉம் பெற்றும். ஈதற்காரணஞ் சிறந்தமை இதனுள்ளுங் காண்க- இதனைப் பிறர்மேலும் நிற்குமென்பார் தாமெல்லாஞ்சொல்லுக; புகழ்ஈவார்மேல் நிற்குமென்றுரைப்பாரு முளர், அது புகழது சிறப்பு நோக்காமை யறிக. (உ)

உஙங. ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

(இ - ள்.) ஒன்றா உயர்ந்த புகழ் அல்லால் - தனக்கு இணையின்றாக ஓங்கிய புகழல்லது; உலகத்துப் பொன்றாது நிற்பது ஒன்று இல் - உலகத்து இறவாது நிற்பது பிறிதொன்றில்லை.

'இணையின்றாக வோங்குத'லாவது கொடுத்தற்கரிய உயிருறுப்புப் பொருள்களைக் கொடுத்தமைபற்றி வருதலால் தன்னோடொப்பதின்றித் தானேயுயர்தல். அத்தன்மைத்தாகிய புகழே செய்யப்படுவதென்பதாம். இனி 'ஒன்றா' வென்பதற்கு ஒரு வார்த்தையாகச் சொல்லினெனவும், ஒரு தலையாகப் 'பொன்றாது நிற்ப' தெனவும் உரைப்பாரு முளர். இவை மூன்று பாட்டானும் புகழது சிறப்புக் கூறப்பட்டது. 10×5(ங)

உஙச. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

(இ - ள்.) நிலவரை நீள் புகழ் ஆற்றின் - ஒருவன் நிலவெல்லைக்கண்ணே பொன்றாது நிற்கும் புகழைச் செய்யுமாயின்; புத்தேள் உலகு புலவரைப் போற்றாது - புத்தேளுலகம் அவனையல்லாது தன்னை யெய்திநின்ற ஞானிகளைப் பேணாது.

புகழுடம்பான் இவ்வுலகும், புத்தேளுடம்பான் அவ்வுலகும் ஒருங்கே எய்தாமையின் 'புலவரைப் போற்றா' தென்றார். அவன் இரண்டுலகும் ஒருங்கெய்துதல் "புலவர் பாடும் புகழுடையோர்

* புறநானூறு—உஎ.

விசும்பின், வலவ னேவா வான வூர்தி, யெய்துபவென்பதஞ் செய் வினை முடித்து''* எனப் பிறராலுஞ் சொல்லப்பட்டது. (சு)

உருரு. நத்தம்போல் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

(இ - ள்.) நத்தம் (ஆகும்) கேடும் புகழுடம்பிற்கு ஆக்கமாகுங் கேடும்; உளது ஆகும் சாக்காடும் புகழுடம்புளதாகுஞ் சாக்காடும், வித்தகர்க்கு அல்லால் அரிது-சதுரப்பாடுடையார்க் கல்ல தில்லை;

நந்தென்னுந்தொழிற்பெயர் விகாரத்தான் நத்தென்றாய், பின் 'அம்' மென்னும் பகுதிப் பொருள் விகுதிபெற்று, 'நத்த' மென்றாயிற்று. 'போ' லென்பது ஈண்டுரையசை. 'ஆகு' மென்பதனை முன்னுங்கூட்டி, 'அரி' தென்பதனைத் தனித்தனி கூட்டியுரைக்க, 'ஆக்கமாகுங் கே'டாவது புகழுடம்பு செல்வமெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல். 'உளதாகுஞ் சாக்கா'டாவது புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தல். நிலையாதனவற்றான் நிலையின எய்துவார்வித்தகராகலின், 'வித்தகர்க்கல்லா லரிதென்றார். இவை இரண்டு பாட்டானும் புகழுடையாரெய்தும் மேன்மை கூறப்பட்டது. (ரு)

உருசு. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

(இ - ள்.) தோன்றின் புகழொடு தோன்றுக - மக்களாய்ப் பிறக்கின் புகழுக் கேதுவாகிய குணத்தோடு பிறக்க: அஃது இலார் தோன்றலின் தோன்றாமை நன்று - அக்குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று.

'புகழ்' ஈண்டு ஆகுபெயர். 'அஃதிலா' ரென்றமையின் ''மக்களா யென்பதூஉம், மக்களாய்ப் பிறவாமை யென்ற அருத்தாபத்தியான் 'விலங்காய்ப் பிறத்த'லென்பதூஉம் பெற்றாம். இகழ்வாரின்மையின் 'நன்' றென்றார். (சு)

உருஎ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்.

(இ - ள்.) புகழ்பட வாழாதார் - தமக்குப் புகழுண்டாக வாழமாட்டாதார்; தம் நோவார்-அதுபற்றிப் பிறரிகழ்ந்த வழி, இவ் விகழ்ச்சி நம் மாட்டாமையான் வந்ததென்று தம்மை

* புறநானூறு - உஎ.

நோவாதே; தம்மை இகழ்வாரை நோவது எவன் - தம்மை யிகழ்வாரை நோவ தென் கருதி!

புகழ்பட வாழலாயிருக்க அதுமாட்டாத குற்றம்பற்றிப் பிறரிகழ்தல் ஒருதலையாகலின், 'இகழ்வாரை' யென்றார். (எ)

உருஅ. வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

(இ - ள்.) இசை என்னும் எச்சம் பெறாவிடின் - புகழென்னும் எச்சம் பெறலாயிருக்க அது பெறா தொழிவராயின்; வையத்தார்க்கு எல்லாம் வசை என்ப - வையகத்தோர்க்கெல்லாம் அது தானே வசையென்று சொல்லுவர் நல்லோர்.

'எச்ச' மென்றார், செய்தவர் இறந்துபோகத் தான் இறவாது நிற்றலின். இகழப்படுதற்குப் பிறிதொரு குற்றம் வேண்டாவென்பது கருத்து. (அ)

உருகூ. வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

(இ - ள்.) இசை யிலா யாக்கை பொறுத்த நிலம் - புகழில்லாத உடம்பைச் சுமந்த நிலம்; வசை இலா வண்பயன் குன்றும் - பழிப்பில்லாத வளப்பத்தையுடைய விளையுள் குன்றும்.

உயிருண்டாயினும் அதனாற்பயன்கொள்ளாமையின் 'யாக்கை' யெனவும், அது நிலத்திற்குப் பொறையாகலிற் 'பொறுத்த' லெனவுங் கூறினார். விளையுள் குன்றுதற்கேது பாவயாக்கையைப் பொறுக்கின்ற வெறுப்பு 'குன்று'மென இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மே னின்றது. இவை நான்கு பாட்டானும் புகழில்லாதாரது தாழ்வு கூறப்பட்டது. (கூ)

உசo. வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

(இ . ள்.) வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் - தம்மாட்டு வசையுண்டாகாமல் வாழ்வாரே உயிர்வாழ்வாராவார்; இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர் - புகழுண்டாகாமல் வாழ்வாரே இறந்தாராவர்.

'வசையொழி' தலாவது 'இசை' யென்னும் எச்சம் பெறுதலாயினமையின், 'இசையொழி' தலாவது வசை பெறுதலாயிற்று, மேல் 'இசையிலா யாக்கை' யென்றதனை விளக்கியவாறு. இத

னுல் இவ்விரண்டும் உடன் கூறப்பட்டன. மறுமைப் பயன் "வானுறையுந் தெய்வத்துள் வைக்கப் படும்"* என மேலே கூறப் பட்டது; படவே, இல்லறத்திற்கு இவ்வுலகிற் புகழும் தேவருல கிற் போகமும் பயனென்பது பெற்றும்.

இனி, மனுமுதலிய அறநூல்களாற் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக் கூறிய இவற்றுள்ளே அடங்கும். அஃதறிந் தடக்கிக் கொள்க; யாமுரைப்பிற் பெருகும்.

இல்லறவியல் முற்றிற்று.

---

3ட.2ட

## ௩. துறவறவியல்

இனி, முறையானே துறவறங்கூறிய தொடங்கினுர். துறவற மாவது மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடைய ராய்ப் பிறப்பினை யஞ்சி வீடுபேற்றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங் கள் தூயவாதற்பொருட்டு அவரால் காக்கப்படும் விரதங்களும், அவற்றுன் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமுமென இரு வகைப்படும்.

### விரதம்

அவற்றுள் விரதங்களாவன: இன்னவறஞ் செய்வலெனவும் இன்னபாவ மொழிவலெனவும் தம்மாற்றலுக் கேற்ப வரைந்து கொள்வன. அவைதாம் வரம்பிலவாகலிற் பெருகுமென்றஞ்சி, அவை தம்முள்ளே பலவற்றையும் அகப்படுத்து நிற்குஞ் சிறப் புடையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான்றொடங்கி, முதற்கண் அருளுடைமை கூறுகின்றார்.

---

## அதி. உரு—அருளுடைமை

[அஃதாவது, தொடர்பு பற்றுது இயல்பாக, எல்லா உயிர்கண் மேலுஞ் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன் புடைமைபோல இது துறவறத்திற்குச் சிறந்தமையின் முற்கூறப்பட்டது.]

உ௪க. அருட்செல்வஞ் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

(இ - ள்.) செல்வத்துள் செல்வம் அருட்செல்வம் - செல் வங்கள் பலவற்றுள் ஆராய்ந்தெடுக்கப்பட்ட செல்வமாவது

---

* திருக்குறள் - ௫0.

அருளான் வருஞ்செல்வம்; பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள - அஃதொழிந்த பொருளான் வருஞ் செல்வங்கள் இழிந்தார் கண்ணு முளவாம் ஆகலான்.

அருளான் வருஞ் செல்வமாவது உயிர்களை யோம்பி அவ் வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார்கண்ணே யல்லதில்லாத 'அருட்செல்வமே சிறப்புடைய செல்வம்; ஏனை நீசர்கண்ணு முளவாம் பொருட் செல்வங்கள் சிறப்பில வென்பதாம். (க)

உசஉ. நல்லாற்ருன் நாடி யருளாள்க பல்லாற்ருல்
தேரினும் அஃதே துணை.

(இ - ள்.) நல்லாற்ருன் நாடி அருள் ஆள்க - அளவைக ளானும் பொருந்துமாற்ருனும் நன்ருன நெறியிலே நின்று, நமக் குத் துணையாம் அறன் யாதென் ருராய்ந்து, அருளுடையராக; பல்லாற்ருல் தேரினும் துணை அஃதே - ஒன்றை யொன் ருெவ் வாத சமய நெறிகள் எல்லாவற்ருனும் ஆராய்ந்தாலும் துணையா வது அவ்வருளே, பிறிதில்லை

'அளவைக' ளாவன: பொறிகளால் காணுங் காட்சியும், குறி களான் உய்த்துணரும் அனுமானமும், கருத்தா மொழியாகிய ஆகமமுமென மூன்று. ஒப்புப்பற்றி யுணரும் உவமையும், இங் ஙன மன்ருயின் இது கூடாதென் றுணரும் அருத்தாபத்தியும் உண்மைக்கு மாருய இன்மையுமென இவற்றைக் கூட்டி ஆறென் பாரு முளர். இவையும் ஒருவாற்ருன் அவற்றுள்ளே அடங்கு தலின், மூன்றென்றலே கருத்து. பொருந்துமாருவது இது கூடும் இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது. இதனை வடநூலார் யுத்தியென்ப. 'ஆற்ரு' னென்பது வேற்றுமை மயக் கம். ஒன்றையொன் ருெவ்வாமையாவது மதவேறுபாட்டான் அளவைகளும் பொருள்களும் தம்முண் மாறுகோடல்; அன்ன வாயினும் அருடுணை யென்றற்கண் ஒக்கு மென்பதாம். உயிரை விட்டு நீங்காது இருமையினும் உதவலின், 'துணை' யென்ருர். இவை இரண்டு பாட்டானும் அருளினது சிறப்புக் கூறப்பட்டது.

உசங. அருள்சேர்ந்த நெஞ்சினுர்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னு உலகம் புகல்.

(இ - ள்.) இருள் சேர்ந்த இன்னு உலகம் புகல் - இருள் செறிந்த துன்ப உலகத்துட் சென்று புகுதல்; அருள்சேர்ந்தநெஞ் சினர்க்கு இல்லை-அருள் செறிந்த நெஞ்சினை யுடையார்க்கில்லை.

இருள் செறிந்ததுன்பவுலகமென்றது திணிந்த இருளையுடைத் தாய்த் தன்கட் புக்கார்க்குத் துன்பஞ்செய்வதொருநரகத்தை. அது கீழுலகத்துள் ஓரிடமாகலின், 'உலக' மெனப்பட்டது. (ங)

உ௪௪. மன்னுயி ரோம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

(இ - ள்.) மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு - நிலைபேறுடைய உயிர்களைப் பேணி அவற்றின்கண் அருளுடையனுவானுக்கு; தன் உயிர் அஞ்சும் வினை இல் என்ப - தன்னுயிர் அஞ்சுதற் கேதுவாகிய தீவினைகள் உளவாகா வென்று சொல்லுவர் அறிந்தோர்.

உயிர்களெல்லாம் நித்தமாகலின், 'மன்னுயி' ரென்ருர். 'அஞ்சுதல்' துன்ப நோக்கி யஞ்சுதல். அன்ன வறத்தினேன் கொலை முதலிய பாவங்கள் செய்யா னெனவே மறுமைக்கண் நரகம் புகாமைக் கேது கூறியவா ருயிற்று. (௪)

உ௪௫. அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

(இ - ள்.) அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை - அருளுடையார்க்கு இம்மையினும் ஒரு துன்பமுண்டாகாது; வளி வழங்கும் மல்லல்மா ஞாலம் கரி - அதற்குக் காற் றியங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று.

சான்ருவார் தாங் கண்டு தேறிய பொருளைக் காணுதார்க்குத் தேற்றுதற் குரியவர். அருளாள்வார்க்கு அல்ல லுண்டாக ஒரு காலத்தும் ஓரிடத்தும் ஒருவருங் கண்டறிவா ரின்மையின் இன்மை முகத்தான் ஞாலத்தார் யாவருஞ் சான்றென்பார், 'வளி வழங்கு மல்லன்மா ஞாலங்கரி' யென்ருர்: எனவே இம்மைக்க ணென்பது பெற்ரும். 'ஞாலம்' ஆகுபெயர். இவை மூன்று பாட்டானும் அத் துணையுடையார்க்கு இருமையினுந் துன்பமில்லாமை கூறப்பட்டது. (௫)

உ௪௬. பொருள்நீங்கிப் பொச்சாந்தா ரென்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

(இ - ள்.) அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார்-உயிர்கண்மாட்டுச் செய்யப்படும் அருளைத் தவிர்ந்து தவிரப்படுங் கொடுமைகளைச் செய்தொழுகுவாரை; பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர்-முன்னும் உறுதிப் பொருளைச் செய்யாது தாந் துன்புறுகின்றமையை மறந்தவரென்று சொல்லுவர் நல்லோர்.

உறுதிப்பொருள் - அறம். 'துன்புறுதல்' பிறவித்துன்ப* மூன்றனையும் அனுபவித்தல். மறந்திலராயின், அவ்வா ருெழுகா ரென்பது கருத்து. (௬)

* பிறவித்துன்பம் மூன்றும் மேலே நான்காம் குறளுரையிற் கூறப்பட்டது-

உசஎ. அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்
கிவ்வுலகம் இல்லாகி யாங்கு.

(இ - ள்.) அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை - உயிர் கண்மேல் அருளில்லாதார்க்கு வீட்டுலகத் தின்பமில்லை; பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு - பொருளில்லாதார்க்கு இவ்வுலகத் தின்பம் இல்லையாயினாற் போல.

'அவ்வுலகம்' 'இவ்வுலகம்' என்பன ஆகுபெயர். இவ்வுலகத் தின்பங்கட்குப் 'பொருள்' காரணமானாற்போல, அவ்வுலகத் தின்பங்கட்கு 'அருள்' காரணமென்பதாயிற்று. (எ)

உசஅ. பொருளற்றார் பூப்ப ரொருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

(இ - ள்.) பொருள் அற்றார் ஒருகால் பூப்பர் - ஊழான் வறிய ராயினார் அது நீங்கிப் பின் ஒருகாலத்துச் செல்வத்தாற் பொலிவர்; அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது - அவ்வா றன்றி அருளிலாதார் பாவம் அருமையின் அழிந்தாரே; பின் னொரு காலத்தும் ஆத லில்லை.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. மேற்பொருளின்மை யோடு ஒருவாற்றான் ஒப்புமை கூறினா ராகலின், அது மறுத்துப் பிறவாற்றான் அதனினுங் கொடிதென்பது கூறுயவாறு. (அ)

உசகூ. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்.

(இ - ள்.) அருளாதான் செய்யும் அறம் தேரின் - உயிர் கண்மாட்டு அருள் செய்யாதவன் செய்யும் அறத்தை யாராயின் ; தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்று - ஞானமில்லாதவன் ஒருகால் மெய்ப்பொருளை உணர்ந்தாற்போலும்.

'மெய்ப்பொருள்' மெய்ந்நூலிற் சொல்லும் பொருள். நிலை பெற்ற ஞானமில்லாதவன் இடையே மெய்ப்பொருளை யுணர்ந் தால் அதனைத் தன் ஞானமின்மையால் தானே யழித்துவிடும்; அதுபோல அருளாதான் இடையே அறஞ் செய்தால் அதனைத் தன் அருளாமையால் தானே அழித்துவிடு மென்பதாயிற்று. ஆகவே, பிற அறங்கட்கெல்லாம் அருளுடைமை மூல மென்பது பெற்றாம். இவை நான்கு பாட்டானும் அத் துணையில்லாதார்க்கு வருங் குற்றங் கூறப்பட்டது. (கூ)

உருய. வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

(இ - ள்.) வலியார் முன் தன்னை நினைக்க - தன்னின் வலியார் தன்னை நலிய வரும்பொழுது அவர்முன் தானஞ்சி நிற்கு நிலையினை நினைக்க; தான் தன்னின் மெலியார்மேல் செல்லுமிடத்து - அருளில்லாதவன் தன்னின் எளியார்மேல் தான் நலியச் செல்லும் பொழுது.

'மெலியா' ரெனச் சிறப்புடைய உயர்திணைமேற் கூறினாராயினும், ஏனை யஃறிணையுங் கொள்ளப்படும். அதனை நினைக்கவே இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சமா மென் றறிந்து அதன்மேல் அருளுடையனா மென்பது கருத்து. இதனால் அருள் பிறத்தற் குபாயங் கூறப்பட்டது. (௧0)

---

## அதி. உ௬—புலான் மறுத்தல்

[அஃதாவது, ஊனுண்டலை யொழிதல். கொலைப்பாவத்தைப் பின்னு முளதாக்கலின் அதற்குக் காரண மாதலையும், முன்னும் அதனான் வருதலின் அதன் காரிய மாதலையும் ஒருங்குடைத்தாய ஊனுண்டல் அருளுடையார்க்கு இயைவதன்றாகலின், அதனை விலக்குதற்கு, இஃ தருளுடைமையின் பின் வைக்கப்பட்டது.]

உ௫௧. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்.

(இ - ள்.) தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான் - தன்னுடம்பை வீக்குதற்பொருட்டுத் தான் பிறிதோருயிரின் உடம்பைத் தின்பவன்; எங்ஙனம் ஆளும் அருள் - எவ்வகையான் நடத்தும் அருளினை!

பயனிலாத ஊன் பெருக்கலைப் பயனெனக் கருதி இக் கொடுமை செய்வானே அறிவில்லாத கொடியோனென்றவாறாயிற்று. 'எங்ஙன மாளு மரு' ளென்பது ஆளானென்பது பயப்ப நின்ற இகழ்ச்சிக் குறிப்பு. (௧)

உ௫௨. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்றின் பவர்க்கு.

(இ - ள்.) பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை - பொருளாற் பயன்கோடல் அதனைப் பாதுகாவாதார்க் கில்லை; ஆங்கு அருள் ஆட்சி ஊன் தின்பவர்க்கு இல்லை - அதுபோல அருளாற் பயன்கோடல் ஊன் தின்பவர்க்கில்லை.

பொருட்பயன் இழத்தற்குக்காரணம் காவாமைபோல அருட் பயனிழத்தற்கு ஊன் றினல் காரணமென்பதாயிற்று. ஊன் தின்ருராயினும் உயிர்கட்கு ஒரு தீங்கும் நினையாதார்க்கு அருளாடற் கிழுக்கில்லை யென்பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவை இரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (உ)

உருங. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன்
உடல்சுவை யுண்டார் மனம்.

(இ - ள்.) படை கொண்டார் நெஞ்சம்போல் - கொலைக் கருவியைத் தங் கையிற் கொண்டவர் மனம் அதனாற் செய்யுங் கொலையையே நோக்குவதல்லது அருளை நோக்காதவாறு போல; ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம் நன்று ஊக்காது - பிறிதோருயிரின் உடலைச் சுவைபட உண்டவர் மனம் அவ் வூனையே நோக்குவதல்லது அருளை நோக்காது.

சுவைபட உண்டல் காயங்களால் இனிய சுவைத்தாக்கி யுண்டல். இதனால் ஊன் தின்ருர் மனம் தீங்கு நினைத்தல் உவமவளவையாற் சாதித்து, மேலது வலியுறுத்தப்பட்டது. (ங)

உருச. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்.

(இ - ள்.) அருள் யாதெனின் கொல்லாமை - அருள் யாதெனின், கொல்லாமை; அல்லது (யாதெனின்) கோறல் - அருளல்ல தியாதெனிற் கோறல்; அவ்வூன் தினல் பொருளல்லது - ஆகலான், அக்கோறலான் வந்த ஊனைத் தின்கை பாவம்.

உபசார வழக்காற் 'கொல்லாமை கோற'லாகிய காரியங்களை 'அருள் அல்ல' தெனக் காரணங்களாக்கியும், 'ஊன்றின்கை' யாகிய காரணத்தைப் 'பாவ' மெனக் காரியமாக்கியும் கூறினார். 'அருளல்லது' கொடுமை. சிறப்புப்பற்றி அறமும் பொருளெனப் படுதலின், பாவம் 'பொருளல்ல' தெனப்பட்டது. 'கோற' லென முன்னின்றமையின், 'அவ்வூ' னென்ருர். இனி இதனை இவ்வாறன்றி 'அருளல்ல' தென்பதனை ஒன்ருக்கி, 'கொல்லாமை கோற' லென்பதற்குக் கொல்லாமையென்னும் விரதத்தையழித்த* லென்றுரைப்பாருமுளர். (ச)

உருரு. உண்ணுமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணுத்தல் செய்யா தளறு.

* மணக்குடவர்.

(இ - ள்.) உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது - ஒருசாருயிர் உடம்பின் கண்ணே நிற்றல் ஊனுண்ணாமை யென்கின்ற அறத்தின் கண்ணது ; உண்ண அளறு அண்ணாத்தல் செய்யாது - ஆகலான், அந்நிலை குலைய ஒருவன் அதனை உண்ணுமாயின் அவனை விழுங்கிய நிரயம் பின் உமிழ்தற்கு அங்காவாது.

உண்ணப்படும் விலங்குகள் அதனால் தேய்ந்து சிலவாக ஏனைய பலவாய் வருதலின் 'உண்ணாமையுள்ள துயிர்நிலை' யென்றார். உண்ணினென்பது 'உண்ண' வெனத் திரிந்து நின்றது. ஊனுண்டவன் அப்பாவத்தான் நெடுங்காலம் நிரயத்துள் அழுந்துமென்பதாம். கொலைப்பாவம் கொன்றார்மேல் நிற்றலின் பின் ஊனுண்பார்க்குப் பாவமில்லை யென்பாரை மறுத்து, அஃதுண் டென்பது இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (ரு)

உருசு. தினற்பொருட்டால் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்றருவா ரில்.

(இ - ள்.) தினற்பொருட்டு உலகு கொல்லாது எனின் - பேதைமை காரணமாக வல்லது ஊன்தின்கை காரணமாக உலகங் கொல்லாதாயின் ; விலைப்பொருட்டு ஊன் தருவார் யாரும் இல் - பொருள் காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை.

'உல' கென்பது ஈண்டு உயிர்ப்பன்மைமேல் நின்றது. பின்னிகழுந் தின்கை முன்னிகழும் கொலைக்குக் காரணமாகாமையின் தின்பார்க்குக் காரணத்தான் வரும் பாவமில்லை யென்ற வாதியை நோக்கி, அருத்தாபத்தியளவையாற் காரணமாதல் சாதித்தலின், இதனான் மேலது வலியுறுத்தப்பட்டது. (சு)

உருஎ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) புலாஅல் பிறிதொன்றன் புண் - புலாலாவது பிறிதோருடம்பின் புண் ; அது உணர்வார்ப் பெறின் உண்ணாமை வேண்டும் - அது தூய்தன்மை யறிவாரைப் பெறின், அதனை உண்ணா தொழியல்வேண்டும்.

அஃதென்னல் வேண்டு மாய்தம் விகாரத்தாற் றொக்கது. அம்மெய்ம்மை உணராமையின், அதனை உண்கின்றா ரென்பதாம். பொருந்துமாற்றானும் புலாலுண்டல் இழிந்ததென்பது இதனாற் கூறப்பட்டது. (எ)

உருஅ. செயிரின் தலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

(இ - ள்.) செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் - மயக்கமாகிய குற்றத்தின் நீங்கிய அறிவினையுடையார்; உயிரின் தலைப்பிரிந்த ஊன் உண்ணார் - ஒருயிரின் நீங்கிவந்த ஊனை யுண்ணார்.

'தலைப்பிரி' வென்பது ஒரு சொல். பிண மென ஊனின் மெய்ம்மை தானே யுணர்தலின், 'உண்ணா' ரென்றார். (அ)

உருகூ. அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

(இ - ள்.) அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின்-தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் வேள்வி வேட்டலினும், ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று - ஒரு விலங்கினுயிரைப் போக்கி அது நின்ற ஊனையுண்ணாமை நன்று.

அவ் வேள்விகளான் வரும் பயனினும் இவ்விரதத்தான் வரும் பயனே பெரிதென்பதாம். (கூ)

உகூo. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும்.

(இ - ள்,) கொல்லான் புலாலை மறுத்தானை - ஒருயிரையும் கொல்லாதவனுமாய்ப் புலாலையும் உண்ணாதவனை; எல்லா உயிரும் கைகூப்பித் தொழும்-எல்லா உயிருங் கைகுவித்துத் தொழும்.

இவ்விரண்டறமும் ஒருங்குடையார்க்கல்லது ஒன்றேயுடையார்க்கு அதனாற் பயனில்லையாகலின், கொல்லாமையு முடன்கூறினார். இப்பேரருளுடையான் மறுமைக்கண் தேவரின் மிக்கானு மென அப்பயனது பெருமை கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் ஊனுண்ணாமைய துயர்ச்சி கூறப்பட்டது. (கo)

---

## அதி. உஎ—தவம்

[அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயினிலை நிற்றலும், மாரியினும் பனியிலும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றாற் றம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்து, பிற உயிர்களை யோம்புதல். புலான் மறுத்து உயிர்கண்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின், இது புலான்மறுத்தலின் பின் வைக்கப்பட்டது.]

உ௬௧. உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

(இ - ள்.) தவத்திற்கு உரு-தவத்தின் வடிவு; உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண்செய்யாமை அற்றே-உண்டிசுருக்கன் முதலியவற்றால் தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்தலும் தாம்பிற உயிர்கட்குத் துன்பஞ் செய்யாமையுமாகிய அவ்வளவிற்று.

மற்றுள்ளனவெல்லாம் இவற்றுள்ளே அடங்குதலின், 'அற்றே' எனத் தேற்றேகாரங் கொடுத்தார். 'தவத்திற் குருவற்' றென்பது "யானையது கோடு கூரி" தென்பதனை யானைக்குக் கோடு கூரி தென்றாற்போல ஆறுவதன் பொருட்கண் நான்காவது வந்த மயக்கம். இதனால் தவத்த திலக்கணங் கூறப்பட்டது. (க)

உ௬௨. தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது.

**(இ - ள்.)** தவமும் தவம் உடையார்க்கு ஆகும் - பயனேயன் றித் தவந்தானும் உண்டாவது முற்றவ முடையார்க்கே; அதனை அஃது இலார் மேற்கொள்வது அவம்-ஆதலான் அத் தவத்தை அம் முற்றவமில்லாதார் முயல்வது பயனின் முயற்சியாம்.

பரிசயத்தால் அறிவும் ஆற்றலு முடையராய் முடிவு போக்க லின் 'தவமுடையார்க் காகு' மென்றும், அஃதிலாதார்க்கு அவை யின்மையின் முடிவு போகாமையின் 'அவ'மா மென்றுங் கூறினார். (உ)

உ௬௩. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.

(இ - ள்.) மற்றையவர்கள்-இல்லறத்தையே பற்றி நிற்பார்; துறந்தார்க்குத் துப்புரவு வேண்டித் தவம் மறந்தார் கொல்-துறந் தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவலை விரும்பித் தாந் தவஞ் செய்தலை மறந்தார்போலும்!

'துப்புரவு' அனுபவிக்கப்படுவன. "வேண்டிய வேண்டியாங் கெய்தற்"* பயத்ததாகலின் யாவராலுஞ் செய்யப்படுவதாய தவத் தைத் தாஞ்செய்யுந் தானத்தின்மேல் விருப்ப மிகுதியான் 'மறந் தார்போலு' மெனவே, தானத்தின் தவம் மிக்கதென்பது பெற்றாம். (௩)

உ௬௪. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.

* திருக்குறள் - உ௬௫.

(இ - ள்.) ஒன்னார்த் தெறலும்-தம் அறத்திற்குப் பகையாய் அழிவு செய்தாரைக் கெடுத்தலும்; உவந்தாரை ஆக்கலும்-அதனை யுவந்தாரை உயர்த்தலுமாகிய இவ்விரண்டையும்; எண்ணின்தவத் தான் வரும்-தவஞ் செய்வார் நினைப்பராயின், அவர் தவவலியான் அவை அவர்க் குளவாம்.

முற்றத்துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமையின், தவத்திற்கேற்றி யுரைக்கப்பட்டது. 'எண்ணி' னென்றதனான், அவர்க்கு அவை யெண்ணுமை இயல்பென்பது பெற்றாம். ஒன்னார் பெரியராயினும், உவந்தார் சிறியராயினும், கேடு மாக்கமும் நினைந்த துணையானே வந்து நிற்குமெனத் தவஞ் செய்வார் மேலிட்டுத் தவத்தினதாற்றல் கூறியவாறு. (ச)

உகூரு. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

(இ - ள்.) வேண்டிய வேண்டியாங்கு எய்தலால்-முயன்றால் மறுமைக்கட் டாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால்; செய்தவம்ஈண்டு முயலப்படும்-செய்யப்படுவதாய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும்.

'ஈண்' டென்பதனான் மறுமைக்கணென்பது பெற்றாம். மேற்கதி.* வீடுபேறுகள் தவத்தானன்றி எய்தப்படா வென்பதாம். இவை நான்குபாட்டானும் தவத்தது சிறப்புக் கூறப்பட்டது. (ரு)

உகூகூ. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.

(இ - ள்.) தம்கருமம் செய்வார் தவம் செய்வார்-தங்கருமஞ் செய்வாராவார் துறந்து தவத்தைச் செய்வார்; மற்று அல்லார் ஆசையுள் பட்டு அவம் செய்வார் - அவரை யொழிந்த பொருளின்பங்களைச் செய்வார் அவற்றின்கணுசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடு செய்வார்.

அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின்வேறாயவுடற்கு வருத்தம் வருமென்றொழியாது தவத்தினைச் செய்ய, பிறப்புப்பிணி மூப்பிறப்புக்களான் அநாதியாகத் துன்பமெய்தி வருகின்ற உயிர், ஞானம் பிறந்து வீடு பெறுமாகலின், தவஞ்செய்வாரைத் 'தங்கருமஞ் செய்வா' ரென்றும், கணத்துள் அழிவதாய சிற்றின்பத்தின் பொருட்டுப் பல பிறவியுந் துன்புறத் தக்க பாவஞ் செய்து

* இந்திரன் முதலிய இறையவர் பதங்கள்.

கோடலின், அல்லாதாரை 'அவஞ் செய்வா' ரென்றுங் கூறினர். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. (கூ)

உகூஎ. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(இ - ள்.) சுடச் சுடரும் பொன்போல் - தீயின்கணோடும் பொன்னுக்கு அது சுடச் சுடத் தன்னோடு கலந்த குற்ற நீங்கி ஒளி மிகுமாறுபோல; நோற்கிற்பவர்க்குத் துன்பம் சுடச்சுட ஒளிவிடும் - தவஞ்செய்ய வல்லார்க்கு அதனன் வருந் துன்பம் வருத்த வருத்தத் தம்மொடு கலந்த பாவம் நீங்கி ஞான மிகும்.

'சுடச்சுடரும் பொன்போ' லென்றாராயினும், கருத்துநோக்கி இவ்வாறுரைக்கப்பட்டது. ஒளிபோலப் பொருள்களை விளக்கலின் 'ஒளி' யென்றார். (எ)

உகூஅ. தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(இ - ள்.) தன் உயிர் தாள் அறப் பெற்றானை - தன்னுயிரைத் தான் தனக்குரித்தாகப் பெற்றவனை; ஏனைய மன்னுயிர் எல்லாம் தொழும் - அது பெறாதனவாகிய மன்னுயிர்களெல்லாம் தொழும்.

தனக்குரித்தாதல் தவமாகிய தன் கருமஞ் செய்தல். அதனினூங்குப் பெறுதற்கரிய தின்மையின், 'பெற்றானை' யென்றார். அது பெறாதன' வென்றது ஆசையுட்பட்டு அவஞ்செய்யு முயிர்களை, சாபமும் அருளுமாகிய இரண்டாற்றலு முடைமையின் 'தொழு' மென்றார். (அ)

உகூகூ. கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

(இ - ள்.) கூற்றம் குதித்தலும் கைகூடும் - கூற்றத்தைக் கடத்தலும் உண்டாவதாம்; நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு - தவத்தான் வரும் ஆற்றலைத் தலைப்பட்டார்க்கு.

சிறப்பும்மை அது கூடாமை விள்க்கிற்று; 'மன்னுயிரெல்லாந் தொழுதலேயன்றி இதுவுங் கைகூடுமென எச்சவும்மையாக உரைப்பினும் அமையும் 'ஆற்றல்' சாப வருள்கள், இவை நான்கு பாட்டானுந் தவஞ் செய்வாரது உயர்ச்சி கூறப்பட்டது. (கூ)

உஎ௦. இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(இ - ள்.) இலர் பலராகிய காரணம் - உலகத்துச் செல்வர்கள் சிலராக நல்கூர்வார் பலராதற்குக் காரணம் யாதெனின்; நோற்பார் சிலர் நோலாதவர் பலர்-அது தவஞ் செய்வார்சிலராக அது செய்யாதார் பலராதல்.

செல்வ நல்குர வென்பன ஈண்டறிவினது உண்மையின்மைகளையும் குறித்து நின்றன; என்னே? "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை—பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்"* என்றாராகலின். 'நோற்பார் சில' ரெனக் காரணங் கூறினமையான் காரியம் வருவித்துரைக்கப்பட்டது. தவஞ் செய்யாதார்க்கு இம்மையின்பமும் இல்லையென இதனால் அவரது தாழ்வு கூறப்பட்டது. (க0)

———

## அதி. உஅ—கூடாவொழுக்கம்

[அஃதாவது, தாம் விட்ட காம இன்பத்தை உரனின்மையிற் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாய தீயவொழுக்கம். அது விலக்குதற்கு இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.]

உஎக. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
　　ஐந்தும் அகத்தே நகும்.

(இ - ள்.) வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் - வஞ்சம் பொருந்திய மனத்தை யுடையவனது மறைந்த ஒழுக்கத்தை; பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும் - உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற பூதங்களைந்தும் கண்டு தம்முள்ளே நகும்.

காமம் தன் கண்ணே தோன்றிநலியாநிற்கவும் அதனதின்மை கூறிப் புறத்தாரை வஞ்சித்தலின் 'வஞ்சமன' மென்றும், அந்நலிவு பொறுக்கமாட்டா தொழுகுங் களவொழுக்கத்தைப் 'படிற்றொழுக்க' மென்றும், உலகத்துக் களவுடையார் பிறரறியாமற் செய்வனவற்றிற்கு ஐம்பெரும் பூதங்கள் சான்றாகலின், அவ்வொழுக்கத்தையும் அவன் மறைக்கின்றவாற்றையும் அறிந்து அவனறியாமல் தம்முள்ளே நகுதலின், 'அகத்தே நகு' மென்றுங் கூறினார். செய்த குற்றம் மறையாதாகலின், அவ் வொழுக்கம் ஆகாதென்பது கருத்து. (க)

உஎஉ. வானுயர் தோற்றம் எவன்செய்யுந் தன்னெஞ்சந்
　　தானறி குற்றப் படின்.

---

* நாலடியார்—உசுக.

(இ - ள்.) வான் உயர் தோற்றம் எவன் செய்யும் - ஒருவனுக்கு வான்போலுயர்ந்த தவவேடம் என்ன பயனைச் செய்யும்; தான் அறி குற்றம் தன் நெஞ்சம் படின் - தான் குற்றமென்றறிந்த அதன் கண்ணே தன்னெஞ்சு தாழுமாயின்.

'வானுயர் தோற்ற' மென்பது "வான்றோய் குடி"* என்றாற் போல இலக்கணை வழக்கு. அறியாது செய்த குற்றமல்லது அறிந்து வைத்துச்செய்த குற்றம் கழுவப்படாமையின், நெஞ்சு குற்றத்த தாயே விடும்; விடவே, நின்ற வேடமாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலேயல்லது வேறு பயனில்லை யென்பதாம். (௨)

௨௭௩. வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

(இ - ள்.) வலி இல் நிலைமையான் வல்லுருவம் மனத்தைத் தன் வழிப்படுத்தும் வலியில்லாத இயல்பினையுடையான் வலியுடையார் வேடத்தைக்கொண்டு தான் அதன் வழிப்படுதல்; பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந் தற்று - பசு காவலர் கடியாமற் புலியின் தோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற்போலும்.

இல்பொருளுவமை. 'வலியி னிலைமையா' னென்ற அடையானும், 'மேய்ந்தற்' றென்னுந் தொழிலுவமையானும், வல்லுருவத்தோடு மனவழிப்படுத லென்பது பெற்றும். காவலர் கடியாமை புலி புற்றின்ற தென்பதனானும், அச்சத்தானுமாம்; ஆகவே, வல்லுருவங் கோடற்குப் பயன் அன்ன காரணங்களான் உலகத்தார் அயிராமையாயிற்று. இவ்வாறு தனக்குரிய இல்லாளையுந் துறந்து வலியுமின்றிப் பிறர் அயிராத வல்லுருவமுங் கொண்டு நின்றவன் மனவழிப்படுதலாவது தன் மனமோடிய வழியே ஓடி மறைந்து பிறர்க்குரிய மகளிரை விழைதலாம். அவ்வாறுதல், பெற்றம் தனக்குரிய புல்லை விட்டுப் பிறர்க்குரிய 'பைங்கூழை மேய்ந் தாற்போலு' மென்ற உவமையான் அறிக. (௩)

௨௭௪. தவமறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

(இ - ள்.) தவம் மறைந்து அல்லவை செய்தல் - அவ்வலியில் நிலைமையான் தவவேடத்தின்கண்ணே மறைந்து நின்று தவமல்லவற்றைச் செய்தல்; வேட்டுவன் புதல் மறைந்து புள்சிமிழ்த் தற்று - வேட்டுவன் புதலின்கண்ணே மறைந்துநின்று புட்களைப் பிணித்தாற்போலும்.

* நாலடியார் — ௧௪௨.

'தவம்' ஆகுபெயர். 'தவமல்லவற்றைச் செய்த' லாவது பிறர்க்குரிய மகளிரைத் தன் வயத்த தாக்குதல். இதுவும் இத் தொழிலுவமையான் அறிக. (சு)

உஎரு. பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென் றேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) பற்று அற்றேம் என்பார் படிற்றொழுக்கம்-தம்மைப் பிறர் நன்கு மதித்தற்பொருட்டு யாம் பற்றற்றே மென்று சொல்வாரது மறைந்த வொழுக்கம்; எற்று எற்று என்று ஏதம் பலவும் தரும் - அப்பொழுது இனிதுபோலத் தோன்றுமாயினும், பின் என் செய்தேம் என் செய்தே மென்று தாமே இரங்கும் வகை, அவர்க்குப் பல துன்பங்களையுங் கொடுக்கும்.

சொல்லளவல்லது பற்றறுமையின், 'பற்றற்றே மென்பா' ரென்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாய இன்பத்தின் பொருட்டுப் பெரிதாய் நெடுங்கால நிற்பதாய பாவத்தைச் செய்வார் அதன் விளைவின்கண் "அந்தோ வினையேயென் றழுவ"* ராகலின் 'எற்றெற்' றென்றுங் கூறினார். இவை ஐந்து பாட்டானும் கூடா வொழுக்கத்தின் இழுக்கம் கூறப்பட்டது. (ரு)

உஎசு. நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணா ரில்.

(இ - ள்.) நெஞ்சின் துறவார்-நெஞ்சாற் பற்றறாது வைத்து; துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின் - பற்றற்றார் போன்று தானஞ் செய்வாரை வஞ்சித்து வாழுமவர்போல்; வன்கணார் இல்- வன் கண்மையையுடையார் உலகத்திலில்லை.

'தானஞ் செய்வாரை வஞ்சித்த'லாவது யாம் மறுமைக்கண் தேவராதற் பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்ன தீதுமென்று அறியா தீந்தாரை அது கொண்டு இழிபிறப்பின ராக்குதல். அவர் இழிபிறப்பினராதல், "அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினாலலறு முந்நீர்த்—தடங்கடல் நடுவுள் தீவு பலவுள அவற்றுள் தோன்றி—யுடம்பொடு முகங்களொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர்—மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்னரேறே"† என்பதனானறிக. தமக்கு ஆவன செய்தார்க்கு ஆகாதன விளைத்தலின் 'வன்கணாரில்' லென்றார். (சு

* சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம்—உஎ.

† சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம்—உசச.

உஎஎ. புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

(இ - ள்.) குன்றிப் புறம் கண்டு அனையரேனும் - குன்றியின் புறம்போல வேடத்தாற் செம்மை யுடையராயினும்; குன்றி மூக்கின் அகம் கரியார் உடைத்து அதன் மூக்குப்போல மனம் இருண்டிருப்பாரை உடைத்து உலகம்.

'குன்றி' ஆகுபெயர். செம்மை கருமை யென்பன பொருளின்கண் நிறத்தை விட்டுச் செப்பத்தினும் அறியாமையினுஞ் சென்றன வாயினும், பண்பா லொத்தலின், இவைபண்புவமை; 'கூழின் மலிமனம் போன்றிரு ளாநின்ற கோகிலமே'* என்பது மது. (எ)

உஎஅ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(இ - ள்.) மாசு மனத்தது ஆக-மாசு தம் மனத்தின்கண்ணதாக; மாண்டார் நீராடி - பிறர்க்குத் தவத்தான் மாட்சிமையுடையராய் நீரின் மூழ்கிக்காட்டி; மறைந்து ஒழுகும் மாந்தர்பலர்-தாம் அதன்கண்ணே மறைந்து செல்லும் மாந்தர் உலகத்துப்பலர்-

'மாசு' காம வெகுளி மயக்கங்கள். அவை போதற்கன்றி 'மாண்டா'ரென்று பிறர் கருதுதற்கு நீராடுதலான், அத்தொழிலை அவர் மறைதற்கிடனுக்கினர். இனி 'மாண்டார் நீராடி' யென்பதற்கு மாட்சிமைப்பட்டாரது நீர்மையை யுடையரா யென உரைப்பாருமுளர். † இவை மூன்று பாட்டானும் அவ்வொழுக்கமுடையாரது குற்றமும், அவரை யறிந்து நீக்கல் வேண்டுமென்பதும் கூறப்பட்டன. (அ)

உஎகூ. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

(இ - ள்.) கணை கொடிது யாழ் கோடு செவ்விது - அம்பு வடிவாற் செவ்விதாயினும் செயலாற் கொடிது; யாழ் கோட்டால் வளைந்ததாயினும் செயலாற் செவ்விது; ஆங்கு அன்ன வினைபடுபாலால் கொளல் - அவ்வகையே தவஞ் செய்வோரையுங் கொடியர் செவ்வியரென்பது, வடிவாற் கொள்ளாது, அவர் செயல்பட்ட கூற்றானே அறிந்துகொள்க.

கணைக்குச் செயல் கொலை. யாழுக்குச் செயல் இசையாலின்பம் பயத்தல். அவ்வகையே செயல் பாவமாயிற் 'கொடிய'

---

* திருச்சிற்றம்பலக் கோவையார் - கூஉஉ.

† மணக்குடவர்.

ரெனவும் அறமாயிற் 'செவ்விய' ரெனவுங் கொள்க வென்பதாம். இதனுன் அவரை யறியுமாறு கூறப்பட்டது. (கூ)

உஅ0. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழிந்து விடின்.

(இ-ள்.) மழித்தலும் நீட்டலும் வேண்டா - தவஞ்செய் வார்க்குத் தலைமயிரை மழித்தலுஞ் சடையாக்கலுமாகிய வேடமும் வேண்டா; உலகம் பழித்தது ஒழித்து விடின் - உயர்ந்தோர் தவத்திற்காகாதென்று குற்றங்கூறிய ஒழுக்கத்தைக் கடிந்துவிடின்.

பறித்தலும் மழித்தலு ளடங்கும். 'மழித்த' லென்பதே தலைமயிரை உணர்த்தலின், அது கூருராயினர். இதனுற் கூடா வொழுக்க மில்லாதார்க்கு 'வேடமும் வேண்டா' வென அவரது சிறப்புக் கூறப்பட்டது. (க0)

———

## அதி. உகூ—கள்ளாமை

[அஃதாவது, பிறருடைமையாயிருப்ப தியாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ளக் கருதாமை. கருதுதலும் செய் தலோ டொத்தலின். 'கள்ளாமை' யென்ருர் இல்வாழ்வார்க் காயின் தமரொடு விளையாட்டு வகையால்அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த பொருள்களை அங்ஙனம் கொள்ளினும் அமையும்; துறந்தார்க்காயின் அதனைக் கருதிய வழியும் பெரியதோ ரிழுக்காம் ஆகலின், இது துறவறமாயிற்று. புறத் துப் போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற் பாலதாய அவர் மனம் அஃதொழிந்து புறத்தே போந்து பஃறலைப்பட்டு உடம்பின்பொருட்டுப் பொருளை நோக்கு தலே யன்றி, அது தன்னையும் வஞ்சித்துக்கொள்ளக் கருது தல் அவர்க்குப் பெரியதோ ரிழுக்காதல் அறிக. இவ்வாறு வாய்மை முதற் கொல்லாமை யீருய நான்கதிகாரத்திற்கும் ஒக்கும். பொருள் பற்றி நிகழும் குற்றத்தை விலக்குகின்ற தாகலின், இது காமம்பற்றி நிகழ்வதாய கூடாவொழுக்கத் தின் பின் வைக்கப்பட்டது.]

உஅக. எள்ளாமை வேண்டுவா னென்பான் எனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.

(இ-ள்.) எள்ளாமை வேண்டுவான் என்பான் - வீட்டினை இகழாது விரும்புவான் இவனென்று தவத்தோரான் நன்கு மதிக் கப்படுவான்; எனைத்தொன்றும் கள்ளாமை தன் நெஞ்சு காக்க -

யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக்கொள்ளக் கருதா வகை தன் நெஞ்சினைக் காக்க.

எள்ளா தென்னும் எதிர்மறை வினையெச்சம் 'எள்ளாமை' யெனத் திரிந்துநின்றது. 'வீட்டினை யிகழுத'லாவது காட்சியே அளவை யாவதென்றும், நிலம், நீர், தீ, வளியெனப் பூதம் நான்கே யென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தால்தோன்றிப் பிரிவான் மாய்வதாய உடம்பின் கண்ணே அறிவு மதுவின்கண் களிப்புப் போல வெளிப்பட் டழியுமென்றும், இறந்தவுயிர் பின் பிறவா தென்றும், இன்பமும் பொருளும் ஒருவனுற் செய்யப்படுவன வென்றுஞ் சொல்லும் உலோகாயத முதலிய மயக்க நூல்களைத் தெளிந்து, அவற்றிற் கேற்ப ஒழுகுதல். ஞானத்திற் கேதுவாய மெய்ந்நூற் பொருளையேனும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனை வஞ்சித்துக் கொள்ளின், அதுவுங் களவா மாகலின், 'எனைத் தொன்று' மென்ருர். நெஞ்சு கள்ளாமற் காக்கவெனவே, துறந் தார்க்கு விலக்கப்பட்ட கள்ளுதல் கள்ளக்கருதுத லென்பது பெற்ரும். (க)

உஅஉ. உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வே மெனல்.

(இ - ள்.) உள்ளத்தால் உள்ளலும் தீதே-குற்றங்களைத் தந் நெஞ்சாற் கருதுதலும் துறந்தார்க்குப் பாவம்; பிறன் பொருளைக் கள்ளத்தால் கள்வேம் எனல்-ஆதலால் பிறனெருவன் பொருளை அவன் அறியாவகையால் வஞ்சித்துக்கொள்வேமென்று கருதற்க.

'உள்ளத்தா' லென வேண்டாது கூறினர், அவருள்ளம் ஏனையா ருள்ளம்போலாது சிறப்புடைத்தென்பது முடித்தற்கு. 'உள்ளலு' மென்பது இழிவு சிறப்பும்மை. அல் விகுதி வியங்கோ ளெதிர்மறைக்கண் வந்தது. இவை இரண்டு பாட்டானும் இந் நடைக்குக் களவாவது இதுவென்பதூஉம் அது கடியப்படுவதென் பதூஉங் கூறப்பட்டன. (உ)

உஅ௩. களவினு லாகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும்.

(இ - ள்.) களவினுல் ஆகிய ஆக்கம் - களவினு லுளதாகிய பொருள்; ஆவதுபோல அளவு இறந்து கெடும்-வளர்வதுபோலத் தோன்றித் தன் எல்லையைக் கடந்து கெடும்.

ஆக்கத்திற் கேதுவாகலின், 'ஆக்க' மெனப்பட்டது. 'எல்லை யைக் கடந்து கெடுத'லாவது தான் போங்காற் பாவத்தையும் பழியையும் நிறுத்திச் செய்த அறத்தையும் உடன்கொண்டுபோதல்.

அளவறிந்தென்று பாடமோதி,அவர் பயன்கொள்ளும் அளவறிந்து அவ்வளவிற்கு உதவாது கெடுமென் றுரைப்பாரு முளர். (௩)

உ௮௪. களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

(இ - ள்.) களவின்கண் கன்றிய காதல் - பிறர் பொருளை வஞ்சித்துக் கோடற்கண்ணே மிக்க வேட்கை; விளைவின்கண் வீயா விழுமம் தரும் - அப்பொழுது இனிதுபோலத் தோன்றித் தான் பயன் கொடுக்கும்பொழுது தொலையாத இடும்பையைக் கொடுக்கும்,

கன்றுதலான் எஞ்ஞான்றும் அக் களவையே பயில்வித்து அதனாற் பாவமும் பழியும் பயந்தே விடுதலின், 'வீயா விழுமந் தரு' மென்றார். இவை இரண்டு பாட்டானும் அது கடியப்படுதற்குக் காரணங் கூறப்பட்டது. (௪)

உ௮௫. அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(இ - ள்.) அருள் கருதி அன்பு உடைய ராதல்-அருளினது உயர்ச்சியை யறிந்து அதன்மேல் அன்புடையரா யொழுகுதல்; பொருள் கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார்கண்இல்-பிறர்பொருளை வஞ்சித்துக்கொள்ளக் கருதி அவரது சோர்வு பார்ப்பார்மாட்டு உண்டாகாது.

தமக்குரிய பொருளையும் அதனது குற்றம் நோக்கித் துறந்து போந்தவர், பின் பிறர்க்குரிய பொருளை நன்கு மதித்து அதனை வஞ்சித்துக் கோடற்கு அவரது சோர்வு பார்க்கும் மருட்சியரானல், அவர்மாட்டு, உயிர்கண்மே லருள்செய்தல் நமக்குறுதியென்றறிந்து அவ் வருளின் வழுவாதொழுகுந் தெருட்சி கூடாதென்பதாம். (௫)

உ௮௬. அளவின்கண் நின்றொழுக லாற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.

(இ - ள்) அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார் - உயிர் முதலியவற்றை யளத்தலாகிய நெறியின்கணின்று அதற்கேற்ப ஒழுகமாட்டார்; களவின்கண் கன்றிய காதலவர் - களவின் கண்ணே மிக்க வேட்கையை யுடையார்.

'உயிர் முதலியவற்றை யளத்த'லாவது காட்சி முதலாகச் சொல்லப்பட்ட அளவைகளான் உயிர்ப்பொருளையும்' அதற்கு அநாதியாய் வருகின்ற நல்வினை தீவினைக் குற்ற விளைவுகளையும், அவற்றான் அது நாற்கதியுட் பிறந்திறந்து வருதலையும், அது

செய்யாமல் அவற்றைக் கெடுத்தற் குபாயமாகிய யோக ஞானங் களையும் அவற்ருன் அஃதெய்தும் வீட்டினையும் அளந்து உள்ள வாறறிதல். இதனை ஆருகதர் தருமத்தியான மென்ப. 'அதற் கேற்ப ஒழுகுத'லாவது அவ்வளக்கப்பட்டனவற்றுள் தீயனவற் றின் நீங்கி நல்லனவற்றின் வழி நிற்றல். (சு)

உஅஎ. களவென்னுங் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்க ணில்.

(இ - ள்.) களவு என்னும் கார் அறிவாண்மை-களவென்று சொல்லப்படுகின்ற இருண்ட அறிவினை யுடையராதல்; அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் இல்-உயிர் முதலியவற்றைஅளத்த லென்னும் பெருமையை விரும்பினுர் கணில்லை.

இருள் - மயக்கம். காரியத்தைக் காரணமாக உபசரித்துக் 'களவென்னுங் காரறி வாண்மை' யென்றும், காரணத்தைக்காரிய மாக்கி 'அளவென்னு மாற்ற' லென்றுங் கூறினுர் களவுந் துறவும் இருளு மொளியும் போலத் தம்முண் மாருகலின், ஒருங்கு நில்லா வென்பது இவை மூன்று பாட்டானும் கூறப்பட்டது. (எ)

உஅஅ. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சில் கரவு.

(இ - ள்.) அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம்போலநிற்கும்-அவ்வளத்தலையே பயின்றவர் நெஞ்சத்து அறம் நிலைபெற்ருற் போல நிலைபெறும்; களவு அறிந்தார் நெஞ்சில் கரவு - களவையே பயின்றவர் நெஞ்சத்து வஞ்சனை.

உயிர் முதலியவற்றை அளந்தறிந்தார்க்குத் துறவறஞ் சலி யாது நிற்குமென்பது இவ்வுவமையாற் பெற்ரும். களவோடு மாறின்றி நிற்பது இதனுற் கூறப்பட்டது. (அ)

உஅகூ. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்ரு தவர்.

(இ - ள்.) அளவு அல்ல செய்தாங்கே வீவர் - அவ்வளவல் லாத தீய நினைவுகளை நினைத்தபொழுதே கெடுவர்; களவு அல்ல மற்றைய தேற்ருதவர் - களவல்லாத பிறவற்றை அறியாதவர்.

'தீய நினைவுக'ளாவன பொருளுடையாரை வஞ்சிக்குமாறும் அவ்வஞ்சனையால் அது கொள்ளுமாறும், கொண்டவதனுல் தாம் புலன்களை நுகருமாறும் முதலாயின. நினைத்தலுஞ் செய்தலா கலிற் 'செய்' தென்றும், அஃது உள்ள அறங்களைப் போக் கிக் கரந்த சொற் செயல்களைப் புகுவித்து அப்பொழுதே

கெடுக்குமாகலின் 'ஆங்கே வீவ' ரென்றுங் கூறினர். 'மற்றைய' வாவன துறந்தார்க்கு உணவாக ஓதப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலாயினவும், இல்வாழ்வார் செய்யுந் தானங்களுமாம். தேற்ருமை அவற்றையே நுகர்ந்து அவ்வளவான் நிறைந்திருத்தலை அறியாமை. இதனற் கள்வார் கெடுமாறு கூறப்பட்டது. (கூ)

உகூ0. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

(இ - ள்.) கள்வார்க்கு உயிர்நிலை தள்ளும்-களவினைப் பயில்வார்க்குத் தம்மின் வேறல்லாத உடம்புந் தவறும்; கள்ளார்க்குப் புத்தே ளுலகு தள்ளாது - அது செய்யாதார்க்கு நெடுஞ் சேணதாகிய புத்தேளுலகுந் தவருது.

உயிர்நிற்றற்கிடனுகலின், 'உயிர்நிலை' யெனப்பட்டது. சிறப்பும்மைக ளிரண்டும் விகாரத்தாற் ருெக்கன. இம்மையினும் அரசனு லொறுக்கப்படுதலின் உயிர்நிலையுந் தள்ளு மென்றும், மறுமையினுந் தேவராதல் கூடுதலிற் புத்தேளுலகுந் தள்ளாதென்றுங் கூறினர். "மற்றது—தள்ளினுந் தள்ளாமை நீர்த்து"* என்புழியும் தள்ளுதல் இப்பொருட்டாத லறிக. இதற்குப் பிறவாறுரைப்பாரு முளர். இதனுல் இருவர் பயனும் ஒருங்கு கூறப்பட்டது. (க0)

---

## அதி. கூ0—வாய்மை

[அஃதாவது, மெய்யினது தன்மை. பெருப்பான்மையும் காமமும் பொருளும்பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கலின், இது கூடாவொழுக்கங், கள்ளாமைகளின் பின் வைக்கப்பட்டது.]

உகூக. வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

(இ - ள்.) வாய்மை எனப்படுவது யாது எனின்-மெய்ம்மை, யென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின்; தீமை யாதொன்றும் இலாத சொலல் - அது பிறிதோ ருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல்.

தீமை யாதொன்று மிலாத வென இயையும். ' எனப்படுவ' தென்பது "ஊரெனப் படுவ துறையூர்" என்ருற்போல நின்றது, இதனுன் நிகழ்ந்தது கூறலென்பது நீக்கப்பட்டது. அதுதானும்

* திருக்குறள்—ருகூகூ.

தீங்கு பயவாதாயின் மெய்ம்மையாம் ; பயப்பிற் பொய்ம்மையா மென்பது கருத்து. (க)

உகூஉ. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

(இ-ள்.) புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின்-பிறர்க்குக் குற்றந் தீர்ந்த நன்மையைப் பயக்குமாயின் ; பொய்ம்மையும் வாய்மை யிடத்த பொய்ம்மைச் சொற்களும் மெய்ம்மைச்சொற்களின் பாலவாம்.

'குற்றந் தீர்ந்த நன்மை' அறம் ; அதனைப் பயத்தலாவது கேடாதல் சாக்காடாதல் எய்த நின்றதோருயிர் அச் சொற்களின் பொய்ம்மையானே அதனினீங்கி இன்புறுதல். நிகழாதது கூறலும், நன்மை பயவாதாயிற் பொய்ம்மையாம் ; பயப்பின் மெய்ம்மையா மென்பது கருத்து. இவை இரண்டு பாட்டானும் தீங்கு பயவாத நிகழ்ந்தது கூறலும், நன்மை பயக்கும் நிகழாதது கூறலும், மெய்ம்மை யெனவும், நன்மை பயவாத நிகழாததுகூறலும், தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்ம்மை யெனவும், அவற்றதிலக்கணங் கூறப்பட்டது. (உ)

உகூங. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(இ-ள்.) தன் நெஞ்சு அறிவது பொய்யற்க-ஒருவன் தன் நெஞ்சறிவதொன்றனைப் பிறரறிந் திலரென்று பொய்யாதொழிக ; பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச் சுடும்-பொய்த்தானாயின், அதனை அறிந்த தன் நெஞ்சே அப்பாவத்திற்குக் கரியாய் நின்று; தன்னை அதன் பயனாய துன்பத்தை எய்துவிக்கும்.

நெஞ்சு கரியாதல், "கண்டவரில்லென உலகத்து ளுணராதார்—தங்காது தகைவின்றித்தாஞ் செய்யும் வினைகளுள்—நெஞ்சறிந்த கொடியவை மறைப்பவு மறையாவா—நெஞ்சத்திற் குறுகிய கரியில்லையாகலின்"* என்பதனானும் அறிக. பொய் மறையாமையின், அது கூறலாகாதென்பது இதனாற் கூறப்பட்டது. (ங)

உகூச. உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்.

(இ-ள்.) உள்ளத்தால் பொய்யாது ஒழுகின்-ஒருவன் தன்னுள்ளத்திற் கேற்பப் பொய்கூறு தொழுகுவனாயின் ; உலகத்

* கலித்தொகை, நெய்தல்—அ.

ார் உள்ளத்துள் எல்லாம் உளன் - அவன் உயர்ந்தோ ருள்ளத் ன்கணெல்லாம் உளனும்.

'உள்ளத்தா' லென்பது வேற்றுமை மயக்கம். 'பொய் கூறு தொழுகுத' லாவது மெய்கூறி யொழுகுதல். அவனதறத்தின தருமை நோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்ப ரென்பதாம். இதனல் இம்மைப்பயன் கூறப்பட்டது. (௪)

உகரு. மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை.

(இ-ள்.) மனத்தொடு வாய்மை மொழியின் - ஒருவன் தன் மனத்தொடு பொருந்த வாய்மையைச் சொல்வானயின்; தவத்தொடு தானம் செய்வாரின் தலை - அவன் தவமுந் தானமும் ஒருங்கு செய்வாரினுஞ் சிறப்புடையன்.

'மனத்தொடு பொருந்துதல்' மனத்திற்கேறுதல், புறமாகிய மெய்யாற்செய்யுமவற்றினும் அகமாகிய மனமொழிகளாற்செய்யு மது பயனுடைத் தென்பதாம். (ரு)

உகசு. பொய்யாமை யன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும்.

(இ-ள்.) பொய்யாமை அன்ன புகழில்லை - ஒருவனுக்கு இம்மைக்குப் பொய்யாமையை யொத்த புகழ்க் காரணமில்லை; எய்யாமை எல்லா அறமும் தரும் - மறுமைக்கு மெய்வருந்தாமல் அவனுக்கு எல்லா அறங்களையுந் தானே கொடுக்கும்.

'புகழ்', ஈண்டு ஆகுபெயர். இல்லறத்திற்குப் பொருள் கூட்டல் முதலியவற்றானும், துறவறத்திற்கு உண்ணுமை முதலிய வற்றானும் வருந்தல் வேண்டுமன்றே; அவ் வருத்தங்கள் புகுதா மல் அவ்விருவகைப் பயனையுந் தானே தருமென்பார், 'எய்யாமை எல்லா அறமுந் தரு' மென்றார். (சு)

உகஎ. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(இ-ள்.) பொய்யாமை பொய்யாமை ஆற்றின் - ஒருவன் பொய்யாமையையே பொய்யாமையையே செய்ய வல்லனுயின்; பிற அறம் செய்யாமை செய்யாமை நன்று - அவன் பிற அறங் களைச் செய்யாமையே செய்யாமையே நன்று.

அடுக்கிரண்டனுள், முதலது இடைவிடாமை மேற்று; ஏனை யது துணிவின் மேற்று, பல அறங்களையும் மேற்கொண்டு செய்தற்

கருமையாற் சில தவறிற் குற்றப்படுதலின், அவையெல்லாவற்றின் பயனையுந் தானே தரவற்றாய இதனையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நன்றென்பார், 'செய்யாமை செய்யாமை நன்' றென்றார். இதனை இவ்வாறன்றிப் பொய்யாமையைப் பொய்யாமற் செய்யிற் பிறவறஞ் செய்கை நன்றெனப் பொழிப்பாக்கிப், பொய்கூறிற் பிறவறஞ் செய்கை நன்றாகாதென்பது அதனாற் போந்த பொருளாக்கி உரைப்பாருமுளர்.* பிறவறங்களெல்லாந் தரும் பயனைத் தானே தரும் ஆற்றலுடைத்தென மறுமைப்பயனது மிகுதி இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது. (எ)

உ௯அ. புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்.

(இ - ள்.) புறம் தூய்மை நீரான் அமையும்-ஒருவனுக்கு உடம்பு தூய்தாந்தன்மை நீரானே யுண்டாம்; அகம் தூய்மை வாய்மையான் காணப்படும் - அதுபோல மனந் தூய்தாந் தன்மை வாய்மையா னுண்டாம்.

காணப்படுவதுள்ள தாகலின் உண்டாமென் றுரைக்கப்பட்டது. உடம்பு தூய்தாதல் வாலாமை நீங்குதல். மனந் தூய்தாதல் மெய்யுணர்தல். புறந்தூய்மைக்கு நீரல்லது காரணமில்லாதாற் போல அகந் தூய்மைக்கு வாய்மையல்லது காரணமில்லையென்றவாறாயிற்று. இதனானே துறந்தார்க்கு இரண்டு தூய்மையும் வேண்டுமென்பதூஉம் பெற்றாம். (அ)

உ௯௯. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

(இ - ள்.) எல்லா விளக்கும் விளக்கு அல்ல - புறத்திருள் கடியும் உலகத்தார் விளக்குகளெல்லாம் விளக்காகா; சான்றோர்க்கு விளக்கு பொய்யா விளக்கே - துறவா னமைந்தார்க்கு விளக்காவது மனத்திருள் கடியும் பொய்யாமையாகிய விளக்கே.

உலகத்தார் விளக்காவன: ஞாயிறு, திங்கள், தீயென்பன. இவற்றிற்குப் போகாத இருள் போகலின், 'பொய்யாவிளக்கே விளக்'கென்றார். அவ் விருளாவது அறியாமை. பொய்யாத விளக்கென்பது குறைந்து நின்றது: பொய் கூறாமையாகிய விளக்கென்றவாறு. இனி, இதற்குக் கல்வி முதலியவற்றான் வரும் விளக்கமெல்லாம் விளக்கமல்ல: அமைந்தார்க்கு விளக்கமாவது பொய்யாமையான்வரும் விளக்கமேயென் றுரைப்பாருமுளர்.† (௯)

---

* மணக்குடவர். † மணக்குடவர்,

௩00. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

(இ - ள்.) யாம் மெய்யாக் கண்டவற்றுள்-யாம்மெய்ந்நூல் களாகக் கண்ட நூல்களுள்; எனைத்தொன்றும் வாய்மையின் நல்ல பிற இல்லை - யாதொரு தன்மையானும் வாய்மையின் மிக்கனவாகச் சொல்லப்பட்ட பிற அறங்களில்லை.

மெய்யுணர்த்துவனவற்றை 'மெய்' யென்றார். அவையாவன: தங்கண் மயக்கமின்மையின் பொருள்களையுள்ளவா றுணரவல்லராய்க்காம வெகுளிக ளின்மையின் அவற்றை யுணர்ந்தவாறே உரைக்கவும் வல்லராய இறைவர், அருளான் உலகத்தார் உறுதி யெய்துதற்பொருட்டுக் கூறிய ஆகமங்கள். அவை யெல்லாவற்றினும் இஃதொப்ப முடிந்ததென்பதாம். இவை மூன்று பாட்டானும் இவ் வறத்தினது தலைமை கூறப்பட்டது. (௧0)

---

## அதி. ௩௧—வெகுளாமை

[அஃதாவது, சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன் மாட்டுளதாய விடத்தும் அதனைச் செய்யாமை இது பொய்ம்மை பற்றி நிகழ்வதாய வெகுளியை விலக்கலின், வாய்மையின் பின் வைக்கப்பட்டது.]

௩0௧. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்.

(இ - ள்.) சினம் செல் இடத்துக் காப்பான் காப்பான்- தன் சினம் பலிக்குமிடத்து அதனை யெழாமல் தடுப்பானே அருளால் தடுப்பானுவான்; அல் இடத்துக் காக்கின் என் காவாக்கால் என் - ஏனைப் பலியாவிடத்து அதனைத் தடுத்தாலென், தடாதொழிந்தாலென்?

'செல்லிடம்' 'அல்லிட' மென்றது தவத்தால் தன்னின் மெலியாரையும் வலியாரையும். வலியார்மேல் காவாவழியும் அதனான் அவர்க்கு வருவதொரு தீங்கின்மையிற் காத்த வழியும் அறனில்லை யென்பார், 'காக்கினென் காவாக்கா லென்' என்றார். இதனான் வெகுளாமைக் கிடங் கூறப்பட்டது. (௧)

௩0௨. செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனின் தீய பிற.

(இ - ள்.) சினம் செல்லா இடத்துத் தீது - ஒருவன் வெகுளி தன்னின் வலியார்மேலெழின் தனக்கே தீதாம்; செல் இடத்தும் அதனின் தீய பிற இல் - மற்றை எளியார்மேலெழினும் அதனின் தீயன பிற இல்லை.

'செல்லாவிடத்துச் சினம்' பயப்பது இம்மைக்கண் அவரான் வரும் ஏதமே; ஏனையது இம்மைக்கட் பழியும் மறுமைக்கட் பாவமும் பயத்தலின், அதனின் தீயன 'பிறவில்லை' யென்றார்; ஓரிடத்து மாகா தென்பதாம். (உ

௩0௩. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்தல் அதனான் வரும்.

(இ - ள்.) யார் மாட்டும் வெகுளியை மறத்தல்-யாவர்மாட்டும் வெகுளியை யொழிக; தீய பிறத்தல் அதனான் வரும் - ஒருவர்க்குத் தீயன வெல்லா முளவாதல் அதனான் வரும் ஆகலான்.

வலியார், ஒப்பார், எளியாரென்னும் மூவர்மாட்டும்ஆகாமையின் 'யார்மாட்டு' மென்றும், மனத்தான் துறந்தார்க்கு ஆகாதனவாகிய தீச் சிந்தைகளெல்லாவற்றையும் பிறப்பித்தலின் 'தீய பிறத்தலதனான் வரு'மென்றுங் கூறினார். (௩)

௩0௪. நகையும் உவகையுங் கொல்லுஞ் சினத்தின்
பகையும் உளவோ பிற.

(இ - ள்.) நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்-துறந்தார்க்கு அருளானுளவாய முகத்தின்கண் நகையையும் மனத்தின்கண் உவகையையுங் கொன்று கொண்டெழுகின்ற சினமேயல்லது; பிற பகையும் உளவோ - அதனிற் பிறவாம் பகைகளும் உளவோ? இல்லை.

துறவாற் புறப்பகை யிலராயினும் உட்பகையாய் நின்று அருண் முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித் துன்பமுமெய்துவித்தலான் அவர்க்குச் சினத்தின் மிக்க பகை யில்லை யாயிற்று. இவை மூன்று பாட்டானும் வெகுளியது தீங்கு கூறப்பட்டது. (௪)

௩0௫. தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்.

(இ - ள்.) தன்னைத்தான் காக்கின் சினம் காக்க-தன்னைத் தான் துன்பமெய்தாமற் காக்க நினைத்தானாயின், தன் மனத்துச் சினம் வாராமற் காக்க; காவாக்கால் சினம் தன்னையே கொல்

லும்-காவானாயின், அச்சினந் தன்னையே கெடுக்குங் கடுந் துன்பங்களை யெய்துவிக்கும்.

"வேண்டிய வேண்டியாங் கெய்தற்"* பயத்ததாயதவத்தைப் பிறர்மேற் சாபம் விடுதற்காக இழந்து, அத் தவத் துன்பத்தோடு பழைய பிறவித் துன்பமும் ஒருங்கெய்துதலின், 'தன்னையே கொல்லு'மென்றார். "கொல்லச்சுரப்பதாங்கீழ்"†என்புழிப்போலக் கொலைச்சொல் ஈண்டுத் துன்பமிகுதி யுணர்த்தி நின்றது. (ரு)

௩௦௬. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.

(இ - ள்.) சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி - சினமென்னும் நெருப்பு; இனம் என்னும் ஏமப் புணையைச் சுடும் - தனக்கு இடமானவரையே யன்றி அவருக்கு இனமாகிய ஏமப் புணையையுஞ் சுடும்.

''சேர்ந்தாரைக்கொல்லி' யென்பது ஏதுப்பெயர்; தான்சேர்ந்த விடத்தைக்கொல்லுந் தொழிலதென்றவாறு. 'சேர்ந்தாரை' யென உயர்திணைப் பன்மைமேல் வைத்து ஏனை நான்குபாலும் தங் கருத்தோடு கூடிய பொருளாற்றலாற் கொண்டார், ஈண்டு உருவகஞ் செய்கின்றது துறந்தார் சினத்தையே யாகலின். சினமென்னு நெருப்பென்ற விதப்பு,‡ உலகத்து நெருப்புச் சுடுவது; தான் சேர்ந்த விடத்தையே; இந் நெருப்புச் சேராத விடத்தையுஞ் சுடுமென்னும் வேற்றுமை தோன்ற நின்றது. ஈண்டின மென்றது முற்றத் துறந்து தவ ஞானங்களாற் பெரியராய்க் கேட்டார்க்கு உறுதிமொழிகளை இனியவாகச் சொல்லுவாரை; உருவக நோக்கிச் 'சுடு' மென்னுந் தொழில் கொடுத்தாராயினும், அகற்றுமென்பது பொருளாகக்கொள்க. 'ஏமப்புணை,' ஏமத்தை உபதேசிக்கும் புணை. 'இனமென்னு மேமப் புணை' யென்ற ஏகதேச வுருவகத்தாற் பிறவிக் கடலுளழுந்தாமல் வீடென்னுங் கரையேற்றுகின்றவென வருவித்துரைக்க. எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. தன்னையும் வீழ்த்து, எடுப்பாரையு மகற்று மென்பதாம். (சு)

௩௦௭. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(இ - ள்.) சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு-சினத்தைத் தன் னாற்ற லுணர்த்துவதொரு குணமென்று தன்கட்

---

* திருக்குறள்—௨௬௫. † நாலடியார்—௨௭௧.
‡ வேண்டியதொன்றைமுடித்தற்கு வேண்டாததொன்றைக்கூறுதல்.

கொண்டவன் அவ்வாற்ற லிழத்தலில்; நிலத்து அறைந்தான் கை பிழையா தற்று - நிலத்தின்கண் அறைந்தவன் கை அந் நிலத்தை யுறுதல் தப்பாதவாறு போலத் தப்பாது.

வைசேடிகர்* பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப் பொரு ளென்ருற்போல, ஈண்டுக் 'குணம்' 'பொரு' ளெனப்பட்டது. 'பிழையாத தற்' றென்பது குறைந்து நின்றது. இவை மூன்று பாட்டானும் வெகுண்டார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது. (எ)

௩௦அ. இணரெரி தோய்வன்ன இன்னு செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

(இ - ள்.) இணர் எரி தோய்வு அன்ன இன்ஞ செயினும்- பல சுடரை யுடைத்தாய பேரெரிவந்து தோய்ந்தாலொத்த இன் ஞதவற்றை ஒருவன் செய்தாஞயினும், வெகுளாமை புணரின் நன்று-அவனை வெகுளாமை ஒருவர்க்குக் கூடுமாயின், அது நன்று.

இன்ஞமையின் மிகுதி தோன்ற 'இணரெரி' யென்றும், அதனை மேன்மேலுஞ் செய்தல் தோன்ற 'இன்ஞ' வென்றும் அச் செயல் முனிவரையும் வெகுள்விக்குமென்பது தோன்றப் 'புணரி'னென்றுங் கூறினர். இதஞன் வெகுளாமையது நன்மை கூறப்பட்டது. (அ)

௩௦௯. உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்.

(இ - ள்.) உள்ளத்தால் வெகுளி உள்ளான் எனின் - தவஞ் செய்யுமவன், தன் மனத்தால் வெகுளியை ஒருகாலும் நினையா ஞயின்; உள்ளியது எல்லாம் உடன் எய்தும் - தான் கருதிய பேறெல்லாம் ஒருங்கே பெறும்.

'உள்ளத்தாலென வேண்டாது கூறியவதஞன், அருளுடை யுள்ளமென்பது முடிந்தது. அதஞன் உள்ளாமையாவது அவ்வரு ளாகிய பகையை வளர்த்து அதஞன் முற்றக் கடிதல். இம்மை மறுமை வீடென்பன வேறு வேறு திறத்தனவாயினும், அவை யெல்லாம் இவ்வொன்ருனே யெய்துமென்பார், 'உள்ளியதெல்லா முடனெய்து' மென்ருர். இதஞன் வெகுளாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது. (௯)

---

* விசேடம் என்னும் பொருளை (கணுதரது நியாயமதத்தை) ஏற்றுக்கொண்டவர் வைசேடிகர்.

௩கo. இறந்தார் இறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

(இ - ள்) இறந்தார் இறந்தார் அனையர் - சினத்தின் கண்ணே மிக்கார், உயிருடையராயினும், செத்தாரோடொப்பர்; சினத்தைத் துறந்தார் துறந்தார் துணை - சினத்தைத் துறந்தார், சாதற்றன்மையராயினும், அதை யொழிந்தா ரளவினர்.

மிக்க சினத்தை யுடையார்க்கு ஞானமெய்துதற்குரிய உயிர் நின்றதாயினும் கலக்கத்தான் அஃதெய்தாமை ஒரு தலையாகலின், அவரை 'இறந்தாரனைய'ரென்றும் சினத்தை விட்டார்க்குச் சாக்காடெய்துதற்குரிய யாக்கை நின்றதாயினும், ஞானத்தான் வீடு பெறுதல் ஒரு தலையாகலின், அவரை வீடு பெற்றாரோ டொப்பர் என்றுங் கூறினார். இதனான் அவ்விருவர் பயனும் ஒருங்கு கூறப்பட்டது. (கo)

——

## அதி. ௩உ—இன்னாசெய்யாமை

[அஃதாவது, தனக்கு ஒருபயனோக்கியாதல், செற்றம்பற்றியாதல், சோர்வானாதல் ஒருயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. இன்னாசெய்தல் வெகுளி யொழியவும் நிகழுமென்பது அறிவித்தற்கு, இது வெகுளாமையின் பின் வைக்கப்பட்டது.]

௩கக. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் - யோகமாகிய சிறப்புத் தரும் அணிமா முதலிய செல்வங்களைப் பிறர்க்கின்னா செய்து பெறலாமாயினும்: பிறர்க்கு இன்னா செய்யாமை மாசு அற்றார் கோள் - அதனைச் செய்யாமை ஆகமங்கள் கூறியவாற்றான் மனந் தூயாரது துணிவு.

'உம்'மை பெருமைமேற்று. சிறப்புடையதனைச் 'சிறப்'பென்றும், அதன் பயிற்சியான் வாயுவை வென்றெய்தப்படுதலின் எட்டுச் சித்திகளையுஞ் 'சிறப்பீனுஞ் செல்வ' மென்றும், காமம் வெகுளி மயக்கமென்னுங் குற்றங்க ளற்றமையான் 'மாசற்றா' ரென்றுங் கூறினார். இதனால் தமக்கொரு பயனோக்கிச் செய்தல் விலக்கப்பட்டது. (க)

௩கஉ. கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) கறுத்து இன்னு செய்தவக்கண்ணும் - தம்மேற் செற்றங்கொண்டு ஒருவன் இன்னுதவற்றைச் செய்தவிடத்தும், மறுத்து இன்னு செய்யாமை மாசு அற்றூர் கோள் - மீண்டு தாம் அவனுக் கின்னுதவற்றைச் செய்யாமையும் அவரது துணிவு.

இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றெக்கது. அவ் வின்னுதவற்றை உட்கொள்ளாது விடுதல் செயற்பாலதென்பதாம்.

ங௧ங. செய்யாமற் செற்றூர்க்கும் இன்னுத செய்தபின்
உய்யா விழுமந் தரும்.

(இ - ள்.) செய்யாமல் செற்றூர்க்கும் இன்னுத செய்தபின் - தான் முன்போர் இன்னுமை செய்யாதிருக்கத் தன்மேற் செற்றங் கொண்டவர்க்கும் இன்னுதவற்றைத் துறந்தவன் செய்யுமாயின், உய்யா விழுமம் தரும் - அச் செயல் அவனுக்குக் கடக்க முடியாத இடும்பையைக் கொடுக்கும்.

அவ் விடும்பையாவது தவமிழந்து பழியும் பாவமு மெய்தல். (ங)

ங௧ச. இன்னுசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

(இ - ள்.) இன்னு செய்தாரை ஒறுத்தல் - தமக் கின்னுத வற்றைச் செய்தாரைத் துறந்தா ரொறுத்தலாவது; அவர் நாண நன்னயம் செய்துவிடல் - அவர் தாமே நாணுமாறு அவர்க்கு இனிய உவகைகளைச் செய்து அவ் விரண்டனையும் மறத்தல்.

மறவாவழிப் பின்னும் வந்து கிளைக்குமாகலின், மறக்கற்பால வாயின. அவரை வெல்லு முபாயங் கூறியவாறு. இவை மூன்று பாட்டானுஞ் செற்றம்பற்றிச் செய்தல் விலக்கப்பட்டது. (ச)

ங௧ரு. அறிவினுன் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போற் போற்றுக் கடை.

(இ - ள்.) அறிவினுன் ஆகுவது உண்டோ - துறந்தார்க்கு உயிர் முதலியவற்றை உள்ளவா றறிந்த* அறிவினு னுவதொரு பயனுண்டோ: பிறிதின் நோய் தந்நோய்போல் போற்றூக்கடை - பிறிதோருயிர்க்கு வரும் இன்னுதவற்றைத் தம்முயிர்க்கு வந்தன போலக் குறிக்கொண்டு காவாவிடத்து.

---

* குறள்—உ அசு உரைக்குறிப்புக் காண்க.

குறிக்கொண்டு காத்தலாவது: நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் முதலிய தந் தொழில்களானும் பிறவாற்றானும் உயிர்க ளுறுவனவற்றை முன்னே யறிந்து உறாமற் காத்தல். இது பெரும்பான்மையும் அஃறிணைக்கண் நுண்ணிய உடம்புடையவற்றைப் பற்றி வருதலிற்பொதுப்படப் 'பிறிதினோ' யென்றும், மறப்பான் அது துன்புறினும் நமக்கின்னாசெய்தலாமென்றறிந்து காத்தல் வேண்டுமாகலின் அது செய்யாவழி, 'அறிவினா னாகுவ துண்டோ' வென்றுங் கூறினார். இதனாற் சோர்வாற் செய்தல் விலக்கப்பட்டது. (௫)

௩௧௬. இன்னா எனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

(இ - ள்.) இன்னா எனத் தான் உணர்ந்தவை-இவைமக்கட்கின்னாதனவென அநுமானத்தாற் றானறிந்தவற்றை; பிறன் கண் செயல் துன்னாமை வேண்டும்-பிறன்மாட்டுச் செய்தலை மேவாமை துறந்தவனுக்கு வேண்டும்.

இன்பத் துன்பங்கள் உயிர்க்குணமாகலின், அவை காட்சி யளவையான் அறியப்படாமை யறிக. அறமும் பாவமு முளவாவது மனமுளனாய வழியாகலான், 'உணர்ந்தவை' யென்றார். (௬)

௩௧௭. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணாசெய் யாமை தலை.

(இ - ள்.) மனத்தான் ஆம் மாணா-மனத்தோடு உளவாகின்ற இன்னாத செயல்களை; எஞ்ஞான்றும் யார்க்கும் எனைத்தானும் செய்யாமை தலை எக்காலத்தும் யாவர்க்குஞ் சிறிதாயினுஞ் செய்யாமை தலையாய அறம்.

ஈண்டு மனத்தானாகாதவழிப் பாவமில்லையென்பது பெற்றாம். ஆற்றலுண்டாய காலத்தும் ஆகாமையின் 'எஞ்ஞான்று'மென்றும், எளியார்க்கு மாகாமையின் 'யார்க்கு' மென்றும்; செயல் சிறிதாயினும் பாவம் பெரிதாகலின் 'எனைத்தானு' மென்றுங் கூறினார். (௭)

௩௧௮. தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

(இ - ள்.) தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் - பிறர் செய்யும் இன்னாதன தன்னுயிர்க்கு இன்னாவாந் தன்மையை அனுபவித்தறிகின்றவன்; மன் உயிர்க்கு இன்னா செயல் என்கொல் - நிலைபேறுடைய பிறவுயிர்கட்குத் தானவற்றைச் செய்தல் என்ன காரணத்தான்!

இவ்வாறே இவை பிறஉயிர்க்கு மின்னுவென்பது அனுமானத் தான் அறிந்தவைத்துச் செய்கின்ற இப்பாவங் கழுவப்படாமை யின், இன்னுதன யான் வருந்தப் பின்னே வந்து வருத்துமென் பது ஆகமத்தானுமறிந்து ஒழியற்பாலனென்பது தோன்றத் 'தா' னென்றும், அத்தன்மையான் ஒழியாமைக்குக் காரணம் மயக்க மென்பது தோன்ற 'என்கொலோ' வென்றுங் கூறினர். இவை மூன்று பாட்டானும் பொதுவகையான் விலக்கப்பட்டது. (அ)

௩கசு. பிறர்க்கின்னு முற்பகல் செய்யின் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும்.

(இ - ள்) பிறர்க்கு இன்னு முற்பகல் செய்யின் - துறந்தவர் பிறர்க் கின்னுதனவற்றை ஒரு பகலது முற்கூற்றின்கட் செய்வ ராயின்; தமக்கு இன்னு பிற்பகல் தாமே வரும் - தமக்கின்னுதன அதன் பிற்கூற்றின்கண் அவர் செய்யாமல் தாமே வரும்.

'முற்பகல்' 'பிற்பக' லென்பன பின்முன்னுகத் தொக்க ஆரும் வேற்றுமைத் தொகை. தவ மழிதலின், அங்ஙனம் கடிதினும் எளிதினும் வரும்; அதனுல் அவை செய்யற்க வென்பதாம். இனித் தானே வருமென்பது பாடமாயின், அச் செயல்தானே தமக்கின்னு தனவாய் வருமென உபசார வழக்காக்கி, ஆக்கம் வருவித்துரைக்க. (கூ)

௩உ௦. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

(இ - ள்.) நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் - இன்னுதனவெல்லாம் பிறிதோ ருயிர்க்கு இன்னுதன செய்தார் மேலவாம்; நோய் இன்மை வேண்டுபவர் நோய்செய்யார் - அதனுல் தம்முயிர்க்கு இன்னுதன வேண்டாதார் பிறிதோருயிர்க்கு இன்னுதன செய்யார்.

உயிர்நிலத்து வினைவித்திட்டார்க்கு விளைவும் அதுவே*யாக லின், 'நோயெல்லாம் நோய் செய்தார் மேலவா' மென்றூர் இது சொற்பொருட் பின்வரு நிலை. இவை இரண்டு பாட்டானும் அது செய்தார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது. (க௦)

---

*சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம்-கசுச.

## அதி. ௩௩—கொல்லாமை

[அஃதாவது, ஐயறிவுடையன முதல் ஓரறிவுடையன வீறுய உயிர்களைச் சோர்ந்துங் கொல்லுதலைச் செய்யாமை. இது மேற்கூறிய அறங்களெல்லாவற்றினுஞ் சிறப்புடைத்தாய்க் கூறுத அறங்களையும் அகப்படுத்து நிற்றலின், இறுதிக்கண் வைக்கப்பட்டது.]

௩௨௧. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும்.

(இ - ள்.) அறவினை யாது எனின் கொல்லாமை - அறங்களெல்லாமாகிய செய்கை யாதென்று வினவின், அஃது ஒருயிரையுங் கொல்லாமையாம்; கோறல் பிறவினை எல்லாம் தரும் - அவற்றைக் கொல்லுதல் பாவச்செய்கைக ளெல்லாவற்றையுந் தானே தரும் ஆதலான்.

'அறம்' சாதி யொருமை. விலக்கிய தொழிதலும் அறஞ் செய்தலாமாகலின், கொல்லாமையை 'அறவினை' யென்றார். ஈண்டுப் 'பிறவினை' யென்றது அவற்றின் விளைவை. கொலைப்பாவம் விளைக்குந் துன்பம் ஏனைப் பாவங்களெல்லாம் கூடியும் விளைக்க மாட்டா வென்பதாம் கொல்லாமைதானே பிறவறங்க ளெல்லாவற்றின் பயனையுந் தருமென்று மேற்கோள் கூறி, அதற்கேது எதிர்மறை முகத்தாற் கூறியவாறாயிற்று. (க)

௩௨௨. பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(இ - ள்) பகுத்து உண்டு பல்லுயிர் ஓம்புதல் - உண்பதனைப் பசித்த உயிர்கட்குப் பகுத்துக் கொடுத்துண்டு, ஐவகை உயிர்களையும் ஓம்புதல்; நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை - அற நூலுடையார் துறந்தார்க்குத் தொகுத்த அறங்களெல்லாவற்றினுந் தலையாய அறம்.

பல்லுயிரு மென்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. 'ஓம்புதல்' சோர்ந்துங் கொலை வாராமற் குறிக்கொண்டு காத்தல். அதற்குப் பகுத்துண்டல் இன்றியமையா உறுப்பாகலின், அச்சிறப்புத் தோன்ற, அதனை இறந்தகால வினையெச்சத்தாற் கூறினார். எல்லா நூல்களிலும் நல்லனவெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க் கியல்பாகலின், ஈண்டும் பொதுப்பட 'நூலோ' ரென்றும், அவரெல்லார்க்கும் ஒப்பமுடிதலான் இது 'தலை'யாய அறமென்றுங் கூறினார். (உ)

௩உ௩. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

(இ - ள்.) ஒன்றாக நல்லது கொல்லாமை - நூலோர் தொகுத்த அறங்களுள் தன்னோ டிணைப்பதின்றித் தானேயாக நல்லது கொல்லாமை; பொய்யாமை அதன் பின்சார நன்று - அஃதொழிந்தால் பொய்யாமை அதன் பின்னே நிற்க நன்று.

நூலோர் தொகுத்த அறங்களென்பது அதிகாரத்தான் வந்தது. அதிகாரம் கொல்லாமையாயினும் மேற் 'பொய்யாமை பொய்யாமையாற்றி' யெனவும், 'யாமெய்யாக் கண்டவற்றுளில்லை' யெனவுங் கூறினாராகலின். இரண்டறத்துள்ளும் யாது சிறந்த தென்று ஐய நிகழுமன்றே. அது நிகழாமைப்பொருட்டு ஈண்டு 'அதன் பின்சாரப் பொய்யாமைநன்' றென்றார், முற்கூறியதிற் பிற் கூறியது வலியுடைத்தாலின். அதனைப் பின்சார நன்' றென்றது, நன்மை பயக்கும் வழிப் பொய்யும் மெய்யாயும், தீமை பயக்கும் வழி மெய்யும் பொய்யாயும் இதனைப் பற்ற அது திரிந்து வருதலானென உணர்க. இவை மூன்று பாட்டானும் இவ்வறத்தினது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

௩உ௪. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழும் நெறி.

(இ - ள்.) நல்லாறு எனப்படுவது யாது எனின் - மேற்கதி வீடுபேறுகட்கு நல்ல நெறியென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்; யாதொன்றும் கொல்லாமை சூழும்நெறி - அஃது யாதோருயிரையுங் கொல்லாமையாகிய அறத்தினைக் காக்கக் கருதும் நெறி.

'யாதொன்று' மென்றது, ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு. காத்தல், வழுவாமற் காத்தல். இதனால் இவ்வறத்தினையுடையதே நன்னெறி யென்பது கூறப்பட்டது. (௪)

௩உ௫. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

(இ -ள்.) நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம் - பிறப்பு நின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப்பொருட்டு மனைவாழ்க்கையைத் துறந்தா ரெல்லாருள்ளும், கொலை அஞ்சிக் கொல்லாமை சூழ்வான் தலை - கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன் உயர்ந்தவன்.

பிறப்பு நின்ற நிலையாவது இயங்குவ நிற்பவென்னும் இருவகைப் பிறப்பினும் இன்பமென்ப தொன்றின்றி உள்ளனவெல்

லாந் துன்பமேயாய. நிலைமை துறவு ஒன்றேயாயினும், சமயவேறு பாட்டாற் பலவாமாகலின், 'நீத்தாரு ளெல்லா' மென்றார். இத ளுல் இவ்வறம் மறவாதவனுயர்ச்சி கூறப்பட்டது. (ரு)

ருஉசு. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

(இ-ள்.) கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ் நாள்மேல் - கொல்லாமையை விரதமாக மேற்கொண் டொழுகு வானது வாழ்நாளின்மேல்; உயிர் உண்ணும் கூற்றுச் செல்லாது- உயிருண்ணுங் கூற்றுச் செல்லாது.

மிகப்பெரிய அறஞ் செய்தாரும், மிகப் பெரிய பாவஞ் செய் தாரும் முறையானன்றி இம்மை தன்னுள்ளே அவற்றின் பயன் அனுபவிப்பரென்னும் அறநூற் றுணிபுபற்றி, இப் பேரறஞ் செய் தான்ருனுங் கொல்லப்படான்; படானுகவே, அடியிற் கட்டிய வாழ்நாள் இடையூறின்றி எய்துமென்பார், 'வாழ்நாள் மேற்' கூற்றுச் 'செல்லா' தென்றார்; செல்லாதாகவே, கால நீட்டிக்கும்; நீட்டித்தால் ஞானம் பிறந்து உயிர் வீடுபெறு மென்பது கருத்து. இதனல் அவர்க்கு வரும் நன்மை கூறப்பட்டது. (சு)

ருஉஎ. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(இ-ள்.) தன் உயிர் நீப்பினும் - அது செய்யாவழித் தன் னுயிர் உடம்பின் நீங்கிப் போமாயினும்; தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினை செய்யற்க - தான் பிறிதோ ரின்னுயிரை அதனுடம் பின் நீக்குந் தொழிலைச் செய்யற்க.

தன்னை அது கொல்லினுந் தான் அதனைக் கொல்லற்க வென் றது, பாவம் கொலையுண்டவழித் தேய்தலும் கொன்றவழி வளர்த லும் நோக்கி. இனித் 'தன்னுயிர் நீப்பினு' மென்பதற்குச் சாந்தி யாகச் செய்யாத வழித் தன்னுயிர் போமாயினு மென் றுரைப்பாரு முளர். பிறர் செய்தலு மாகாமையின், அஃதுரையன்மையறிக. (எ)

ருஉஅ. நன்றாகும் ஆக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(இ-ள்.) நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் - தேவர் பொருட்டு வேள்விக்கண் கொன்றால் இன்ப மிகுஞ் செல்வம் பெரிதாமென்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும்; சான் ருேர்க்குக் கொன்று ஆகும் ஆக்கம் கடை-துறவா னமைந்தார்க்கு ஓருயிரைக் கொல்ல வருஞ் செல்வங் கடை.

'இன்பமிகுஞ் செல்வ' மாவது தாமுந் தேவராய்த் துறக்கத்துச் சென்றெய்துஞ் செல்வம். அது சிறிதாகலானும், பின்னும் பிறத்தற்கேதுவாகலானும், வீடாகிய ஈறிலின்ப மெய்துவார்க்குக் 'கடை' யெனப்பட்டது. துறக்க மெய்துவார்க்கு ஆமாயினும் வீடெய்துவார்க்கு ஆகாதென்றமையின், விதி விலக்குகள் தம்முள் மலையாமை விளக்கியவாறாயிற்று இஃதில்லற மன்மைக்குக் காரணம். இவை இரண்டு பாட்டானும் கொலையது குற்றங் கூறப்பட்டது. (அ)

கூஉகூ. கொலைவினைய ராகிய மாக்கள்*புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

(இ - ள்.) கொலை வினையர் ஆகிய மாக்கள் - கொலைத் தொழிலையுடையராகிய மாந்தர்; புன்மை தெரிவார் அகத்துப் புலைவினையர் - அத்தொழிலின் கீழ்மையை அறியாத நெஞ்சத்தராயினும் அறிவார் நெஞ்சத்துப் புலைத் தொழிலினர்.

'கொலை வினைய' ரென்றதனுன், வேள்விக்கட் கொலை யன்மையறிக. 'புலைவினைய' ரென்றது தொழிலாற் புலைய ரென்றவாறு. இம்மைக்கட் கீழ்மை யெய்துவ ரென்பதாம். (கூ)

கூகூ0. உயிருடம்பின் நீக்கியா ரென்ப செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

(இ - ள்.) செயிர் உடம்பின் செல்லாத் தீ வாழ்க்கையவர் - நோக்கலாகா நோயுடம்புடனே வறுமை கூர்ந்த இழிதொழில் வாழ்க்கையினை யுடையாரை; உயிர் உடம்பின் நீக்கியார் என்ப - இவர் முற்பிறப்பின்கண் உயிர்களை அவை நின்ற உடம்பினின்று நீக்கினவரென்று சொல்லுவர், வினை விளைவுகளை யறிந்தோர்.

செல்லாவாழ்க்கை தீவாழ்க்கை யெனக் கூட்டுக. 'செயிருடம்பின' ராதல் "அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்—துக்கத் தொழுநோ யெழுபவே" † என்பதனுனு மறிக. மறுமைக்கண் இவையு மெய்துவ ரென்பதாம். இவை யிரண்டு பாட்டானுங் கொல்வார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது. (க0)

அருளுடைமை முதற் கொல்லாமை யீறாகச் சொல்லப்பட்ட அவற்றுள்ளே சொல்லப்படாத விரதங்களு மடங்கும்; அஃதறிந்தடக்கிக் கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

---

*'மாக்களெனப்படுவார் மனவுணர்ச்சி யில்லாதார்' என்பர் நச்சினார்க்கினியர். † நாலடியார் - கஉக.

## ஞானம்

இனி, அவற்றின் பயனாகிய ஞானங் கூறிய தொடங்கினர். ஞானமாவது வீடு பயக்கும் உணர்வு. அது 'நிலையாமை' முதல் 'அவாவறுத்த' லிறுதியாக நான்கதிகாரத்து ளடக்கப்பட்டது.

ஃ. 36

### அதி. ௩௪—நிலையாமை

[அவற்றுள், நிலையாமையாவது தோற்றமுடையன யாவும் நிலையுத லிலவாந்தன்மை மயங்கியவழிப் பேய்த்தேரிற் புனல்போலத் தோன்றி மெய்யுணர்ந்த வழிக் கயிற்றில் அரவுபோலக்கெடு தலிற் பொய்யென்பாரும், * நிலை வேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந்திறக்குமென்பாரும், † ஒருவாற்றான் வேறுபடுதலும் ஒருவாற்றான் வேறுபடாமையு முடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கேயுடைய வென்பாரு‡ மெனப் பொருட்பெற்றி கூறுவர் பல திறத்தராவர்; எல்லார்க்கும் அவற்றது நிலையாமை உடம்பாடாகலின், ஈண்டு அதனையே கூறுகின்றார். இஃதுணர்ந்துழியல்லது பொருள் களிற் பற்றுவிடாதாகலின், இது முன்வைக்கப்பட்டது.]

௩௩௧. நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(இ-ள்.) நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறி வாண்மை - நிலையுத லிலவாகிய பொருள்களை நிலையுதலுடைய வென்று கருதுகின்ற புல்லிய அறிவினை யுடையராதல்; கடை - துறந்தார்க் கிழிபு.

தோற்றமுடையவற்றைக் கேடில வென்று கருதும் புல்லறிவால் அவற்றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித்துன்பத்திற் கேது வாகலின், அது வீடெய்துவார்க் கிழுக்கென்பது இதனாற் கூறப் பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச் செய்வது சிற்றின்பத்துக் கேதுவாகிய செல்வத்தின்கண்ணும் அதனை யனுபவிக்கும் யாக்கையின் கண்ணுமாகலின், வருகின்ற பாட்டுக் களான் அவற்றது நிலையாமையை விதந்து கூறுப. (க)

௩௩௨. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

* அத்துவித சித்தாந்திகள். † பௌத்த சித்தாந்திகள்.
‡ பிற சித்தாந்திகள்.

(இ - ள்.) பெருஞ்செல்வம் கூத்தாட்டு அவை குழாத்தற்று - ஒருவன்மாட்டுப் பெரிய செல்வம் வருதல் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கட் காண்போர் குழாம் வந்தாற்போலும்; போக்கும் அது விளிந்தற்று - அதனது போக்கும் அக் கூத்தாட்டு முடிந்த வழி அக்குழாம் போயினாற்போலும்.

'பெருஞ் செல்வ' மெனவே துறக்கச் செல்வமு மடங்கிற்று. 'போக்கு' மென்ற எச்சவும்மையான், வருத லன்பது பெற்றாம். அக் குழாங் கூத்தாட்டுக் காரணமாக அரங்கின்கட் பஃறிறத்தாற்றானே வந்து, அக்காரணம் போயவழித் தானும் போமாறுபோல, செல்வமும் ஒருவன் நல்வினை காரணமாக அவன்மாட்டுப் பஃறிறத்தாற் றானே வந்து, அக்காரணம் போயவழித் தானும் போமென்றதாயிற்று. (உ)

௩௩௩. அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

(இ - ள்.) அற்கா இயல்பிற்றுச் செல்வம் - நில்லாத இயல்பினை யுடைத்துச் செல்வம்; அது பெற்றால் அற்குப ஆங்கே செயல் - அதனைப் பெற்றால், அதனால் செய்யப்படும் அறங்களை அப்பெற்றபொழுதே செய்க.

அல்கா வென்பது திரிந்து நின்றது. ஊழுள்ள வழியல்லது துறந்தாராற் பெறப்படாமையின் அது 'பெற்றா' லென்றும், அஃதில்வழி நில்லாமையின் 'ஆங்கே' யென்றுங் கூறினார். அதனாற் செய்யப்படும் அறங்களாவன பயனோக்காது செய்யப்படுங் கடவுட் பூசையும், தானமும் முதலாயின; அவை ஞான வேதுவாய் வீடு பயத்திலின், அவற்றை 'அற்குப' வென்றும், 'செயல்' என்றுங் கூறினார். இவை இரண்டு பாட்டானும் செல்வநிலையாமை கூறப்பட்டது. (௩)

௩௩௪. நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) நாள் என ஒன்றுபோல் காட்டி ஈரும் வாளது உயிர் - நாளென்று அறுக்கப்படுவதோர் காலவரையறைபோலத் தன்னைக் காட்டி ஈர்ந்து செல்கின்ற வாளினது வாயது உயிர்; உணர்வார்ப் பெறின் - அஃதுணர்வாரைப் பெறின்.

காலமென்னும் அருவப்பொருள் உலகியல் நடத்தற்பொருட்டு ஆதித்தன் முதலிய அளவைகளாற் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக் கூறுபடாமையின் 'நாளென வொன்றுபோ' லென்றும், அது தன்னை வாளென் றுணரமாட்டாதார் நமக்குப்

பொழுது போகா நின்றதென்று இன்புறுமாறு நாளாய் மயக்கலிற் 'காட்டி' யென்றும், இடைவிடாதீர்தலான் வாளின் வாயதென் றும், அஃதீர்கின்றமையை உணர்வார் அரியராகலின் 'உணர் வார்ப்பெறி' னென்றுங் கூறினர். 'உயி ரென்னுஞ் சாதியொரு மைப் பெயர் ஈண்டு உடம்பின்மேல் நின்றது. ஈரப்படுவது அதுவே யாகலின். 'வா' ளென்பது ஆகுபெயர். இனி இதனை நாளென்பதொரு பொருள்போலத் தோன்றி உயிரை ஈர்வதொரு வாளாமென்றுரைப்பாரு முளர் * 'என' வென்பது பெயரன்றி இடைச்சொல் லாகலானும் 'ஒன்றுபோற் காட்டி' யென்பதற்கு ஒரு பொருட் சிறப்பின்மையானும் 'அது' வென்பது குற்றியலுகர மன்மையானும், அஃதுரையன்மை யறிக. (௪)

௩௩௫. நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

(இ - ள்.) நாச் செற்று விக்குள் மேல் வாராமுன் - உரை யாடாவண்ணம் நாவை யடக்கி விக்கு ளெழுவதற்குமுன்னே; நல் வினை மேற்சென்று செய்யப்படும் - வீட்டிற் கேதுவாகிய அறம் விரைந்து செய்யப்படும்.

மேனோக்கி வருதல் ஒருதலையாகலானும், வந்துழிச் செய் தலே யன்றிச் சொல்லலும் ஆகாமையானும் 'வாராமு' னென் றும், அதுதான் இன்னபொழுது வருமென்ப தின்மையின் 'மேற் சென்' றென்றுங் கூறினர். மேற்சேறல் - மண்டுதல். நல்வினை செய்யுமாற்றின்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு. (௫)

௩௩௬. நெருநெ லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) ஒருவன் நெருநல் உளன் இன்று இல்லை என்னும் பெருமை உடைத்து - ஒருவன் நெருநல் உளனாயினான், அவனே இன்றில்லை யாயினானென்று சொல்லும் நிலையாமை மிகுதி யுடைத்து; இவ் வுலகு - இவ் வுலகம்.

ஈண்டு உண்மை பிறத்தலையும், இன்மை இறத்தலையுமுணர்த்தி நின்றன. அவை பெண்பாற்கு முளவாயினும், சிறப்புப்பற்றி ஆண் பாற்கே கூறினர். இந்நிலையாமையே உலகின் மிக்கதென்ப தாம். (௬)

௩௩௭. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

* மணக்குடவர்.

(இ - ள்.) ஒருபொழுதும் வாழ்வது அறியார்-ஒருபொழுது தளவும் தம் உடம்பும். உயிரும் இயைந்திருத்தலைத் தெளியமாட்டார்; கோடியும் அல்ல பல கருதுப - மாட்டாது வைத்தும், கோடி யளவுமன்றி அதனினும் பலவாய நினைவுகளை * நினையா நிற்பர் அறிவிலாதார்.

இழிவு சிறப்பும்மையாற் 'பொழு' தென்பது ஈண்டுக் கணத் தின்மேனின்றது. காரணமாகிய வினையினளவே வாழ்தற்கும் அள வாகலின், அஃதறியப்படாதாயிற்று பலவாய நினைவுகளாவன பொறிகளான் நுகரப்படும் இன்பங்கள் தமக்குரியவா மாறும். அதற்குப் பொருள் துணைக்காரணமா மாறும், அது தம் முயற்சி களான் வருமாறும், அவற்றைத் தா முயலுமாறும், அவற்றிற்கு வரு மிடையூறுகளும், அவற்றை நீக்குமாறும். நீக்கி அப்பொருள் கடைக்கூட்டுமாறும், அதனைப் பிறர் கொள்ளாமற் காக்குமாறும், அதனால் நட்டாரை யாக்குமாறும்,நள்ளாரை யழிக்குமாறும், தாம் அவ் வின்பங்கள் நுகருமாறும் முதலாயின. அறிவிலாரதியல்பின் மேல் வைத்து நிலையாமை கூறியவாறு. இனிக் 'கருதுப' வென் பதனை அஃறிணைப் பன்மைப் பெயராக்கி உரைப்பாருமுளர். (எ)

கஙஅ. குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொ டுயிரிடை நட்பு.

(இ - ள்.) குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்று - முன் தனியாத முட்டை தனித்துக் கிடப்ப அதனு ளிருந்த புள்ளுப் பருவம் வந்துழிப் பறந்துபோன தன்மைத்து; உடம்பொடு உயி ரிடை நட்பு - உடம்பிற்கும் உயிர்க்கு முளதாய நட்பு.

'தனித்தொழிய' வென்றதனான், முன்றனியாமை பெற்றும். அஃதாவது, கருவுந் தானும் ஒன்றாய்ப் பிறந்து வேறாந் துணையும் அதற்காதாரமாய் நிற்றல்; அதனால் அஃது உடம்பிற் குவமை யாயிற்று; அதனுள் வேற்றுமையின்றி நின்றே பின் புகாமற் போக லின், 'புள்' உயிர்க் குவமையாயிற்று. முட்டையுட் பிறப்பன பிறவு முளவேனும், புள்ளையே கூறினர், பறந்துபோதற் றொழி லான் உயிரோ டொப்புமை யெய்துவது அதுவேயாகலின். 'நட்' பென்பது ஈண்டுக்குறிப்புமொழியாய் நட்பின்றிப்போதலுணர்த்தி நின்றது. சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும். அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முண் மாறாகலின், வினைவயத் தாற்கூடியதல்லது நட்பிலவென்பதறிக. இனிக்'குடம்பை'யென்ப

* நல்வழி—உஅ.

தற்குக் கூடென்றுரைப்பாருமுளர்* அது புள்ளுடன் தோன்ருமையானும், அதன்கண் அது மீண்டு புகுதலுடைமையானும், உடம்பிற்கு உவமையாகாமை யறிக. (அ)

கூகூ. உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(இ - ள்.) சாக்காடு உறங்குவதுபோலும் - ஒருவனுக்குச் சாக்காடு வருதல் உறக்கம் வருதலோ டொக்கும்; பிறப்பு உறங்கி விழிப்பதுபோலும் - அதன்பின் பிறப்பு வருதல் உறங்கி விழித்தல் வருதலோ டொக்கும்.

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருகின்ருற்போலச் 'சாக்காடு'ம் பிறப்பு'ம் இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருமென்பது கருத்து.† நிலையாமையே நிலைபெற்றவா றறிவித்தற்குப் பிறப்பும் உடன் கூறப்பட்டது. (கூ)

கூ௪0. புக்கி லமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சி லிருந்த உயிர்க்கு.

(இ - ள்.) உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு - வாத முதலியவற்றின் இல்லாய உடம்புகளுள் ஒதுக்கிருந்தே போந்த உயிர்க்கு; புக்கில் அமைந்தின்று கொல் - எஞ்ஞான்றும் இருப்பதோரில் இதுகாறும் அமைந்ததில்லை போலும்.

அந்நோய்கள் இருக்கவமைந்த ஞான்று இருந்தும், வெகுண்டஞான்று போயும், ஒருடம்பினும் நிலைபெருது வருவதால், 'துச்சிலிருந்த' வென்ருர். பின் புறப்படாது புக்கே விடுமில் அமைந்ததாயின்; பிறரிற்களுள் ஒதுக்கிராரென்பதாம்; ஆகவே உயிரோடு கூடிநிற்பதோ ருடம்பு மில்லையென்பது பெறப்பட்டது. இவை ஏழு பாட்டானும், முறையே யாக்கைகட்கு வரைந்த நாள் கழிகின்றவாறும், கழிந்தால் உளதாய நிலையாமையும், அவை ஒரோவழிப் பிறந்த வளவிலே இறத்தலும், ஒரு கணமாயினும் நிற்குமென்பது தெளியப்படாமையும், உயிர் நீங்கியவழிக் கிடக்குமாறும், அவற்றிற்கு இறப்பும் பிறப்பும் மாறி மாறி வருமாறும், அவை தாம் உயிர்க்குரிய வன்மையுமென்று, இவ்வாற்ருல் யாக்கை நிலையாமை கூறியவாறு கண்டுகொள்க. (க0)

———

* மணக்குடவர்.

† மணிமேகலை, கசு ஆம் காதை, வரி — அசு. அஎ.

## அதி. ருடு—துறவு

[அஃதாவது, புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாம் பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

ருசக. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

(இ - ள்.) யாதனின் யாதனின் நீங்கியான் - ஒருவன் யாதொரு பொருளின் யாதொரு பொருளின் நீங்கினான்; அதனின் அதனின் நோதல் இலன் - அவன் அப் பொருளால் அப் பொருளால் துன்பமெய்துத லிலன்.

அடுக்குக்கள் பன்மை குறித்து நின்றன. நீங்குதல்-துறத்தல். ஈண்டுத் 'துன்ப'மென்றது இம்மைக்கண் அவற்றைத் தேடுதலானும், காத்தலானும், இழத்தலானும், வருவனவும், மறுமைக்கண் பாவத்தான் வருவனவுமாய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப் பொருளையும் ஒருங்கே விடுதல் தலை. அஃதன்றி ஒரோவொன்றாக விடினும் அவற்றான் வருந்துன்பம் இலனா மென்பது கருத்து. (க)

ருசஉ. வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.

(இ - ள்.) துறந்தபின் ஈண்டு இயற்பால பல - எல்லாப் பொருள்களையுந் துறந்தால் ஒருவர்க்கு இம்மைக்கண்ணே உளவாம் முறைமையையுடைய இன்பங்கள் பல; வேண்டின் உண்டாகத் துறக்க - அவ் வின்பங்களை வேண்டின், அவற்றைக் காலம் பெறத் துறக்க.

அவ் வின்பங்களாவன: அப்பொருள்கள் காரணமாக மனமொழி மெய்கள் அலையாது நிற்றலானும், அவை நன்னெறிக்கட் சேறலானும் வருவன. இளமைக்கண் துறந்தான் அவற்றை நெடுங் காலமெய்துமாகலின், 'உண்டாகத் துறக்க' வென்றார். 'இன்பங்க'ளென்பதும் 'கால' மென்பதும் வருவிக்கப்பட்டன. இம்மைக்கண் துன்பங்கள் இலவாதலே யன்றி இன்பங்க ளுளவாதலும் உண்டென்பதாம். (உ)

ருசஙு. அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு.

(இ - ள்.) ஐந்தன் புலத்தை அடல் வேண்டும் - வீடெய்துவார்க்குச் செவி முதலிய ஐம்பொறிகட் குரியவாய ஓசை முதலிய

ஐம்புலன்களையும் கெடுத்தல்வேண்டும்;வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல் வேண்டும் கெடுக்குங்கால் அவற்றை நுகர்தற் பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும் ஒருங்கே விடுதல் வேண்டும்.

'புல' மென்றது அவற்றை நுகர்தலை. அது மனத்தைத் துன்பத்தானும் பாபத்தானு மன்றி வாராத பொருள்கள் மேலல்லாது வீட்டு நெறியாகிய யோக ஞானங்களிற் செலுத்தாமையின், அதனை 'யடல்வேண்டு' மென்றும், அஃது அப்பொருள்கள் மேற் செல்லின், அந்நுகர்ச்சி விறகுபெற்ற தழல்போல் முறுகுவதல்லது அடப்படாமையின், 'வேண்டிய வெல்லா மொருங்கு' விடல் வேண்டுமென்றுங் கூறினர்.　　　　(௩)

௩சச. இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) ஒன்று இன்மை நோன்பிற்கு இயல்பாகும் - பற்றப்படுவதொரு பொருளு மில்லாமை தவஞ் செய்வார்க்கு இயல்பாம்; உடைமை பெயர்த்து மற்றும் மயலாகும் - அஃதன்றி, ஒன்றுயினு முடைமை அத்தவத்தைப் போக்குதலான், மீண்டும் மயங்குதற்கேதுவாம்.

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. 'நோன்' பென்பதூஉம் 'மய' லென்பதூஉம் ஆகுபெயர். பெயர்த்தலானென்பது திரிந்து நின்றது. நோன்பைப் பெயர்த்தலானென வேற்றுமைப் படுத்துக்கூட்டுக. எல்லாப் பொருள்களையும் விட்டு ஒரு பொருளை விடாத வழியும், அது சார்பாக விட்டனவெல்லாம் மீண்டு வந்து தவத்திற் கிடையீடாய் மனக்கலக்கஞ் செய்யுமென்பது கருத்து. இவை நான்கு பாட்டானும் என தென்னும் புறப்பற்று விடுதல் கூறப்பட்டது.　　　　(௪)

௩சரு. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பும் மிகை.

(இ - ள்.) பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை- பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்கு அதற்குக் கருவியாகிய உடம்பும் மிகையாம்; மற்றும் தொடர்ப்பாடு எவன் - ஆனபின் அதற்கு மேலே இயைபில்லனவுஞ் சில தொடர்ப்பா டுளவாதல் என்னும்!

'உடம்பெ'ன்ற பொதுமையான், உருவுடம்பும் அருவுடம்புங் கொள்ளப்படும் அவற்றுள் அருவுடம்பாவது பத்துவகை இந்திரிய உணர்வோடும் ஐவகை வாயுக்களோடும் காமவினை விளைவுகளோ

டுங் கூடிய மனம்; இது நுண்ணுடம்பெனவும் படும். இதன்கட் பற்று நிலையாமை யுணர்ந்ததுணையான் விடாமையின், விடுதற் குபாயம் முன்னர்க் கூறுப.* இவ் வுடம்புகளால் துன்பம் இடை யறுது வருதலை யுணர்ந்து இவற்றுனைய கட்டினை இறைப்பொழு தும் பொறுது வீட்டின் கண்ணே விரைதலின், 'உடம்புமிகை' யென்றார். இன்பத் துன்பங்களான் உயிரோடு ஒற்றுமை யெய் துதலின், இவ் வுடம்புகளும் 'யா' னெனப்படும். இதனான் அகப் பற்று விடுதல் கூறப்பட்டது. (ரு)

நூசசு. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்.

(இ - ள்.) யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் - தானல்லாத உடம்பை யானென்றும் தன்னோ டியைபில்லாத பொருளை எனதென்றுங் கருதி அவற்றின்கட் பற்றுச்செய்தற் கேதுவாகிய மயக்கத்தைக் கெடுப்பான்; வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்-வானோர்க்கும் எய்தற்கரிய வீட்டுலகத்தை யெய்தும்.

மயக்கம்-அறியாமை. அதனைக் கெடுத்தலாவது தேசிகர்பாற் பெற்ற உறுதிமொழிகளானும் யோகப்பயிற்சியானும் அவை யானென தன்மை தெளிந்து, அவற்றின்கண் பற்றை விடுதல். சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. இதனால் இவ் விருவகைப் பற்றினையும் விட்டார்க்கே வீடுளதென்பது கூறப்பட்டது. (சு)

நூசஎ. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(இ - ள்.) பற்றினைப் பற்றி விடாதவர்க்கு - இருவகைப் பற்றினையும் இறுகப்பற்றி விடாதாரை; இடும்பைகள் பற்றி விடா - பிறவித் துன்பங்கள் இறுகப்பற்றி விடா.

இறுகப் பற்றுதல் - காதல் கூர்தல். 'விடாதவர்க்' கென்பது வேற்றுமை மயக்கம். இதனால் இவை விடாதவர்க்கு வீடில்லை யென்பது கூறப்பட்டது. (எ)

நூசஅ. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(இ - ள்.) தீரத் துறந்தார் தலைப்பட்டார்-முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்; மற்றையவர் மயங்கி வலைப்பட்டார்-அங்ஙனந் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டார்.

---

* குறள்—கூரு0.

'முற்றத்துறத்த'லாவது பொருள்களையும் இருவகை உடம்பினையும் உவர்த்துப் பற்றற விடுதல். அங்ஙனந் துறவாமையாவது அவற்றுள் யாதானு மொன்றின்கட் சிறிதாயினும் பற்றுச் செய்தல். துணிவுபற்றித் 'தலைப்பட்டா' ரென்றும், பொய்ந்நெறி கண்டே பிறப்பு வலையுளகப்படுதலின் 'மயங்கி' யென்றுங் கூறினார்.

௩௪௯. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்.

(இ - ள்.) பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்-ஒருவன் இருவகைப்பற்று மற்ற பொழுதே, அப் பற்றறுதி அவன் பிறப்பை யறுக்கும்; மற்று நிலையாமை காணப்படும் - அவை யறாதபொழுது அவற்றாற் பிறந்திறந்து வருகின்ற நிலையாமை காணப்படும்.

காரணமற்ற பொழுதே காரியமும் அற்றதா முறைமைபற்றி, 'பற்றற்ற கண்ணே' யென்றார்; ''அற்றது பற்றெனி—லுற்றது வீடு''* என்பதூஉம் அதுபற்றி வந்தது. இவை இரண்டு பாட்டானும் அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன. (௯)

௩௫௦. பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(இ - ள்.) பற்று அற்றான் பற்றினைப் பற்றுக - எல்லாப் பொருளையும் பற்றிநின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை இதுவே நன்னெறி யென்று மனத்துக் கொள்க; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு - கொண்டு, அதன்கண் உபாயத்தை அம்மனத்தாற் செய்க; விடாது வந்த பற்று விடுதற்கு.

கடவுள் வாழ்த்திற்கேற்ப ஈண்டும் பொதுவகையாற் 'பற்றற்றா' னென்றார். 'பற்றற்றான் பற்'றென்புழி ஆறாவது செய்யுட்கிழமைக்கண் வந்தது ஆண்டுப் 'பற்' றென்றது பற்றப்படுவதனை. 'அதன்க ணுபாய' மென்றது தியான சமாதிகளை. 'விடாது வந்த பற்'றென்பது அநாதியாய் வரும் உடம்பிற் பற்றினை. அப்பற்று விடுதற்கு உபாயம் இதனாற் கூறப்பட்டது. (௧௦)

---

* திருவாய்மொழி, உ-ஆம் திருப்பதிகம்-௫.

## அதி. ௩௬—மெய்யுணர்தல்

[அஃதாவது, பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களானன்றி உண்மையா னுணர்தல். இதனை வடநூலார் தத்துவஞான மென்ப. இதுவும் 'பற்றற்றான் பற்றினைப்' பற்றிய வழி உளதாவதாகலின், அக்காரண வொற்றுமை பற்றித் துறவின்பின் வைக்கப்பட்டது.]

௩௫௧. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு.

(இ - ள்.) பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளான் ஆம் - மெய்ப்பொரு ளல்லவற்றை மெய்ப்பொருளென்றுணரும் விபரீத வுணர்வானே உளதாம்; மாணாப் பிறப்பு - இன்பமில்லாத பிறப்பு.

அவ் விபரீத உணர்வாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளு மில்லை யெனவும், மற்றும் இத் தன்மையவுஞ் சொல்லும் மயக்க நூல் வழக்குக்களை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல். குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளி யென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீத உணர்வு, அவிச்சை என்பன ஒரு பொருட்கிளவி. நரகர், விலங்கு, மக்கள், தேவரென்னும் நால்வகைப் பிறப்பினுமுள்ளது துன்பமே யாகலின், 'மாணாப் பிறப்' பென்றார். இதனாற் 'பிறப்புத்' துன்பமென்பதூஉம், அதற்கு முதற் காரணம் அவிச்சை யென்பதூஉங் கூறப்பட்டன. (க)

௩௫௨. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(இ - ள்.) மருள் நீங்கி மாசு அறு காட்சியவர்க்கு-அவிச்சையின் நீங்கி மெய்யுணர்வுடைய ராயினார்க்கு ; இருள் நீங்கி இன்பம் பயக்கும் - அம் மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும்.

'இருள்' நரகம்;* அஃது ஆகுபெயராய்க் காரணத்தின்மே னின்றது. 'நீங்கி' யெனத் தொடை நோக்கி மெலிந்து நின்றது; நீங்கவென்பதன் திரிபெனினும் அமையும். 'மருணீங்கி' யென்னும் வினையெச்சம் 'காட்சியவ' ரென்னுங் குறிப்பு வினைப்பெயர் கொண்டது. 'மாசறு காட்சி' யென்றது கேவல உணர்வினை.

*குறள் - கஉக.

இதனால் வீடாவது நிரதிசய இன்பமென்பதூஉம், அதற்கு நிமித்த காரணம் கேவலப் பொருளென்பதூஉங் கூறப்பட்டன. (உ)

௩௫௩. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

(இ - ள்.) ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு-ஐயத்தினின்று நீங்கி மெய்யுணர்ந்தார்க்கு; வையத்தின் வானம் நணியது உடைத்து - எய்திநின்ற நிலவுலகத்தினும் எய்தக்கடவதாய வீட்டுலகம் நணித்தாத லுடைத்து.

'ஐய'மாவது பல தலையாய உணர்வு. அஃதாவது மறுபிறப்பும் இருவினைப் பயனும், கடவுளும் உளவோ இலவோவென ஒன்றிற் றுணிவு பிறவாது நிற்றல்; பேய்த்தேரோ புனலோ, கயிறோ அரவோவெனத் துணியாது நிற்பதும் அது. ஒருவாற்றாற் பிறர் மதங் களைந்து தம் மத நிறுத்தல் எல்லாச் சமய நூல்கட்கும் இயல்பாகலின், அவை கூறுகின்ற பொருள்களுள் யாது மெய்யென நிகழும் ஐயத்தினை யோக முதிர்ச்சியுடையார் தம் அனுபவத்தான் நீக்கி மெய்யுணர்வாராகலின், அவரை 'ஐயத்தினீங்கித் தெளிந்தா'ரென்றும், அவர்க்கு அவ்வனுபவ உணர்வு அடிப்பட்டு வரவரப் பண்டை உலகியலுணர்வு தூர்ந்து வருமாகலின் அதனைப் பயன் மேலிட்டு 'வையத்தின் வான நணிய துடைத்'தென்றுங் கூறினார்; கூறவே, ஐயவுணர்வும் பிறப்பிற்குக் காரணமாதல் கூறப்பட்டது. (௩)

௩௫௪. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(இ - ள்.) ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்றே - செல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டான் ஐந்தாகிய உணர்வு அவற்றை விட்டுத் தம் வயத்தாய வழியும், அதனால் பயனில்லையேயாம்; மெய்யுணர்வு இல்லாதவர்க்கு - மெய்யினை யுணர்தலில்லாதார்க்கு.

'ஐந்தாகிய உணர்வு' மனம். அஃதெய்துதலாவது மடங்கி ஒருதலைப்பட்டுத் தாரணைக்க ணிற்றல். அங்ஙனம் நின்ற வழியும் வீடு பயவாமையின் 'பயமின்' றென்றார். சிறப்பும்மை எய்துதற் கருமை விளக்கிநின்றது. இவை இரண்டு பாட்டானும் மெய்யுணர்வுடையார்க்கே வீடுளதென மெய்யுணர்வின் சிறப்புக் கூறப்பட்டது. (௪)

௩௫௫. எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும்-யாதொரு பொருள் யாதோ ரியல்பிற்ருய்த் தோன்றினும்; அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு - அத் தோன்றியவாற்றைக் கண்டொழியாது அப்பொருளின்க ணின்று மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது.

பொருடோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பதென்றவாருயிற்று அஃதாவது, "கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ் சேர லிரும்பொறை" என்ற வழி அரசனென்பதொரு சாதியும், சேரமானென்பதொரு குடியும், வேழநோக்கினையுடையானென்பதொரு வடிவும், சேயென்பதோ ரியற்பெயரும், மாந்தரஞ் சேர லிரும்பொறை யென்பதொரு சிறப்புப் பெயரும், ஒரு பொருளின்கண் கற்பனையாகலின், அவ்வாறுணராது நில முதல் உயிரீருகிய தத்துவங்களின் தொகுதி யென உணர்ந்து, அவற்றை நிலமுதலாகத் தத்தங் காரணங்களு ளொடுக்கிக் கொண்டு சென்ருற்காரண காரியங்கள் இரண்டுமின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம் 'எப்பொரு'ளென்ற பொதுமையான் இயங்கு திணையும் நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் இவ்வாறே யுணரப்படும். இதனுன் மெய்யுணர்வின திலக்கணங் கூறப்பட்டது. (ரு)

கூருகூ. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(இ - ள்.) ஈண்டுக் கற்று மெய்ப்பொருள் கண்டார் - இம் மக்கட் பிறப்பின் கண்ணே உபதேச மொழிகளை அனுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனுன் மெய்ப்பொருளை யுணர்ந்தவர்; மற்று ஈண்டு வாரா நெறி தலைப்படுவர் - மீண்டு இப் பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர்.

'கற்' றென்றதனுல் பலர் பக்கலினும் பலகாலும் பயிறலும், 'ஈண்' டென்றதனுல் வீடு பேற்றிற்குரிய மக்கட் பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்ரும். 'ஈண்டு வாராநெறி' வீட்டு நெறி. வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று; அவை கேள்வி, விமரிசம், பாவனை யென்பன. அவற்றுட் கேள்வி இதனுற் கூறப்பட்டது. (கூ)

கூருஎ. ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(இ - ள்.) உள்ளம் ஒரு தலையா ஓர்த்து உள்ளது உணரின் - அங்ஙனங் கேட்ட உபதேச மொழிப்பொருளை ஒருவனுள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றானுந் தெளிய ஆராய்ந்து, அத னுன் முதற்பொருளை யுணருமாயின்; பேர்த்துப் பிறப்பு உள்ள வேண்டா - அவனுக்கு மாறிப் பிறப்புளதாக நினைக்க வேண்டா.

ஒருதலையா வோர்த்தென இயையும். அளவைகளும்பொருந்து மாறும் மேலே யுரைத்தாம்; இதனால் விமரிசங் கூறப்பட்டது. (எ)

௩௫அ. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

(இ ள்.) பிறப்பு என்னும் பேதைமை நீங்க - பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சை கெட; சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு - வீட்டிற்கு நிமித்த காரணமாய செவ்விய பொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது.

'பிறப்பென்னும் பேதைமை' யெனவும், 'சிறப்பென்னுஞ் செம்பொரு' ளெனவும், காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக் குற்றங்களுள் அவிச்சை ஏனைய நான்கிற்குங் காரணமாத லுடைமையின், அச்சிறப்புப்பற்றி அதனையே பிறப்பிற்குக் காரண மாக்கிக் கூறினர். எல்லாப் பொருளினுஞ் சிறந்ததாகலால், வீடு 'சிறப்' பெனப்பட்டது. தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற் றன்னை யொன்றுங் கலத்த லின்மையிற் றூய் தாய்த், தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல்பற்றி, அதனைச் "செம்பொரு' ளென்றார். மேல்† 'மெய்ப்பொரு' ளெனவும் 'உள்ள' தெனவுங் கூறியதூஉம் இதுபற்றி யென உணர்க. அதனைக் காண்கையாவது உயிர் தன்னவிச்சை கெட்டு அதனோடு ஒற்றுமை யுற இடைவிடாது பாவித்தல்; இதனைச் சமாதியெனவுஞ் சுக்கி லத்தியான‡ மெனவுங் கூறுப. உயிர் உடம்பின் நீங்குங் காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த் தோன்றுமென்பது எல்லா ஆகமங்கட்குந் துணிபாகலின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப் பொருளையே பாவித்தல் வேண்டுத லான், அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்க உபாயமில்லை யென்ப தறிக. இதனாற் பாவனை கூறப்பட்டது. (அ)

* உ௬உ - ஆம் குறளுரை.
† இவ்வதிகாரத்தின் ௫ - ஆம், எ - ஆம் குறள்கள்.
‡ சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம் - ௬அ௩.

௩ருசு. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.*

(இ - ள்.) சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின் - ஒருவன் எல்லாப் பொருட்குஞ் சார்பாய அச் செம்பொருளை யுணர்ந்து இருவகைப்பற்றுமற ஒழுகவல்ல னாயின்; சார்தரும் நோய் அழித்து மற்றுச் சார்தரா-அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ் வுணர்வொழுக்கங்களை யழித்துப் பின் சாரமாட்டா.

ஆகுபெயராற் சாருமிடத்தையும் சார்வனவற்றையுஞ் 'சார்' பென்றார். ஈண்டு 'ஒழுக்க' மென்றது யோக நெறி யொழுகுதலை. அஃது இயமம், நியமம், இருப்பு, உயிர்நிலை, மனவொருக்கம், தாரணை, தியானம், சமாதி யென எண்வகைப்படும். அவற்றின் பரப்பெல்லாம் ஈண் டுரைப்பிற் பெருகும்; † யோக நூல்களுட் காண்க. 'மற்றுச் சார்தரா' வென இயையும்: சாரக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அனுபவித்தனவும், பிறந்த உடம்பான் முகந்து நின்றனவு மொழியப் பின்னும் அனுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன. அவை விளக்கின்முன் இருள்போல் ஞான யோகங்களின் முன்னர்க் கெடுதலான் 'அழித்துச் சார்தரா' வென்றார். இதனை ஆருகதர் உவர்ப்பென்ப. பிறப்பிற்குக் காரணமாகலான், நல்வினைப் பயனும் ‡ 'நோ' யெனப்பட்டது. மேன்மூன் றுபாயத்தானும் பரம்பொருளை யுணரப் பிறப்பறு மென்றார். அஃதறும்வழிக் கிடந்த துன்பங்களெல்லாம் என்செய்யுமென்னுங் கடாவையாசங்கித்து அவை ஞான யோகங்களின் முதிர்ச்சியுடைய உயிரைச் சாரமாட்டாமையானும் வேறு சார்பின்மையானும் கெட்டுவிடு மென்பது இதனாற் கூறப்பட்டது. (௯)

௩௬௦. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்.

(இ - ள்.) காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெட - ஞான யோகங்களின் முதிர்ச்சி யுடையார்க்கு விழைவு, வெறுப்பு, அவிச்சை யென்னும் இக் குற்றங்கள் மூன்றனுடைய பெயருங்கூடக் கெடுதலான்; நோய் கெடும் - அவற்றின் காரியமாய வினைப்பயன்கள் உளவாகா.

* திருக்களிற்றுப்படியார் - ௩௭.

† தொல். பொருள். புறத்திணையியல், சூ. எ௫, நச்சினார்க்கினியருரை. ‡ குறள் ௫-இன் உரை.

அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அது பற்றி அப்பொருட்கண் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லும் கோபமுமென வடநூலார் குற்ற மைந்தென்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக் கண்ணும் அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான், 'மூன்'றென்றார். இடையறுத ஞான யோகங்களின் முன்னர் இக்குற்றங்கள் மூன்றுங் காட்டுத்தீ முன்னர்ப் பஞ்சுத்துய்போலுமாகலின், அம்மிகுதி தோன்ற 'இவை மூன்றன் நாமங் கெட' வென்றார். இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. 'கெட' வென்பது எச்சத்திரிவு. 'நோ' யென்பது சாதி யொருமை. காரணமாய அக் குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவ துன்பங்களுமில்லை யென்பது இதனாற் கூறப்பட்டது. முன் கிடந்த துன்பங்களும் மேல்வரக்கடவ துன்பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனாகலின், இவை இரண்டு பாட்டும் இவ் வதிகாரத்தவாயின. இவ்வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்த உடம்பும் அது கொண்ட வினைப்பயன்களுமே யென்பது பெற்றாம். (க0)

---

## அதி. ௩௭—அவாவறுத்தல்

[அஃதாவது, முன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேதனைபற்றி ஒரோ வழித் துறக்கப்பட்ட புலன்கண்மேற் பழைய பயிற்சிவயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினைவும் அவிச்சை யெனப் பிறவிக்கு வித்தாமாகலின், அதனை இடைவிடாது மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல்; அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

௩௬௧. அவாவென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(இ - ள்.) எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப் பிறப்பு ஈனும் வித்து - எல்லா உயிர்கட்கும் எக்காலத்தும் கெடாது வருகின்ற பிறப்பினை விளைவிக்கும் வித்து; அவா என்ப - அவாவென்று சொல்லுவர் நூலோர்.

உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்த வினையும், அது காட்டுங் கதி நிமித்தங்களும், அக் கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ் வுயிரை அவ் வவா அக்கதிக்கட்கொண்டு செல்லுமாகலான், அதனைப்

'பிறப்பீனும் வித்' தென்றும், கதிவயத்தா னுளதாய அவ்வுயிர் வேறுபாட்டினும் அவை தன்மை திரியும் உற்சர்ப்பிணி அவசர்ப் பிணி யென்னும் காலவேறுபாட்டினும் அது வித்தாதல் வேறு படாமையின் 'எல்லா உயிர்க்கு மெஞ்ஞான்று' மென்றும், இஃது எல்லாச் சமயங்கட்கு மொத்தலான் 'என்ப' வென்றுங் கூறினர். இதனாற் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது. (க)

௩௬௨. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.*

(இ - ள்.) வேண்டுங்கால் பிறவாமை வேண்டும் - பிறப்புத் துன்பமாதலறிந்தவன் ஒன்றை வேண்டிற் பிறவாமையை வேண்டும்; அது வேண்டாமை வேண்ட வரும் - அப் பிறவாமைதான் ஒரு பொருளையும் அவாவாமையை வேண்ட அவனுக்குத் தானே யுண்டாம்.

அநாதியாகத்தான் பிறப்புப்பிணி மூப் பிறப்புக்களால் துன்ப முற்று வருகின்றமையை யுணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின் கண்ணே யாகலிற் பிறவாமையை 'வேண்டு'மென்றும், ஈண்டைச் சிற்றின்பங் கருதி ஒருபொருளை யவாவின் அது 'பிறப்பீனும் வித்' தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின், அது 'வேண்டாமை வேண்ட வரு' மென்றுங் கூறினர். பிறவாமையின் சிறப்புக் கூறிப் பின் அது வரும்வழி கூறத் தொடங்குகின்றமை யின் 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. (உ)

௩௬௩. வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
ஆண்டும் அஃதொப்ப தில்.

(இ - ள்.) வேண்டாமை அன்ன விழு செல்வம் ஈண்டு இல்லை - ஒரு பொருளையும் அவாவாமையை யொக்கும் விழுமிய செல்வம் காணப்படுகின்ற இவ்வுலகின்க ணில்லை; ஆண்டும் அஃது ஒப்பது இல் - இனி அவ்வளவே யன்று, கேட்கப்படுகின்ற துறக்கத்தின் கண்ணும் அதனை யொப்பதில்லை.

மக்கள் செல்வமும் தேவர் செல்வமும் மேன்மேனுேக்கக் கீழாதலுடைமையின், தனக்கு மேலில்லாத வேண்டாமையை 'விழுச் செல்வ' மென்றும், அதற்கு இரண்டுலகினு 'மொப்ப தில்லை' யென்றுங் கூறினர். ஆகமவளவை போலாது காட்சி யளவை எல்லாரானுந் தெளியப்படுதலின் மக்கள் செல்வம் வகுத்து முற்கூறப்பட்டது. பிறவாமைக்கு வழியா மெனவும்,

* திருக்களிற்றுப்படியார் - ௬0.

விழுச் செல்வமா மெனவும், வேண்டாமையின் சிறப்பு இவ் விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (ங)

ருசுச. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(இ-ள்.) தூஉய்மை என்பது அவா வின்மை - ஒருவர்க்கு வீடென்று சொல்லப்படுவது அவா இல்லாமை; அது வாய்மை வேண்ட வரும் - அவ் வவா இல்லாமைதான் மெய்ம்மையை வேண்டத் தானே யுண்டாம்.

வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதலாகலின், அதனைத் 'தூய்மை' யென்றும், காரணத்தைக் காரியமாக உபசரித்துத் 'தூய்மை யென்ப - தவாவின்மை' யென்றும், மெய்ம்மையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மை யென்றுங் கூறினர். 'மற்று' மேலையதுபோல வினைமாற்றின்கண் வந்தது. வேண்டுதல், இடைவிடாது பாவித்தல். அவாவறுத்தல், வீட்டிற்குப் பரம்பரையானன்றி நேரே யேதுவென்பதூஉம் அது வரும்வழியும் இதனாற் கூறப்பட்டன, (ச)

ருசுரு. அற்றவ ரென்பார் அவாவற்றார் மற்றையார்
அற்றாக அற்ற திலர்.

(இ-ள்.) அற்றவர் என்பார் அவா அற்றார் - பிறவியற்றவ ரென்று சொல்லப்படுவார் அதற்கு நேரே யேதுவாகிய அவா அற்றவர்கள்; மற்றையார் அற்றாக அற்றது இலர் - பிற வேதுக்களற்று அஃதொன்று மறாதவர்கள், அவற்றால் சில துன்பங்களற்றதல்லது அவர்போற் பிறவி அற்றிலர்.

இதனால் அவா அறுத்தாரது சிறப்பு விதிமுகத்தானும் எதிர்மறை முகத்தானுங் கூறப்பட்டது. (ரு)

ருசுசு. அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

(இ-ள்.) ஒருவனை வஞ்சிப்பது அவா-மெய்யுணர்த லீறாகிய காரணங்களெல்லா மெய்தி அவற்றான் வீடெய்தற்பாலனாய ஒருவனை மறவி வழியாற் புகுந்து பின்னும் பிறப்பின்கண்ணே வீழ்த்துக் கெடுக்கவல்லது அவா; அஞ்சுவதே அறன் - ஆகலான், அவ்வாவவை அஞ்சிக் காப்பதே துறவறமாவது.

'ஒரு' மென்பன அசைநிலை. அநாதியாய்ப்போந்த அவா, ஓரோவழி வாய்மை வேண்டலை யொழிந்து பராக்காற் காவா

ஞயின், அஃதிடமாக அவனறியாமற் புகுந்து பழைய இயற்கையாய் நின்று பிறப்பினை யுண்டாக்குதலான், அதனை 'வஞ்சிப்ப' தென்றார். காத்தலாவது வாய்மை வேண்டலை இடைவிடாது பயின்று அது செய்யாமற் பரிகரித்தல் இதனால். அவாவின் குற்றமும் அதனைக் காப்பதே அறமென்பதூஉங் கூறப்பட்டன. (சு)

௩சு௭. அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(இ-ள்.) அவாவினை ஆற்ற அறுப்பின் - ஒருவன் அவாவினையஞ்சித் துவரக் கெடுக்க வல்லனாயின், தவா வினை தான் வேண்டும் ஆற்றான் வரும் - அவனுக்குக் கெடாமைக் கேதுவாகிய வினை தான் விரும்பு நெறியானே யுண்டாம்.

கெடாமை பிறவித் துன்பங்களான் அழியாமை. அதற்கேதுவாகிய வினையென்றது மேற்சொல்லிய துறவறங்களை. 'வினை' சாதி யொருமை. 'தான் விரும்பு நெறி' மெய்வருந்தா நெறி. 'அவாவினை' முற்ற அறுத்தானுக்கு வேறறஞ் செய்யவேண்டா, செய்தனவெல்லாம் அறமாமென்பது கருத்து. இதனால் அவா அறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது. (௭)

௩சுஅ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.

(இ-ள்.) அவா இல்லார்க்குத் துன்பம் இல்லாகும் - அவா இல்லாதார்க்கு வரக்கடவதொரு துன்பமுமில்லை; அஃது உண்டேல் தவாஅது மேன்மேல் வரும் - ஒருவற்குப் பிற காரணங்களெல்லாமின்றி அஃதொன்று முண்டாயின், அதனானே எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும்.

உடம்பு முகந்து நின்ற துன்பம் முன்பே செய்துகொண்டதாகலின், ஈண்டுத் 'துன்ப' மென்றது இதுபொழுது அவாவாற் செய்து கொள்வனவற்றை. 'தவாஅது மேன்மேல் வரு' மென்றதனான் மூவகைத் துன்பங்களுமென்பது பெற்றாம். இதனால் அவாவே துன்பத்திற்குக் காரணமென்பது கூறப்பட்டது. (அ)

௩சுகூ. இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னுந்
துன்பத்துள் துன்பங் கெடின்.

(இ-ள்.) அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் - அவாவென்று சொல்லப்படுகின்ற மிக்க துன்பம் ஒருவற்குக் கெடு

மாயின்; ஈண்டும் இன்பம் இடையறாது-அவன் வீடு பெற்ற வழியே யன்றி உடம்போடு நின்ற வழியும் இன்பம் இடையறாது.

'துன்பத்துட் டுன்பம்' எனைத் துன்பங்களெல்லாம் இன்பமாக வருந் துன்பம். வினைவின்கண்ணே யன்றித் தோற்றத்தின் கண்ணுந் துன்பமாகலின் இவ்வாறு கூறப்பட்டது. காரணத்தைக் காரியமாக உபசரித்து 'அவாவென்னுந் துன்பத்துட் டுன்ப' மென்றும், அது கெட்டார்க்கு மனந் தடுமாறாது நிரம்பி நிற்றலான், 'ஈண்டு மின்பமிடையறா' தென்றுங் கூறினார். இனி 'ஈண்டு'மென்பதற்குப் பெருகுமென் றுரைப்பாரு முளர்.* இதனால் அவாவறுத்தார் வீட்டின்பம் உடம்பொடு நின்றே எய்துவரென்பது கூறப்பட்டது. (௯)

௩எ௦. ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

(இ - ள்.) ஆரா இயற்கை அவா நீப்பின் - ஒருகாலும் நிரம்பாத இயல்பினையுடைய அவாவினை ஒருவன் நீக்குமாயின்; அந்நிலையே பேரா இயற்கை தரும்-அந் நீப்பு அவனுக்கு அப்பொழுதே எஞ்ஞான்றும் ஒரு நிலைமையனாம் இயல்பைக் கொடுக்கும்.

'நிரம்பா'மையாவது தாமேயன்றித் தம் பயனும் நிலையாமையின் வேண்டாதனவாய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல். அவ் வளர்ச்சிக்கு அளவின்மையின், நீத்தலே தக்கதென்பது கருத்து. களிப்புக் கவற்சிகளும் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களும் முதலாயினவின்றி உயிர் நிரதிசய வின்பத்ததாய் நிற்றலின் வீட்டினைப் 'பேரா வியற்கை' யென்றும், அஃது அவா நீத்த வழிப் பெறுதல் ஒருதலையாகலின் அந்நிலையே 'தரு' மென்றுங் கூறினார். "நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லா மீர்த்—தொன்றாய்க் கிடந்த வரும் பெரும்பா ழுலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து—சென்றாங் கின்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றா - லன்றே யப்போ தேவீடு மதுவே வீடு வீடாமே'† என்பதும் இக்கருத்தேபற்றி வந்தது. இந் நிலைமையுடையவனை வடநூலார் சீவன் முத்தனென்ப. இதனால் வீடாவது இது வென்பதூஉம், அஃது அவா வறுத்தார்க்கு அப்பொழுதே யுளதா மென்பதூஉங் கூறப்பட்டன. (க௦)

துறவறவியல் முற்றிற்று.

———

* மணக்குடவர். † திருவாய்மொழி, எஅ-ஆம் திருப்பதிகம்-௯.

## ௩. ஊழியல்

இவ்வாற்ருன் இம்மை மறுமை வீடென்னு மூன்றனையும் பயத்தற் சிறப்புடைத்தாய அறங் கூறினர்; இனிப் பொருளும் இன்பமுங் கூறுவார், அவற்றின் முதற்காரணமாகிய ஊழின்வலி கூறுகின்ருர்.

35.3

### அதி. ௩௮—ஊழ்

[அஃதாவது, இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற் கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி யென்பன ஒரு பொருட்கிளவி. இது பொருளின் பங்க ளிரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படா மையானும், மேற்கூறிய அறத்தோ டியைபுடைமையானும், அதன திறுதிக்கண் வைக்கப்பட்டது.]

**௩௭௧. ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்**
**போகூழால் தோன்று மடி.**

(இ - ள்.) கைப்பொருள் ஆகு ஊழால் அசைவின்மை தோன்றும் - ஒருவற்குக் கைப்பொருளாதற்குக் காரணமாகிய ஊழான் முயற்சி யுண்டாம்; போகு ஊழால் மடி தோன்றும்-அஃ தழிதற் குக் காரணமாகிய ஊழான் மடியுண்டாம்.

'ஆகூழ்' 'போகூ' ழென்னும் வினைத்தொகைகள் எதிர்காலத் தான் விரிக்கப்பட்டுக் காரணப் பொருளவாய் நின்றன. அசைவு-மடி. பொருளினுக்க வழிவுகட்குத் துணைக்காரணமாகிய முயற்சி மடிகளையுந் தானே தோற்றுவிக்கு மென்பது கருத்து. (௧)

**௩௭௨. பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்**
**ஆகலூ ழுற்றக் கடை.**

(இ - ள்.) இழவு ஊழ் (உற்றக்கடை) அறிவு பேதைப்படுக் கும் - ஒருவனுக்கு எல்லா அறிவு முளவாயினும் கைப்பொருளிழத் தற் கேதுவாகிய ஊழ் வந்துற்ற விடத்து அஃது அதனைப் பேதை யாக்கும்: ஆகல் ஊழ் உற்றக் கடை அகற்றும் - இனி அவனறிவு சுருங்கி யிருப்பினும் கைப்பொருளாதற் கேதுவாகிய ஊழ் வந் துற்ற விடத்து அஃததனை விரிக்கும்.

'கைப்பொரு' ளென்பது அதிகாரத்தான் வந்தது. 'இழ வூழ்' 'ஆகலூ' ழென்பன இரண்டும் வேற்றுமைத் தொகை.

'உற்றக்கடை' யென்பது முன்னுங் கூட்டப்பட்டது. இயற்கை யானுகிய அறிவையும் வேறுபடுக்கு மென்பதாம். (உ)

௩௭௩. நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

(இ-ள்.) நுண்ணிய நூல் பல கற்பினும்-பேதைப்படுக்கும் ஊழுடையா ளொருவன் நுண்ணிய பொருள்களை யுணர்த்தும் நூல் பலவற்றையுங் கற்றானாயினும்; மற்றும் தன் உண்மை யறிவே மிகும்-அவனுக்குப் பின்னுந் தன் ஊழானாகிய பேதைமை யுணர்வே மேற்படும்.

பொருளி 'னுண்மை' நூலின்மே லேற்றப்பட்டது. 'மேற்படு தல்' கல்வி யறிவைப் பின்னிரங்குதற்காக்கிச் செயலுக்குத் தான் முற்படுதல். ''காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா—வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்''* என்பது மது. செயற்கை யானய அறிவையுங் கீழ்ப்படுத்து மென்பதாம். (௩)

௩௭௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

(இ-ள்.) உலகத்து இயற்கை இரு வேறு-உலகத்து ஊழினா ளய இயற்கை இரண்டு கூறு; திருவேறு தெள்ளிய ராதலும் வேறு - ஆதலாற் செல்வமுடையராதலும் வேறு, அறிவுடையராத லும் வேறு.

செல்வத்தினைப் படைத்தலுங் காத்தலும் பயன்கோடலும் அறிவுடையார்க் கல்ல தியலா வன்றே; அவ்வாறன்றி அறிவுடை யார் வறியராகவும் ஏனையார் செல்வராகவுங் காண்டலான், அறி வுடையராதற் காகு மூழ் செல்வமுடையராதற் காகாது; செல்வ முடையராதற் காகு மூழ் அறிவுடையராதற் காகா தென்றதா யிற்று. ஆகவே, செல்வஞ் செய்யுங்கால் அறிவாகிய துணைக் காரணமும் வேண்டாவென்பது பெற்றாம். (௪)

௩௭௫. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(இ-ள்.) செல்வம் செயற்கு - செல்வத்தை யாக்குதற்கு - நல்லவை எல்லாம் தீயவாம் - நல்லவை யெல்லாந் தீயவாய் அழிக் கும்; தீயவும் நல்லவாம் - அதுவே யன்றித் தீயவை தாமும் நல்ல வாய் ஆக்கும், ஊழ் வயத்தான்.

* சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம் - எகூ.

'நல்லவை' 'தீயவை' யென்பன காலமும், இடனும், கருவியும், தொழிலும் முதலாயவற்றை. 'ஊழா' னென்பது அதிகாரத்தாற் பெற்றும். அழிக்குமூ ழுற்றவழிக் கால முதலிய நல்லவாயினும் அழியும்; ஆக்குமூ ழுற்றவழி அவை தீயவாயினும் ஆகுமென்பதாயிற்று. ஆகவே, கால முதலிய துணைக்காரணங்களையும் வேறு படுக்குமென்பது பெற்றும். (ரு)

ஙஎசு. பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

(இ - ள்.) பால்அல்ல பரியினும் ஆகாவாம்-தமக் கூழல்லாத பொருள்கள் வருந்திக் காப்பினும் தம்மிடத்து நில்லாவாம்; தம உய்த்துச் சொரியினும் போகா - ஊழால் தமவாய பொருள்கள் புறத்தே கொண்டுபோய்ச்சொரிந்தாலும், தம்மைவிட்டுப்போகா.

பொருள்களி னிலையும் போக்கும் ஊழினு னுவதல்லது காப்பிகழ்ச்சிகளா னுகா வென்பதாம். இவை ஆறு பாட்டானும் பொருட்குக் காரணமாய ஊழின் வலி கூறப்பட்டது. (சு)

ஙஎஎ. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(இ - ள்.) கோடி தொகுத்தார்க்கும் - ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள் கோடியை முயன்று தொகுத்தார்க்கும்; வகுத்தான் வகுத்த வகையல்லால் துய்த்தல் அரிது - தெய்வம் வகுத்த வகையா னல்லது நுகர்த லுண்டாகாது.

ஒருயிர் செய்த வினையின் பயன் பிறிதோ ருயிரின்கட் செல்லாமல் அவ் வுயிர்க்கே வகுத்தலின் 'வகுத்தா' னென்றுர். "இசைத்தலு முரிய வேறிடத் தான"* என்பதனுன் உயர்திணையாயிற்று. படையாதார்க்கே யன்றிப் படைத்தார்க்கு† மென்றமையால், உம்மை எச்சவும்மை. வெறு முயற்சிக‡ளாற் பொருள்களைப் படைத்த லல்லது நுகர்தலாகாது; அதற்கு ஊழ் வேண்டுமென்பதாயிற்று. (எ)

ஙஎஅ. துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியு மெனின்.

(இ - ள்.) துப்புரவு இல்லார் துறப்பார்-வறுமையா னுகர்ச்சியில்லாதார் துறக்கும் கருத்துடையராவர்; உறற்பால ஊட்டா

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம் - ருகூ.
† தொகாதார்க்கே யன்றித்தொகுத்தார்க்கும்என்றும்பாடம்
‡ இலக்கணக்கொத்து, வினையியல், பதினேழாஞ்சூத்திரவுரை.

கழியுமெனின் - ஊழ்கள் உறுதற்பாலவாய துன்பங்களை உறு வியாதொழியுமாயின்.

'துறப்பா' ரென்பது ஆரீற் றெதிர்கால முற்றுச்சொல். தம்மால் விடப்பெறுவன தாமே விடப்பெற்று வைத்துங், கருத்து வேறுபாட்டால் துன்ப முறுகின்றது ஊழின் வலியா னென்பது எஞ்சி நிற்றலின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. (அ)

ருஎகூ. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.

(இ - ள்.) நன்று ஆங் கால் நல்லவாக் காண்பவர்-நல்வினை விளையுங்கால் அதன் விளைவாய இன்பங்களைத் துடைக்குந் திறன் நாடாது இவை நல்லவென்று இயைந் தனுபவிப்பார்; அன்று ஆங் கால் அல்லற்படுவது எவன் - ஏனைத் தீவினை விளையுங்கால் அதன் விளைவாய துன்பங்களையும் அவ்வா றனுபவியாது துடைக்குந் திறன் நாடி அல்ல லுழப்பது என் கருதி?

தாமே முன்செய்து கொண்டமையானும், ஊட்டாது கழி யாமையானும், இரண்டும் இயைந் தனுபவிக்கற்பால; அவற்றுள் ஒன்றற்கு இயைந் தனுபவித்து ஏனையதற்கு அது செய்யாது வருந்துதல் அறிவன் றென்பதாம். இவை மூன்று பாட்டானும் இன்பத் துன்பங்கட்குக் காரணமாய ஊழின்வலி கூறப்பட்டது. (கூ)

ருஅ0. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) மற்றொன்று சூழினும் தான் முந்துறும் - தன்னை விலக்குதற் பொருட்டுத் தனக்கு மறுதலையாவதோ ருபாயத்தைச் சூழினும், தான் அவ் வுபாயமேயானும் பிறிதொன்றானும் வழியாக வந்து அச் சூழ்ச்சியின் முற்பட்டு நிற்கும்; ஊழிற் பெருவலியா உள - அதனால் ஊழ்போல் மிக்க வலியுடையன யாவை யுள?

'பெருவலி' ஆகுபெயர். சூழ்தல் பலருடனும் பழுதறவெண் ணுதல். செய்தற்கே யன்றிச் சூழ்தற்கும் அவதி கொடாதென் றமையின், உம்மை எச்சவும்மை. எல்லாம் வழியாக வருதலுடை மையின், ஊழே வலிய தென்பதாம். இதனான் அவ் விருவகை யூழின் வலியும் பொதுவாகக் கூறப்பட்டது. (க0)

ஊழியல் முற்றிற்று.

அறத்துப்பால் முற்றிற்று.

———

# உ. பொருட்பால்

## க. அரசியல்

இனி, இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவானெடுத்துக்கொண்டார். அது தன் துணைக்காரணமாய அரசனீதி கூறவே யடங்கும். அரசனீதியாவது காவலை நடாத்து முறைமை. அதனை அரசியல், அங்கவியல், ஒழிபிய லென மூவகைப்படுத்து; மலர்தலை யுலகிற் குயிரெனச் சிறந்த அரசன தியல்பு இருபத்தைந்து அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்.

### அதி. ௩௯—இறைமாட்சி

[அஃதாவது, அவன் தன் நற்குண நற்செய்கைகள். உலகபாலருருவாய் நின்று உலகங்காத்தலின், 'இறை' யென்றார் ; "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்"* என்று பெரியாரும் பணித்தார்.]

**௩அக. படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்**
**உடையான் அரசரு ளேறு.**

(இ - ள்.) படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் - படையுங் குடியுங் கூழும் அமைச்சும் நட்பும் அரணு மென்று சொல்லப்பட்ட ஆறங்கங்களையு முடையவன்; அரசருள் ஏறு - அரசருள் ஏறு போல்வான்.

ஈண்டுக் 'குடி' யென்றது அதனையுடைய நாட்டினை; 'கூழ்' மென்றது அதற் கேதுவாய பொருளை. அமைச்சு, நாடு அரண், பொருள், படை, நட்பென்பதே முறையாயினும், ஈண்டுச் செய்யுள் நோக்கிப் பிறழவைத்தார். 'ஆறுமுடையா' னென்றதனால், அவற்றுள் ஒன்றில்வழியும், அரசனீதி செல்லாதென்பது பெற்றாம்; வடநூலார் இவற்றிற்கு அங்க மெனப் பெயர்கொடுத்ததூஉம் அது நோக்கி. 'ஏ'றென்பது உபசார வழக்கு. இதனால் அரசற் கங்க

---

* திருவாய்மொழி, ௩௪ ஆம் திருப்பதிகம் - அ.

மாவன இவையென்பதூஉம் இவை முற்றுமுடைமையே அவன் வெற்றிக் கேதுவென்பதூஉங் கூறப்பட்டன (க)

கூஅஉ. அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

(இ - ள்.) வேந்தற்கு இயல்பு - அரசனுக்கியல்பாவது ; அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை-திண்மையும் கொடையும் அறிவும் ஊக்கமு மென்னும் இந்நான்கு குணமும் இடைவிடாது நிற்றல்.

'ஊக்கம்' வினைசெய்தற்கண் மனவெழுச்சி. இவற்றுள் 'அறிவு' ஆறங்கத்திற்கு முரித்து; 'ஈகை' படைக்குரித்து; ஏனைய வினைக்குரிய. உயிர்க்குணங்களுள் ஒன்று தோன்ற ஏனைய அடங்கிவரும்; அவற்றுள் இவை அடங்கின், அரசற்குக்கெடுவன பலவா மாகலின், இவை எப்பொழுதுந் தோன்றிநிற்றல் இயல்பாக வேண்டுமென்பார், 'எஞ்சாமை வேந்தற் கியல்' பென்றார். (உ)

கூஅஙூ. தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு.

(இ - ள்.) நிலன் ஆள்பவற்கு-நிலத்தினை யாளுந் திருவுடையாற்கு; தூங்காமை கல்வி துணிவுடைமை இம் மூன்றும் நீங்கா - அக் காரியங்களில் விரைவுடைமையும் அவை யறிதற்கேற்ற கல்வியுடைமையும் ஆண்மை யுடைமையுமாகிய இம் மூன்று குணமும் ஒருகாலும் நீங்கா.

கல்வியது கூறுபாடு முன்னர்க் கூறப்படும்.* 'ஆண்மை' யாவது ஒன்றனையும் பாராது கடிதிற் செய்வதாகலின், அஃது ஈண்டு உபசார வழக்காற் 'றுணி' வெனப்பட்டது. உம்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை. இவற்றுட் 'கல்வி' ஆறங்கத்திற்கு முரித்து, ஏனைய வினைக்குரிய. 'நீங்கா' வென்பதற்கு மேலெஞ்சாமைக் குரைத்தாங் குரைக்க. (ங)

கூஅச. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(இ - ள்.) அறன் இழுக்காது - தனக்கோதிய அறத்தின் வழுவா தொழுகி; அல்லவை நீக்கி - அறனல்லவை தன்னாட்டின் கண்ணும் நிகழாமற் கடிந்து; மறன் இழுக்கா மானம் உடையது அரசு - வீரத்தின் வழுவாத தாழ்வின்மையினையுடையான் அரசன்.

* அதி சுO.

அவ் 'வற'மாவது ஓதல், வேட்டல், ஈத லென்னும் பொதுத் தொழிலினும், படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத் திறந்தெறுத லென்னுஞ் சிறப்புத்தொழிலினும் வழுவாது நிற்றல். "மாண்ட—வறநெறி முதற்றே யரசின் கொற்றம்"* என்பதனுல் இவ் வறம் பொருட்குக் காரணமாத லறிக. 'அல்லவை' கொலை, களவு முதலாயின. குற்றமாய மானத்தினிக்குதற்கு,†'மறனிழுக்கா மான'மென்ருர்; அஃதாவது "வீறின்மையின் விலங்காமென மத வேழமு மெறியா—னேறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான் - மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியா - ஞறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன்"‡ எனவும்; "அழியுநர் புறக்கொடையயில்வே லோச்சான்"§ எனவுஞ் சொல்லப்படுவது. 'அரசு' அரசனது தன்மை; அஃது உபசார வழக்கால் அவன்றன்மே னின்றது. (ச)

ரு அரு. இயற்றலும் ஈட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(இ - ள்.) இயற்றலும்-தனக்குப் பொருள்கள் வரும்வழிகளை மேன்மே லுளவாக்கலும்; ஈட்டலும் - அங்ஙனம் வந்தவற்றை ஒரு வழித் தொகுத்தலும்; காத்தலும் - தொகுத்தவற்றைப் பிறர் கொள்ளாமற் காத்தலும்; காத்த வகுத்தலும்-காத்தவற்றை அறம் பொருளின்பங்களின் பொருட்டு விடுத்தலும்; வல்லது அரசு - வல்லவனே அரசன்.

'ஈட்டல்' 'காத்தல்' 'வகுத்த' லென்றவற்றிற்கேற்ப 'இயற்ற' லென்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. 'பொருள்க' ளாவன மணி, பொன், நெல் முதலாயின. அவை 'வரும் வழிக' ளாவன பகைவரை யழித்தலும், திறைகோடலும், தன்னுடு தலை யளித்தலும் முதலாயின. 'பிற'ரென்றது பகைவர், கள்வர், சுற்றத் தார், வினைசெய்வார் முதலாயினர். கடவுளர், அந்தணர், வறியா ரென் றிவர்க்கும் புகழிற்குங் கொடுத்தலை அறப்பொருட்டாகவும்; யானை, குதிரை, படை, நாடு அரணென் றிவற்றிற்கும் பகையொடு கூடலிற் பிரிக்கப்படுவார்க்குந் தன்னிற் பிரிதலிற் கூட்டப்படு வார்க்குங் கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும்; மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா முதலிய செய்தற்கும் ஐம்புலன்க ளான் நுகர்வனவற்றிற்குங் கொடுத்தலை இன்பப் பொருட்டாகவுங் கொள்க. 'இயற்றன்' முதலிய தவருமற்செய்தல் அரிதாகலின்,

* புறநானூறு - ருரு. † சஙஉ - ஆம் குறளுரை.
‡ சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம் கசுO.
§ புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சி - உO.

'வல்ல'தென்றார். இவை நான்கு பாட்டானும் மாட்சியே கூறப் பட்டது. (ரு)

௫அசு. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

(இ - ள்.) காட்சிக்கு எளியன் - முறை வேண்டினார்க்குங் குறைவேண்டினார்க்குங் காண்டற் கெளியனாய்; கடுஞ்சொல்லன் அல்லனேல்-யாவர்மாட்டுங் கடுஞ்சொல்ல னல்லனு மாயின்; மன்னன் நிலம் மீக்கூறும்-அம்மன்னனது நிலத்தை எல்லா நிலங்களினும் உயர்த்துக் கூறும் உலகம்.

'முறை வேண்டினார்' வலியரான் நலி வெய்தினார். 'குறை வேண்டினார்' வறுமையுற்றிரந்தார். 'காண்டற்கெளி'மையாவது பேரத்தாணிக்கண் அந்தணர் சான்றோ ருள்ளிட்டாரோடு செவ்வி யுடையனா யிருத்தல். 'கடுஞ்சொல்' கேள்வியினும், வினையினுங் கடியவாய சொல். நிலத்தை மீக்கூறு மெனவே மன்னனை மீக்கூறுதல் சொல்ல வேண்டாவாயிற்று. 'மீக்கூறு'தல் இவன் காக்கின்ற நாடு, பசி பிணி பகை முதலிய வின்றி யாவர்க்கும் பேரின்பந் தருதலின் தேவருலகினும் நன்றென்றல். 'உலக'மென்னு மெழுவாய் வருவிக்கப்பட்டது. (சு)

௫அஎ. இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு.

(இ - ள்.) இன்சொலால் ஈத்து அளிக்க வல்லாற்கு - இனிய சொல்லுடனே ஈதலைச்செய்து அளிக்கவல்ல அரசனுக்கு; இவ்வுலகு தன் சொலால் தான் கண்டனைத்து - இவ்வுலகந் தன் புகழோடு மேவித் தான் கருதிய அளவிற்றாம்.

'இன்சொல்' கேள்வியினும் வினையினும் இனியவாய சொல். 'ஈதல்' வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தல். 'அளித்தல்' தன் பரிவாரத்தானும் பகைவரானும் நலிவுபடாமற் காத்தல். இவை அரியவாகலின் 'வல்லாற்'கென்றும், அவன் மண் முழுதாளுமாகலின் 'இவ்வுல' கென்றுங் கூறினார். கருதிய அளவிற்றாதல் கருதிய பொருளெல்லாஞ் சுரத்தல். (எ)

௫அஅ. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(இ - ள்.) முறை செய்து காப்பாற்றும் மன்னவன் - தான் முறைசெய்து பிறர் நலியாமற் காத்தலையுஞ் செய்யும் அரசன்; மக்

கட்கு இறை என்று வைக்கப்படும் - பிறப்பான் மகனே யாயினும் செயலான் மக்கட்குக் கடவுளென்று வேறு வைக்கப்படும்.

'முறை' அறநூலும் நீதிநூலுஞ் சொல்லும் நெறி. 'பிற' ரென்றது மேற்சொல்லியாரை. வேறுவைத்தல் மக்களிற் பிரித்து உயர்த்துவைத்தல். (அ)

நூஅகூ. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(இ - ள்.) சொல்செவி கைப்பப் பொறுக்கும் பண்பு உடை வேந்தன்-இடிக்குந் துணையாயினர் சொற்களைத் தன்செவி பொறு தாகவும் விளைவு நோக்கிப் பொறுக்கும் பண்புடைய அரசனது; கவிகைக்கீழ்த் தங்கும் உலகு-குடை நிழற்கண்ணே தங்கும் உலகம்.

'செவி கைப்ப' வென்றதற் கேற்ப 'இடிக்குந் துணையா' ரென்பது வருவிக்கப்பட்டது. நாவின் புலத்தைச் செவிமே லேற் றிக் 'கைப்ப' வென்றார். 'பண்புடைமை' விசேட வுணர்வின ளுதல். அற நீதிகளில் தவறாமையின், மண் முழுதுந் தானே யாளுமென்பதாம். (கூ)

நூகூ0. கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானும் வேந்தர்க் கொளி.

(இ - ள்.) கொடை - வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத் தலும்; அளி-யாவர்க்குந் தலையளி செய்தலும்; செங்கோல்- முறை செய்தலும்; குடி ஓம்பல்-தளர்ந்த குடிகளைப் பேணலுமாகிய; நான்கும் உடையான்-இந்நான்கு செயலையுமுடையவன்; வேந் தர்க்கு ஒளியாம் - வேந்தர்க் கெல்லாம் விளக்காம்.

'தலையளி' முகமலர்ந் தினிய கூறல். செவ்விய கோல் போறலின், 'செங்கோ' லெனப்பட்டது. 'குடியோம்ப' லென வெடுத்துக் கூறினமையால், தளர்ச்சி பெற்றும்; அஃதாவது ஆறி லொன்றாய பொரு டன்னையும் வறுமை நீங்கியவழிக் கொள்ளல் வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல் வேண்டின் இழத்தலு மாம். சாதி முழுதும் விளக்கலின் 'விளக்' கென்றார். 'ஒளி' ஆகுபெயர். இவை ஐந்து பாட்டானும் மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன. (க0)

---

# அதி. சும—கல்வி

[அஃதாவது, அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன: அறநூலும், நீதிநூலும், யானை, குதிரை, தேர், படைக்கலமென் றிவற்றின் நூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையனுயக்கால் தன்னுயிர்க்கே யன்றி மன்னுயிர்க்கும் பயன்படுத னேக்கி இஃதரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதிபயத்தற் சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்ருர். மேல் 'தூங்காமை கல்வி'* எனத் தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃதிறை மாட்சியின் பின் வைக்கப்பட்டது.]

௩௯௧. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

(இ - ள்.) கற்பவை கசடு அறக் கற்க - ஒருவன் கற்கப்படு நூல்களைப் பழுதறக் கற்க; கற்றபின் அதற்குத் தக நிற்க- அங்ஙனங் கற்ருல் அக் கல்விக்குத் தக அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்க.

'கற்பவை' யென்றதனுன், அறம் பொருளின்பம் வீடென்னும் உறுதிப்பொரு ளுணர்த்துவனவன்றிப் பிறபொரு ளுணர்த்துவன சின்னுட் பல்பிணிச் சிற்றறிவினர்க்கு ஆகாவென்பது பெற்ரும். 'கசடறக் கற்ற' லாவது விபரீத வையங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடன் பலகாலும் பயிறல். நிற்றலாவது இல்வாழ் வுழிக் "கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத்—தருமமுந் தக் கார்க்கே செய்"† தலினும், துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும், வழுவாமை. சிறப்புடை மகற்காயிற் கற்றல் வேண்டுமென்பதூஉம், அதனுற் கற்கப்படு நூல்களும், அவற்றைக் கற்குமாறும், கற்றதனுற் பயனும் இதனுற் கூறப்பட்டன. (க)

௩௯௨. எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு.

(இ - ள்.) எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும் - அறியாதார்எண்ணென்று சொல்லுவனவும் மற்றையெழுத்தென்று சொல்லுவனவுமாகிய கலைக ளிரண்டினையும்; வாழும் உயிர்க்குக் கண் என்ப - அறிந்தார் சிறப்புடைய உயிர்கட்குக் கண்ணென்று சொல்லுவர்.

---

* குறள் - ௩அ௩. † நாலடியார் - உ௫௦.

'எண்'ணென்பது கணிதம். அது கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும்; அவை ஏரம்ப முதலிய நூல்களுட் காண்க. 'எழுத்'தெனவே, அதனோ டொற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று. இவ் விரு திறமும், அறமுதற் பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின், 'கண்'ணெனப்பட்டன. அவை கருவியாதல், "ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி—னீதி வழுவா நிலைமையவான்-மாதே—யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்—றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு": "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந் தான்—மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு-மொழித்திறத் தின்—முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து—கட் டறுத்து வீடு பெறும்" இவற்று னறிக. 'என்ப'வென்பவற்றுள், முன்னைய இரண்டும் அஃறிணைப் பன்மைப்பெயர்; பின்னது உயர் திணைப் பன்மை வினை 'அறியாதார்' 'அறிந்தா' ரென்பன வருவிக்கப்பட்டன. 'சிறப்புடை யுயி' ரென்றது மக்க ளுயிருள்ளும் உணர்வு மிகுதியுடையதனை. இதனாற்கற்கப்படும் நூல்கட்குக் கருவி யாவனவும் அவற்ற தின்றியமையாமையுங் கூறப்பட்டன. (உ)

௩கூ௩. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(இ - ள்.) கண் உடையர் என்பவர் கற்றோர்-கண்ணுடைய ரென்று உயர்த்துச் சொல்லப்படுவார் கற்றவரே; கல்லாதவர் முகத்து இரண்டு புண் உடையர் - மற்றைக் கல்லாதவர் முகத்தின் கண் இரண்டு புண்ணுடையர், கண்ணிலர்.

தேயம் இடையிட்டவற்றையுங் காலம் இடையிட்டவற்றையுங் காணும் ஞானக் கண்ணுடைமையிற் கற்றாரைக் 'கண்ணுடைய' ரென்றும், அஃதின்றி நோய் முதலியவற்றாற் றுன்பஞ்செய்யும் ஊனக் கண்ணே யுடைமையிற் கல்லாதவரைப் 'புண்ணுடைய' ரென்றுங் கூறினார். மேற் கண்ணன்மை யுணரநின்ற ஊனக் கண்ணின் மெய்ம்மை கூறியவாற்றான், பொருணூல்களையுங் கருவி நூல்களையும் கற்றார துயர்வும் கல்லாதார திழிவும் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டன. (௩)

௩கூ௪. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

(இ - ள்.) உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே-யாவரையும் அவ ருவக்குமாறு தலைப்பெய்து இனி இவரை யாமெங்ஙனம் கூடுதுமென நினையுமாறு நீங்குதலாகிய அத்தன்மைத்து; புலவர் தொழில் - கற்றறிந்தாரது தொழில்.

தாம் நல்வழியொழுகல் பிறர்க்குறுதிகூறலென்பன இரண்டுந் தொழிலென ஒன்ரு யடங்குதலின், 'அத்தன்மைத்' தென்ருர். 'அத்தன்மை' அப்பயனைத்தருந் தன்மை. நல்லொழுக்கங் காண்டலானும், தமக்கு மதுரமு முறுதியுமாய கூற்றுக்கள் நிகழ் வெதிர்வுகளின் இன்பம் பயத்தலானும், கற்ருர்மாட்டு எல்லோரும் அன்புடையராவரென்பதாம். இதனுற் கற்ருர துயர்வு வகுத்துக் கூறப்பட்டது. (௬)

௩௬௫. உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்ருர்
கடையரே கல்லா தவர்.

(இ - ள்.) உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும்கற்ருர்- "பிற்றைநிலை முனியாது கற்றல் நன்"* ருதலான், செல்வர் முன் நல்கூர்ந்தார் நிற்குமாறு போலத் தாமும் ஆசிரியர்முன் ஏக்கற்று நின்றுங் கற்ருர் தலையாயினர்; கல்லாதவர் கடையரே-அந்நிலைக்கு நாணிக் கல்லாதவர் எஞ்ஞான்றும் இழிந்தாரேயாவர்.

'உடையார்', 'இல்லா' ரென்பன உலக வழக்கு. 'ஏக்கறுதல்' ஆசையாற்ருழ்தல். 'கடைய'ரென்றதனுன் அதன்மறுதலைப்பெயர் வருவிக்கப்பட்டது. பொய்யாய மானநோக்கி மெய்யாய கல்வி இழந்தார் பின்னொரு ஞான்றும் அறிவுடையராகாமையின், 'கடையரே' யென்ருர். இதனுற் கற்ருர துயர்வுங் கல்லாதார திழிவுங் கூறப்பட்டன. (௫)

௩௬௬. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

(இ - ள்.) மணற் கேணி தொட்டனைத்து ஊறும் - மணலின்கட் கேணி தோண்டிய அளவிற்ருக ஊறும்; மாந்தர்க்கு அறிவு' கற்றனைத்து ஊறும் - அதுபோல மக்கட்கறிவு கற்ற அளவிற்ருக ஊறும்.

ஈண்டுக் 'கேணி' யென்றது அதன்கண் ணீரை. 'அளவிற்ருக வென்றது அதனளவுஞ் செல்லவென்றவாறு. சிறிது கற்ற துணையான் அமையாது மேன்மேற் கற்றல்வெண்டு மென்பதாம். இஃது ஊழ் மாறுகொள்ளாவழியாகலின், மேல்'உண்மை யறிவே மிகும்'† என்றதனேடு மலையாமை அறிக. (௬)

௩௬௭. யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(இ - ள்.) யாதானும் நாடாம் ஊராம்-கற்றவனுக்குத் தன்னுடுந் தன்னூருமே யன்றி யாதானும் ஒரு நாடும் நாடாம்,

* புறநானூறு - ௧௮௩.    † திருக்குறள் - ௩௭௩.

யாதானும் ஒரூரும் ஊராம்; ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு என் - இங்ஙனமாயின் ஒருவன் தானிறக்கு மளவுங் கல்லாது கழி கின்றது என் கருதி?

உயிரோடு சேறலிற் 'சாந்துணையு'மென்றார். பிறர் நாடுகளும் ஊர்களும் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற் கேதுவாகலிற் கல்வி போலச் சிறந்தது பிறிதில்லை; அதனையே எப்பொழுதுஞ் செய்க வென்பதாம். (எ)

நுகூஅ. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து.

(இ - ள்.) ஒருவற்கு-ஒருவனுக்கு; தான் ஒருமைக்கண் கற்ற கல்வி - தானொரு பிறப்பின்கண் கற்ற கல்வி; எழுமையும் ஏமாப்பு உடைத்து - எழு பிறப்பினுஞ் சென்று உதவுதலை யுடைத்து.

வினைகள்போல உயிரின்கட் கிடந்து அது புக்குழிப் புகுமாக லின், 'எழுமையு மேமாப்புடைத்'தென்றார். எழுமை மேலே கூறப் பட்டது.* உதவுதல் நன்னெறிக்க ணுய்த்தல். (அ)

நுகூகூ. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(இ - ள்.) தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு - தாம் இன்புறுதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகம் இன்புறுதலால் அச் சிறப்பு நோக்கி; கற்றறிந்தார் காமுறுவர் - கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர்.

'தாமின்' புறுதலாவது நிகழ்வின்கட் சொற்பொருள்களின் சுவை நுகர்வானும், புகழ் பொருள் பூசை பெறுதலானும், எதிர் வின்கண் அறம் வீடு பயத்தலானும், அதனான் இடையறாத இன்ப மெய்துதல். 'உலகின்புறுத' லாவது இம் மிக்காரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்றே மென்றும், "யாண்டு பல வாக நரையில"† மாயினேமென்று முவத்தல். செல்வமாயின், ஈட்டல் காத்தல் இழத்தலென்றிவற்றாற் றுன்புறுதலும், பலரை யும் பகையாக்கலு முடைத்தென அறிந்து அதனைக் காமுறாமை யிற் 'கற்றறிந்தா' ரென்றும், கரும்பயிறற்குக் கூலிபோலத் தாமின்புறுதற்கு, உலகின்புறுதல் பிறவாற்றானின்மையின் அதனையே 'காமுறுவ' ரென்றுங் கூறினார். (கூ)

* கூஉ ஆம் குறளுரை. † புறநானூறு - கககூ.

௪00. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

(இ - ள்.) ஒருவற்குக் கேடு இல் விழுச் செல்வங் கல்வி - ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய செல்வமாவது கல்வி; மற்றை யவை மாடு அல்ல-அஃதொழிந்த மணியும் பொன்னு முதலாயின செல்வமல்ல.

அழிவின்மையாவது* தாயத்தார், கள்வர், வலியர், அரசரென் றிவராற் கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம். சீர்மை தக்கார்கண்ணே நிற்றல். மணி, பொன் முதலியவற்றிற்கு இவ்விரண்டு மின்மையின், அவற்றை 'மாடல்ல' வென்றார். இவை ஐந்து பாட்டானுங் கல்வியது சிறப்புக் கூறப்பட்டது. (க0)

———

## அதி. ௪௧—கல்லாமை

[அஃதாவது, கற்றலைச் செய்யாமை; என்றது அதனினாய இழிபினை. கல்விச் சிறப்பு மேல் விதிமுகத்தாற் கூறிய துணை யான் முற்றுப்பெறாமை நோக்கி, எதிர்மறை முகத்தானுங் கூறுகின்றதாகலின், இது கல்வியின் பின் வைக்கப்பட்டது.]

௪0க. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(இ - ள்.) அரங்கு இன்றி வட்டு ஆடியற்று - அரங்கினை யிழையாது வட்டாடினாற்போலும்; நிரம்பிய நூல் இன்றிக் கோட்டி கொளல்-தானிரம்புதற் கேதுவாகிய நூல்களைக் கல்லாது ஒருவன் அவையின்கண் ஒன்றனைச் சொல்லுதல்.

'அரங்கு' வகுத்த தானம், 'வட்டா'டல் உண்டையுருட்டல். இவை ''கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக் – கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்''† என்பதனா னறிக. நிரம்புதல் அறியவேண்டு வனவெல்லா மறிதல். 'கோட்டி' யென்பது ஈண்டாகுபெயர்; ''புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி''‡ என்புழிப் போலச் சொல்லும் பொருளும் நெறிப்படா தென்பதாம். (க)

௪0உ. கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

* நாலடியார்-கஙச. † நற்றிணை-ங. ‡ நாலடியார் - கருரு.

(இ - ள்.) கல்லாதான் சொற் காமுறுதல் - கல்வியில்லாதா னொருவன் அவையின்கண் ஒன்று சொல்லுதலை அவாவுதல்; முலை யிரண்டும் இல்லாதாள் பெண் காமுற்றற்று - இயல்பாகவே முலை யிரண்டுமில்லாதாளொருத்தி பெண்மையை அவாவினாற்போலும்.

"இனைத்தென வறிந்த சினை" யாகலின், தொகையொடு முற்றும்மை கொடுத்தார்; சிறிது மில்லாதா ளென்பதாம். அவா வியவழிக் கடை போகாது, போகினும் நகை விளைக்கு மென்ப தாயிற்று. (உ)

௪0௩. **கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்**
**சொல்லா திருக்கப் பெறின்.**

(இ - ள்.) கல்லாதவரும் நனிநல்லர் - கல்லாதாரும் மிகநல்ல ராவர்; கற்றார் முன் சொல்லாது இருக்கப்பெறின் - தாமே தம்மை யறிந்து கற்றா ரவையின்கண் ஒன்றனையுஞ் சொல்லாதிருத்தல் கூடுமாயின்.

உம்மை இழிவு சிறப்பும்மை. தம்மைத்தாம் அறியாமையின் அது கூடாதென்பார் 'பெறி'னென்றும் கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத்தாமையானும், பின் கல்வியை விரும்புவ ராகலானும் 'நனிநல்ல' ரென்றுங் கூறினார். இவை மூன்று பாட்டானும் கல் லாதார் அவைக்கண் சொல்லுதற்குரிய ரன்மை கூறப்பட்டது. (௩)

௪0௪. **கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினுங்**
**கொள்ளார் அறிவுடை யார்.**

(இ - ள்.) கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும் - கல்லாத வன தொண்மை ஒரோவழி மிக நன்றாயிருப்பினும்; அறிவுடை யார் கொள்ளார் - அறிவுடையார் அதனை யொண்மையாகக் கொள்ளார்.

ஒண்மை - அறிவுடைமை. அது நன்றாகாது, ஆயிற்றாயினும் ஏரலெழுத்துப் † போல்வதொரு விழுக்காடாகலின், நிலைபெற்ற நூலறிவுடையார் அதனை மதியா ரென்பதாம். (௪)

௪0௫. **கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து**
**சொல்லாடச் சோர்வு படும்.**

(இ - ள்.) கல்லா ஒருவன் தகைமை - நூல்களைக் கல்லாத ஒருவன் யானறிவுடையே னெனத் தன்னை மதிக்கு மதிப்பு

---

*தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம் - ௩௩
†ஏரல் - நத்தை: அது மணலிற் செல்லுங்கால் தோன்றும் எழுத்துப் போன்றது.

தலைப்பெய்து சொல்லாடச் சோர்வுபடும் - அவற்றைக் கற்றவன் கண்டு உரையாடக் கெடும்.

'கற்றவ' னென்பது வருவிக்கப்பட்டது. யாதானுமொரு வார்த்தை சொல்லுந் துணையுமே நிற்பது. சொல்லிய வழி வழுப் படுதலின், அழிந்துவிடு மென்பதாம். இவை இரண்டு பாட்டா னுங் கல்லாதார தியற்கை யறிவின் குற்றங் கூறப்பட்டது. (ரு)

சOசு. உளரென்னும் மாத்திரைய ரல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

(இ - ள்.) கல்லாதவர் - கல்லாதவர் ; உளர் என்னும் மாத் திரையர் அல்லால்-காணப்படுதலான் இலரல்லர் உளரென்று சிலர் சொல்லுமளவின ராதலன்றி ; பயவாக் களர் அனையர்-தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் விளையாத களர்நிலத்தோ டொப்பர்.

'களர்' தானும் பேணற்பாடழிந்து உயிர்கட்கும் உணவு முதலிய உதவாததுபோலத் தாமும் நன்கு மதிக்கற்பாடழிந்து பிறர்க்கும் அறிவு முதலிய உதவாரென்பதாம். இதனாற் கல்லா தாரது பயன்படாமை கூறப்பட்டது. (சு)

சOஎ. நுண்மாண் நுழைபுல மில்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

(இ - ள்.) நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம் நுண்ணிதாய் மாட்சிமைப்பட்டுப் பல நூல்களினுஞ் சென்று அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும்; மண் மாண் புனை பாவை யற்று - சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய எழுச்சியும் அழகும் போலும்.

அறிவிற்கு மாட்சிமையாவது பொருள்களைக் கடிதிற் காண்ட லும் மறவாமையும் முதலாயின. 'பாவை' ஆகுபெயர். "உருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிது"* ஆகலான் எழினலங் களும் ஒரு பயனே யெனினும் நூலறிவில்வழிச் சிறப்பில வென்ப தாம். இதனான் அவர் வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது. (எ)

சOஅ. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

(இ - ள்.) நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாது - கற்றார் மாட்டு நின்ற வறுமையினு மின்னாது ; கல்லார்கண் பட்ட திரு - கல்லார்மாட்டு நின்ற செல்வம்.

*சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம் - கஙச.

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றெக்கது. தத்தம் நிலையி னன்றி மாறி நிற்றலால் தாமிடுக்கட்படுதலும் உலகிற்குத் துன்பஞ் செய்தலும் இரண்டற்கு மொக்குமாயினும், திரு கல்லாரைக் கெடுக்க, வறுமை நல்லாரைக் கெடாது நிற்றலான், வறுமையினுந் திரு 'வின்னு' தென்றூர். இதனுல் அவர் திருவின் குற்றங் கூறப் பட்டது. (அ)

சு0கூ. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்ரு ரனைத்திலர் பாடு.

(இ - ள்.) கல்லாதார் மேற்பிறந்தார் ஆயினும் -கல்லாதார் உயர்ந்த சாதிக்கட்பிறந்தாராயினும்; கீழ்ப்பிறந்தும் கற்றூர் அனைத் துப் பாடு இலர் - தாழ்ந்த சாதிக்கட் பிறந்து வைத்துங் கற்றூரது பெருமை யளவிற்றுய பெருமை யிலர்.

உடலோ டொழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லுங் கல்வி* யுயர்ச்சி சிறப்புடைத் தென்பதாம். இதனுல் அவர் சாதி யுயர்ச்சியாற் பயனின்மை கூறப்பட்டது. (கூ)

சுக0. விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்ருரோ டேனை யவர்.

(இ - ள்.) விலங்கொடு மக்கள் அனையர்-விலங்கோடு நோக்க மக்கள் எத்துணை நன்மையுடையர் அத்துணைத் தீமையுடையர்; இலங்குநூல் கற்றூரோடு ஏனையவர்-விளங்கிய நூலைக் கற்றூரோடு நோக்கக் கல்லாதவர்.

'விலங்கு', 'நூல்' சாதிப்பெயர். விளங்குதல் - மேம்படுதல். விலங்கின் மக்கட்கேற்றமாய உணர்வுமிகுதி காணப்படுவது கற்றூர் கண்ணே யாகலின், கல்லாதாரும் அவரும் ஒத்த பிறப்பினரல்ல ரென்பதாம். மயக்க நிரனிறை. இதனுல் அவர் மக்கட் பிறப்பாற் பயனெய்தாமை கூறப்பட்டது. (க0)

---

## அதி. சுஉ—கேள்வி

[அஃதாவது, கேட்கப்படு நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல். கற்றவழி அதனிறைய அறிவை வலியுறுத்தலானும், கல்லாத வழியும் அதனை யுண்டாக்குதலானும் இது கல்வி கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.]

சுகக. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

* குறள் - ௩கூஅ.

(இ - ள்.) செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் - ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான் வருஞ் செல்வம்; அச் செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை - அச்செல்வம் பிறசெல்வங்களெல்லாவற்றினுந் தலையாகலான்.

செவியான் வருஞ்செல்வம் கேள்வியான் எல்லாப் பொருளையும் அறிதல். பிற செல்வங்கள் பொருளான் வருவன. அவை நிலையாவாகலானும், துன்ப விளைவின வாகலானும், இது 'தலை' யாயிற்று. அவற்றை யொழித்து இதனையே செய்க வென்பது குறிப்பெச்சம். (க)

சகஉ. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.

(இ - ள்.) செவிக்கு உணவு இல்லாத போழ்து - செவிக்குணவாகிய கேள்வியில்லாத பொழுது; வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் - வயிற்றுக்குஞ் சிறிதுணவு இடப்படும்.

சுவை மிகுதியும் பிற்பயத்தலுமுடைய கேள்வியுள்ளபொழுது வெறுக்கப்படுதலான் 'இல்லாத போழ்'தென்றும், பெரிதாய வழித் தேடற் றுன்பமே யன்றி நோயுங் காமமும் பெருகுதலாற் 'சிறி' தென்றும், அதுதானும் பின்னிருந்து கேட்டற்பொருட்டாகலான் 'ஈயப்படு' மென்றுங் கூறினர். ஈதல் வயிற்ற திழிவு தோன்ற நின்றது. இவை இரண்டு பாட்டானும் கேள்வியது சிறப்புக் கூறப்பட்டது. (உ)

சகங. செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.

(இ - ள்.) செவி யுணவிற் கேள்வி உடையார் - செவி யுணவாகிய கேள்வியினை யுடையார்; நிலத்து அவி யுணவின் ஆன்றாரோடு ஒப்பர் - நிலத்தின்கண்ணராயினும், அவி யுணவினையுடைய தேவரோ டொப்பர்.

'செவி யுணவு' செவியா னுண்ணும் உணவு. அல்வழிக்கண் வந்த இன்சாரியையது னகரம் வலிந்து நின்றது. அவியாகிய உணவு தேவர்க்கு வேள்வித்தீயிற் கொடுப்பன. அறிவானிறைந்தமையான் 'ஆன்ற'ரென்றும், துன்ப மறியாமையாற் 'றேவரோ டொப்ப' ரென்றுங் கூறினர். இதனால் அதனை யுடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (ங)

சகச. *கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தின் ஊற்றாந் துணை.

* பழமொழி நானூறு-ங.

(இ - ள்.) கற்றிலன் ஆயினுங் கேட்க-உறுதிநூல்களைத் தான் கற்றிலனாயினும், அவற்றின் பொருள்களைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்க; அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை - அக் கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சி வந்துழிப் பற்றுக்கோடாந் துணையாகலான்.

உம்மை கற்க வேண்டும் மென்பதுபட நின்றது. 'தளர்ச்சி வறுமையானாதல் அறிவின்மையானாதல் இடுக்கட்பட்டுழி மனந் தளர்தல். அதனைக் கேள்வியினாய அறிவு நீக்குமாகலின்; 'ஊற்றாந் துணை'யென்றார். ஊன்றென்னும் ஆகுபெயரின் னகரம் திரிந்து நின்றது. (ச)

சகரு. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

(இ - ள்.) இழுக்கல் உடை உழி ஊற்றுக்கோல் அற்று - வழுக்குதலையுடைய சேற்று நிலத்து இயங்குவார்க்கு ஊன்றுகோல்போ லுதவும்; ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல் - காவற் சாகா டுகைப்பார்க்கு* ஒழுக்கமுடையார் வாயிற் சொற்கள்.

அவாய்நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை வருவிக்கப்பட்டது. ஊற்றாகிய கோல்போலுதவுதல் தளர்ந்துழி அதனை நீக்குதல். கல்வி யுடைரேனும் ஒழுக்க மில்லாதார் அறிவிலராகலின்† அவர் வாய்ச்சொற் கேட்கப்படா தென்பது தோன்ற 'ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்' லென்றார். 'வா' யென்பது தீச்சொ லறியாமையாகிய சிறப்புணர நின்றது. அவற்றைக் கேட்க வென்பது குறிப்பெச்சம். (ரு)

சகசு. எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

(இ - ள்.) எனைத்தானும் நல்லவை கேட்க - ஒருவன் சிறிதாயினும் உறுதிப்பொருள்களைக் கேட்க; அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்-அக்கேள்வி அத்துணையாயினும் நிறைந்தபெருமையைத் தரும் ஆகலான்.

'எனைத்து' 'அனைத்து' என்பன கேட்கும் பொருள்மேலுங் காலத்தின்மேலும் நின்றன. அக்கேள்வி மழைத்துளிபோல வந்தீண்டி எல்லா அறிவுகளையு முளவாக்கலின், சிறிதென் றிகழற்க வென்பதாம். (சு)

* புறநானூறு-கஅரு. † குறள்-கசO

௪கஎ. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

(இ - ள்.) பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார் - பிறழஉணர்ந்தவழியும், தமக்குப்பேதைமை பயக்குஞ் சொற்களைச் சொல்லார்; இழைத்து உணர்ந்து ஈண்டிய கேள்வி யவர் - பொருள்களைத் தாமும் நுண்ணிதாக ஆராய்ந் தறிந்து அதன் மேலும் ஈண்டிய கேள்வியினை யுடையார்.

பிழைப்ப வென்பது திரிந்து நின்றது. 'பேதைமை' ஆகு பெயர். ஈண்டுதல் - பலவாற்ருன் வந்து நிறைதல். பொருள்களின் மெய்ம்மையைத் தாமும் அறிந்து அறிந்தாரோ டொப்பிப்பதுஞ் செய்தார் தாமதகுணத்தான் மயங்கினராயினும், அவ்வாறல்லது சொல்லா ரென்பதாம். இவை நான்கு பாட்டானுங் கேட்டார்க்கு வரு நன்மை கூறப்பட்டது. (எ)

௪கஅ. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

(இ - ள்.) கேட்பினும் கோளத் தகையவே - தம் புலமாய ஓசை மாத்திரத்தைக் கேட்குமாயினுஞ் செவிடாந் தன்மையவே யாம்; கேள்வியால் தோட்கப்படாதசெவி-கேள்வியால் துளைக்கப் படா செவிகள்.

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஓசை மாத்திரத்தான் உறுதி யெய்தாமையிற் 'கேளாத் தகைய' வென்றும், மனத்தின் கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலிற் கேள்வியைக் கருவி யாக்கியும் கூறினர். பழைய துளை துளையன் றென்பதாம். (அ)

௪கக. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

(இ - ள்.) நுணங்கிய கேள்வியர் அல்லார் - நுண்ணிதாகிய கேள்வியுடைய ரல்லாதார்; வணங்கிய வாயினர் ஆதல் அரிது - பணிந்த மொழியினை யுடையராதல் கூடாது.

கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமேல் ஏற்றப்பட்டது. 'வாய்' ஆகுபெயர். பணிந்தமொழி பணிவைப் புலப்படுத்திய மொழி. கேளாதார் உணர்வின்மையாற் றம்மை வியந்து கூறுவரென்பாம். அல்லா லென்பதூஉம் பாடம். (க)

௪உO. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென்.

(இ - ள்.) செவியிற் சுவைஉணராவாய் உணர்வின் மாக்கள் - செவியான் நுகரப்படுஞ் சுவைகளை யுணராத வாயுணர்வினையுடைய

மாந்தர்; அவியினும் வாழினும் என் - சாவினும் வாழினும் உலகிற்கு வருவ தென்னே ?

செவியானுகரப்படுஞ் சுவைகளாவன : சொற்சுவையும் பொருட்சுவையும். அவற்றுட் சொற்சுவை குணம் அலங்காரமென இருவகைத்து ; பொருட்சுவை காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தமென ஒன்பது வகைத்து. அவையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். 'வாயுணர்' வென்பது இடைப்பதங்கள் தொக்கு நின்ற மூன்றும் வேற்றுமைத் தொகை ; அது வாயானுகரப்படுஞ் சுவைகளை யுணரும் உணர்வென விரியும். அவை கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பென ஆறும். செத்தால் இழப்பதும் வாழ்ந்தாற் பெறுவது மின்மையின், இரண்டு மொக்கு மென்பதாம். வாயுணவினென்று பாடமோதுவாரு முளர். இவை மூன்று பாட்டானுங் கேளாதவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது. (க0)

---

## அதி. சுங — அறிவுடைமை

[அஃதாவது, கல்வி கேள்விகளினாய அறிவோடு உண்மை யறிவுடையனாதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

சஉக. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்.

(இ - ள்.) அறிவு அற்றம் காக்கும் கருவி - அரசர்க்கு அறிவென்பது இறுதி வாராமற் காக்கும் கருவியாம்; செறுவார்க்கு அழிக்கலாகா உள் அரணும் - அதுவேயுமன்றிப் பகைவர்க்கு அழிக்கலாகாத உள் ளரணுமாம்.

'கா'த்தல் முன்னறிந்து பரிகரித்தல். உள்ளரண் உள்ளாய அரண் ; உள்புக் கழிக்கலாகா அர ணென்றுமாம். இதனால் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

சஉஉ. சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(இ - ள்.) சென்ற இடத்தால் செலவிடா - மனத்தை அது சென்ற புலத்தின்கட் செலவிடாது ; தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு - அப்புலத்தின் நன்மை தீமைகளை யாராய்ந்து, தீயதனின் நீக்கி நல்லதன்கட் செலுத்துவது அறிவு.

வினைக்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஓசை ஊறு, ஒளி, சுவை, நாற்றமெனப் புலம் ஐந்தாயினும், ஒரு காலத்து ஒன்றின்கணல்லது செல்லாமையின், 'இடத்தா'லென்றார். 'விடா' தென்பது கடைக்குறைந்து நின்றது. குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல வேறுக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது 'அறி'வென்றார், அஃது உயிர்க்குணமாகலின். (உ)

சஉ௩. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ-ள்.) எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் - யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும்; அப் பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு - அப்பொருளின் மெய் யாய பயனைக் காணவல்லது அறிவு.

குணங்கள் மூன்றும் மாறி மாறி வருதல் யாவர்க்கு முண்மை யின், உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயினும், உறுதிப்பொருள் பகைவர் வாயினும், கெடு பொருள் நட்டார் வாயினும் ஒரோவழிக் கேட்கப்படுதலான், 'எப் பொருள் யார்யார் வாய்க் கேட்பினு'மென்றார். அடுக்குப் பன்மை பற்றி வந்தது. 'வா' யென்பது அவர் அப்பொருளின்கட் பயி லாமை யுணர நின்றது. மெய்யாதல் நிலைபெறுதல். சொல்வார தியல்பு நோக்காது அப்பொருளின் பயனோக்கிக் கொள்ளுதல் ஒழிதல் செய்வதறி வென்பதாம். (௩)

சஉச. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

(இ-ள்.) தான் எண்பொருளவாகச் செலச்சொல்லி-தான் சொல்லுஞ் சொற்களை அரிய பொருளவாயினும் கேட்பார்க்கு எளிய பொருளவாமாறு மனங்கொளச்சொல்லி; பிறர் வாய் நுண் பொருள் காண்பது அறிவு - பிறர் வாய்க் கேட்குஞ் சொற்களின் நுண்ணிய பொருள் காண அரிதாயினும் அதனைக் காணவல்லது அறிவு.

உடையவன்றொழில் அறிவின்மேலேற்றப்பட்டது. சொல்லு வன வழுவின்றி இனிது விளங்கச்சொல்லுக வென்பார் சொன் மேல் வைத்தும், கேட்பன வழுவினும் இனிது விளங்காவாயினும் பயனைக் கொண்டொழிக வென்பார் பொருண்மேல் வைத்துங் கூறினர். (ச)

சஉ௫. உலகந் தழீஇய தொட்பம் மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(இ - ள்.) உலகம் தழீஇயது ஒட்பம்-உலகத்தை நட்பாக்கு வது ஒருவனுக்கு ஒட்பமாம்; மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு - அந் நட்பின்கண் முன் மலர்தலும் பின் கூம்புதலுமின்றி ஒரு நிலையனுவது அறிவாம்.

'தழீஇயது', 'இல்ல'தென்பன அவ்வத்தொழின்மேனின்றன. 'உலக' மென்பது ஈண்டுயர்ந்தோரை. அவரோடு கயப்பூப்போல வேறுபடாது ''கோட்டுப் பூப்போல''* ஒரு நிலையே நட்பாயினுன் எல்லா இன்பமு மெய்துமாகலின், அதனை 'அறி' வென்றுர். காரியங்கள் காரணங்களாக உபசரிக்கப்பட்டன. இதனைச் செல்வத் தின் 'மலர்தலும்' நல்குரவிற் 'கூம்பலு' மில்லதென்று உரைப் பாருமுளர். (ரு)

சஉசு. *எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(இ - ள்.) உலகம் எவ்வது உறைவது - உலகம் யாதொரு ஆற்ருனெழுகுவதாயிற்று; உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு - அவ்வுலகத்தோடு மேவித் தானும் அவ்வாற்ருனெழுகு வது அரசனுக் கறிவு.

உலகத்தை யெல்லாம் யான் நியமித்தலான் என்னை நியமிப் பாரில்லையெனக் கருதித் தான் நினைத்தவாறே ஒழுகிற் பாவமும் பழியுமாகலான், அவ்வா ருெழுகுதல் அறிவன்றென விலக்கிய வாருயிற்று. இவை ஐந்து பாட்டானும் அதனதிலக்கணங் கூறப் பட்டது. (சு)

சஉஎ. அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.†

(இ - ள்.) அறிவுடையார் ஆவது அறிவார் - அறிவுடைய ராவார் வரக்கடவதனை முன் அறியவல்லார்; அறிவிலார் அஃது அறிகல்லாதவர்-அறிவிலராவார் அதனை முன்னறியமாட்டாதார்.

முன்னறிதல் முன்னே எண்ணி யறிதல். 'அஃதறிகல் லாமை' யாவது வந்தாலறிதல். இனி 'ஆவதறிவா' ரென்பதற் குத் தமக்கு நன்மை அறிவாரென் றுரைப்பாரு முளர். (எ)

சஉஅ. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில்.

(இ - ள்.) அஞ்சுவது அஞ்சாமை பேதைமை - அஞ்சப்படு வதனை அஞ்சாமை பேதைமையாம்; அஞ்சுவது அஞ்சல் அறி

* நாலடியார் - உகரு. † குறள் - கசுO.

வார் தொழில் - அவ் வஞ்சப்படுவதனை அஞ்சுதல் அறிவார் தொழிலாம்.

பாவமும் பழியுங் கேடும் முதலாக அஞ்சப்படுவன பலவாயினும், சாதிபற்றி 'அஞ்சுவ' தென்றார். 'அஞ்சாமை' எண்ணுது செய்துநிற்றல். அஞ்சுதல் எண்ணித் தவிர்தல். அது காரிய மன்றென்று இகழப்படாதென்பார் 'அறிவார் தொழி'லென்றார். அஞ்சாமை இறைமாட்சியாகச் சொல்லப்பட்டமையின், ஈண்டஞ்ச வேண்டுமிடங் கூறியவாறு. இவை இரண்டு பாட்டானும் அதனையுடையார திலக்கணங் கூறப்பட்டது. (அ)

சஉகூ. எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

(இ - ள்.) எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு-வரக்கடவதாகிய அதனை முன்னறிந்து காக்கவல்ல அறிவினை யுடையார்க்கு; அதிர வருவது ஓர் நோய் இல்லை - அவர் நடுங்க வருவதொரு துன்பமுமில்லை.

'நோ'யென வருகின்றமையின், வாளா 'எதிரதா'வென்றார். இதனாற் காக்கலாங் காலம் உணர்த்தப்பட்டது. காத்தல் அதன் காரணத்தை விலக்குதல். அவர்க்குத் துன்பமின்மை இதனாற் கூறப்பட்டது. (கூ)

சஙo. அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.*

(இ - ள்.) அறிவுடையார் எல்லாம் உடையார் - அறிவுடையார் பிறிதொன்று மிலராயினும் எல்லா முடையராவர்; அறிவிலார் என் உடையரேனும் இலர் - அறிவிலாதார் எல்லா முடையராயினும் ஒன்று மிலராவார்.

செல்வங்களெல்லாம் அறிவாற் படைக்கவும் காக்கவும் படுதலின் அஃதுடையாரை 'எல்லா முடையா' ரென்றும், அவையெல்லாம் முன்னே யமைந்துகிடப்பினும் அழியாமற் காத்தற்குந் தெய்வத்தானழிந்துழிப் படைத்தற்குங் கருவியுடைய ரன்மையின் அஃதில்லாதாரை 'என்னுடைய ரேனு மில' ரென்றும் கூறினார். 'என்னு' மென்புழி உம்மை விகாரத்தாற்றொக்கது. இதனான் அவரதுடைமையும் ஏனையார தின்மையுங் கூறப்பட்டன. (கo)

---

* நாலடியார் உடுக.

## அதி. சச—குற்றங்கடிதல்

[அஃதாவது, காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மத மெனப்பட்ட குற்றங்க ளாறனையும் அரசன் தன்கண் நிகழாமற் கடிதல். இவற்றை வடநூலார் பகைவர்க்கமென்ப. இவை குற்றமென் றறிதலுங் கடிதலும் அறிவுடையார்க்கல்லது கூடாமையின், அதன்பின் வைக்கப்பட்டது.]

சருக. **செருக்குஞ் சினமுஞ் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து.**

(இ - ள்.) செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம்-மதமும் வெகுளியுங் காமமுமாகிய குற்றங்களில்லாத அரசரது செல்வம்; பெருமித நீர்த்து-மேம்பாட்டு நீர்மையினை யுடைத்து.

'மதம்' செல்வக்களிப்பு. சிறியோர் செயலாகலின் அளவிறந்த காமஞ் 'சிறுமை' யெனப்பட்டது. இவை நீதியல்லன செய்வித்தலான், இவற்றைக் கடிந்தார் செல்வம் நல்வழிப்பாடும், நிலைபேறுமுடைமையின் மதிப்புடைத் தென்பதாம். மிகுதிபற்றி இவை முற்கூறப்பட்டன. (க)

சருஉ. **இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா**
**உவகையும் ஏதம் இறைக்கு.**

(இ - ள்.) இவறலும்-வேண்டும்வழிப் பொருள் கொடாமையும்; மாண்பு இறந்த மானமும் - நன்மையி னீங்கிய மானமும்; மாணா உவகையும்-அளவிறந்த வுவகையும்; இறைக்கு ஏதம்-அரசனுக்குக் குற்றம்.

மாட்சியான மானத்தின் நீக்குதற்கு'மாண்பிறந்தமான'மென்றார். அஃதாவது ''அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாயென்றிவ''*ரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தேவிடுதலும் முதலாயின. அளவிறந்த உவகையாவது கழிகண்ணோட்டம்; பிறருஞ் ''சினனே காமங் கழிகண்ணோட்ட'' மென்றிவற்றை ''யறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும் தீ''†தென்றார். இவை இரண்டு பாட்டானும் குற்றங்களாவன இவை யென்பது கூறப்பட்டது. (உ)

---

* புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண் - ௩௩

† பதிற்றுப்பத்து - உஉ.

சுகூகூ. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

(இ - ள்) பழி நாணுவார்-பழியை யஞ்சுவார்; தினைத்துணை யாம் குற்றம் வரினும் பனைத்துணையாக் கொள்வர் - தங்கண் தினை யளவாங் குற்றம் வந்ததாயினும் அதனை அவ்வளவாக வன்றிப் பனையினளவாகக் கொள்வர்.

'குற்றம்' சாதிப்பெயர். தமக் கேலாமையிற் சிறிதென்று பொருர்; பெரிதாகக் கொண்டு வருந்திப் பின்னும் அது வாராமற் காப்ப ரென்பதாம். (கூ)

சுகூச. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை.

(இ - ள்.) அற்றம் தரூஉம் பகை குற்றமே - தனக் கிறுதி பயக்கும் பகை குற்றமே; குற்றமே பொருளாகக் காக்க-ஆகலான், அக் குற்றம் தன்கண் வாராமையே பயனாகக் கொண்டு காக்க வேண்டும்.

இவைபற்றியல்லது பகைவர் அற்றந் தாராமையின் இவையே பகையாவனவென்னும் வடநூலார் மதம் பற்றிக் 'குற்றமே யற்றந் தரூஉம் பகை' யென்றும், இவற்ற தின்மையே குணங்கள துண்மை யாகக்கொண்டென்பார்,பொருளாக வென்றுங்கூறினர். 'குற்றமே காக்க' வென்பது ''அரும்பண்பினாற் றீமை காக்க'' என்பது போல நின்றது. (ச)

சுகூரு. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(இ - ள்.) வரு முன்னர்க் காவாதான் வாழ்க்கை - குற்றம் வரக்கடவதாகின்ற முற்காலத்திலே அதனைக் காவாத அரசன் வாழ்க்கை: எரி முன்னர் வைத்தூறு போலக் கெடும்-அது வந்தால் எரி முகத்து நின்ற வைக்குவைபோல அழிந்துவிடும்.

'குற்ற'மென்பது அதிகாரத்தான் வந்தது. 'முன்ன' ரென் றதனீற்றது பகுதிப்பொருள் விகுதி. 'வரு'மென்னும் பெயரெச்சம் 'முன்ன'ரென்னுங் காலப்பெயர் கொண்டது; அதனாற் காக்கலாங் காலம் பெறப்பட்டது. குற்றஞ் சிறிதாயினும் அதனாற் பெரிய செல்வம் அழிந்தே விடு மென்பது உவமையாற் பெற்றாம். (ரு)

சுகூசு. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு.

(இ - ள்.) தன்குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண்கிற்பின்- முன்னர்த் தன் குற்றத்தைக் கண்டுகடிந்து பின்னர்ப் பிறர்குற்றங் காணவல்லனாயின்; இறைக்கு ஆகும் குற்றம் என் - அரசனுக்கு ஆகக்கடவ குற்றம் யாது?

அரசனுக்குத் தன் குற்றங்கடியாவழியே பிறர்குற்றங் கடிதல் குற்றமாவது, கடிந்தவழிமுறை செய்தலா மென்பார், 'என் குற்ற மாகு' மென்றார்; எனவே, தன் குற்றங் கடிந்தவனே முறை செய்தற் குரியவ னென்பதாயிற்று. இவை நான்கு பாட்டானும் அவற்றது கடிதற்பாடு பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப. (சு)

சஙஎ. செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்.

(இ - ள்.) செயற்பால செய்யாது இவறியான் செல்வம்- பொருளாற்றனக்குச்செய்துகொள்ளப்படுமவற்றைச்செய்துகொள் ளாது அதன்கட் பற்றுள்ளஞ் செய்தானது செல்வம்; உயற்பால தன்றிக்கெடும் - பின்உளதாம் பான்மைத்தன்றி வறிதே கெடும்.

'செயற்பால'வாவன: அறம் பொரு ளின்பங்கள். பொருளாற் பொருள் செய்தலாவது-பெருக்குதல்; அது "பொன்னி னாகும் பொருபடை யப்படை—தன்னி னாகுந் தரணி தரணியிற்—பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொரு—டுன்னுங் காலைத்துன் னாதன வில்லையே"* என்பதனானறிக. அறஞ் செய்யாமையானும் பொருள் பெருக்காமையானும் 'உயற்பால தன்றி' யென்றும், இன்பப்பயன் கொள்ளாமையிற் 'கெடு' மென்றுங் கூறினார். உயற்பாலதின்றி யென்று பாட மோதுவாரு முளர். (எ)

சஙஅ. பற்றுள்ள மென்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.

(இ - ள்.) பற்றுள்ளம் என்னும் இவறன்மை - பொருளை விடத் தகுமிடத்து விடாது பற்றுதலைச் செய்யு முள்ளமாகிய உலோபத்தினது தன்மை; எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று - குற்றத்தன்மைக ளெல்லாவற்றுள்ளும் வைத் தெண்ணப் படுவ தொன்றன்று, மிக்கது.

'இவற'லது தன்மையாவது குணங்களெல்லாம் ஒருங்குளவாயி னும் அவற்றைக் கீழ்ப்படுத்துத்தான் மேற்படவல்ல இயல்பு ஒழிந்

* சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம் - ஙடு.

தன அதுமாட்டாமையின், 'எற்றுள்ளுமெண்ணப்படுவதொன்றன்' றென்றார். எவற்றுள்ளு மென்பது இடைக்குறைந்து நின்றது. இவை இரண்டு பாட்டானும் உலோபத்தின் தீமை கூறப்பட்டது. (அ)

௪௩௯. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(இ - ள்.) எஞ்ஞான்றும் தன்னை வியவற்க - தான் இறப்ப உயர்ந்த ஞான்றும் மதத்தால் தன்னை நன்கு மதியா தொழிக; நன்றி பயவா வினை நயவற்க - தனக்கு நன்மை பயவா வினைகளை மனத்தால் விரும்பா தொழிக.

தன்னைவியந்துழி இடமும் காலமும் வலியும் அறியப்படாமை யானும், அறனும் பொருளும் இகழப்படுதலானும், எஞ்ஞான்றும் 'வியவற்க' வென்றும், கருதியது முடித்தே விடுவலென்று அறம் பொருளின்பங்கள் பயவா வினைகளை நயப்பின் அவற்றாற் பாவமும் பழியுங்கேடும்வருமாகலின், அவற்றை'நயவற்க' என்றுங் கூறினார். இதனான் மத மானங்களின் தீமை கூறப்பட்டது. (௯)

௪௪௦. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.

(இ - ள்.) காதல காதல் அறியாமை உய்க்கிற்பின் - தான் காதலித்த பொருள்களை (அவர்) அக் காதலறியாமல் அனுபவிக்க வல்லனாயின்; ஏதிலார் நூல் ஏதில-பகைவர் தன்னை வஞ்சித்தற் கெண்ணும் எண்ணம் பழுதாம்.

அறிந்தவழி அவை வாயிலாகப்புகுந்து வஞ்சிப்பராகலின் அறி யாம லுய்த்தால் வாயிலின்மையின் வஞ்சிக்கப்படா னென்பதாம். காமம், வெகுளி, உவகை யென்பன முற்றக்கடியுங் குற்றமன்மை யின், இதனாற் பெரும்பான்மைத்தாகிய காம நுகருமாறு கூறி, ஏனைச் சிறுபான்மையவற்றிற்குப் பொதுவகை விலக்கினையே கொண்டொழிந்தார். (௰)

---

## அதி. ௪௫—பெரியாரைத் துணைக்கோடல்

[அஃதாவது, மூவிரு குற்றமும் முறைமையிற் கடிதலிற், காவற் சாகா டுகைத்தற் குரியனாய அரசன், தீநெறி விலக்கி நன் னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணை யாகக் கோடல். அதிகார முறைமையும் இதனானே விளங்

கும். பேரறிவுடையராவார், அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத்தெய்வக் குற்றங்கள் வராமற் காத்தற்குரிய அமைச்சர் புரோகிதர்.]

சசக. அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

(இ - ள்.) அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை - அறத்தினது நுண்மையை அறிந்து தன்னின் மூத்த அறிவுடையாரது கேண்மையை; தேர்ந்து திறன் அறிந்து கொளல் - அரசன் அதனருமையை யோர்ந்து; கொள்ளுந் திறம் அறிந்து கொள்க.

அற நுண்மை நூலானேயன்றி உய்த்துணர்வானும் அறிய வேண்டுதலின், 'அறனறிந்' தென்றார். 'மூத்தல்' அறிவானும் சீலத்தானும், காலத்தானும் முதிர்தல். 'அறிவுடையார்' நீதியையும், உலகியலையும் அறிதலையுடையார். 'திறனறி' தலாவது நன்கு மதித்தல், உயரச் செய்தல், அவர்வரை நிற்ற லென்பன முதலாக அவர் பிணிப்புண்ணுந் திறனறிந்து செய்தல். (க)

சசஉ. உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(இ - ள்.) உற்றநோய் நீக்கி - தெய்வத்தானுக மக்களானுகத் தனக்கு வந்த துன்பங்களைநீக்குமா றறிந்து நீக்கி; உறாஅமை முற்காக்கும் பெற்றியார் - பின் அப் பெற்றியன வாராவண்ணம் முன்னறிந்து காக்கவல்ல தன்மையினையுடையாரை; பேணிக் கொளல் - அரசன் அவர் உவப்பன செய்து துணையாகக் கொள்க.

தெய்வத்தான் வருந் துன்பங்களாவன; மழையின தின்மை மிகுதிகளானும், காற்றுத் தீப் பிணி யென் றிவற்றானும் வருவன. அவை கடவுளரையுந் தக்கோரையும் நோக்கிச் செய்யுஞ் சாந்திகளான் நீக்கப்படும். மக்களான்வருந் துன்பங்களாவன :—பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வா ரென் றிவர்களான் வருவன. அவை சாம பேத தான தண்டங்களாகிய நால்வகை உபாயத்துள் ஏற்றதனுன் நீக்கப்படும். 'முற்காத்த' லாவது, தெய்வத்தான் வருவனவற்றை உற்பாதங்களா னறிந்து அச் சாந்திகளாற் காத்தலும்; மக்களான் வருவனவற்றை அவர் குணம், இங்கிதம், ஆகாரம் செயலென்பனவற்று னறிந்து அவ்வுபாயங்களு ளொன்றாற் காத்தலுமாம். ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையுங் கூறியவாறாயிற்று. இங்கிதம்: குறிப்பா னிகழும் உறுப்பின் றொழில். ஆகாரம்: குறிப்பின்றி நிகழும் வேறுபாடு. உவப்பன : நன்கு மதித்தன் முதலியன. இவை இரண்டு பாட்டானும் பெரியார தியல்க்

கணமும், அவரைத் துணையாகக் கோடல்வேண்டு மென்பதூஉம் கொள்ளுமாறுங் கூறப்பட்டன. (உ)

சசங. அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(இ - ள்.) பெரியாரைப் பேணித் தமராக் கொளல் - அப் பெரியவர்களை அவர் உவப்பன அறிந்து செய்து தமக்குச் சிறந்தா ராகக் கொள்ளுதல்; அரியவற்றுள் எல்லாம் அரிது - அரசர்க்கு அரிய பேறுக ளெல்லாவற்றுள்ளும் அரிது.

உலகத் தரியனவெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு இப் பேறு சிறந்த தென்றது, இதனுல் அவையெல்லாம் உளவாதல் நோக்கி. (௩)

சசச. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல் - அறிவு முதலியவற்ருல் தம்மின் மிக்கார் தமக்குச் சிறந்தாராகத் தாம் அவர் வழி நின் ெருழுகுதல்; வன்மையுள் எல்லாம் தலை - அரசர்க்கு எல்லா வலியுடைமையினுந் தலை.

பொருள், படை, அரண்களாகுய வலியினும் துணைவலி சிறந்த தென்றது, இவர் அவற்ருன் நீக்கப்படாத தெய்வத்துன்ப முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின். (௪)

சசரு. சூழ்வார்கண் ணுக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(இ - ள்.) சூழ்வார் கண்ணுக ஒழுகலால் - தன் பாரம் அமைச்சரைக் கண்ணுகக் கொண்டு நடத்தலான்; மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்-அரசன் அத்தன்மையராய அமைச் சரை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்க.

இரண்டாவது விகாரத்தாற் ெருக்கது. தானே சூழவல்ல ஞயினும் அளவிறந்ததொழில்களான் ஆகுலமெய்து மரசன் பாரம் அதுவே தொழிலாய் அமைச்சரானல்லது இனிது நடவாமை பற்றி, அவரைக் 'கண்ணுக'க் கூறினுர். ஆராய்தல் அமைச் சியலுட் சொல்லப்படும் இலக்கணத்தின ரென்பதனை யாராய்தல். இவை மூன்று பாட்டானும் பெரியாரைத் துணைக்கோடலின் சிறப்புக் கூறப்பட்டது. (ரு)

சசசு. தக்கா ரினத்தனய்த் தானெழுக வல்லானைச்
செற்ருர் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) தக்கார் இனத்தனாய்த் தான் ஒழுக வல்லானை - தக்காராகிய இனத்தையுடையனாய்த் தானும் அறிந்தொழுகவல்ல அரசனை; செற்றார் செயக் கிடந்தது இல் - பகைவர் செய்யக் கிடந்ததொரு துன்பமு மில்லை.

'தக்கார்' அறிவொழுக்கங்களாற்றகுதியுடையார். 'ஒழுகுதல்' அறநீதிகளின் நெறி வழுவாமல் நடத்தல். வஞ்சித்தல், கூடினரைப் பிரித்தல், வேறுபகை விளைத்தலென் றிவற்றானும், வலியானும், பகைவர்செய்யுந்துன்பங்கள் பலதிறத்தவாயினும், தானும் அறிந்து அறிவார் சொல்லுங்கொண்டொழுகுவான்கண் அவற்று ளொன் றும் வாராதென்பார், 'செற்றார் செயக்கிடந்த தில்'லென்றார். (சு)

சசஎ. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(இ - ள்.) இடிக்கும் துணையாரை ஆள்வாரை - தீயன கண்டால் நெருங்கிச்சொல்லுந் துணையாந் தன்மையை யுடையாரை இவர் நமக்குச் சிறந்தாரென்றாளும் அரசரை; கெடுக்கும் தகைமை யவர் யார் - கெடுக்கும்பெருமையுடைய பகைவர் உலகத் தியாவர்?

தீயன பாவங்களும்நீதியல்லனவும். துணையாந்தன்மையாவது தமக்கு அவையின்மையும் அரசன்கண் அன்புடைமையுமாம். அத் தன்மையுடையார் நெறியின் நீங்க விடாமையின், அவரை யாளு மரசர் ஒருவரானுங் கெடுக்கப்படா ரென்பதாம். நெருங்கிச் சொல்லு மளவினேரையென் றுரைப்பாருமுளர். இவை இரண்டு பாட்டானும் அதன் பயன் கூறப்பட்டது. (எ)

சசஅ. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானும் கெடும்.

(இ - ள்.) இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் - கழறுதற் குரியாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையிற் காவலற்ற அரசன்; கெடுப்பார் இலானும் கெடும் - பகையாய்க் கெடுப்பார் இல்லையாயினும் தானே கெடும்.

'இல்லாத' 'ஏமரா'வென்பன பெயரெச்ச வடுக்கு. கெடுப்பார் உளராவ ரென்பது தோன்ற, 'இலானு' மென்றார். தானே கெடுத லாவது பாகனில்லாத யானைபோல நெறியல்லா நெறிச் சென்று கெடுதல். (அ)

சசகூ. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(இ - ள்.) முதல் இலார்க்கு ஊதியம் இல்லை - முதற்பொருளில்லாத வணிகர்க்கு அதனால் வரும் ஊதிய மில்லையாம்; மதலையாம் சார்பு இலார்க்கு நிலை இல்லை - அதுபோலத் தம்மைத் தாங்குவதாந் துணையில்லாத அரசர்க்கு அதனான் வரும் நிலையில்லை.

முதலைப்பெற்றே இலாபம்பெறவேண்டுமாறு போலத் தாங்குவாரைப் பெற்றே நிலைபெற வேண்டு மென்பதாம். 'நிலை' அரசர் பாரத்தோடு சலியாது நிற்றல். (கூ)

சுருo. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

(இ - ள்.) பல்லார் பகை கொளலின் பத்து அடுத்த தீமைத்து - தான் தனியனாய் வைத்துப் பலரோடும் பகைகொள்ளுதலிற் பதிற்று மடங்கு தீமை யுடைத்து; நல்லார் தொடர் கை விடல் - அரசன் பெரியாரோடு நட்பினைக் கொள்ளா தொழிதல்.

பலர் பகையாயக்கால் "மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்—பேது செய்து பிளந்திடல்"* என்பவை யல்லது ஒருங்கு வினையாக் குறித்துச்† செய்தாலும் ஒருவாற்றான் உய்தல்கூடும்; நல்லார் தொடர் கைவிட்டால் ஒருவாற்றானும் உய்தல் கூடாமையின், இது செய்தல் அதனினுந் தீதென்பதாம். இவை மூன்று பாட்டானும் அது செய்யாதவழிப்படுங் குற்றங்கூறப்பட்டது. (கo)

---

## அதி. சுகூ—சிற்றினஞ்சேராமை

[அஃதாவது, சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது, "நல்லத னலனும் தீயதன் தீமையு மில்லை யென்போ"‡ரும் விடரும் தூர்த்தரும் நடரு முள்ளிட்ட குழு. அறிவைத் திரித்து இருமையுங் கெடுக்கு மியல்பிற்றாய அதனைப் பொருந்திற் பெரியாரைத் துணைக்கோடல் பயனின்றென்ப துணர்த்தற்கு இஃததன்பின் வைக்கப்பட்டது.]

சுருக. சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(இ - ள்.) பெருமை சிற்றினம் அஞ்சும் - பெரியோ ரியல்பு சிறிய இனத்தை யஞ்சாநிற்கும்; சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்து

---

*சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம்-கூஉ. †'ஒருங்கு வினையாக்குதல் தீது செய்தாலும்' என்றும் பாடம். ‡புறநானூறு-உகூ.

விடும் - ஏனைச் சிறியோரியல்பு அது சேர்ந்தபொழுது அதனைத் தனக்குச் சுற்றமாக வெண்ணித் துணியும்.

தத்தம் அறிவு திரியுமாறும் அதனாற் றமக்கு வருந்துன்பமும் நோக்கலின் அறிவுடையா ரஞ்சுவ ரென்றும், அறிவொற்றுமை யாற் பிறிது நோக்காமையின் அறிவிலாதார் தமக்குச் சுற்றமாகத் துணிவரென்றுங் கூறினார். பொருளின் தொழில்கள் பண்பின் மேல் நின்றன. இதனாற் சிறிய இனம் பெரியோர்க் காகாதென்பது கூறப்பட்டது. (க)

சருஉ. நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு.

(இ - ள்.) நிலத்து இயல்பான் நீர் திரிந்து அற்றாகும் - தான் சேர்ந்த நிலத்தின தியல்பானே நீர் தன்றன்மை திரிந்து அந்நிலத் தின் தன்மைத்தாம்; மாந்தர்க்கு இனத்தியல்பு அறிவு (திரிந்து) அதாகும்-அதுபோல மாந்தர்க்குத் தாஞ் சேர்ந்த இனத்தின தியல் பானே அறிவுந் தன்றன்மை திரிந்து அவ்வினத்தின் தன்மைத்தாம்.

எடுத்துக்காட்டுவமை. விசும்பின்கண் தன்றன்மைத்தாய நீர் நிலத்தோடு சேர்ந்தவழி நிறம், சுவை முதலியபண்புகள் திரிந்தாற் போலத்தனிநிலைக்கண் தன்றன்மைத்தாய அறிவு,பிறஇனத்தோடு சேர்ந்தவழிக் காட்சி முதலிய தொழில்கள் திரியுமென இதனால் அதனது காரணங் கூறப்பட்டது. (உ)

சருரு. மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல்.

(இ - ள்.) மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம்-மாந்தர்க்குப் பொதுஉணர்வு தம்மனம் காரணமாக உண்டாம்; இன்னான் எனப் படும் சொல் இனத்தான் ஆம் - இவன் இத்தன்மைய னென்று உலகத்தாராற் சொல்லப்படும்சொல் இனங்காரணமாக உண்டாம்.

இயற்கையாய புலனுணர்வு மாத்திரத்திற்கு இனம் வேண் டாமையின் அதனை 'மனத்தானு' மென்றும், செயற்கையாயவிசேட உணர்வுபற்றி நல்ல னென்றாகத் தீய னென்றாக நிகழுஞ் சொற்கு இனம் வேண்டுதலின் அதனை 'இனத்தானு' மென்றுங் கூறினார். உவமை யளவைகொள்ளாது அத்திரிபும் மனத்தானு மென்பாரை நோக்கி இதனான் அது மறுத்துக் கூறப்பட்டது. (ங)

சருச. மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்
கினத்துள தாகும் அறிவு.

(இ - ள்.) அறிவு-அவ் விசேட உணர்வு; ஒருவற்கு மனத்து உளது போலக் காட்டி-ஒருவற்கு மனத்தின்கண்ணே யுளதாவது போலத் தன்னைப் புலப்படுத்தி; இனத்து உளதாகும் - அவன் சேர்ந்த இனத்தின்கண்ணே யுளதாம்.

மெய்ம்மை நோக்காமுன் மனத்துளது போன்று காட்டியும்; பின்னோக்கியவழிப் பயின்ற வினத்துளதாயு மிருத்தலின், 'காட்டி' யென இறந்தகாலத்தாற் கூறினார். விசேட உணர்வுதானும் மனத்தின்கண்ணே அன்றேயுளதாவதென்பாரை நோக்கி,ஆண்டுப் புலப் படுந் துணையே யுள்ளது, அதற்கு மூலம் இனமென்பது இதனாற் கூறப்பட்டது. (சு)

சுருரு. மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

(இ - ள்.) மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் - அவ் விசேடவுணர்வு புலப்படுதற்கிடனாய மனந் தூயனாதற்றன்மையும் செய்யும் வினை தூயனாதற் றன்மையுமாகிய இரண்டும்; இனம் தூய்மை தூவா வரும்-ஒருவற்கு இனந் தூயனாதற் றன்மை பற்றுக் கோடாக உளவாம்.

மனந் தூயனாதலாவது விசேடவுணர்வு புலப்படுமாறுஇயற்கை யாய அறியாமையின் நீங்குதல். செய்வினை தூயனாதலாவதுமொழி மெய்களாற் செய்யும் நல்வினை யுடையனாதல். தூவென்பது அப் பொருட்டாதல், "தூவறத் துறந்தாரை"* என்பதனானுமறிக. ஒருவன் இனந் தூயனாகவே அதனோடு பயிற்சிவயத்தான் மனந் தூயனாய் அதன்கண் விசேடவுணர்வு புலப்பட்டு அதனாற் சொல் லுஞ் செயலுந் தூயனாமென, இதனால் இனத்துள்ளவாமாறு கூறப் பட்டது. (ரு)

சுருசு. மனந்தூயார்க் கெச்சநன் றாகும்† இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

(இ - ள்.) மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும்-மனந் தூய ராயினார்க்கு மக்கட்பேறு நன்றாகும்; இனம்தூயார்க்கு நன்று ஆகா வினை இல்லை - இனந்தூயராயினார்க்கு நன்றாகாத வினையாதுமில்லை.

காரியங் காரணத்தின் வேறுபடாமையின் 'எச்ச நன்றாகு' மென்றும், நல்லினத்தோ டெண்ணிச் செய்யப்படுதலின் எல்லா வினையு நல்லவா மென்றுங் கூறினார். (சு)

* கலித்தொகை, நெய்தற்கலி—க. † குறள்—ககசு.

சருஎ. மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும்.

(இ - ள்.) மன் உயிர்க்கு மனநலம் ஆக்கம் (தரும்) - நிலை பெற்ற உயிர்கட்கு மனத்தது நன்மை செல்வத்தைக் கொடுக்கும்; இன நலம் எல்லாப் புகழும் தரும்-இனத்தது நன்மை அதனோடு எல்லாப் புகழையுங் கொடுக்கும்.

'மன்னுயி' ரென்றது ஈண்டு உயர்திணைமே னின்றது. 'தரு' மென்னும் இடவழுவமைதிச்சொல் முன்னுங் கூட்டப்பட்டது. உம்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. மனநன்றாதரானே அற மாகலின்* அதனை 'ஆக்கந் தரு' மென்றும், புகழ் கொடுத்தற்குரிய நல்லோர் தாமே இனமாகலின 'இனநல மெல்லாப் புகழுந் தரு' மென்றுங் கூறினார்,† மேல் மனநன்மை இனநன்மை பற்றி வரு மென்பதனை உட்கொண்டு. அஃதியல்பாகவே யுடையார்க்கு அவ் வின நன்மை வேண்டாமென்பாரை நோக்கி, அதுவேயன்றி அத் தன்மைய பலவற்றையுந் தருமென அவர்க்கும் அது வேண்டுமென் பது இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (எ)

சருஅ. மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து.

(இ - ள்.) மனநலம் நன்குஉடையராயினும்-மனநன்மையை முன்னை நல்வினையாற் றாமே யுடையராயினும்; சான்றோர்க்கு இன நலம் ஏமாப்பு உடைத்து - அமைந்தார்க்கு இனநன்மை அதற்கு வலியாதலையுடைத்து,

நன்கா லென்னும் மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது. அந் நல்வினை யுள்வழியும் மனநலத்தை வளர்த்து வருதலின், அதற் 'கேமாப்புடைத்' தாயிற்று. (அ)

சருகூ. மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து.

(இ - ள்.) மன நலத்தின் மறுமை ஆகும் - ஒருவற்கு மன நன்மையானே மறுமை யின்ப முண்டாம்; மற்றஃதும் இன நலத்தின் ஏமாப்பு உடைத்து-அதற்கு அச் சிறப்புத்தானும் இன நன்மையான் வலி பெறுதலை யுடைத்து.

'மனநலத்தி னாகு மறுமை' யென்றது, மறுமை பயப்பது மன நன்மைதானே பிறிதொன்றன் றென்னும் மதத்தை உடம்பட்டுக்

* குறள்—ருச. † குறள்—சருரு.

கூறியவாறு. 'மற்று' வினைமாற்று. உம்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. ஒரோவழித் தாமதகுணத்தான் மனநலந் திரியினும் நல்லினம் ஒப்ப நிறுத்தி மறுமை பயப்பிக்கு மென நிலைபெறச் செய்யுமாறு கூறப்பட்டது. இவை ஐந்து பாட்டானுஞ் சிற்றினஞ் சேராமையது சிறப்பு நல்லினஞ்சேர்தலாகிய எதிர்மறைமுகத்தாற் கூறியவா றறிக. (கூ)

சசு0. நல்லினத்தி னூங்குத் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்.

(இ - ள்.) நல்லினத்தின் ஊங்குதுணையும் இல்லை - ஒருவற்கு நல்லினத்தின் மிக்க துணையுமில்லை; தீயினத்தின் (ஊங்கு) அல்லற் படுப்பதூஉம் இல் - தீய வினத்தின் மிக்க பகையு மில்லை.

ஐந்தனுருபுகள் உறழ்பொருளின்கண் வந்தன. ஊங்கென்பது பின்னுங்கூட்டி உம்மை மாற்றியுரைக்கப்பட்டது. நல்லினம் அறியாமையி னீக்கித் துயருறும்ற் காத்தலின் அதனைத் 'துணை' யென்றும், தீயினம் அறிவினீக்கித் துயருறுவித்தலின் அதனைப் பகையென்றுங் கூறினர். 'அல்லற் படுப்ப'தென்பது ஏதுப்பெயர். இதனால் விதி யெதிர்மறைகள் உடன் கூறப்பட்டன. (க0)

---

## அதி. சஎ—தெரிந்துசெயல்வகை

[அஃதாவது, அரசன் தான் செய்யும் வினைகளை யாராய்ந்து செய்யுந் திறம். அச் செயல் பெரியாரைத் துணைக்கோடல் பயனுடைத்தாயவழி அவரோடுஞ் செய்யப்படுவதாகலின் இது சிற்றினஞ் சேராமையின் பின் வைக்கப்பட்டது.]

சசுக. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்.

(இ - ள்.) அழிவதூஉம் - வினைசெய்யுங்கால் அப்பொழுது அதனா லழிவதனையும்; ஆவதூஉம் - அழிந்தாற்பின் னாவதனையும்; ஆகி வழி பயக்கும் ஊதியமும் ஆய்நின்று பிற்பொழுது தரு மூதியத்தையும்; சூழ்ந்து செயல் - சீர்தூக்கி உறுவதாயிற் செய்க.

உறுவதாவது - நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது மிக்கு, எதிர்வினும் அது தளர்ந்து வருதல். அழிவதின்மையின், எதிர்வின்கண் வரும் ஆக்கத்தை 'ஊதிய'மென்றார். எனவே அவ்வூதியம்பெறின்

நிகழ்வின்கண் அழிவதும்ஆவதுந் தம்முளொத்தாலும்ஒழிதற்பாற் றன்றென்பது பெற்றும். இரண்டு காலத்தும் பயனுடைமை தெரிந்து செய்க வென்பதாம். (க)

சுசுஉ. தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

(இ - ள்.) தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு - தாந் தெரிந்துகொண்ட இனத்துடனே* செய்யத்தகும் வினையை ஆராய்ந்து பின் தாமேயும் எண்ணிச் செய்து முடிக்க வல்ல அரசர்க்கு; அரும்பொருள் யாதொன்றும் இல் - எய்துதற் கரிய பொருள் யாதொன்று மில்லை.

ஆராயப்படுவனவெல்லாம் ஆராய்ந்துபோந்த 'இன' மென்றுமாம். 'செய்வார்க்' கென்றதனுல் வினையென்னுஞ் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. வினையாவது மேற்சேறன்முதல் வேற லிருய தொழில், பொருள்கட் கேதுவாய அதனிற்றவருமை யின், அரிய பொருள்களெல்லாம் எளிதி னெய்துவ ரென்பதாம். இவை இரண்டு பாட்டானுஞ் செய்யத்தகும் வினையும் அது செய்யு மாறுங் கூறப்பட்டன. (உ)

சுசுஙு. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார்.

(இ - ள்.) ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை-மேலெய் தக்கடவ ஊதியத்தினை நோக்கி முன்னெய்திநின்ற முதறன்னையும் இழத்தற் கேதுவாய செய்வினையை; அறிவுடையார் ஊக்கார் - அறிவுடையார் மேற்கொள்ளார்.

'கருதி' யென்னும் வினையெச்சம் 'இழக்கு' மென்னும் பெய ரெச்சவினை கொண்டது. எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ஆக்கமேயன்றி முதலையு மிழக்கும் வினைகளாவன: வலியுங்காலமும் இடனும் அறியாது பிறர்மண் கொள்வான்சென்று தம்மண்ணும் இழத்தல் போல்வன. முன் செய்து போந்த வினையாயினு மென் பார், 'செய்வினை' யென்றார். (ங)

சுசுச. தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

(இ - ள்.) தெளிவு இலதனைத் தொடங்கார்-இனத்தோடுந் தனித்தும் ஆராய்ந்து துணிதவில்லாத வினையைத் தொடங்கார்;

* இனம்-புரோகிதரும் அமைச்சரும்: சுசுஉ ஆம் குறளுரை.

இளிவு என்னும் ஏதப்பாடு அஞ்சுபவர்-தமக்கு இளிவரவென்னுங் குற்றமுண்டாதலை அஞ்சுவார்.

தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின், 'தொடங்கா' ரென்றார். இளிவரவு அவ் வினையாற் பின் அழிவெய்தியவழி அதன்மேலும் அறிவும் மானமும் இலரென்று உலகத்தார் இகழும் இகழ்ச்சி. அஃதுண்டாதல் ஒருதலையாகலின், தெளிவுள்வழித் தொடங்குக வென்பதாம். (௪)

௪௬௫. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

(இ - ள்.) வகை அறச் சூழாது எழுதல் - சென்றால் நிகழும் திறங்களையெல்லாம் முற்றவெண்ணாது சில எண்ணிய துணையானே அரசன் பகைவர்மேற் செல்லுதல்; பகைவரைப் பாத்திப் படுப்பது ஓராறு - அவரை வளரும் நிலத்திலே நிலைபெறச் செய்வதொரு நெறியாம்.

அத் திறங்களாவன: வலி, காலம், இடனென் றிவற்றால் தனக்கும் பகைவர்க்கு முளவாம் நிலைமைகளும், வினை தொடங்குமாறும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும், அதனாற் பெறும் பயனும் முதலாயின. அவற்றுட் சிலஎஞ்சினும் பகைவர்க்கு இடனுமாகலான், முற்றுப்பெறஎண்ண வேண்டுமென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஒழியத்தகும் வினையும் ஒழியாவழிப்படும் இழுக்குங் கூறப்பட்டன. (௫)

௪௬௬. செய்தக்க அல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

(இ - ள்.) செய் தக்க அல்ல செயக் கெடும் - அரசன் தன் வினைகளுட் செய்யத்தக்கன அல்லவற்றைச் செய்தலாற் கெடும்; செய் தக்க செய்யாமையானும் கெடும் - இனி அதனானே யன்றிச் செய்யத்தக்கனவற்றைச் செய்யாமை தன்னானுங் கெடும்.

செய்யத் தக்கன அல்லவாவன: பெரிய முயற்சியினவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறிதாயினவும், ஐயமாயினவும், பின் துயர் விளைப்பனவு மென இவை. செய்யத்தக்கவாவன: அவற்றின் மறுதலையாயின. இச்செய்தல் செய்யாமைகளான், அறிவு ஆண்மை பெருமை யென்னும் மூவகையாற்றலுட் பொருள் படை யென இருவகைத்தாயபெருமைசுருங்கிப் பகைவர்க்குஎளியனுமாகலான், இரண்டுங் கேட்டிற் கேதுவாயின. இதனாற் செய்வன செய்து ஒழிவன ஒழிக வென இருவகையனவும் உடன் கூறப்பட்டன. (௬)

சகூஎ. எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு.

(இ - ள்.) கருமம் எண்ணித்துணிக-செய்யத்தக்க கருமமும் முடிக்கும் உபாயத்தை எண்ணித் தொடங்குக; துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு-தொடங்கி வைத்துப் பின்னெண்ணக் கடவேமென் றொழிதல் குற்றமாதலான்.

துணிவுபற்றி நிகழ்தலின், துணிவெனப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. உபாயமென்பது அவாய்நிலையான் வந்தது. அது, கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்த லென நால்வகைப்படும். இவற்றை வடநூலார் தான சாம பேத தண்ட மென்ப. அவற்றுள் முன்னைய இரண்டும் ஐவகைய; ஏனைய மூவகைய. அவ் வகைகளெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். இவ்வுபாயமெல்லாம் எண்ணாதுதொடங்கின் அவ்வினை மாற்றானால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையி னொழிதலாகாமை யானும், அரசன் துயருறுதலின், அவ் வெண்ணாமையை 'இழுக்' கென்றார். செய்வனவற்றையும் உபாயமறிந்தே தொடங்குக வென்பதாம். (எ)

சகூஅ. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

(இ - ள்.) ஆற்றின் வருந்தா வருத்தம்-முடியும்உபாயத்தாற் கருமத்தை முயலாத முயற்சி; பலர் நின்று போற்றினும் பொத்துப் படும்-துணைவர் பலர் நின்று புரைபடாமற் காப்பினும் புரைபடும்.

முடியுமுபாயத்தான்முயறலாவது கொடுத்தலைப்பொருணசை யாளன் கண்ணும்; இன்சொல்லைச்செசப்பமுடையான், மடியாளன், முன்னே பிறரோடு பொருது நொந்தவ னென இவர்கண்ணும்; வேறுபடுத்தலைத் துணைப்படையாளன் தன்பகுதியோடுபொருந்தா தானென இவர்கண்ணும்; ஒறுத்தலை இவற்றின் வாராவழி இவர் கண்ணுந்,தேறப்படாத கீழ்மக்கள் கண்ணுஞ்செய்து வெல்லுமாற் றான் முயறல். புரைபடுதல்: கருதிய நன்மையன்றிக் கருதாத தீமை பயத்தல். உபாயத்தது சிறப்புக் கூறியவாறு. (அ)

சகூகூ. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

(இ - ள்.) நன்று ஆற்றலுள்ளும் தவறு உண்டு - வேற்று வேந்தர்மாட்டு நன்றான உபாயஞ் செய்தற்கண்ணுங் குற்றமுண்

டாம்; அவரவர் பண்பு அறிந்து ஆற்ருக் கடை—அவரவர் குணங் களை யாராய்ந்தறிந்து அவற்றிற் கியையச் செய்யாவிடின்.

நன்ருன உபாயமாவது, கொடுத்தலும் இன்சொற் சொல்லு தலுமாம் அவை யாவர் கண்ணும்இனியவாதற்சிறப்புடைமையின் உம்மை சிறப்பும்மை. அவற்றை 'அவரவர் பண்பறிந்தாற்ரு'மை யாவது அவற்றிற்கு உரியரல்லாதார்கண்ணே செய்தல். 'தவறு' அவ் வினை முடியாமை. (கூ)

சஎ௦. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

(இ - ள்.) தம்மொடு கொள்ளாத உலகுகொள்ளாது-அரசர் வினைமுடித்தற்பொருட்டுத் தந் நிலைமையோடு பொருந்தாத உபா யங்களைச் செய்வராயின் உலகந் தம்மை இகழாநிற்கும்; எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் - ஆகலான் அஃது இகழா உபாயங்களை நாடிச் செய்க.

'தம்' மென்பது ஆகுபெயர். தந்நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது: தாம் வலியராய்வைத்து மெலியார்க் குரிய கொடுத்தன் முதலிய மூன்றனைச் செய்தலும், மெலியராய் வைத்து வலியார்க்குரிய ஒறுத்தலைச்செய்தலுமாம். இவை இரண் டும் அறிவிலார் செய்வனவாகலின், 'உலகங் கொள்ளா' தென்ருர். அஃதெள்ளாதன செய்தலாவது, அவற்றைத் தத்தம் வன்மை மென்மைகட்கேற்பச்செய்தல். மேல்* இடவகையானுரிமை கூறிய உபாயங்கட்கு வினைமுதல் வகையான் உரிமை கூறியவாறு. இவை நான்கு பாட்டானுஞ் செய்வனவற்றிற்கு உபாயமும் அதன துரிமையுங் கூறப்பட்டன. (க௦)

---

## அதி. சஅ—வலியறிதல்

[அஃதாவது, அவ்வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்த அரசன் நால் வகை வலியையும் அளந்தறிதல். அதிகாரமுறைமையும் இதனுனே விளங்கும்.]

சஎக. வினைவலியுந் தன்வலியும் மாற்ருன் வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

(இ - ள்.) வினை வலியும் - தான் செய்யக் கருதிய வினை வலியையும்; தன் வலியும்-அதனைச் செய்து முடிக்குந் தன்

---

* குறள் - சசுஅ.

வலியையும்; மாற்முன் வலியும் - அதனை விலக்கலுறும் மாற்முன் வலியையும்; துணை வலியும் இருவர்க்குந் துணையாவார் வலியையும்; தூக்கிச் செயல் - சீர்தூக்கித் தன் வலி மிகுமாயின் அவ் வினையைச் செய்க.

இந் நால்வகை வலியுள் 'வினைவலி' அரண்முற்றலும் கோடலும் முதலிய தொழிலானும், ஏனைய மூவகை யாற்றலானுங் கூறுபடுத்துத் தூக்கப்படும். 'தன்வலி' மிகவின்கட் செய்க வென்ற விதியால், தோற்றல் ஒருதலையாய குறைவின்கண்ணும், வேறல் ஐயமாய ஒப்பின்கண்ணும் ஒழிக வென்பது பெற்ரும். (க)

சஎஉ. ஒல்வ தறிவ தறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

(இ ள்.) ஒல்வது அறிவது அறிந்து-தமக்கியலும் வினையையும் அதற்கறிய வேண்டுவதாய வலியையும் அறிந்து; அதன்கண் தங்கிச் செல்வார்க்கு-எப்பொழுதும் மன மொழி மெய்களை அதன் கண் வைத்துப் பகைமேற் செல்லும் அரசர்க்கு; செல்லாதது இல்-முடியாத பொருளில்லை.

'ஒல்வ'தெனவே வினைவலி முதலாய மூன்றும் அடங்குதலின் ஈண் 'டறிவ' தென்றது துணைவலியே யாயிற்று. எல்லாப் பொருளும் எய்துவரென்பதாம். இவை இரண்டு பாட்டானும் வலியின் பகுதியும் அஃதறிந்து மேற்செல்வா ரெய்தும் பயனுங் கூறப்பட்டன. (உ)

சஎங. உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

(இ - ள்.) உடைத் தம் வலி அறியார்-கருத்தாவாதலையுடைய தம் வலியி னளவறியாதே; ஊக்கத்தின் ஊக்கி - மன வெழுச்சியால் தம்மின் வலியாரோடு வினைசெய்தலைத் தொடங்கி; இடைக்கண் முரிந்தார் பலர் - அவர் அடர்த்தலான் அது செய்து முடிக்கப் பெருது இடையே கெட்ட அரசர் உலகத்துப் பலர்.

உடைய வென்பது அவரிய் நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. மூவகை யாற்றலுள்ளுஞ் சிறப்புடைய அறிவுடையோர் சிலராதலின், 'முரிந்தார் பல' ரென்ருர். அதனுல் தம் வலியறிந்தே தொடங்குக வென்பது எஞ்சிநின்றது. (ங)

சஎச. அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(இ - ள்.) ஆங்கு அமைந்து ஒழுகான் - அயல்வேந்தரோடு பொருந்தி யொழுகுவதுஞ் செய்யாது; அளவு அறியான் - தன் வலியள வறிவதுஞ்செய்யாது; தன்னை வியந்தான்-தன்னை வியந்து அவரோடு பகைத்த அரசன்; விரைந்து கெடும்-விரையக் கெடும்.

காரியத்தைக் காரணமாக உபசரித்து 'வியந்தா' னென்றார். விரைய வென்பது திரிந்துநின்றது நட்பா யொழுகுதல், வலியறிந்து பகைத்தலென்னும் இரண்டனுள் ஒன்றன்றே அயல் வேந்தரோடு செயற்பாலது; இவையன்றித் தான் மெலியனாய் வைத்து அவரோடு பகை கொண்டானுக்கு ஒருபொழுதும் நிலையின்மையின் 'விரைந்து கெடு' மென்றார். இவை இரண்டு பாட்டானுந் தன் வலியறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (௪)

சஎரு. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(இ - ள்.) பீலி பெய் சாகாடும் அச்சு இறும்-பீலி யேற்றிய சகடமும் அச்சு முரியும்; அப்பண்டம் சால மிகுத்துப் பெயின் - அப் பீலியை அது பொறுக்கு மளவன்றி மிகுத்தேற்றின்.

உம்மை சாகாட்டது வலிச்சிறப்பேயன்றிப் பீலியது நொய்ம்மைச்சிறப்புந் தோன்ற நின்றது. 'இறு' மென்னுஞ் சினைவினை முதன்மேனின்றது. எளியரென்று பலரோடு பகைகொள்வான் தான் வலியனேயாயினும் அவர் தொக்கவழி வலியழியு மென்னும் பொருடோன்ற நின்றமையின், இது பிறிது மொழிதலென்னும் அலங்காரம்; இதனை நுவலாநுவற்சி யென்பாரும், ஒட்டென்பாருமுளர். ஒருவன் தொகுவார் பலரோடு பகை கொள்ளற்க வென்றமையின், இதனான் மாற்றான் வலியும் அவன் துணைவலியும் அறியா வழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (ரு)

சஎசு. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும்.

(இ - ள்.) கொம்பர் நுனி ஏறினார் அஃது இறந்து ஊக்கின் - ஒரு மரக்கோட்டினது நுனிக்கண்ணே யேறி நின்றார் தம்மூக்கத்தால் அவ்வளவினைக்கடந்து மேலுமேற ஊக்குவராயின்; உயிர்க்கு இறுதியாகிவிடும் - அவ் வூக்கம் அவருயிர்க்கு இறுதியாய் முடியும்.

'நுனிக்கொம்ப' ரென்பது கடைக்கணென்பதுபோலப் பின் முன்னாகத்தொக்க ஆறாம் வேற்றுமைத்தொகை. பன்மை அறிவின்மைபற்றி இழித்தற்கண் வந்தது இறுதிக் கேதுவாவதனை 'இறுதி' யென்றார். பகைமேற்செல்வான் தொடங்கித் தன்னாற் செல்லலாமளவுஞ் சென்று நின்றான், பின் அவ்வளவில் நில்லாது

மனவெழுச்சியான் மேலும் செல்லுமாயின், அவ்வெழுச்சி வினை முடிவிற் கேதுவாகாது அவன் உயிர் முடிவிற் கேதுவாமென்னும் பொருடோன்ற நின்றமையின், இதுவும் மேலை யலங்காரம். அள வறிந்து நிற்றல் வேண்டுமென்றமையின், இதனல் வினைவலி யறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (சு)

சஎஎ. ஆற்றின் அளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(இ - ள்.) ஆற்றின் அளவு அறிந்து ஈக - ஈயு நெறியானே தமக்குள்ள பொருளி னெல்லையை அறிந்து அதற்கேற்ப வீக; அது பொருள் போற்றி வழங்கும் நெறி - அங்ஙனம் ஈதல் பொரு ளைப் பேணிக்கொண் டொழுகும் நெறியாம்.

ஈயு நெறி மேல் இறைமாட்சியுள் 'வகுத்தலும் வல்லதரசு'* என்புழி உரைத்தாம். எல்லைக்கேற்ப ஈதலாவது ஒன்றுன வெல்லையை நான்கு கூறுக்கி, அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி, ஒன்றனை மேல் இடர்வந்துழி அது நீக்குதற் பொருட்டு வைப்பாக்கி, நின்ற வொன்றனை ஈதல்; பிறரும் "வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்"† என்றுர். பேணிக்கொண் டொழுகுதல் ஒருவரோடு நட்பிலாத அதனைத் தம்மோடு நட் புண்டாக்கிக்கொண் டொழுகுதல். முதலிற் செலவு சுருங்கிற் பொருள் ஒருகாலும் நீங்கா தென்பதாம். (எ)

சஎஅ. ஆகா றளவிட் டிதாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(இ - ள்.) ஆகு ஆறு அளவு இட்டிதாயினும் கேடு இல்லை - அரசர்க்குப் பொருள் வருகின்ற நெறியளவு சிறிதாயிற்றாயினும் அதனற் கேடில்லையாம்; போகு ஆறு அகலாக் கடை-போகின்ற நெறியளவு அதனிற் பெருகா தாயின்.

'இட்டி' தெனவும் 'அகலா' தெனவும் வந்த பண்பின்றொழில் கள் பொருண்மே னின்றன. பொருளென்பது அதிகாரத்தான் வருவித்து. அளவென்பது பின்னுங் கூட்டி யுரைக்கப்பட்டன. முதலும் செலவுந் தம்முளொப்பினுங் கேடில்லை யென்பதாம். (அ)

சஎகூ. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்ருக் கெடும்.

(இ - ள்.) அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை - தனக் குள்ள பொருளின் எல்லையை யறிந்து அதற்கேற்ப வாழமாட்டா

* ருஅ௫ - ஆம் குறளுரை. † திரிகடுகம் - உக.

தான் வாழ்க்கைகள்; உளபோல இல்லாகித் தோன்ருக் கெடும். உள்ளனபோலத் தோன்றி, மெய்ம்மையான் இல்லையாய்ப் பின்பு அத் தோற்றமுமின்றிக் கெட்டுவிடும்.

அவ் வெல்லைக்கேற்ப வாழ்தலாவது, அதனிற் சுருக்கக் கூடாதாயின் ஒப்பவாயினும் ஈத்துந் துய்த்தும் வாழ்தல். தொடக்கத்திற் கேடு வெளிப்படாமையின், 'உளபோல' 'தோன்ரு' வென்ருர். முதலிற் செலவு மிக்கால் வருமேதங்* கூறியவாறு. (கூ)

சஅ0 உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(இ - ள்.) உள வரை தூக்காத ஒப்புரவு ஆண்மை - தனக்குள்ள வளவு தூக்காமைக் கேதுவாய ஒப்புரவாண்மையால், வள வரை வல்லைக் கெடும் - ஒருவன் செல்வத்தி னெல்லை விரையக் கெடும்.

ஒப்புரவேயாயினும் மிகலாகா தென்றமையான் இதுவுமது.† இவை நான்கு பாட்டானும் மூவகையாற்றலுட் பெருமையின் பகுதியாய பொருள்வலியறிதல் சிறப்பு நோக்கி வகுத்துக் கூறப்பட்டது. (க0)

———

## அதி. சக—காலமறிதல்

[அஃதாவது, வலியான் மிகுதியுடைனுய்ப் பகைமேற் சேறலுற்ற அரசன், அச் செலவிற்கேற்ற காலத்தினை யறிதல். அதிகார முறைமையும் இதனுனே விளங்கும்.]

சஅக. ‡பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

(இ - ள்.) கூகையைக் காக்கை பகல் வெல்லும் - தன்னின் வலிதாய கூகையைக் காக்கை பகற்பொழுதின்கண் வெல்லாநிற்கும்; இகல் வெல்லும் வேந்தர்க்குப் பொழுது வேண்டும் - அது போல, பகைவர திகலை வெல்லக் கருதும் அரசர்க்கு அதற்கேற்ற காலம் இன்றியமையாதது.

எடுத்துக்காட்டுவமை, காலமல்லாவழி வலியாற் பயனில்லை யென்பது விளக்கிநின்றது. இனிக் 'கால'மாவது, வெம்மையுங் குளிர்ச்சியுந் தம்மு ளொத்து நோய் செய்யாது, தண்ணீரும்

---

* நல்வழி - உடு. † சஎகூ ஆம் குறளிற் கூறியதுபோல
‡ சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம் - நகூ.

உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாது செல்லுமியல் பினதாம். இதனாற் காலத்தது சிறப்புக் கூறப்பட்டது. (க)

ச௮உ. பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(இ-ள்.) பருவத்தோடு ஒட்டஒழுகல்-அரசன் காலத்தோடு பொருந்த வினைசெய் தொழுகுதல்; திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு-ஒருவர் கண்ணும் நில்லாது நீங்குஞ் செல்வத்தைத் தன்கண் நீங்காமற் பிணிக்குங் கயிறும்.

காலத்தோடு பொருந்துதல் காலந் தப்பாமற் செய்தல் 'தீராமை' யென்றதனால், தீர்தன் மாலையதென்பது பெற்றாம். வினை வாய்த்து வருதலான், அதனி னாகுஞ் செல்வம் எஞ்ஞான்றும் நீங்காதென்பதாம். (உ)

ச௮௩. அருவினை யென்ப உளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(இ-ள்.) அருவினை என்ப உளவோ-அரசராற் செய்தற் கரிய வினைகளென்று சொல்லப்படுவன உளவோ; கருவியான் காலம் அறிந்து செயின்-அவற்றை முடித்தற்காங் கருவிகளுடனே செய்தற்காங் காலம் அறிந்து செய்வராயின்.

'கருவி'களாவன: மூவகையாற்றலும் நால்வகை யுபாயங்களு மாம்; அவை உளவாய வழியுங் காலம் வேண்டுமென்ப தறிவித்தற்கு, 'கருவியா' னென்றார். எல்லா வினையும் எளிதின் முடியுமென்பதாம். (௩)

ச௮ச. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம்
கருதி இடத்தாற் செயின்.

(இ-ள்.) ஞாலம் கருதினுங் கைகூடும்-ஒருவன் ஞாலமுழுதுந் தானே யாளக் கருதினானாயினும், அஃது அவன் கையகத்ததாம்; காலம் கருதி இடத்தான் செயின்-அதற்குச் செய்யும் வினையைக் காலமறிந்து இடத்தோடு பொருந்தச் செய்வானாயின்.

'இடத்தா' னென்பதற்கு, மேற் கருவியா னென்பதற்கு உரைத்தாங் குரைக்க. கைகூடாதனவும் கைகூடு மென்பதாம். இவை மூன்று பாட்டானும் காலமறிதற் பயன் கூறப்பட்டது. (ச)

ச௮௫. காலங் கருதி இருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(இ - ள்.) கலங்காது ஞாலம் கருதுபவர் - தப்பாது ஞால மெல்லாங் கொள்ளக் கருது மரசர்; காலங் கருதி இருப்பர் - தம் வலி மிகுமாயினும் அது கருதாது, அதற்கேற்ற காலத்தையே கருதி அது வருந்துணையும் பகைமேற் செல்லார்.

தப்பாமை - கருதியவழியே கொள்ளுதல். வலிமிகுதி 'காலங் கருதி' யென்றதனாற் பெற்றாம். அது கருதாது செல்லின் இரு வகைப் பெருமையுந் தேய்ந்து வருத்தமு முறுவராகலின், 'இருப்ப' ரென்றார். இருத்தலாவது நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல், கூட்ட லென்னும் அறுவகைக் குணங்களுள் மேற்செலவிற்கு மாறாயது. இதனாற் காலம் வாரா வழிச் செய்வது கூறப்பட்டது. (ரு)

சஅகூ. ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(இ - ள்.) ஊக்கம் உடையான் ஒடுக்கம் - வலிமிகுதியுடைய அரசன் பகைமேற் செல்லாது காலம் பார்த்திருக்கின்ற இருப்பு; பொரு தகர் தாக்கற்குப் பேரும் தகைத்து - பொருகின்ற தகர், தன் பகை கெடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்குந் தன் மைத்து.

உவமைக்கட் 'டாக்கற்' கென்றதனால், பொருளினும் வென்றி யெய்தற் பொருட் டென்பது கொள்க. இதனால் அவ் விருப்பின் சிறப்புக் கூறப்பட்டது. (கூ)

சஅஎ. பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.

(இ - ள்.) ஒள்ளியவர் - அறிவுடைய அரசர்; ஆங்கே பொள் ளெனப் புறம்வேரார் - பகைவர் மிகை செய்தபொழுதே அவரறியப் புறத்து வெகுளார்; காலம் பார்த்து உள் வேர்ப்பர் - தாம் அவரை வெல்லுதற்கேற்ற காலத்தினை யறிந்து அது வருந்துணையும் உள்ளே வெகுள்வர்.

'பொள்ளென' வென்பது குறிப்புமொழி. 'வேரார்', 'வேர்ப்ப' ரெனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். அறிய வெகுண் டுழித் தம்மைக் காப்பராகலிற் 'புறம் வேரா' ரென்றும், வெகுளி யொழிந்துழிப் பின்னும் மிகை செய்யாம லடக்குதல் கூடாமை யின் 'உள்வேர்ப்ப' ரென்றுங் கூறினார். (எ)

சஅஅ. செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(இ - ள்.) செறுநரைக் காணின் சுமக்க - தாம் வெல்லக் கருதிய அரசர், பகைவர்க்கு இறுதிக்காலம் வருந்துணையும் அவரைக் கண்டாற் பணிக; இறுவரை காணின் தலை கிழக்காம் - பணியவே அக்காலம் வந்திறும்வழி அவர் தகைவின்றி இறுவர்.

பகைமை யொழியும் வரை மிகவுந் தாழ்கவென்பார், 'சுமக்க' வென்றும், அங்ஙனந் தாழவே அவர் தம்மைக் காத்த லிகழ்வராகலின் தப்பாமற் கெடுவ ரென்பார், அவர் தலை கீழாமென்றுங் கூறினார். தலைமேற்கொண்டதொரு பொருளைத் தள்ளுங்கால் அது தன் தலைகீழாக விழுமாகலின், அவ்வியல்பு பெறப்பட்டது. இவை இரண்டு பாட்டானும் இருக்கும்வழிப் பகைமை தோன்றாமலிருக்க வென்பது கூறப்பட்டது. (அ)

சஅகூ. எய்தற் கரிய தியைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(இ - ள்.) எய்தற்கு அரியது இயைந்தக்கால் - பகையை வெல்லக் கருதுமரசர் தம்மாலெய்துதற்கரிய காலம் வந்து கூடியக்கால்; அந்நிலையே செய்தற்கு அரிய செயல் - அது கழிவதற்கு முன்பே, அது கூடாவழித் தம்மாற் செய்தற்கரிய வினைகளைச் செய்க.

ஆற்றன் முதலியவற்றாற் செய்துகொள்ளப்படாமையின் 'எய்தற்கரிய' தென்றும், அது தானே வந்தியைதல் அரிதாகலின் 'இயைந்தக்கா'லென்றும், இயைந்த வழிப்பின்னில்லாதோடுதலின் 'அந்நிலையே' யென்றும், அது பெறாவழிச் செய்யப்படாமையிற் 'செய்தற்கரிய' வென்றுங் கூறினார். இதனாற் காலம் வந்துழி விரைந்து செய்கவென்பது கூறப்பட்டது. (கூ)

சகூ0. *கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.

(இ - ள்.) கூம்பும் பருவத்துக் கொக்கு ஒக்க - ஒரு வினைமேற் செல்லாதிருக்குங் காலத்துக் கொக்கிருக்குமாறுபோல இருக்க; மற்றுச் சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க - மற்றைச் செல்லுங்காலம் வாய்த்தவழி அது செய்து முடிக்குமாறுபோலத் தப்பாமற் செய்து முடிக்க.

மீன்கோடற் கிருக்கும்வழி அது வந்தெய்துந்துணையும் முன்னறிந்து தப்பாமற்பொருட்டு உயிரில்லதுபோன் றிருக்கு

---

* மூதுரை - கஅ.

மாகலானும், எய்தியவழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்துமாகலானும், இருப்பிற்குஞ் செயலிற்குங் கொக்கு உவமை யாயிற்று. 'கொக்கொக்க' வென்றுராயினும் அது கூம்புமாறு போலக் கூம்புகவென்றும், 'குத்தொக்க' வென்றுராயினும் அது குத்துமாறு போலக் குத்துகவென்றும் உரைக்கப்படும் இது தொழிலுவமமாகலின். உவமை முகத்தால் இருப்பிற்குஞ் செய லிற்கும் இலக்கணங் கூறியவாறுயிற்று. (க0)

---

## அதி. ருං—இடனறிதல்

[அஃதாவது, வலியுங்காலமும் அறிந்து பகைமேற் செல்வான் தான் வெல்லுதற்கேற்ற நிலத்தினை யறிதல். அதிகார முறை மையும் இதனுனே விளங்கும்.]

சுகூக. தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது.

(இ - ள்.) முற்றும் இடம் கண்டபின் அல்லது - பகைவரை முற்றுதற்காவதோரிடம் பெற்றபின் னல்லது; எவ்வினையும் தொடங்கற்க - அவர்மாட்டு யாதொரு வினையையுந் தொடங்கா தொழிக; எள்ளற்க - அவரைச் சிறியரென் றிகழா தொழிக.

முற்றுதல்-வளைத்தல். அதற்காமிடமாவது. வாயில்களானும் நூழைகளானும் அவர் புகலொடு போக்கொழியும்வகை அரணி னைச் சூழ்ந்து, ஒன்றற்கொன்று துணையாய்த் தம்முள் நலிவிலாத பல படையிருப்பிற்கும், மதிலும் அகழு முதலிய அரண் செய்யப் பட்ட அரசிருப்பிற்கு மேற்ற நிலக்கிடக்கையும் நீருமுடையது அது பெற்றுல் இரண்டுஞ் செய்க வென்பதாம். (க)

சுகூஉ. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும்.

(இ - ள்.) முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கும்-மாறுபாட் டோடு கூடிய வலியினை யுடையார்க்கும்; அரண் சேர்ந்து ஆம் ஆக்கம் பலவும் தரும்-அரணைச் சேர்ந்தாகின்ற ஆக்கம் பல பயன் களையும் கொடுக்கும்.

'மாறுபா'டாவது ஞாலம் பொதுவெனப் பொறு அரசர் மனத்தின்க ணிகழ்வதாகலானும், வலியுடைமை கூறியவதனுலும் இது பகைமேற்சென்ற அரசர்மேற்றுயிற்று. உம்மை சிறப்

பும்மை. அரண் சேரதாம் ஆக்கமு முண்மையின், ஈண்டாக்கம் விசேடிக்கப்பட்டது. 'ஆக்க மென்றது அதற் கேதுவாய முற்றினை. அது கொடுக்கும் 'பயன்க'ளாவன: பகைவரால் தமக்கு நலிவின்மையும், தாம் நிலைபெற்று நின்று அவரை நலிதலும் முதலாயின. (உ)

சகூங. ஆற்றுரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றுர்கண் போற்றிச் செயின்.

(இ - ள்.) ஆற்றுரும்ஆற்றி அடுப-வலியரல்லாதாரும்வலியராய் வெல்வர்; இடன் அறிந்து போற்றிப் போற்றுர்கண் செயின்-அதற்கேற்ற இடத்தினை யறிந்து தம்மைக்காத்துப் பகைவர்மாட்டு வினைசெய்வாராயின்.

வினை யென்பதூஉம், தம்மை யென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. காத்தல், பகைவரான் நலிவு வாராமல் அரணானும் படையானுங் காத்தல். இவ்வாற்றுன் வினைசெய்வராயின் மேற்சொல்லிய* வலியின்றியும் வெல்வ ரென்பதாம். (ங)

சகூச. எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(இ - ள்.) இடன் அறிந்து துன்னியார் - தாம் வினைசெய்தற்கேற்ற இடத்தினை யறிந்து சென்ற அரசர்; துன்னிச் செயின்-அரணைப் பொருந்தி நின்று அதனைச் செய்வராயின், எண்ணியார் எண்ணம் இழப்பர் -அவரை வெல்வதாக எண்ணியிருந்த பகைவர் அவ் வெண்ணத்தினை இழப்பர்.

அரணென்பது அவாய்நிலையான் வந்தது. 'எண்ண'மென்றது எண்ணப்பட்ட தம் வெற்றியை. அதனை 'யிழப்ப' ரென்றுர், அவர் வினை செய்யாமல் தம்மைக்காத்தமையின். இதனுல் அவர்பகைவர் தோற்ப ரென்பதாயிற்று. இவை நான்கு பாட்டானும் பகைவர் அரணின் புறத்திருப்பார்அதற்காம் இடமறிதல் கூறப்பட்டது.(ச)

சகூரு. நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

(இ - ள்.) முதலை நெடும்புனலுள் (பிற) வெல்லும்-முதலை ஆழமுடைய நீரின்கணுயிற் பிறவற்றையெல்லாந் தான் வெல்லாநிற்கும்; புனலின் நீங்கின் அதனைப் பிற அடும் - அப் புனலின் நீங்குமாயின் அதனைப் பிறவெல்லாம் வெல்லாநிற்கும்.

* குறள் - சகூஉ.

எனவே, எல்லாருந் தந்நிலத்து வலியரென்பது கூறப்பட்டது. 'பிற' வென்பது முன்னுங் கூட்டப்பட்டது. நிலைப்படா நீரின்கட் பிறவெல்லாம் நிற்றலாற்றாமையின் அவையெல்லாம் முதலைக் கெளியவாம்; அவை இயங்குதற்குரிய நிலத்தின்கண் அஃதியங்க லாற்றாமையின் அஃதவற்றிற்கெல்லாம் எளிதாமென்றது, மேற் செல்லும் அரசர் பகைவர் நிற்றலாற்றா இடனறிந்துசெல்வராயின் அவர் தமக்கெளியராவரன்றித், தானிற்கலாற்றாவிடத்துச் செல்வ ராயின் அவர்க்கெளியராவரென்னும் பொருடோன்ற நின்ற மையின், இது பிறிதுமொழிதலென்னும் அலங்காரம். அவரை அவர் நிற்றலாற்றாவிடத்துச் சென்று வெல்க வென்பதாம். (ரு)

சகூசு. கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து.

(இ - ள்.) கால்வல் நெடுந்தேர் கடல் ஓடா - நிலத்தின்கண் ஓடும் கால்வலிய நெடிய தேர்கள் கடலின்கண் ஓடமாட்டா; கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடா - இனி அக்கடலின்கண் ஓடும் நாவாய்கடாமும் நிலத்தின்கண் ஓடமாட்டா.

'கடலோடா'வென்ற மறுதலையடையான் நிலத்தோடுமென் பது வருவிக்கப்பட்டது. 'கால்வனெடுந்தே' ரென்பது ஓடுதற் கேற்ற காலும், பெருமையு முடையவாயினு மென்பதுபட நின்றது. மேற்சென்றார் பகைவரிடங்களையறிந்து, அவற்றிற்கேற்ற கருவிகளான் வினைசெய்க வென்பது தோன்ற நின்றமையின், இதுவும் மேலையலங்காரமாயிற்று. (சு)

சகூஎ. அஞ்சாமை யல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி யிடத்தாற் செயின்.

(இ - ள்.) எஞ்சாமை எண்ணி இடத்தான் செயின் - பகை யிடத்து வினைசெய்யுந் திறங்களை யெல்லாம் ஒழியாதெண்ணி அவற்றை அரசர் இடத்தொடு பொருந்தச் செய்வராயின்; அஞ் சாமை அல்லால் துணை வேண்டா - அச்செயற்குத் தந் திண்மை யல்லது பிறிதொரு துணை வேண்டுவதில்லை.

திண்ணியராய் நின்று செய்து முடித்தலே வேண்டுதலல்லது 'துணைவேண்டா'வென்றார், அவ்வினை தவறுதற்கேது வின்மை யின். இவை மூன்று பாட்டானும் வினை செய்தற்காம் இடனறி தல் கூறப்பட்டது. (எ)

சகூஅ. சிறுபடையான் செல்லிடஞ் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

(இ - ள்.) உறுபடையான் - பெரும் படையுடைய அரசன்; சிறு படையான் செல் இடம் சேரின் - ஏனைச் சிறுபடை யுடையானை அழித்தல் கருதி, அவன் புகலைச் சென்று சாருமாயின்; ஊக்கம் அழிந்துவிடும் - அவனுற் றன் பெருமை யழியும்.

'செல்லிடம்' அவனுக்குச் செல்லுமிடம். 'அழிந்துவிடு' மென்பது எழுந்திருக்கு மென்றாற்போல ஒரு சொல். ஊக்கத்தி னழிவு உடையான்மே லேற்றப்பட்டது. தன் படைப்பெருமை நோக்கி இடனேக்காது செல்வனாயின், அஃது, அப்படைக் கொருங்கு சென்று வினைசெய லாகாமையானாகப் பயிற்சியின்மை யானாக அப்பெருமையாற் பயனின்றித் தான் அழிந்துவிடு மென்பதாம். (அ)

௪௯௯. சிறைநலனுஞ் சீரும் இலரெனினும் மாந்தர்

உறைநிலத்தோ டொட்ட லரிது.

(இ - ள்.) சிறை நலனும் சீரும் இலர் எனினும் - அரணழித் தற் கருமையும் பெருமையாகிய ஆற்றலு முடைய ரல்லராயினும், மாந்தர் உறை நிலத்தோடு ஒட்டல் அரிது - வினைக்குரிய மாந்தரை அவருறைகின்ற நிலத்தின்கட் சென்று தாக்குதலரிது.

'நிலத்தோ' டென்பது வேற்றுமை மயக்கம். ஆண்மையுடை யாரைச் சிறுமை நோக்கி இருப்பின்கட் சென்று தாக்கின், அவர் அது விட்டுப்போதற் றுணிவின ரன்றிச் சாதற் றுணிவின ராவர்; ஆகவே, அவர்க்குப் பெரும்படை யுடையு மென்பதாம். (௯)

௫௦௦. காலாழ் களரின் நரியடுங் கண்ணஞ்சா

வேலாள் முகத்த களிறு.

(இ - ள்.) கண் அஞ்சா வேலாள் முகத்த களிறு-பாகர்க் கடங்காவுமாய், வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய களிறு களை; கால் ஆழ்களரின் நரி அடும் - அவை காலாழு மியல்பிற்றாய சேற்று நிலத்துப் பட்டுழி நரி கொல்லும்.

'முகம்' ஆகுபெயர். ஆண்மையும், பெருமையு முடையாரும் தமக் கேலா நிலத்துச் செல்லின் அவற்றாற் பயனின்றி மிகவு மெளியரால் அழிவரென்பது தோன்ற நின்றமையின், இதுவும் அவ்வலங்காரம். வேலாழ் முகத்தவென்று பாடமோதுவாரு முளர்.* வேற்படை குளித்த முகத்தவாயின், அதுவும் நரியடுதற் கேதுவாய் முடிதலின், அது பாடமன்மை யறிக. இவை மூன்று பாட்டானும் பகைவரைச் சார்தலாகா இடனும் சார்ந்துழிப்படும் இழுக்கும் கூறப்பட்டன. (௧௦)

---

* மணக்குடவர்.

## அதி. ருக—தெரிந்துதெளிதல்

[அஃதாவது, அமைச்சர் முதலாயினாரைப் பிறப்புக் குணம் அறி வென்பனவற்றையுஞ் செயலையுங் காட்சி கருத்து ஆகமமென்னும் அளவைகளான் ஆராய்ந்து தெளிதல். வலிமுதன் மூன்றும் அறிந்து பகைமேற் செல்வானுக்குத் தானே வினையுற்றுச் செய்தற் பொருட்டும் அறைபோகாமற்பொருட்டும் இது வேண்டுதலின், அவற்றின் பின் வைக்கப்பட்டது.]

ருoக. அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

(இ - ள்.) அறம் பொருள் இன்பம் உயிரச்சம் - அரசனால் தெளியப்படுவானொருவன், அறமும் பொருளும் இன்பமும் உயிர்ப் பொருட்டான் வரும் அச்ச மென்னும்; நான்கின் திறம் தெரிந்து தேறப்படும் - உபதை நான்கின் திறத்தான் மனவியல்பாராய்ந் தால் பின்பு தெளியப்படும்.

அவற்றுள், அற உபதையாவது; புரோகிதரையும் அற, வோரையும் விட்டு, அவரால் இவ் வரசன் அறவோ னன்மையின் இவனைப் போக்கி அறனு முரிமையு முடையா னொருவனை வைத் தற்கெண்ணினம்; இதுதான் யாவர்க்கு மியைந்தது; நின் கருத் தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். பொருளுபதை யாவது; சேனைத் தலைவனையும் அவனோ டியைந்தாரையும் விட்டு அவரான் இவ்வரசன் இவறன் மாலையனாகலின் இவனைப்போக்கிக் கொடையும் உரிமையு முடையானொருவனை வைத்தற் கெண்ணி னம்; இதுதான் யாவர்க்குமியைந்தது; நின் கருத்தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல்; இன்ப உபதையாவது; தொன்று தொட்டு உரிமையொடு பயின்றுளொரு தவமுதுமகளை விட்டு, அவளால், உரிமையுள் இன்னாள் நின்னைக் கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்க வேண்டுமென்று என்னை விடுத்தாள்; அவளைக் கூடுவை யாயின் நினக்குப் பேரின்பமேயன்றிப் பெரும் பொருளும் கைகூடு மெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். அச்ச உபதையாவது; ஒருநிமித்தத்தின்மேலிட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவனில் லின்கண் அழைப்பித்து, இவர் அறைபோவான் எண்ணுதற்குக் குழீஇ யினாரென்று தான் காவல்செய்து, ஒருவனால் இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம் முற்படச்செய்து நமக்கினிய அரசனொருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கு மியைந்தது; நின் கருத்தென்னை யெனச் சூளுறவோடு சொல்லு வித்தல். இந் நான்கினுந் திரிபிலனாயவழி எதிர்காலத்துந் திரிபில

னெனக் கருத்தளவையால் தெளியப்படுமென்பதாம். இவ்வடநூற் பொருண்மையை உட்கொண்டு இவரோதிய தறியாது பிறரெல்லாம் இதனை 'உயிரெச்ச'மெனப் பாடந்திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார். (க)

ருoஉ. குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.

(இ-ள்.) குடிப்பிறந்து-உயர்ந்த குடியிற் பிறந்து; குற்றத்தின் நீங்கி - குற்றங்களினின்று நீங்கி - வடுப் பரியும் நாண் உடையான் கட்டே தெளிவு-நமக்கு வடு வருங்கொலென் றஞ்சா நிற்கும் நாணுடையவன் கண்ணதே அரசனது தெளிவு.

குற்றங்களாவன : மேலரசனுக்குச் சொல்லிய வகையாறும்,* மடி, மறப்பு, பிழைப்பென் றிவை முதலாயவுமாம். 'நாண்', இழிதொழில்களின் மனஞ் செல்லாமை. இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க் கேட்டலாகிய ஆகம அளவையால் தெரிவன. இந் நான்கு முடையவனையே தெளிக வென்பதாம். (உ)

ருoரு. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

(இ-ள்.) அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் - கற்றற்கரிய நூல்களைக் கற்று மேற்சொல்லிய† குற்றங்களற்றார் மாட்டும்; தெரியுங்கால் வெளிறு இன்மை அரிது - நுண்ணிதாக ஆராயுமிடத்து வெண்மையில்லாமை அரிது.

வெண்மை-அறியாமை; அஃது இவர்மாட்டுளதாவது மனத்தது நிலையாமையான் ஒரோ வழியாகலின், 'தெரியுங்கா' லென்றார். காட்சியளவையால் தெரிந்தால் அதுவும் இல்லாதாரே தெளியப் படுவரென்பது குறிப்பெச்சம். இவ் வளவைகளான் இக்குணமுங் குற்றமுந் தெரிந்து குணமுடையாரைத் தெளிக வென்பது இவை மூன்றுபாட்டானுங் கூறப்பட்டது. (ரு)

ருoச. குணநாடிக் குற்றமு நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

(இ-ள்.) குணம் நாடி - குணங் குற்றங்களுள் ஒன்றே யுடையார் உலகத்தின்மையின் ஒருவன் குணங்களை யாராய்ந்து; குற்றமும் நாடி - ஏனைக் குற்றங்களையு மாராய்ந்து; அவற்றுள்

* குறள்கள் - சருக, சருஉ. † குறள் - ருoஉ.

மிகை நாடி - பின் அவ் விருபகுதியுள்ளு மிக்கவற்றை யாராய்ந்து; மிக்க கொளல் - அவனை அம்மிக்கவற்றானே யறிக.

மிகை யுடையவற்றை 'மிகை'யென்றார். அவையாவன : தலைமையானுக, பன்மையானுக உயர்ந்தன. அவற்றான் அறிதலாவது, குணமிக்கதாயின் வினைக்குரியனென்றும், குற்றமிக்கதாயின் அல்லனென்றும் அறிதல். குணமேயுடையார் உலகத்தரியராகலின், இவ்வகை யாவரையுந் தெளிகவென்பது இதனாற் கூறப்பட்டது.

டுoடு. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தந்தங்
கருமமே கட்டளைக் கல்.

(இ - ள்.) பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் கட்டளைக் கல் - பிறப்புக்குணம் அறிவென்பனவற்றான் மக்களெய்தும் பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும் உரை கல்லாவது ; தத்தம் கருமமே - தாந்தாஞ்செய்யுங் கருமமே, பிறிதில்லை.

இஃ தேக தேசவுருவகம். மக்களது பெருமையுஞ் சிறுமையுந் தப்பாமல் அறியலுறுவார்க்குப் பிற கருவிகளும் உளவாயினும், முடிந்த கருவி செயலென்பது தேற்றேகாரத்தாற் பெற்றும். இதனாற் குணங்குற்றங்கள் நாடற்குக் கருவி கூறப்பட்டது. (டு)

டுoசு. அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

(இ - ள்.) அற்றாரைத் தேறுதல் ஓம்புக - சுற்றமில்லாரைத் தெளிதலை யொழிக ; அவர் மற்றுப் பற்று இலர் - அவர் உலகத்தோடு தொடர்பிலர் ; பழி நாணார் - ஆகலாற் பழிக்கஞ்சார்.

'பற்றிலரென்பதனால்' 'சுற்ற' மென்பது வருவிக்கப்பட்டது. உலகத்தார் பழிப்பன ஒழிதற்கும், புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலகநடையியல்பு சுற்றமில்லாதார்க்கு இன்மையின், அவர் தெளியப்படாரென்பதாம். (சு)

டுoஎ. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாந் தரும்.

(இ - ள்.) காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல் அன்புடைமை பற்றுக் கோடாகத் தமக் கறியவேண்டுவன அறியாதாரைத் தெளிதல் ; பேதைமை எல்லாம் தரும்-அரசனுக்கு எல்லா அறியாமையையுங் கொடுக்கும்.

தன்னோடு அவரிடை நின்ற அன்புபற்றி, அரசன் அறிவிலார் மேல் வினையை வைப்பின் அஃது அவ ரறிவின்மையாற் கெடும் ;

கெட்டால் அவர்க்குளதே யன்றி வினைக்குரியாரை அறியாமை, மேல்வினை வறியாமை முதலாக அவனுக்கு அறியாமை பலவு முளவாமென்பதாம். (எ)

ருOஅ. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

(இ-ள்.) பிறனைத் தேரான் தெளிந்தான் - தன்னோடியை புடையன் அல்லாதானைப் பிறப்பு முதலியவற்றானும் செயலானும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு; வழிமுறை தீரா இடும்பை தரும்-அத்தெளிவு தன் வழிமுறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

இயைபு, தன் குடியொடு, தொடர்ந்த மரபு. இதனானே அதுவும் வேண்டுமென்பது பெற்றாம். தெளிதல் அவன்கண்ணே வினையை வைத்தல். அவ்வினை கெடுதலால் தன் குலத்துப் பிறந்தாரும் பகைவர் கைப்பட்டுக் கீழாய் விடுவரென்பதாம். நான்கனுருபு விகாரத்தால் தொக்கது. (அ)

ருOகூ. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

(இ - ள்.) யாரையும் தேராது தேறற்க - யாவரையும் ஆராயாது தெளியாதொழிக; தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக-ஆராய்ந்தபின் தெளியும் பொருட்களை ஐயுறா தொழிக.

'தேறற்க' என்ற பொதுமையான் ஒரு வினைக்கண்ணுந் தெளியலாகாதென்பது பெற்றாம். ஈண்டுத் 'தேறுக' என்றது தாற்பரியத்தால் ஐயுறவினது விலக்கின்மேல் நின்றது. தேறும் பொருளென்றது அவரவர் ஆற்றற்கேற்ற வினைகளை- 'பொருள்' ஆகுபெயர். (கூ)

ருகO. தேரான் தெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

(இ - ள்.) தேரான் தெளிவும்-அரசன் ஒருவனை யாராயாது தெளிதலும்; தெளிந்தான்கண் ஐயுறவும்-ஆராய்ந்து தெளிந்தவன் மாட்டு ஐயப்படுதலும் இவ்விரண்டும்; தீரா இடும்பை தரும்-அவனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

வினை வைத்தபின் ஒரு தவறு காணாது வைத்து ஐயுறுமாயின் அதனை அவனறிந்து இனி இது நில்லாதென்னுங் கருத்தான் அவ்வினையை நெகிழ்த்து விடும்; அதுவேயன்றிப் பகைவரால் எளிதிற்

பிரிக்கவும் படும்; ஆதலால் 'தெளிந்தான்கண் ஐயுறவும்' ஆகா தாயிற்று. தெளிவிற்கெல்லை கூறியவாறு. இவை யைந்து பாட்டா னும் தெளியப்படாதார் இவரென்பதூஉம், அவரைத் தெளிந்தாற் படும் இழுக்கும் தெளிவிற் கெல்லையுங் கூறப்பட்டன. (கO)

## அதி. ருஉ—தெரிந்துவினையாடல்

[அஃதாவது, அத் தெளியப்பட்டாரை அவர் செய்யவல்ல வினை களை அறிந்து அவற்றின் கண்ணே ஆளுந் திறம். அதிகார முறைமையும் இதனனே விளங்கும்.]

ருகக. **நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த**
**தன்மையான் ஆளப் படும்.**

(இ - ள்.) நன்மையும் தீமையும் நாடி-அரசன் முதற்கண் ஒருவினையைத் தன்கண் வைத்தால், அதன்க ணுவனவும் ஆகா தனவுமாய செயல்களை யாராய்ந்தறிந்து; நலம் புரிந்த தன்மை யான்-அவற்றுள் ஆவனவற்றையே விரும்பிய வியல்பினை யுடை யான்;ஆளப்படும்-பின் அவனற் சிறந்த வினைகளிலே ஆளப்படும்.

தன்னை உரிமை அறிதற் பொருட்டு அகம் புறங்கட்கு நடுவாய தொரு வினையை அரசன் தன்கண் வைத்தவழி, அதன்கண் ஆஞ் செயல்களையே செய்தவன் பின்னும் அவ்வியல்பினனுதல் பற்றி அகமாய வினைக்கண்ணே ஆளப்படுவன் என்பதாயிற்று. 'புரிந்த' என்ற இறந்த காலத்தான், முன்னுரிமையறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெற்றும். (க)

ருகஉ. **வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை**
**ஆராய்வான் செய்க வினை.**

(இ - ள்.) வாரி பெருக்கி-பொருள் வரு வாயில்களை விரி யச் செய்து; வளம் படுத்து - அப்பொருளாற் செல்வங்களை வளர்த்த; உற்றவை ஆராய்வான்-அவ்வாயில்கட்கும் பொருட்குஞ் செல்வங்கட்கு முற்ற இடையூறுகளை நாடோறும் ஆராய்ந்து நீக்க வல்லவன்; வினைசெய்க-அரசனுக்கு வினைசெய்க.

வாயில்களாவன : மேல் இறைமாட்சியுள் 'இயற்றலும்'* என் புழி உரைத்தனவும், உழவு, பசுக்காவல், வாணிகம் என்னும் வார்த்தையுமாம்.† செல்வங்களாவன : ஆண்டுப் பொருளும் இன்

* திருக்குறள்-ருஅரு. † வார்த்தை-தொழில்.

பமுமாக உரைக்கப்பட்டன. 'இடையூறுக' ளாவன அரசன் வினைசெய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வரென் றிவரான் வரு நலிவுகள். (உ)

ருகங. அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

(இ - ள்.) அன்பு - அரசன்மாட் டன்பும்; அறிவு - அவனுக் காவன அறியு மறிவும்;தேற்றம் - அவை செய்தற்கட் கலங்காமை யும்; அவாவின்மை - அவற்றாற் பொருள் கையுற்றவழி அதன் மேல் அவாவின்மையுமாகிய; இந் நான்கும் நன்கு உடையான் கட்டே தெளிவு-இந் நான்கு குணங்களையும் நிலைபெற உடையான் மேலதே வினையை விட்டிருக்குந் தெளிவு.

'இந் நான்கும் நன்குடை'மை இவன் செய்கின்ற வினைக்கண் யாதும் ஆராயவேண்டுவ தில்லையென்று அரசன் தெளிதற்கேது வாகலின், அவனை அதன் பிறப்பிடனுக்கிக் கூறினர். இவை மூன்று பாட்டானும் ஆடற்குரியான திலக்கணங் கூறப்பட்டது. (ங)

ருகச. எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர்.

(இ - ள்.) எனை வகையான் தேறியக்கண்ணும்-எல்லாவகை யானும் ஆராய்ந்து தெளிந்து வினை வைத்த பின்னும்; வினைவகை யான் வேறாகும் மாந்தர் பலர்-அவ் வினையின் இயல்பானே வேறு படு மாந்தர் உலகத்துப் பலர்.

கட்டியங்காரன்* போல அரச் இன்பத்தினை வெஃகி விகாரப் படுவதல்லது அதனைக் குற்றமென் றொழிந்து தம் மியல்பினிற்பார் அரியராகலின், 'வேறாகு மாந்தர் பல' ரென்றார். வினைவைப்ப தற்கு முன் எல்லாக் குணங்களும் உடையராய், வைத்தபின் விகா ரப் படுவாரை இடையாயதொரு வினையை வைத்தறிந்து ஒழிக்க வென்பதாம். இதனான் ஒருவகையால் ஒழிக்கப்படுவார் இவரென் பது கூறப்பட்டது. (ச)

ருகரு. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(இ - ள்.) அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால்-செய் யும் உபாயங்களை அறிந்து செயலானும் இடையூறுகளானும் வருந் துன்பங்களைப் பொறுத்து முடிவுசெய்ய வல்லானை யல்லது; வினை

*கட்டியங்காரன் - சீவகசிந்தாமணியில் கூறப்படும் சச்சந்த னென்னும் அரசனுடைய மந்திரி (நாமகளிலம்பகம்.)

தான் சிறந்தான் என்று ஏவற்பாற் றன்று-வினைதான் இவன் நம் மாட்டு அன்புடைய னென்று பிற ஞெருவனை யேவும் இயல்புடைத் தன்று.

'செய்கிற்பாற்' கென்பது வேற்றுமை மயக்கம். அறிவாற்றல் களான் அல்லது அன்பான் முடியாதென இதனுல் வினையினதியல்பு கூறப்பட்டது. (ரு)

ருகசு. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த உணர்ந்து செயல்.

(இ - ள்.) செய்வானை நாடி - முதற்கண்ணே செய்வான திலக்கணத்தை யாராய்ந்து; வினை நாடி-பின் செய்யப்படும் வினையினதியல்பை யாராய்ந்து; காலத்தோடு எய்த உணர்ந்து செயல் - பின் அவனையும் அதனையும் காலத்தோடு படுத்துப் பொருந்த அறிந்து அவனை அதன்கண் ஆடலைச் செய்க.

செய்வான திலக்கணமும் வினையின தியல்பும்† மேலே கூறப் பட்டன. 'காலத்தோடெய்த உணர்த'லாவது இக்காலத்து இவ் விலக்கணமுடையான் செய்யின் இவ் வியல்பிற்ருய வினை முடியு மென்று கூட்டி யுணர்தல். (சு)

ருகஎ. இதனை இதனுன் இவன்முடிக்கும் என்ருய்ந்
ததனை அவன்கண் விடல்.

(இ - ள்.) இதனை இதனுல் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து- இவ் வினையை இக் கருவியால் இவன் முடிக்கவல்லவனெனக் கூறு படுத் தாராய்ந்து; அதனை அவன்கண் விடல் -மூன்றுந் தம் முள் இயைந்தவழி அவ் வினையை அவன் கண்ணே விடுக.

கருவி : துணைவரும், பொருளும் முதலாயின. வினைமுதலும் கருவியும் வினையுந் தம்முள் இயைதலாவது ஒரொன்ருேடு ஏனைய இரண்டற்கும் பொருத்தமுண்டாதல்; விடுதல் அதற்கு அவனை உரியனுக்குதல். (எ)

ருகஅ. வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னுகச் செயல்.

(இ - ள்.) வினைக்கு உரிமை நாடிய பின்றை-ஒருவனை அரசன் தன் வினை செய்தற்குரியனுக ஆராய்ந்து துணிந்தால்; அவனை அதற்கு உரியனுகச் செயல் - பின்னவனை அதற்குரியனு மாறு உயரச் செய்க.

*குறள்கள்-ருகக, ருகஉ, ருகக. †குறள்-ருகரு.

உயரச் செய்தலாவது அதனைத் தானே செய்து முடிக்கும் ஆற்றலுடையனுக்குதல்; அது செய்யாக்காலும் கெடுமென்பது கருத்து. (அ)

ருகசூ. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே ருக
நினைப்பானை நீங்குந் திரு.

(இ-ள்.) வினைக்கண் வினை உடையான் கேண்மை - எப்பொழுதுந் தன் வினையின் கண்ணே முயறலையுடையான் அவ்வுரிமையால் தனக்குக் கேளா யொழுகுகின்ற தன்மையை; வேருக நினைப்பானைத் திரு நீங்கும்-அது பொருதார் சொற்கேட்டு அரசன் மாறுபடக் கருதுமாயின் திருமகள் அவனைவிட்டு நீங்கும்.

கேளாயொழுகுகின்ற தன்மையாவது தான் பிறனுய் நில்லாது கேளிர் செய்யும் உரிமை யெல்லாஞ் செய்தொழுகுதல். அவனை அவமதிப்பாகக்கொண்டு செறக் கருதுமாயிற் பின்னெருவரு முட்பட்டு முயல்வா ரில்லையாம்; ஆகவே, தன் செல்வங் கெடுமென்பது கருத்து. இந் நான்கு பாட்டானும் ஆடற்குரியானை யாளுந் திறங் கூறப்பட்டது. (கூ)

ருஉ௦. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(இ-ள்.) வினை செய்வான் கோடாமை உலகு கோடாது - வினை செய்வான் கோடாதொழிய உலகங் கோடாது; மன்னன் நாடோறும் நாடுக-ஆதலான் அரசன் அவன் செயலை நாடோறும் ஆராய்க.

அஃதொன்றனையும் ஆராயவே அதன் வழித்தாய உலகமெல்லாம் ஆராய்ந்தானும்; அதனுல் அவனுரிமை அழியாமல் தன்னுள்ளே யாராய்ந்து போதுக வென்பதாம். இதனுன் ஆண்டவழிச் செய்வது கூறப்பட்டது. (க௦)

---

## அதி. ருக—சுற்றந்தழால்

[அஃதாவது, அரசன் தன் கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல். வினைசெய்வாரைக் கூறி ஏனைச் சுற்றங் கூறுகின்ருராகலின், தெரிந்து விளையாடலின் பின் வைக்கப்பட்டது.]

ருஉக. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள.

(இ - ள்.) பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்- ஒருவன் செல்வந் தொலைந்து வறியனாயவழியும் விடாது தம்மோடு அவனிடைப் பழைமையை எடுத்துக்கொண்டாடு மியல்புகள், சுற்றத்தார்கண்ணே உள - சுற்றத்தார் மாட்டே உளவாவன,

சிறப்பும்மை. வற்றியனாயவழிப் பாராட்டப்படாமை விளக்கி நின்றது. 'பழைமை' பற்றறாக் காலத்துத் தமக்குச் செய்த உபகாரம், பிறரெல்லாம் அவன் பற்றற்ற பொழுதே தாமும் அவனோடு பற்றறுவராகலின், ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது. இதனாற் சுற்றத்தது சிறப்புக் கூறப்பட்டது. (க)

௫௨௨. விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவும் தரும்.

(இ - ள்.) விருப்பு அறாச் சுற்றம் இயையின் - அன்பறாத சுற்றம் ஒருவற்கெய்துமாயின் அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும் - அஃது அவற்குக் கிளைத்த லறாத செல்வங்கள் பலவற்றையுங் கொடுக்கும்.

உட்பகையி னீக்குதற்கு 'விருப்பறாச் சுற்ற மென்றும், தானே வளர்க்கும் ஒரு தலையாய செல்வத்தி னீக்குதற்கு 'அருப்பறாவாக்க' மென்றும் விசேடித்தார். தொடை நோக்கி விகாரமாயிற்று. 'இயையின்' என்பது அதனதருமை விளக்கி நின்றது. 'ஆக்க' மென்பது ஆகுபெயர். 'பலவு' மென்றது அங்கங்க ளாறனையும் நோக்கி. பலர் கூடி வளர்த்தலின், அவை மேன்மேற்கிளைக்குமென்பது கருத்து. (௨)

௫௨௩. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

(இ - ள்.) அளவளாவு இல்லாதான் வாழ்க்கை-அச்சுற்றத்தோடு நெஞ்சு கலத்த லில்லாதவன் வாழ்க்கை; குள வளாக் கோடு இன்றி நீர் நிறைந்தற்று - குளப்பரப்புக் கரையின்றி நீர் நிறைந்தாற்போலும்.

சுற்றத்தோடென்பது அதிகாரத்தான் வந்தது. நெஞ்சு கலப்புத் தன்னளவும் அதனளவும் உசாவுதலான் வருவதாகலின் 'அளவளா' வென்பது ஆகுபெயர். 'வாழ்க்கை' யென்றதூஉம் அதற்கேதுவாய செல்வங்களை. நிறைதலென்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேனின்றது. சுற்றமில்லாதான் செல்வங்கள் தாங்குவாரின்மையிற் புறத்துப்போ மென்பதாம். (௩)

ருஉச. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(இ - ள்.) செல்வம் பெற்றத்தான் பெற்ற பயன் - செல்வம் பெற்ற வதனுல் ஒருவன் பெற்ற பயனுவது; சுற்றத்தான் தான் சுற்றப்பட ஒழுகல் - தன் சுற்றத்தால் தான் சூழப்படும் வகை அதனைத் தழீஇ யொழுகுதல்.

'பெற்ற' என்பதனுள் அகரமும்' அதனுன் என்பதனுள் அன்சாரியையும் தொடைநோக்கி விகாரத்தால் தொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாடற் கேதுவாகலின், இதனைச் செல்வத்திற்குப் பயனென்ருர். இவை மூன்று பாட்டானும் சுற்றந்தழால் செல்வத்திற்கேதுவும் அரணும் பயனுமா மென்பது கூறப் பட்டது. (ச)

ருஉரு. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

(இ - ள்.) கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் - ஒருவன் சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலையும் இன்சொற் சொல்லு தலையும் வல்லனுயின். அடுக்கிய சுற்றத்தான் சுற்றப்படும்-தம்மிற் ருெடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படும்.

இரண்டும் அளவறிந் தாற்றுத லரிதென்பதுதோன்ற,'ஆற்றி' னென்ருர். தம்மிற் ருெடர்தலாவது சுற்றத்தது சுற்றமும் அதனது சுற்றமுமாய் அவற்ருற் பிணிப்புண்டு வருதல். இவ்வுபாயங்களை வடநூலார் தானமுஞ் சாமமு மென்ப. (ரு)

ருஉசு. பெருங்கொடையான் பேணுன் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

(இ - ள்.) பெருங் கொடையான் வெகுளி பேணுன் - ஒருவன் மிக்க கொடையை யுடையனுமாய் வெகுளியை விரும்பானு மாயின்; அவனின் மருங்கு உடையார் மாநிலத்து இல் - அவன் போலக் கிளையுடையார் இவ் வுலகத்தில்லை.

மிக்க கொடை ஒன்ருனும் வறுமை யெய்தாமற் கொடுத்தல். விரும்பாமை, இஃதரசற்கு வேண்டுவ தொன்றென்று அளவிறந்து செய்யாமை. (சு)

ருஉஎ. காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

(இ - ள்.) காக்கை கரவா கரைந்து உண்ணும்-காக்கைகள் தமக் கிரையாயின கண்டவழி, மறையாது இனத்தை யழைத்து அதனோடும்கூட உண்ணுநிற்கும்; ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள - சுற்றத்தானெய்தும் ஆக்கங்களும் அப்பெற்றித்தாய இயல்பினை உடையார்க்கே உளவாவன.

அவ் வாக்கங்களாவன: பகையின்மையும், பெருஞ்செல்வ முடைமையும் முதலாயின. எச்சவும்மையான் அறமும் இன்பமுமே யன்றிப் பொருளு மெய்து மென்பது பெறுதும். அப்பெற்றித் தாய இயல்பென்றது தாம் நுகர்வன வெல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல். (எ)

**ருஉஅ. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்**
**அதுநோக்கி வாழ்வார் பலர்.**

(இ - ள்.) பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்- எல்லாரையும் ஒரு தன்மையராக நோக்காது அரசன் தத்தந் தகுதிக் கேற்ப நோக்குமாயின்; அதுநோக்கி வாழ்வார் பலர் - அச் சிறப்பு நோக்கி அவனை விடாது வாழுஞ் சுற்றத்தார் பலர்.

உயர்ந்தார் நீங்குதனோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல் லாரும் விடாதொழுகுதனோக்கி வரிசை நோக்கை விதித்தார். இந் நான்கு பாட்டானுஞ் சுற்றந் தழுவு முபாயங் கூறப்பட்டது. (அ)

**ருஉகூ. தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்**
**காரண மின்றி வரும்.**

(இ - ள்.) தமராகித் தற்றுறந்தார் சுற்றம் - முன் தமராய் வைத்துத் தன்னோடு அமராது யாதானுமொரு காரணத்தால் தன் னைப் பிரிந்துபோயவர் பின்னும் வந்து சுற்றமாதல்; அமராமைக் காரணம் இன்றி வரும்-அவ்வமராமைக் காரணம் தன்மாட் டில்லை யாகத் தானே யுளதாம்.

'அமராமைக் காரணமின்றி' யென்றதனன், முன் அஃதுண் டாய்த் துறத்தல் பெற்றாம். அஃதாவது, அரசன் தானெறிகெட வொழுகல், வெறுப்பன செய்தலென்றிவை முதலியவற்றான் வருவது. ஆக்கம் வருவிக்கப்பட்டது. இயற்கையாகவே அன்புடைய ராய சுற்றத்தார்க்குச் செயற்கையான் வந்த நீக்கம் அதனை யொழிய ஒழியும்: ஒழிந்தால் அவர்க்கன்புசெய்து கொள்ள வேண்டா, பழைய வியல்பாய் நிற்குமென்பார், 'வரு'மென்றார். (கூ)

**ருநூ0. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**
**இழைத்திருந் தெண்ணிக் கொளல்.**

(இ - ள்.) உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை - காரண மின்றித் தன்னிடத்து நின்றும் பிரிந்துபோய்ப் பின் காரணத்தான் வந்த சுற்றத்தானை; வேந்தன் இழைத்து இருந்து எண்ணிக் கொளல் - அரசன் அக்காரணத்தைச் செய்துவைத்து ஆராய்ந்து தழீஇக் கொள்க.

வாளா 'உழைப்பிரிந்' தென்றமையின், பிரிதற்குக் காரண மின்மை பெற்றாம். வருதற்காரணத்தைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்துபோய்ப் பகையோடு கூடுமாகலின் 'இழைத்திருந்' தென்றும்' அன்பின்றிப்போய்ப் பின்னுங் காரணத்தான் வந்தமை யின் 'எண்ணிக்கொள' லென்றுங் கூறினார். பிரிந்துபோய சுற்றத் தாருள் தீமை செய்யப்போய் அதனை யொழிய வருவானும், அது செய்யாமற் போய்ப் பின் நன்மை செய்ய வருவானும் தழுவப்படு மாகலின், தழுவுமாறு முறையே இவ்விரண்டு பாட்டானுங் கூறப் பட்டது. (க0)

---

## அதி. ௫௪—பொச்சாவாமை

[அஃதாவது, உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தல் முதலிய காரியங் களினும் சோர்தலைச் செய்யாமை. மேற்சொல்லிய சுற்றத் தாராற் பயனுள்ளது இச் சோர்வில்வழி யாகலின், இது சுற்றந்தழாலின் பின் வைக்கப்பட்டது.]

௫௩க. **இறந்த வெகுளியின் றீதே சிறந்த**
**உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.**

(இ - ள்.) சிறந்த உவகை மகிழ்ச்சியிற் சோர்வு - மிக்க உவகைக் களிப்பான் வரும் மறவி; இறந்த வெகுளியின் தீது-அரச னுக்கு அளவிறந்த வெகுளியினுந் தீது.

மிக்க உவகை பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதமென் றிவற்றான் வருவது. அளவீ, பகைவரை அடர்த்தற்கும் கொடி யோரை ஒறுத்தற்கும் வேண்டுவது. 'இறந்த வெகுளி' ஒரோ வழிப் பகைவரையுங் கொல்லும்; இஃதன்னதன்றித் தன்னையே கோறலில், அதனினுந் தீதாயிற்று. (க)

௫௩உ. **பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை**
**நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.**

(இ - ள்.) புகழைப் பொச்சாப்புக் கொல்லும் - ஒருவன் புகழினை அவன் மறவி கெடுக்கும்; அறிவினை நிச்சநிரப்புக் கொன்றுங்கு - அறிவினை நிச்சநிரப்புக் கெடுக்குமாறு போல.

'நிச்சநிரப்பு' நாடோறும் இரவான் வருந்தித் தன் வயிறு நிறைத்தல். அஃது அறிவுடையான்க ணுண்டாயின் அவற்கு இளிவரவானும் பாவத்தானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவனன்கு மதிப்பினை யழிக்கும்; அதுபோல மறவியும் புகழுடையான்க ணுண்டாயின் அவற்குத் தற்காவாமையானும் காரியக்கேட்டானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவ னன்கு மதிப்பினை அழிக்குமென்பதாயிற்று. இவை இரண்டு பாட்டானும் பொச்சாப்பினது குற்றங் கூறப்பட்டது. (உ)

௫௩௩. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

(இ - ள்.) பொச்சாப்பார்க்குப் புகழ்மை இல்லை-பொச்சாந் தொழுகுவார்க்குப் புகழுடைமை யில்லை; அது உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு-அவ்வின்மை இந் நீதி நூலுடையார்க்கே யன்றி உலகத்து எவ்வகைப்பட்ட நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்தது.

அரசர்க்கே யன்றி அறமுதலிய நான்கினும் முயல்வார் யாவர்க்கும் அவை கைகூடாமையிற் புகழில்லை யென்பது தோன்ற, 'எப்பானூலோர்க்குந் துணி' வென்றார். (௩)

௫௩௪. அச்ச முடையார்க் கரணில்லை ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(இ - ள்.) அரண் அச்சம் உடையார்க்கு இல்லை - காடு மலை முதலிய அரண்களுக்குள்ளே நிற்பினும், மனத்தின்கண் அச்சமுடையார்க்கு அவற்றாற் பயனில்லை; ஆங்கு நன்கு பொச்சாப்பு உடையார்க்கு இல்லை-அதுபோலச் செல்வமெல்லா முடையராயினும், மனத்தின்கண் மறவியை உடையார்க்கு அவற்றாற் பயனில்லை.

நன்மைக் கேதுவாகலின், 'நன்'கென்றார். அச்சமுடையார் நின்ற அரணழியுமாறு போல, மறவியுடையாருடைய செல்வங்களும் அழியு மென்பதாயிற்று. (௪)

௫௩௫. முன்னுறக் காவா திழுக்கியான் தன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(இ - ள்.) முன்னுறக் காவாது இழுக்கியான் - தன்னாற் காக்கப்படுந் துன்பங்களை அவை வருவதற்கு முன்னே அறிந்து

காவாது மறந்திருந்தான்; பின் ஊறு தன் பிழை இரங்கிவிடும் - பின் வந்துற்ற காலத்துக் காக்கலாகாமையின் அப் பிழைப்பினை நினைந்திரங்கிவிடும்.

காக்கப்படுந் துன்பங்களாவன. சோர்வு பார்த்துப் பகைவர் செய்வன. ஊற்றின்க ணென்புழி உருபுஞ் சாரியையும் உடன் தொக்கன. உற்ற காலத்துக் காக்கலாகாமையின், 'இரங்கிவிடு' மென்ருர். இவை மூன்று பாட்டானும் பொச்சாப்புடையார்க்கு வரும் ஏதங் கூறப்பட்டது. (௫)

௫௩௬. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அதுவொப்ப தில்.

(இ - ள்.) இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை வாயின் - அரசர்க்கு மறவாமைக்குணம் யாவர்மாட்டும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின்; அது ஒப்பது இல் - அதனை யொக்கும் நன்மை பிறிதில்லை.

வினை செய்வார் சுற்றத்தாரென்னுந் தம்பாலார் கண்ணும் ஒப்பவேண்டுதலின் 'யார்மாட்டு' மென்றும், தாம் பெருகிய ஞான்றும் சுருங்கிய ஞான்றும் ஒப்பவேண்டுதலின், 'என்றும்' என்றும், எல்லாக் காரியங்களினும் ஒப்பவேண்டுதலின் 'வழுக்காமை'யென்றுங் கூறினர். 'வாயி' னென்பது முதனிலைத் தொழிற்பெயரடியாக வந்த வினையெச்சம். வாய்த்தல் - நேர்படுதல். (௬)

௫௩௭. அரியவென் ருகாத இல்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(இ - ள்.) அரிய என்று ஆகாத இல்லை - இவை செய்தற்கரியனவென்று சொல்லப்பட்டு ஒருவர்க்கு முடியாத காரியங்களில்லை; பொச்சாவாக் கருவியான் போற்றிச் செயின் - மறவாத மனத்தானே எண்ணிச் செய்யப்பெறின்.

பொச்சாவாத என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது. அந்தக்கரணமாகலிற் 'கருவி' யென்ருர்.* இடைவிடாத நினைவும் தப்பாத சூழ்ச்சியு முடையார்க்கு எல்லாம் எளிதின் முடியுமென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் பொச்சாவாமையது சிறப்புக் கூறப்பட்டது. (எ)

௫௩௮. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையும் இல்.

* பொச்சாவாக் கருவி என்பதற்குப் பொச்சாவாமையாகிய கருவியெனப் பொருள்கோடலே சிறப்பு.

(இ - ள்.) புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் - நீதி நூலுடையார் இவை அரசர்க் குரியனவென்று உயர்த்துக்கூறிய செயல்களைக் கடைப்பிடித்துச் செய்க; செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல் - அங்ஙனஞ் செய்யாது மறந்தவர்க்கு எழுமை யினும் நன்மையில்லை யாகலான்.

அச் செயல்களாவன;* மூவகையாற்றலும், நால்வகை உபாய மும், ஐவகைத் தொழிலும், அறுவகைக்குணமும் முதலாய செயல் கள். சாதி தருமமாகிய இவற்றின் வழீஇயோர்க்கு உள்ளதுநிரயத் துன்பமேயாகலின், 'எழுமையு மில்' என்றார். 'எழுமை' ஆகுபெயர். இதனாற் பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன. (அ)

ருகூ. இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(இ - ள்.) தம் மகிழ்ச்சியின் தாம் மைந்து உறும் போழ்து - அரசர் தம் மகிழ்ச்சிக்கண் தாம் வலியுறும்பொழுது; இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக - முற்காலத்து அதனானாய சோர்வாற் கெட்டவர்களை நினைக்க.

காரணங்களோடு அவர்க்குளதாய உரிமையை மகிழ்ச்சிமே லேற்றித் 'தம் மகிழ்ச்சியி'னென்றும், இகழ்ச்சியுங் கேடும் உடன் தோன்றுமாகலின், மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்' தென்றுங் கூறினார். கெட்டாரை உள்ளவே, நாமும் அவ்வாறே கெடுது மென்று அதன்கண் மைந்துறா ரென்பது கருத்து. எண்ணுக† வென்று பாடமோதுவாரு முளர். (கூ)

ருசo. உள்ளிய தெய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின்.

(இ - ள்.) தான் உள்ளியது எய்தல் எளிது மன் - அரசனுக் குத் தானெய்த நினைத்த பொருளை அந் நினைத்த பெற்றியே எய்து தல் எளிதாம்; மற்றும் உள்ளியது உள்ளப் பெறின் - பின்னும் அதனையே நினைக்கக் கூடுமாயின்.

அது கூடாதென்பது ஒழிந்து நின்றமையின், 'மன்' ஒழியிசைக் கண் வந்தது. அதனையே நினைத்தலாவது, மறவி

* இவற்றுள், மூவகையாற்றலை சசுகூ ஆம் குறளுரையினும் நால்வகை உபாயத்தை சசுஎ ஆம் குறளுரையினும், ஐவகைத் தொழிலை சசுஉ, சஎக ஆம் குறளுரையினும், அறுவகைக் குணத்தை சஅ௫ ஆம் குறளுரையினும் காண்க.

† மணக்குடவர்.

யின்றி அதன் கண்ணே முயறல். இவை யிரண்டு பாட்டானும் பொச்சாவாமைக்கு உபாயங் கூறப்பட்டது. (௧௦)

———

## அதி. ருரு—செங்கோன்மை

[அஃதாவது, அரசனுற் செய்யப்படும் முறையினது தன்மை. அம் முறை ஒருபாற் கோடாது செவ்விய கோல்போறலிற் செங் கோலெனப்பட்டது. வடநூலாரும் தண்டமென்ருர். அது சோர்வில்லாத அரசனுற் செயற்பாலதாகலின் இது பொச்சா வாமையின் பின் வைக்கப்பட்டது.

ருசக. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(இ - ள்.) ஓர்ந்து-தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக் குற்றத்தை நாடி, யார்மாட்டும் கண்ணோடாது - யாவர்மாட்டுங் கண்ணோடாது ; இறை புரிந்து - நடுவுநிலைமையைப் பொருந்தி; தேர்ந்து - அக் குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோ ரோடும் ஆராய்ந்து ; செய்வஃதே முறை - அவ்வளவிற்ருகச் செய்வதே முறையாம்.

நடுவு நிற்றல் இறைக்கியல்பாகலின் அதனை 'இறை'யென்றும் உயிரினுஞ் சிறந்தார் கண்ணுமென்பார் 'யார்மாட்டு' மென்றுங் கூறினுர். இறைமை 'இறை'யெனவும், செய்வது 'செய்வஃ'தென வும் நின்றன. இதனுற் செங்கோன்மையை திலக்கணங் கூறப் பட்டது. (௧)

ருசஉ. வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(இ - ள்.) உலகு எல்லாம் வான் நோக்கி வாழும் - உலகத் துயிரெல்லாம் மழையுள்ளதாயின் உளவாகா நிற்குமே யெனினும் ; குடி மன்னவன் கோல் நோக்கி வாழும் - குடிகள் அரசன் செங் கோலுளதாயின் உளவாகா நிற்கும்.

நோக்கி வாழ்தல் - இன்றியமையாமை. வானினுய வுணவை 'வா'னென்றும் கோலினுய ஏமத்தைக் 'கோ' லென்றுங் கூறினுர். அவ்வேம மில்வழி உணவுளதாயினும் குடிகட்கு அதனுற் பய னில்லை யென்பதாம். (௨)

ருசரு. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(இ - ள்.) அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது - அந்தணர்க்குரித்தாய வேதத்திற்கும் அதனுற் சொல்லப்பட்ட அறத்திற்குங் காரணமாய் நிலைபெற்றது; மன்னவன் கோல்- அரசனுற் செலுத்தப்படுகின்ற செங்கோல்.

அரசர் வணிகரென்னும் ஏனையோர்க்கு முரித்தாயினும், தலைமைபற்றி 'அந்தணர் நூ'லென்ருர். "மாதவர் நோன்பு மடவார் கற்புங்—காவலன் காவ"*லன்றித் தங் காவலான் ஆகலின், ஈண்'டற'மென்றது அவை யொழிந்தவற்றை. வேதமும் அறனும் அநாதியாயினுஞ் செங்கோ லில்வழி நடவாவாகலின், அதனை அவற்றிற் 'காதி'யென்றும், அப்பெற்றியே தனக் காதியாவது பிறிதில்லை யென்பார் 'நின்ற' தென்றுங் கூறினர். இவை இரண்டு பாட்டானுஞ் செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

௫௪௪. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.

(இ - ள்.) குடிதழீஇக் கோல் ஓச்சும் மாநில மன்னன் அடி - தன் குடிகளையு மணைத்துச் செங்கோலையுஞ் செலுத்தும் பெருநில வேந்தனடியை, தழீஇ நிற்கும் உலகு - பொருந்தி விடார் உலகத்தார்.

அணைத்தல் இன்சொற் சொல்லுதலும், தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. இவ் விரண்டினையும் வழுவாமற் செய்வான் நிலமுழுதுமாளு மாகலின் அவனை 'மாநில மன்ன' னென்றும், அவன்மாட்டியாவரும் நீங்கா வன்பினராவராகலின் 'அடிதழீஇ நிற்கு முல'கென்றுங் கூறினர். (௪)

௫௪௫. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னுட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

(இ - ள்.) பெயலும் விளையுளும் தொக்கு - பருவ மழையுங் குன்ருத விளைவும் ஒருங்கு கூடி, இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட - நூல்கள் சொல்லிப இயல்பாற் செங்கோலைச் செலுத்துமரசனது நாட்டின் கண்ணவாம்.

'உளி' யென்பது மூன்ருவதன் பொருள்படுவதோர் இடைச்சொல். வானும் நிலனுஞ் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கு மென்பதாம். (௫)

௫௪௬. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

* மணிமேகலை, சிறைசெய்காதை, வரி-உ0அ, உ0௯.

(இ - ள்.) மன்னவன் வென்றிதருவது வேல் அன்று கோல் - மன்னவனுக்குப் போரின்கண் வென்றியைக் கொடுப்பது அவனெறியும் வேலன்று, கோல்; அதூஉம் கோடாது எனின் - அஃதும் அப்பெற்றித்தாவது தான் கோடாதாயின்.

கோல் செவ்விதாயவழியே வேல் வாய்ப்பதென்பார் 'வேலன்' றென்றார். "மாண்ட - அறநெறி முதற்றே அரசின் கொற்றம்'.* என்றார் பிறரும். கோடாதெனென்பது பாடமாயின்† கருவியின் தொழில் வினைமுதன்மே னின்றதாக வுரைக்க. (கூ)

ருசஎ. இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

(இ - ள்.) வையகம் எல்லாம் இறை காக்கும்-வையகத்தை யெல்லாம் அரசன் காக்கும்; அவனை முறை காக்கும் - அவன் றன்னை அவனது செங்கோலே காக்கும்; முட்டாச் செயின் - அதனை முட்டவந்துழியும் முட்டாமற் செலுத்துவனாயின்.

முட்டாமற் செலுத்தியவாறு மகனை முறைசெய்தான்‡ கண்ணும், தன் கை குறைத்தான் § கண்ணுங் காண்க. 'முட்டா'தென்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது.இவை நான்கு பாட்டானும் அதனைச் செலுத்தினு னெய்தும் பயன் கூறப்பட்டது. (எ)

ருசஅ. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்.

(இ - ள்.) எண்பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன் - முறை வேண்டினார்க்கு எளிய செவ்வியை யுடையனாய் அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடு மாராய்ந்து நின்ற உண்மைக் கொப்ப முறைசெய்யாதவரசன்,தண்பதத்தான் தானே கெடும் - தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும்.

'எண்பதத்தா' னென்னும் முற்றுவினை யெச்சமும், 'ஓரா' வென்னும் வினையெச்சமும், 'செய்யா' வென்னும் பெயரெச்ச எதிர்மறையுட் செய்தல்வினை கொண்டன. தாழ்ந்த பதம்-பாவமும் பழியு மெய்திநிற்கும் நிலை. "அல்லவை செய்தார்க் கறங் கூற்றம்"¶ ஆகலின், பகைவரின்றியும் கெடுமென்றார். இதனான் முறைசெலுத்தாதானது கேடு கூறப்பட்டது. (அ)

*புறநானூறு - ருரு. † மணக்குடவர்.

‡சிலப்பதிகாரம், வழக்குரை காதை, வரி ருரு - ௬.

§சிலப்பதிகாரம், கட்டுரை, வரி - சஉ - ருரு.

¶நான்மணிக்கடிகை - அரு.

௫௪௯. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்.

(இ - ள்.) குடிபுறங் காத்து ஓம்பிக் குற்றம் கடிதல் - குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி, அவர் மாட்டுக் குற்றநிகழின் அதனை யொறுப்பா னொழித்தல்; வேந்தன் வடு அன்று தொழில் - வேந்தனுக்குப் பழியன்று, தொழிலாகலான்.

துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கோறலென ஒறுப்பு மூன்று; அவற்றுள் ஈண்டைக் கெய்துவன முன்னைய வென்பது 'குற்றங்கடித' லென்பதனாற் பெற்றும். தன் கீழ் வாழ்வாரை யொறுத்தல் அறனன்மையின் வடுவா மென்பதனை யாசங்கித்து, அஃதாகாது, அரசனுக்கு அவரை அக் குற்றத்தினீக்கித் தூயராக்குதலுஞ் சாதி தருமமென்றார். (௯)

௫௫௦. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

(இ - ள்.) வேந்து கொடியாரைக் கொலையின் ஒறுத்தல் - அரசன் கொடியவர்களைக் கொலையா னொறுத்துத் தக்கோரைக் காத்தல்; பைங்கூழ்களைகட் டதனொடு நேர் - உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காத்ததனோ டொக்கும்.

கொடியவரென்றது தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவாரென் றிவர் முதலாயினரை. இவரை வடநூலார் ஆததாயிக ளென்ப. இப்பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லா வழிப் புற்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ் போன்று நலிவு பல வெய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசற்குச் சாதி தரும மென்பதாயிற்று. இவை யிரண்டு பாட்டானுஞ் செங்கோல் செலுத்தும் வெண்குடை வேந்தற்குத் தியார்மாட்டு மூவகை யொறுப்பும் ஒழியற் பால வல்ல வென்பது கூறப்பட்டது. (௧௦)

---

## அதி. ௫௬—கொடுங்கோன்மை

[அஃதாவது, அம்முறையினது கோடுதல் தன்மை. ஈண்டும் உவமையின் பெயர் பொருண்மேலாயிற்று. செங்கோன்மைக்கு மாறாகலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.]

௫௫௧. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

(இ - ள்.) கொலை மேற்கொண்டாரிற் கொடிது - பகைமை பற்றிக் கொல்லுதல் தொழிலைத் தம்மேற்கொண் டொழுகுவாரினுங் கொடியன்; அலை மேற்கொண்டு அல்லவை செய்து ஒழுகும் வேந்து - பொருள் வெஃகிக் குடிகளை யலைத்தல் தொழிலைத் தன் மேற்கொண்டு முறையல்லவற்றைச் செய்தொழுகும் வேந்தன்.

அவர் செய்வது ஒரு பொழுதைத் துன்பம், இவன் செய்வது எப்பொழுதுந் துன்பமாம் என்பதுபற்றி, அவரினுங் 'கொடிய' னென்றார். பான்மயக்குறழ்ச்சி. 'வேந்'தென்பது உயர்திணைப் பொருட்கண்வந்த அஃறிணைச்சொல். 'அலை' கொலையினுங் கொடிதென்பதாயிற்று. (க)

ருஉ. வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு.

(இ - ள்.) வேலொடு நின்றான் - ஆறலைக்குமிடத்துத் தனியே வேல் கொண்டு நின்ற கள்வன்; இடு என்றது போலும் - ஆறு செல்வானை நின் கைப்பொருள் தாவென்று வேண்டுதலோ டொக்கும்; கோலொடு நின்றான் இரவு - ஒறுத்தல் தொழிலோடு நின்ற அரசன் குடிகளைப் பொருள் வேண்டுதல்.

'வேலொடு நின்றா' னென்றதனாற் பிறரொடு நில்லாமையும், 'இர' வென்றதனால் இறைப்பொருளன்மையும் பெற்றாம். தாராக்கால் ஒறுப்பலென்னுங் குறிப்பினனாகலின், இரவாற்கோடலும் கொடுங்கோன்மையாயிற்று. இவை யிரண்டு பாட்டானுங் கொடுங்கோன்மையது குற்றங் கூறப்பட்டது. (உ)

ருங. நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும்.

(இ - ள்.) நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன் - தன்னாட்டு நிகழுந் தீமைகளை நாடொறு மாராய்ந்து அதற்கொக்க முறைமையைச் செய்யாத அரசன்; நாடொறும் நாடு கெடும் - நாடொறும் நாடிழக்கும்.

அரசனுக்கு நாடு உறுப்பாகலின், அதன் வினை அவன்மே னின்றது. இழத்தல் - பயனெய்தாமை. மன்னவனாடு நாடோறும் கெடுமென் றுரைப்பாரு முளர்.* (ங)

ருச. கூழுங் குடியும் ஒருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு.

---

*மணக்குடவர்.

(இ - ள்.) சூழாது கோல் கோடிச் செய்யும் அரசு - மேல் விளைவ தெண்ணாது முறைதப்பச் செய்யு மரசன், கூழும் குடியும் ஒருங்கு இழக்கும் - அச் செயலான் முன்னீட்டிய பொருளையும் பின் னீட்டுதற் கேதுவாகிய குடிகளையுஞ் சேர விழக்கும்.

கோடவென்பது திரிந்து நின்றது. முன்னீட்டிய பொருள் இழத்தற் கேது வருகின்ற பாட்டாற் கூறுப. (ச)

ருரு. அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(இ - ள்.) அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே - அரசன் முறைசெய்யாமையாற் குடிகள் துன்பமுற்று, அதனைப் பொறுக்கமாட்டாது அழுத கண்ணீரன்றே; செல்வத்தைத் தேய்க்கும் படை - அவன் செல்வத்தைக் குறைக்குங் கருவி.

'அழுத கண்ணீர்' அழுதலான் வந்த கண்ணீர். செல்வமாகிய மரத்தை யென்னுமையின், இஃ தேகதேச உருவகம். அல்லற் படுத்திய பாவத்தது தொழில் அதற்கேதுவாகிய கண்ணீர்மே னின்றது. அக் கண்ணீரிற் கொடிது பிறிதின்மையின். செல்வங் கடிதில் தேயுமென்பது கருத்து. (ரு)

ருசு. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்
மன்னுவாம் மன்னர்க் கொளி.

(இ - ள்.) மன்னர்க்கு மன்னுதல்செங்கோன்மை-அரசர்க்குப் புகழ்கள் தாம் நிலைபெறுதல் செங்கோன்மையானும்; அஃது இன்றேல் மன்னர்க்கு ஒளி மன்னுவாம் - அச் செங்கோன்மை யில்லையாயின், அவர்க்கு அப் புகழ்கள் தாம் உளவாகா.

விகாரத்தால் தொக்க மூன்றுவது விரித்து ஆக்கம் வருவித் துரைக்கப்பட்டது. மன்னுதற் கேது புகழாதல், "இந்நிலத்து மன்னுதல் வேண்டி னிசை நடுக"* என்பதனானு மறிக. மன்னு மை ஒருகாலு நிலையாமை. பழிக்கப்பட்டால் ஒளி மன்னுவாம். ஆகவே, தாமும் மன்னு ரென்பதாயிற்று. வென்றி, கொடை முதலிய ஏதுக்களாற் புகழ் பகுதிப்படுதலின், பன்மையாற் கூறினர். அவை யெல்லாம் செங்கோன்மையில்வழி இலவா மென்பதாம். இவை நான்கு பாட்டானுங் கொடுங்கோலனு யினன் எய்துங் குற்றங் கூறப்பட்டது. (சு)

ருஎ. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு.

*நான்மணிக்கடிகை - கஎ.

(இ - ள்.) துளியின்மை ஞாலத்திற்கு எற்று - மழையில்லாமை வையத்து வாழு முயிர்கட்கு எவ்வகைத் துன்பம் பயக்கும்; அற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு - அவ்வகைத் துன்பம் பயக்கும், அரசன் தண்ணளியில்லாமை அவனாட்டு வாழுங் குடிகட்கு.

சிறப்புப்பற்றித் 'துளி' யென்பது மழைமேனின்றது. 'உயி' ரென்பது குடிகள் மேனின்றது. மேல் 'வானோக்கி வாழு'* மென்றதனை எதிர்மறை முகத்தாற் கூறியவாறு. (எ)

ருரு அ. இன்மையின் இன்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

(இ - ள்.) முறை செய்யா மன்னவன் கோற் கீழ்ப் படின் - முறைசெய்யாத அரசனது கொடுங்கோலின்கீழ் வாழின்; இன்மையின் உடைமை இன்னாது - யாவர்க்கும் பொருளினதின்மையினும் உடைமை இன்னாது.

தனக்குரிய பொருளோடு அமையாது மேலும் வெஃகுவோனது நாட்டுக் கைந்நோவ யாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே யாகலின், அவ்வுடைமை இன்மையினும் இன்னாதாயிற்று. இவை யிரண்டு பாட்டானும் அவனாட்டு வாழ்வார்க்கு வருங் குற்றங் கூறப்பட்டது. (அ)

ருரு கூ. †முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.

(இ - ள்.) மன்னவன் முறைகோடிச் செய்யின் - மன்னவன் தான் செய்யும் பொருளை முறைதப்பச் செய்யுமாயின்; உறை கோடி வானம் பெயல் ஒல்லாது - அவனாட்டுப் பருவமழை இன்றாம் வகை மேகம் பொழிதலைச் செய்யாது.

இரண்டிடத்துங் கோடவென்பன திரிந்து நின்றன. 'உறை' கோடுதலாவது பெய்யுங் காலத்துப் பெய்யாமை. அதற்கேது வருகின்ற பாட்டாற் கூறுப. (கூ)

ருசo. ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்.

(இ - ள்.) காவலன் காவான் எனின் - காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவானாயின்; ஆ பயன் குன்றும் - அறனில்லாத

*குறள்·ருசஉ. † சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம் - உருரு. மணிமேகலை. எ; வரி, அ - கஉ.

அவனாட்டுப் பசுக்களும் பால் குன்றும்; அறுதொழிலோர் நூல் மறப்பர் - அந்தணரும் நூல்களை மறந்து விடுவர்.

'ஆ பயன்' ஆவாற் கொள்ளும் பயன். அறுதொழிலாவன ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றலென இவை. பசுக்கள் பால்குன்றியவழி அவியின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரங் கற்ப மென்பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம். ஆகவே வானம் பெயலொல்லா தென்ப தாயிற்று. இவை யிரண்டு பாட்டானும் அவனாட்டின்க ணிகழுங் குற்றங் கூறப்பட்டது. (கo)

---

## அதி. ருஎ—வெருவந்தசெய்யாமை

[அஃதாவது, குடிக ளஞ்சுவதும் பகுதி*யஞ்சுவதும் தானஞ்சுவது மாய தொழில்களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங் கோன்மைப்பாற் படுதலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.]

ருசுக. **தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங் கொறுப்பது வேந்து.**

(இ - ள்.) தக்காங்கு நாடி - ஒருவன் தன்னின் மெலியார் மேற் சென்றவழி அதனை நடுவாகநின் றுராய்ந்து; தலைச்செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து - பின்னும் அது செய் யாமற் பொருட்டு அவனை அக் குற்றத்திற்கொப்ப ஒறுப்பானே அரசனாவான்.

'தக்காங்கு,' 'ஒத்தாங்'கென்பன ஒரு சொல். தகுதி யென்பது நடுவுநிலைமையாதல், ''தகுதியெனவொன்று நன்றே'' என்பதனானு மறிக. இதனானே தக்காங்கு நாடாமையும், பிறிதோர் காரணம் பற்றி மிக வொறுத்தலும், குடிகளஞ்சும் வினையாதல் பெற்றாம். (க)

ருசுஉ. **கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்.**†

(இ - ள்.) கடிது ஓச்சி - அவ்வொத்தாங் கொறுத்தல் தொடங்குங்கால் அளவிறப்பச் செய்வார்போல் தொடங்கி; மெல்ல எறிக - செய்யுங்கால் அளவிறவாமற் செய்க; ஆக்கம் நெடிது நீங்காமை வேண்டுபவர் - ஆக்கந் தங்க ணெடுங்கால நிற்றலை வேண்டுவார்.

---

*பகுதி - மந்திரிமுதலியவர்கள். † குறள் - கககக.

'கடிதோச்' சல் குற்றஞ்செய்வார் அதனை அஞ்சுதற்பொருட்டும், 'மெல்லவெறி' தல் யாவரும் வெருவாமைப் பொருட்டுமாம். தொடங்கின அளவிற் குறைதல்பற்றி மென்மை கூறப்பட்டது. ஓச்சுதல் எறிதலென்பன இரண்டும் உவமைபற்றி வந்தன. இவையிரண்டு பாட்டானும் குடிகள் வெருவந்த செய்யாமைய தியல்பு கூறப்பட்டது. (௨)

௫௬௩. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.

(இ - ள்.) வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன் ஆயின்-குடிகள் வெருவிய செயல்களைச் செய்து நடக்கும் வெங்கோலனுமாயின்; ஒருவந்தம் ஒல்லைக் கெடும் - அரசன் ஒருதலையாகக் கடிதிற் கெடும்.

'வெங்கோல' னென்பது ஈண்டு வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்த மென்பன ஒரு பொருட்கிளவி. அச்செயல்களுங் கேடுகளும் முன்னர்க் கூறப்படும். (௩)

௫௬௪. இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும்.

(இ - ள்.) இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச் சொல் வேந்தன்-குடிகளான் நம்மிறைவன் கடியனென்று சொல்லப்படும் இன்னாத சொல்லையுடைய வேந்தன்; உறை கடுகி ஒல்லைக் கெடும்-ஆயுளுங் குறைந்து செல்வமுங் கடிதின் இழக்கும்.

நெஞ்சு நொந்து சொல்லுதலான், இன்னாமை பயப்பதாய சொல்லை 'இன்னாச்சொல்' லென்றார். 'உறை' யென்பது முதனிலைத் தொழிற்பெயர்; அஃது ஈண் டாகுபெயராய் உறைதலைச் செய்யும் நாள்மே னின்றது. அது குறைதலாவது அச்சொல் இல்லாதார்க்கு உள்ளதிற் சுருங்குதல். (௪)

௫௬௫. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

(இ - ள்.) அருஞ் செவ்வி இன்னா முகத்தான் பெருஞ் செல்வம் - தன்னைக் காணவேண்டுவார்க்குக், காலமரியனுய்க் கண்டால் இன்னாத முகத்தினை யுடையானது பெரிய செல்வம்; பேஎய் கண்டன்னது உடைத்து-பேயாற் காணப்பட்டாற் போல்வதொரு குற்ற முடைத்து.

எனவே, இவை யிரண்டும் வெருவந்த செய்தலாயின. இவை செய்வானைச் சார்வாரின்மையின், அவனது செல்வந் தனக்கும் பிறர்க்கும் பயன்படா தென்பதுபற்றிப் 'பேஎய் கண்டன்ன துடைத்'தென்றார். காணுதல் - தன்வயமாக்குதல். (ரு)

ருசுசு. கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும்.

(இ - ள்.) கடுஞ் சொல்லன் கண் இலன் ஆயின் - அரசன் கடிய சொல்லையு முடையனாய்க் கண்ணோட்டமு மிலனாயின்; நெடுஞ் செல்வம் நீடு இன்றி ஆங்கே கெடும் - அவனது பெரிய செல்வம் நீடுதலின்றி அப்பொழுதே கெடும்.

"வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொருள்-ஈட்டங் கட்காமமோ டேழு" எனப்பட்ட விதனங்களுட் கடுஞ்சொல்லையும் மிகுதண்டத்தையும் இவர் இவ் வெருவந்த செய்தலுள் அடக்கினார். 'கண்' ஆகுபெயர். இவை செய்தபொழுதே கெடுஞ் சிறுமைத் தன்றாயினு மென்பார், 'நெடுஞ்செல்வ' மென்றார். நீடுதல் - நீட்டித்தல். (சு)

ருசுஎ. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.

(இ - ள்.) கடுமொழியும் கையிகந்த தண்டமும் - கடிய சொல்லும் குற்றத்தின் மிக்க தண்டமும்; வேந்தன் அடு முரண் தேய்க்கும் அரம் - அரசனது பகை வெல்லுதற்கேற்ற மாறுபாடாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாம்.

கடுமொழியால் தானையுங் கையிகந்த தண்டத்தால் தேசமுங் கெட்டு, முரண் சுருங்கி வருதலின் அவற்றை 'அர'மாக்கி, திண்ணிதாயினுந் தேயு மென்றற்கு 'அடுமுர'ணை இரும்பாக்கினார். ஏகதேச உருவகம். 'அர'மென்பதனைத் தனித்தனி கூட்டுக. இவை யைந்து பாட்டானும், செவ்வியின்மை, இன்னாமுகமுடைமை, கண்ணோட்ட மின்மை, கடுஞ்சொற்சொல்லல், கையிகந்த தண்டமென் றிவைகள் குடிகளஞ்சும் வினையென்பதூஉம், இவை செய்தான் ஆயுளுஞ் செல்வமும் அடுமுரணு மிழக்கு மென்பதூஉங் கூறப்பட்டன. (எ)

ருசுஅ. இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

(இ - ள்.) இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன்-காரியத்தைப் பற்றி வந்த எண்ணத்தை அமைச்சர்மேல் வைத்து அவரோடு தானும் எண்ணிச் செய்யாத அரசன்; சினத்து ஆற்றிச்

சிறின் - அப்பிழைப்பால் தன் காரியந் தப்பியவழித் தன்னைச் சின மாகிய குற்றத்தின்கண்ணே செலுத்தி அவரை வெருளுமாயின்; திருச் சிறுகும் - அவன் செல்வம் நாடோறுஞ் சுருங்கும்.

அரசர் பாரம் பொறுத்துய்த்தல் ஒப்புமையான் அமைச்சரை 'இன' மென்றும், தான் பின் பிழைப்பாதலறிந்து அமையாது அதனை அவர்மேலேற்றி வெகுளின் அவர் வெரீஇ நீங்குவர்; நீங்கவே அப்பிழைப்புத் திருமாறும் அப் பாரம் இனிதுய்க்கு மாறும் இலனு மென்பது நோக்கித் 'திருச் சிறுகு' மென்றுங் கூறினர். இதனாற் பகுதி யஞ்சும் வினையும் அது செய்தா னெய்துங் குற்றமுங் கூறப்பட்டன. (அ)

௫சுகூ. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

(இ - ள்.) சிறை செய்யா வேந்தன்-செரு வருதற்கு முன்னே தனக்குப் புகலாவதோர் அரண் செய்துகொள்ளாத அரசன்; செரு வந்தபோழ்தில் வெருவந்து வெய்து கெடும் - அது வந்த காலத்து ஏமமின்மையான் வெருவிக் கடிதிற் கெடும்.

பகையை வெருவிச்சேர்ந்தார் நீங்குதலின் தமியனாய்த்தானும் வெருவி அப் பகை வயத்தனா மென்பதாம். இதனால் தா னஞ்சும் வினையும் அது செய்தானெய்தும் பயனுங் கூறப்பட்டன. (கூ)

௫எ0. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல் அதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.*

(இ - ள்.) கடுங் கோல் கல்லார்ப் பிணிக்கும்-கடுங்கோலனாய அரசன் நீதிநூல் முதலிய கல்லாதாரைத் தனக்குப் பகுதியாகக் கூட்டாநிற்கும்; அதுவல்லது நிலக்குப் பொறை இல்லை - அக் கூட்டமல்லது நிலத்திற்கு மிகையாய பாரம் பிறிதில்லை.

'கடுங்கோ' லென்பது ஈண்டு மிக்க தண்டத்தின்மேற்றன்றி அதனைச் செய்வான்மேற் றாயிற்று. அவன் அது செய்தற் கிசை வாரை யல்லது கூட்டாமையிற் 'கல்லார்ப் பிணிக்கு' மென்றும், ஏனையவற்றை யெல்லாம் பொறுக்கின்ற தியல்பாகலின் நிலத்திற் குப் பொறை 'அதுவல்ல தில்லை' யென்றுங் கூறினர். 'நிலக்' கென்பது செய்யுள் விகாரம். இதனால் வெருவந்த செய்தலின் குற்றங் கூறப்பட்டது. (க0)

---

* குறள் - கஅகூ.

## அதி. ருஅ—கண்ணோட்டம்

[அஃதாவது தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேற் கண்சென்ற வழி நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று மேல் வெருவந்த செய்யாமையுட் கூறிய அதனையே சிறப்புப்பற்றி விரித்துக் கூறுகின்றமையின், இஃததன் பின் வைக்கப்பட்டது.]

**ருஎக. கண்ணோட்டம் என்னுங் கழிபெருங் காரிகை**
**உண்மையான் உண்டிவ் வுலகு.**

(இ - ள்.) கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை உண்மையான் - கண்ணோட்டமென்று சொல்லப்படுகின்ற சிறப்புடைய அழகு அரசர்மாட்டு உண்டாகலான், இவ்வுலகு உண்டு- இவ்வுலக முண்டாகாநின்றது.

'கழிபெருங்காரிகை' யென்புழி ஒருபொருட் பன்மொழி இவ் வுயிரழகது சிறப்புணர நின்றது. இவ்வழகு அதற்குறுப்பாகலின் 'உண்மையா' னென நிலைபேறுங் கூறினார். இன்மை வெருவந்த செய்த லாகலின், அவர் நாட்டு வாழ்வார் புலியையடைந்த புல்வா யினம்போன்று ஏமஞ் சாராமைபற்றி. 'இவ்வுலகுண்' டென்றார்.(க)

**ருஎஉ. கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை.**

(இ - ள்.) உலகியல் கண்ணோட்டத்து உள்ளது - உலகநடை, கண்ணோட்டத்தின் கண்ணே நிகழ்வது; அஃது இலார் உண்மை நிலக்குப் பொறை - ஆகலான் அக்கண்ணோட்டமில்லாதார் உள ராதல் இந்நிலத்திற்குப் பாரமாதற்கே, பிறிதொன்றற் கன்று.

உலக நடையாவது ஒப்புரவு செய்தல், புறந்தருதல், பிழைத் தன பொறுத்தலென் றிவைமுதலாயின. அவை நிகழாமையால் தமக்கும் பிறர்க்கும்பயன்படா ரென்பதுபற்றி, 'நிலக்குப்பொறை' யென்றார். ஆதற்கென்பது சொல்லெச்சம். இவை இரண்டு பாட் டானுங் கண்ணோட்டத்தது சிறப்புக் கூறப்பட்டது. (உ)

**ருஎங. பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னுங்**
**கண்ணோட்டம் இல்லாத கண்.**

(இ - ள்.) பண் என்னும் பாடற்கு இயைபு இன்றேல் - பண் என்ன பயத்ததாம் பாடற் றொழிலோடு பொருத்தமின்றாயின்?; கண் என்னும் கண்ணோட்டம் இல்லாத கண்-அதுபோலக் கண் என்ன பயத்ததாம் கண்ணோட்டமில்லாத விடத்து ?

'பண்'. 'கண்' என்பன சாதிப்பெயர். பண்களாவன. பாலை யாழ் முதலிய நூற்றுமூன்று. பாடற்றொழில்களாவன; யாழின் கண் வார்தல் முதலியவெட்டும், பண்ணல் முதலிய வெட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடில மென்னு மைந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ண முதலிய வண்ணங்க ளெழுபத்தாறுமாம்.* இவற்றோ டியையாதவழிப் பண்ணாற் பயனில்லாதவாறுபோலக் கண்ணோட் டத் தியையாதவழிக் கண்ணாற் பயனில்லையென்பதாம். கண் சென்றவழி நிகழ்தல்பற்றி அதனை யிடமாக்கினார். இறுதிக்கட் கண்ணென்பதனைக் "கண்ணகன் ஞாலம்"† என்புழிப்போலக் கொள்க. (ங)

நுஎச. உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினாற்

கண்ணோட்டம் இல்லாத கண்.

(இ - ள்.) முகத்து உளபோல் எவன் செய்யும்-கண்டார்க்கு முகத்தின்கண் உளபோற் றோன்றலல்லது வேறென்ன பயனைச் செய்யும்; அளவினான் கண்ணோட்டம் இல்லாத கண் - அளவிற வாத கண்ணோடுதலை யுடையவல்லாத கண்கள்?

தோன்றவல்லதென்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. கழிகண்ணோட்டத்தி னீக்குதற்கு, 'அளவினா' னென்றார். ஒரு பயனையுஞ் செய்யாவென்பது குறிப்பெச்சம். (ச)

நுஎரு. கண்ணிற் கணிகலங் கண்ணோட்டம் அஃதின்றேற்

புண்ணென் றுணரப் படும்.

(இ - ள்.) கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் - ஒருவன் கண்ணிற்கு அணியுங் கலமாவது கண்ணோட்டம்; அஃது இன்றேல் புண் என்று உணரப்படும் - அக் கலமில்லையாயின் அஃதறிவுடை யாராற் புண்ணென் றறியப்படும்.

வேறணிகல மின்மையிற் 'கண்ணிற் கணிகல' மென்றும், கண்ணாய்த் தோன்றினும் நோய்களானும் புலன் பற்றலானுந் துயர் விளைத்த லோக்கிப் 'புண்ணென் றுணரப்படு' மென்றுங் கூறினார். இவை மூன்று பாட்டானும் ஓடாது நின்ற கண்ணின் குற்றங் கூறப்பட்டது. (ரு)

நுஎசு. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ

டியைந்துகண் ணோடா தவர்.

(இ - ள்.) கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர் - ஓடுதற் குரிய கண்ணோடு பொருந்தி வைத்து அஃதோடாதவர்; மண்ணோடு

* விரிவு சிலப்பதிகார வுரையிற் காண்க. † திரிகடுகம் - க.

இயைந்த மரத்து அனையர் - இயங்காநின்றாராயினும் மண்ணோடு பொருந்தி நிற்கின்ற மரத்தினை யொப்பர்.

'ஓடாதவ' ரென்புழிச் சினைவினை முதன்மேனின்றது. மரமுங் கண்ணோடியைந்து கண்ணோடாமையின், இது தொழிலுவமம். இதனைச் சுதைமண்ணோடு கூடிய மரப்பாவை யென்றுரைப்பாரு முளர்.* அஃதுரையன்மை, காணப்படுவ கண்ணானன்றி அதனுள் மறைந்து நிற்கின்ற ஒருசா ருள்ளீட்டாற் கூறினமையானும், "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்—றிரக்கண்டாய்"† என்பதனானு மறிக. (கூ)

௫எஎ கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல்.

(இ - ள்.) கண்ணோட்டம் இல்லவர் கண் இலர்-கண்ணோட்ட மில்லாதவர் கண்ணுடையரு மல்லர்; கண் உடையார் கண்ணோட்டம் இன்மையும் இல் - கண்ணுடையவர் கண்ணோட்ட மிலராதலு மில்லை.

கண்ணுடையராயிற் காட்சிக்கண்ணே அஃதோடு மென்பது பற்றிக் "கண்ணோட்ட மில்லவர் கண்ணில" ரெனக் கூறிப் பின் அதனை எதிர்மறைமுகத்தான் விளக்கினார். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. இவை யிரண்டு பாட்டானுங் கண்ணோடா தார திழிபு கூறப்பட்டது. (எ)

௫எஅ. கருமம் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை உடைத்திவ் வுலகு.

(இ - ள்.) கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு - முறைசெய்தலாகிய தந் தொழில் அழியாமற் கண்ணோடவல்ல வேந்தர்க்கு; உரிமை உடைத்து இவ்வுலகு - உரித்தாந் தன்மை யுடைத்து இவ்வுலகம்.

தம்மொடு பயின்றார் பிறரை இடுக்கண் செய்துழி அவரைக் கண்ணோடி யொறுதார்க்கு முறை சிதைதல் மேல் "ஓர்ந்து கண்ணோடாது"‡ என்ற முறையிலக்கணத்தானும் பெற்றாம். முறை சிதைய வரும்வழிக் கண்ணோடாமையும் வாராவழிக் கண்ணோட லும் ஒருவற்கியல்பாத லருமையிற், 'கண்ணோட வல்லார்க்' கென் றும், அவ்வியல்புடையார்க்கு உலகமுழுதும் நெடுங்காலஞ் சேற லின் 'உரிமையுடைத்' தென்றுங் கூறினார். இதனாற் கண்ணோடு மாறு கூறப்பட்டது. (அ)

* மணக்குடவர். † முத்தொள்ளாயிரம். ‡ குறள் - ௫௪௧.

ருஎகூ. ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(இ - ள்.) ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணும் - தம்மை யொறுக்குமியல்புடையாரிடத்தும்; கண்ணோடிப் பொறுத்தாற்றும் பண்பே தலை - கண்ணோட்ட முடையராய்க் குற்றத்தைப் பொறுக்குமியல்பே அரசர்க்குத் தலையாய வியல்பாவது.

'பண்பின' ரென்றதனால் அவர் பயிற்சி பெற்றாம்; 'ஒறுத்தாற்றும்,' 'பொறுத்தாற்று' மென்பன ஈண்டொரு சொன்னீர. (௯)

ருஅ௦. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(இ - ள்.) நஞ்சுபெயக் கண்டும் உண்டு அமைவர்- பயின்றார் தமக்கு நஞ்சிடக் கண்டுவைத்தும் கண் மறுக்கமாட்டாமையின் அதனை யுண்டு பின்னுமவரோடு மேவுவர்; நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர் - யாவரானும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுபவர்.

'நாகரிக' மென்பது கண்ணோட்டமாதல், "முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பி-னஞ்சு முண்பர் நனிநாக ரிகர்"* என்பதனானு மறிக. அரசர் அவரை யொருது கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றஞ்செய்துழி யென்பது இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (௧௦)

## அதி. ருகூ—ஒற்றாடல்

[அஃதாவது, பகை, நொதுமல், நட்பென்னும் மூன்று திறத்தார் மாட்டும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரையாளுதல்.† மேற் சொல்லிய இலக்கணத்தனாய அரசனுக்குத் தன்னாடு செலுத்துங்காலும் பிறர் நாடு கொள்ளுங்காலும் வேண்டுவன கூறுகின்றாராகலின், அவ்விருமைக்கும் இன்றியமையாதாய இது முன் வைக்கப்பட்டது.]

ருஅக. ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

(இ - ள்.) ஒற்றும் உரை சான்ற நூலும் இவை இரண்டும் - ஒற்றும், புகழமைந்த நீதிநூலுமாகிய இவை இரண்டனையும்;

* நற்றிணை - ௩௫௫.
† ௩௧௯ முதல் ௫௪-உள்ளிட்ட அதிகாரங்களிற் கூறியன.

மன்னவன் கண் தெற்றென்க-அரசன் தன்னிரண்டு கண்ணுமாகத் தெளிக.

ஒற்றுத் தன்கண் செல்லமாட்டாத பரப்பெலாஞ் சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லா முணர்த்தலானும், நூல் அந் நிகழ்ந்தவற்றிற்குத் தன்னுணர்வு செல்லமாட்டாத வினைகளை யெல்லாஞ் சொல்லியுணர்த்தலானும், இவ்விரண்டனையுமே தனக் கூனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்துகொண்டொழுகுக வென்பதாம். ஒற்றனை 'ஒற்'றென்றார்; வேந்தனை வேந்தென்றாற் போல. 'தெற்றென்க' வென்பது - தெற்றெனென்பது முதனிலை யாக வந்த வியங்கோள். அது தெற்றென வென்னுஞ் செய வெனெச்சத்தானறிக இதனால் ஒற்றினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

ருஅஉ. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.

(இ - ள்.) எல்லார்க்கும் நிகழ்பவை எல்லாம் எஞ்ஞான்றும் வல் அறிதல் - எல்லார்கண்ணும் நிகழ்வன வெல்லாவற்றையும் நாடோறும் ஒற்றான் விரைந்தறிதல்; வேந்தன் தொழில் அரசனுக் குரிய தொழில்.

'எல்லார்க்கு' மென்றது மூன்று திறத்தாரையும் நான்காவது ஏழாவதன் பொருட்கண் வந்தது. நிகழ்வன 'எல்லா' மென்றது நல்லவுந் தீயவுமாய சொற்களையுஞ் செயல்களையும். அவை நிகழ்ந்த பொழுதே அவற்றிற்குத்தக்க அளியாகத் தெறலாகச் செய்ய வேண்டுதலின் 'வல்லறித'லென்றும், அவ்விரு தொழிற்கும் அறிதல் காரணமாகலின் அதனையே உபசார வழக்கால் 'தொழி' லென்றுங் கூறினார். ஒற்றானென்பது அதிகாரத்தான் வந்தது. இதனால் ஒற்றினாய பயன் கூறப்பட்டது. (உ)

ருஅங. ஒற்றினுன் ஒற்றிப் பொருள்தெரியா* மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

(இ - ள்.) ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன் - ஒற்றினானே எல்லார் கண்ணும் நிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து அவற்றா னெய்தும் பயனை யாராயாத வரசன்; கொற்றம் கொளக் கிடந்தது இல்-வென்றியடையக் கிடந்தது வேறொரு நெறியில்லை.

அந்நிகழ்ந்தனவும் பயனும் அறியாது பகைக் கெளியனாதல் பிறிதில் தீராமையின் 'கொற்றங் கொளக் கிடந்ததில்' லென்றார். இதற்குக் கொளக்கிடந்ததொரு வென்றியில்லையென் றுரைப்பினு†

*இனியவை நாற்பது. †மணக்குடவர்.

மமையும். இதனால் அத்தொழில் செய்யாதவழி வரும் குற்றங் கூறப்பட்டது. (௫)

௫௮௪. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங் கனைவரையும் ஆராய்வ தொற்று.

(இ - ள்.) தம்வினை செய்வார் சுற்றம் வேண்டாதார் என்ற அனைவரையும் ஆராய்வது - தங் காரியஞ் செய்வார், சுற்றத்தார், பகைவரென்று சொல்லப்பட்ட அனைவரையும் சொற்செயல்களா னாராய்வானே; ஒற்று - ஒற்றனாவான்.

'தம் 'மென்றது அரசனை யுளப்படுத்தி. அவனுக்குக் காரியஞ் செய்வார் செய்வனவும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும், பகைவர் தன்னற்றமாராய்தலும் மேல் தேறப்படுதலும் முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவு மறிந்து, அவற்றிற் கேற்றன செய்ய வேண்டுதலின், இம்மூவகை யாரையும் எஞ்சாமல் ஆராய வேண்டுமென்பார், 'அனைவரையு மாராய்வ தொற்' றென்றார். (௪)

௫௮௫. கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும் உகாஅமை வல்லதே ஒற்று.

(இ - ள்.) கடாஅ உருவொடு - ஒற்றப்பட்டார் கண்டால் ஐயுறாத வடிவோடு பொருந்தி; கண் அஞ்சாது - அவர் ஐயுற்றறிய லுறிற் செயிர்த்து நோக்கிய அவர் கண்ணிற் கஞ்சாது நின்று; யாண்டும் உகாஅமை வல்லதே ஒற்று - நான்குபாயமுஞ் செய் தாலும் மனத்துக் கொண்டவற்றை உமிழாமை வல்லவனே ஒற்றனாவான்.

'கடா'வென்பது கடுக்கு மென்னும் பெயரெச்சத் தெதிர் மறை. ஐயுறாத வடிவாவன: பார்ப்பார், வணிகர் முதலாயினோர் வடிவு. (௫)

௫௮௬. துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந் தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(இ - ள்.) துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து - முற்றத்துறந்தாராயும் விரதவொழுக்கினராயும் உள்புகுதற்கரிய இடங்களெல்லாம் உள்புக்கு ஆராய வேண்டுவன ஆராய்ந்தறிந்து; என் செயினும் சோர்வு இலது ஒற்று - ஆண்டையார் ஐயுற்றுப் பிடித்து எல்லாத் துன்பமுஞ் செய்து கேட்டாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான்.

விரத வொழுக்கம்-தீர்த்த யாத்திரை முதலாயின. 'செயினு' மென்பது அறவோரென்று செய்வாரின்மை விளக்கி நின்றது.

மேல்* நால்வகை உபாயத்தினுஞ் சோர்வின்மை சொல்லிவைத்து ஈண்டுந் தண்டத்தைப் பிரித்துக் கூறியது, அதனது பொறுத்தற் கருமைச் சிறப்பு நோக்கி. இதனுட் 'படிவ' மென்றதனை வேட மாக்கித் துறந்தார் வேடத்தாராகி†யென் றுரைப்பாரு முளர்.(௬)

௫௮எ. மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பா டில்லதே ஒற்று.

(இ - ள்.) மறைந்தவை கேட்க வற்று ஆகி-ஒற்றப்பட்டார் மறையச் செய்த செயல்களை அவர்க்குள்ளாயினாராற் கேட்க வல்லனாய்; அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று - கேட்டறிந்த செயல்களிற் பின் ஐயப்படாது துணியவல்லவனே ஒற்றனாவான்.

'மறைந்தவை' சொல்லுவாரை யறிந்து, அவரயிராமற் சென் றொட்டித் தாமே சொல்லும் வகை அதற்கேற்ற சொல்லாக செயலாக முன்னே விளைத்து, அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறாதார் போன்று நின்று கேட்க வேண்டுதலிற் 'கேட்கவற்றாகி' யென்றும், கேட்டறிந்தவற்றைத் தானே ஐயுற்று வந்து சொல்லின் அரசனால் அவற்றிற்கேற்ற வினை செய்யலாகாமையின் 'ஐயப்பா டில்லதே' யென்றுங் கூறினார். இவை நான்கு பாட்டானும் ஒற்றினதிலக்கணங் கூறப்பட்டது. (எ)

௫௮அ. ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

(இ - ள்.) ஒற்று ஒற்றித் தந்த பொருளையும் - ஓரொற்றன் ஒற்றிவந் தறிவித்த காரியந் தன்னையும்; மற்றும் ஓரொற்றினால் ஒற்றிக் கொளல் - பிறனோர் ஒற்றனாலும் ஒற்றுவித்து ஒப்புமை கண்டு கொள்க.

ஒற்றப்பட்டாரோ டொத்துநின்று மாறுபடக் கூறலுங் கூடு மாகலின், ஒருவன் மாற்றந் தேறப்படா தென்பதாம். (அ)

௫௮௯. ஒற்றொற் றுணராமை யாள்க உடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(இ - ள்.) ஒற்று ஒற்று உணராமை ஆள்க - ஒற்றரையாளு மிடத்து ஒருவனை யொருவன றியாம லாள்க; உடன் மூவர் சொல் தொக்க தேறப்படும் - அங்ஙன மாண்ட ஒற்றர் மூவரை ஒரு பொருள்மேல் வேறுவேறு விட்டால் அம்மூவர் சொல்லும் பயனா லொத்தனவாயின், அது மெய்யென்று தெளியப்படும்.

---

* இஃது ஆம் குறளுரை. † மணக்குடவர்.

ஆயினென்பது வருவிக்கப்பட்டது. ஒருவனை ஒருவன் அறியின் தம்முள் இயைந்து ஒப்பக்கூறுவராகலின் 'உணராமை யாள்க' வென்றும், மூவர்க்கு நெஞ்சொற்றுமைப்படுதலும் பட்டால் நீடு நிற்றலுங் கூடாமையின் 'தேறப்படு' மென்றுங் கூறினர். இதனுனே அஃ தொத்திலவாயிற் பின்னு மாராய்க என்பதூஉம் பெற்றும். (கூ)

ருகூ௦. சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தான் ஆகும் மறை.

(இ - ள்.) ஒற்றின்கண் சிறப்பு அறியச் செய்யற்க - மறைந்தவை யறிந்து கூறிய ஒற்றின்கட் செய்யும் சிறப்பினை அரசன் பிறரறியச் செய்யாதொழிக; செய்யின் மறை புறப்படுத்தான் ஆகும் - செய்தானுயின் தன்னகத் தடக்கப்படும் மறையைத் தானே புறத்திட்டானும்.

'மறை'யாவது அவன் ஒற்றனுயதூஉம், அவன் கூறியதூஉமாம். சிறப்புப்பெற்ற இவன் யாவனென்றும், இது பெறுதற்குக் காரணம் யாதென்றும் வினவுவாரும் இறுப்பாரும் அயலாராகலின், 'புறப்படுத்தானகு' மென்றார். இவை மூன்று பாட்டானும் ஒற்றரை யாளுமாறும், அவரா னிகழ்ந்தன அறியுமாறும், அறிந்தாற் சிறப்புச் செய்யுமாறுங் கூறப்பட்டன. (க௦)

---

## அதி. கூ௦—ஊக்கமுடைமை

[அஃதாவது, மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல். ஒற்றரான் நிகழ்ந்தனவறிந்து அவற்றிற்கேற்ற வினை செய்வானுக்கு இஃ தின்றியமையாமையின், ஒற்றாடலின் பின் வைக்கப்பட்டது.]

ருகூக. உடையர் எனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று.

(இ - ள்.) உடையர் எனப்படுவது ஊக்கம் - ஒருவரை உடையரென்று சொல்லச் சிறந்தது ஊக்கம்; அஃது இல்லார் மற்று உடையது உடையரோ - அவ் வூக்கமில்லாதார் வேறுடையது தானும் உடையராவரோ? ஆகார்.

வேறுடையதென்றது முன்னெய்தி நின்ற பொருளை. உம்மை விகாரத்தால் தொக்கது. காக்குமாற்றல் இலராகலின், அதுவுமிழப்ப ரென்பதாம். (க)

ருகூஉ. உள்ள முடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

(இ-ள்.) உள்ளம் உடைமை உடைமை - ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது; பொருள் உடைமை நில்லாது நீங்கிவிடும் - மற்றைப் பொருளுடைமை நிலை நில்லாது நீங்கிப்போம்.

'உள்ளம்' ஆகுபெயர். ஊக்கம், உள்ளத்துப் பண்பாகலின் அதற்கு நிலைநிற்றலும், பொருள், உடம்பினும் வேருய் அழிதல் மாலைத்தாகலின் அதற்கு நிலைநில்லாமையும் கூறினர். கூறவே, அஃது உடைமை யன்றென்பது பெறப்பட்டது. (உ)

ருகூங. ஆக்கம் இழந்தேமென் றல்லாவார் ஊக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார்.

(இ-ள்.) ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார்-இழந்தாராயினும் யாம் கைப்பொருளை இழந்தே மென்றலமரார்; ஒருவந்தம் ஊக்கம் கைத்து உடையார் - நிலைபெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக வுடையார்.

'ஆக்கம்' ஆகுபெயர். ஒருவந்தமாய ஊக்கமென்க. 'கைத்து' கையகத்தாய பொருள்; ''கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ் செய்ம்மின்''* என்ருர் பிறரும். அல்லாவாமைக் கேது வருகின்ற பாட்டாற் கூறுப. (ங)

ருகூச. ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை.

(இ-ள்.) அசைவு இலா ஊக்கம் உடையான் உழை - அசைவில்லாத ஊக்கத்தை யுடையான்மாட்டு; ஆக்கம் அதர் வினுய்ச் செல்லும் - பொருள் தானே வழி வினவிக்கொண்டு செல்லும்.

'அசைவின்மை' இடுக்கண் முதலியவற்ருல் தளராமை. வழி வினவிச் சென்று சார்வார்போலத் தானே சென்று சாருமென்பார், 'அதர் வினுய்ச் செல்லு' மென்ருர். எய்திநின்ற பொருளினும் அதற்குக் காரணமாய 'ஊக்கஞ்' சிறந்ததென்பது இவை நான்கு பாட்டானுங் கூறப்பட்டது. (ச)

ருகூரு. வெள்ளத் தனைய மலர்நீட்டம்† மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

(இ-ள்.) வெள்ளத்து அனைய மலர் நீட்டம் - நின்ற நீரினளவினவாம் நீர்ப்பூக்களின் தாளினது நீளங்கள்; மாந்தர்தம்

* நாலடியார் - கக.  † மூதுரை - எ.

உள்ளத்து அனையது உயர்வு - அதுபோல் மக்கடம் ஊக்கத்தள வினதாம் அவருயர்ச்சி.

'மலர்' ஆகுபெயர். நீர் மிக்க துணையும் மலர்த்தாள் நீளுமென்பதுபட, 'வெள்ளத்தனைய' வென்றார். இவ்வுவமையாற்றலான் ஊக்க மிக்க துணையும் மக்கள் உயர்வரென்பது பெறப்பட்டது. 'உயர்'தல் பொருள் படைகளான் மிகுதல். (ரு)

ருகூசு. உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(இ - ள்.) உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்-அரசராயினார் கருதுவதெல்லாம் தம் உயர்ச்சியையே கருதுக; அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து - அவ்வுயர்ச்சி பால்வகையாற் கூடிற்றில்லையாயினும், அக்கருத்துத் தள்ளாமை நீர்மை உடைத்து.

உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று. தள்ளியவழியுந் தாளாண்மையில் தவறின்றி நல்லோராற் பழிக்கப்படாமையின், தள்ளாவியற்கைத் தென்பதாம். மேல் 'உள்ளத்தனைய துயர்வு' என்றதனையே வற்புறுத்தியவாறு. (சு)

ருகூஎ. சிதைவிடத் தொல்கார் உரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(இ - ள்.) களிறு புதை அம்பின் பட்டுப் பாடு ஊன்றும்-களிறு புதையாகிய அம்பாற் புண்பட்ட விடத்துத் தளராது தன் பெருமையை நிலை நிறுத்தும்; உரவோர் சிதைவிடத்து ஒல்கார் - அதுபோல ஊக்கமுடையார் தாங் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்த விடத்துத் தளராது தம் பெருமையை நிலைநிறுத்துவர்.

'புதை' அம்புக்கட்டு; பன்மை கூறியவாறு. பட்டாலென்பது பட்டெனத் திரிந்து நின்றது. 'ஒல்காமை' களிற்றுடனும் 'பாடூன்று' தல் உரவோருடனும் சென்றியைந்தன. தள்ளினுந் தவறா துள்ளியது முடிப்பரென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஊக்கமுடையார துயர்ச்சி கூறப்பட்டது. (எ)

ருகூஅ. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னுஞ் செருக்கு.

(இ - ள்.) உள்ளம் இலாதவர் - ஊக்கமில்லாத வரசர்; உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு எய்தார் - இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையேமென்று தம்மைத்தாம் மதித்தலைப்பெறார்

ஊக்கமில்லையாகவே, முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை முறையே இலவாமாகலின், 'செருக்கெய்தா' ரென்ருர். கொடைவென்றியினுய இன்பம் தமக்கல்லது பிறர்க்குப் புலனுகாமையின் தன்மையாற் கூறப்பட்டது. (அ)

ருகூகூ. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(இ - ள்.) பரியது கூர்ங்கோட்டது ஆயினும்-எல்லா விலங்கினுந் தான் பேருடம்பினது, அதுவேயுமன்றிக் கூரிய கோட்டையுமுடையதாயினும்; யானை புலி தாக்குறின் வெரூஉம்-யானை தன்னைப் புலி யெதிர்ப்படின் அதற் கஞ்சும்.

பேருடம்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின் மிக்க மெய்வலியுங் கருவிச்சிறப்பு முடைத்தாயினும் யானை ஊக்கமின்மையான் அஃதுடைய அதற் கஞ்சுமென்ற இது, பகைவரின் மிக்க மெய்வலியுங் கருவிச்சிறப்பு முடையராயினும், அரசர் ஊக்கமிலராயின் அஃதுடைய அரசர்க் கஞ்சுவரென்பது தோன்ற நின்றமையின், பிறிது மொழிதல். (கூ)

கூOO. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

(இ - ள்.) ஒருவற்கு உரம் உள்ள வெறுக்கை - ஒருவற்குத் திண்ணிய அறிவாவது ஊக்கமிகுதி; அஃது இல்லார் மரம்-அவ்வூக்க மிகுதியில்லாதார் மக்களாகார், மரங்களாவர்; மக்களாதலே வேறு - சாதி மரங்களோடு இம் மரங்களிடை வேற்றுமை வடிவு மக்கள் வடிவே, பிறிதில்லை.

'உர'மென்பது அறிவாதல், ''உரனென்னுந் தோட்டியான்''* என்பதனுனு மறிக. 'மர'மென்பது சாதியொருமை. மக்கட்குள்ள நல்லறிவுங் காரிய முயற்சியும் இன்மைபற்றி 'மர'மென்றும், மரத்திற்குள்ள பயன்பாடின்மைபற்றி 'மக்களாதலே வேறு' என்றுங் கூறினர். பயன்: பழ முதலியவும், தேவர்கோட்டம், இல்லம், தேர், நாவாய்கட்கு உறுப்பாதலும் முதலிய. இவை மூன்று பாட்டானும் ஊக்கமில்லாதார திழிபு கூறப்பட்டது. (கO)

---

* குறள் - உச.

## அதி. ௬௧—மடியின்மை

[அஃதாவது, கருதியனசெய்யுங்காற் சோம்புத லில்லாமை. ஊக்க முடையார்க்கு ஒரோவழிக் குணவயத்தான் மடிவருதலானேக்கி இஃது ஊக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.]

௬0௧. குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

(இ - ள்.) குடி என்னும் குன்றா விளக்கம் - தான் பிறந்த குடியாகிய நந்தாவிளக்கு; மடிஎன்னும் மாசு ஊரமாய்ந்து கெடும்- ஒருவன் மடியாகிய இருளடர நந்திப்போம்.

உலக நடையுள்ள துணையும் இடையறாது தன்னுட் பிறந் தாரை விளக்குதலிற் குடியைக் 'குன்றா விளக்க' மென்றும், தாமத குணத்தான் வருதலின் மடியை 'மா' சென்றும், அஃது ஏனைய இருள் போலாது அவ் விளக்கைத் தானடர்ந்து மாய்க்கும் வலி யுடைமையின் 'மாசூர மாய்ந்து கெடு' மென்றுங் கூறினார். 'கெடு'தல், பெயர் வழக்கமு மில்லையாதல். (௧)

௬0௨. மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

(இ - ள்.) குடியைக் குடியாக வேண்டுபவர் - தாம் பிறந்த குடியை மேன்மேலுயரும்நற்குடியாக வேண்டுவார்; மடியைமடியா ஒழுகல் - மடியை மடியாகவே கருதி முயற்சியோ டொழுகுக.

முயற்சியோடென்பது அவாய்நிலையான் வந்தது. நெருப்பிற் கொடியது பிறி தின்மைபற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக வென்றாற்போல, மடியிற் றீயது பிறிதின்மைபற்றிப் பின்னும் அப் பெயர்தன்னானே கூறினார். அங்ஙனம் கருதி யதனைக் கடிந்துமுயன் றொழுகவே தாமுயர்வர்; உயரவே, குடியுயரு மென்பார், 'குடியைக் குடியாக வேண்டுபவ' ரென்றார். அங்ஙன மொழுகாக்காற் குடி யழியுமென்பது கருத்து. இனி 'மடியா'வென்பதனை வினையெச்ச மாக்கிக் கெடுத்தொழுகுக*வென் றுரைப்பாரு முளர். (௨)

௬0௩. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(இ - ள்.) மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடி- விடத் தகுவதாய மடியைத் தன்னுள்ளே கொண்டொழுகும்

* மணக்குடவர்.

அறிவில்லாதான் பிறந்த குடி; தன்னினும் முந்து மடியும்-அவன் தன்னினும் முந்துற அழியும்.

அழிவு தருவதனை அகத்தே கொண்டொழுகுதலிற் 'பேதை' யென்றும் அவனுற் புறந்தரப்படுவ தாகலிற் குடி தன்னினு முந்துற அழியுமென்றுங் கூறினர். ஆக்கத்திற் பிற்படினும் அழிவின் முற் படு மென்பதாம். (௩)

௬0௪. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு.

(இ - ள்.) மடி மடிந்து மாண்டஉஞற்று இலவர்க்கு-மடியின் கண்ணே வீழ்தலாற் றிருந்தியமுயற்சி யிலராயினர்க்கு; குடிமடிந்து குற்றம் பெருகும் - குடியும் மடிந்து குற்றமும் பல்கும்.

'மடிந்'தெனத் திரிந்துநின்ற வினையெச்சம் 'இலவ' ரென்னும் குறிப்பு வினைப்பெயர் கொண்டது. குற்றங்கள் முன்னர்க் கூறுப. இவை நான்கு பாட்டானும் மடியின் தீமை கூறப்பட்டது. (௪)

௬0௫. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

(இ - ள்.) மடி நெடுநீர் மறவி துயில் நான்கும் - மடியும் விரைந்து செய்வதனை நீட்டித்துச்செய்யு மியல்பும் மறப்பும் துயிலு மாகிய இந்நான்கும்; கெடும் நீரார் காமக் கலன் - இறக்கு மியல் பினையுடையார் விரும்பி யேறும் மரக்கலம்.

முன்னிற்கற்பாலதாய 'மடி' செய்யுணோக்கி இடைநின்றது. நெடுமையாகிய காலப்பண்பு அதன்க ணிகழ்வதாய செயன்மே னின்றது. காலநீட்டத்தையுடைய செயன்முதல் மூன்றும் தாமத குணத்திற் றோன்றி உடனிகழ்வனவாகலின், மடியோடு ஒருங் கெண்ணப் பட்டன. இறக்கு மியல்பு - நாளுலத்தல். இவை துன் புறு நீரார்க்கு இன்புறுத்துவபோன்று காட்டி, அவர் விரும்பிக் கொண்ட வழித் துன்பத்திடை வீழ்த்தலின், நாளுலந்தார்க்கு ஆக் கம் பயப்பது போன்று காட்டி அவர் விரும்பி யேறியவழிக் கட லிடைவீழ்க்குங் கலத்தினை யொக்கு மென்னும் உவமைக் குறிப்புக் 'காமக்கல' னென்னுஞ் சொல்லாற் பெறப்பட்டது. இதற்கு விரும்பிப் பூணு மாபரணமென் றுரைப்பாரு முளர். (௫)

௬0௬. படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது.

(இ - ள்.) படி உடையார் பற்று அமைந்தக் கண்ணும் - நில முழுது மாண்டாரது செல்வந் தானே வந்தெய்திய விடத்தும்; மடி உடையார் மாண் பயன் எய்தல் அரிது - மடியுடையார் அதனுன் மாண்ட பயனை எய்துதலில்லை.

உம்மை எய்தாமை விளக்கிநின்றது. மாண் பயன் - பேரின்பம். அச் செல்வம் அழியாமற் காக்கும் முயற்சியின்மையின் அழியும்; அழியவே, தந் துன்ப நீங்காதென்பதாம். இதற்கு நில முழுதுமுடைய வேந்தர் துணையாதல் கூடியவிடத்து*மென்றுரைப்பாருமுளர். (௬)

௬௦௭. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர்.

(இ - ள்.) மடி புரிந்து மாண்ட உஞற்று இலவர் - மடியை விரும்புதலான் மாண்ட முயற்சி யில்லாதார், இடி புரிந்து எள்ளும் சொற் கேட்பர்-தந் நட்டார்முன் கழறுதலை மிகச்செய்து அதனுற் பயன் காணுமையிற் பின் இகழ்ந்துசொல்லுஞ் சொல்லைக்கேட்பர்.

'இடி'† யென்னும் முதனிலைத் தொழிற்பெயரான், நட்டாரென்பது பெற்றும். அவரிகழ்ச்சி சொல்லவே, பிறரிகழ்ச்சி சொல்லாமையே முடிந்தது. அவற்றிற்கெல்லாம் மாறுசொல்லு மாற்றலின்மையின், 'கேட்ப'ரென்றார். (எ)

௬௦௮. மடிமை குடிமைக்கண் தங்கிற்றன் ஜென்னர்க்
கடிமை புகுத்தி விடும்.

(இ - ள்.) மடிமை குடிமைக்கண் தங்கின்-மடியினது தன்மை குடிமையுடையான் கண்ணே தங்குமாயின்; தன் ஒன்னர்க்கு அடிமை புகுத்திவிடும் - அஃதவனைத் தன் பகைவர்க்கு அடியனுந் தன்மையை யடைவித்துவிடும்.

'மடியி'னது தன்மை காரியக்கேடு. 'குடிமை' குடிசெய்தற்றன்மை. அஃது அதனையுடைய வரசன்மேற்றுதல், 'தன்னென்ஞர்க்'கென்றதனுன் அறிக. அடியனுந்தன்மை தாழ்ந்துநின்றேவல் கேட்டல். இவை நான்கு பாட்டானும் மடிமைக்குற்றங்கள் கூறப்பட்டன. (அ)

௬௦௯. குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(இ - ள்.) ஒருவன் மடி ஆண்மை மாற்ற-ஒருவன் தன் மடியாளுந் தன்மையை யொழிக்கவே; குடி ஆண்மையுள் வந்த குற்

* மணக்குடவர். † குறள் - எ௮௪.

றம் கெடும் - அவன் குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள் கெடும்.

'மடியா'ளுந் தன்மை, மடியுடைமைக்கேதுவாய தாமதகுணம். 'குடியாண்மை' யென்பது உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்த 'குற்ற' மென்பது மடியானன்றி முன்னே பிற காரணங்களான்* நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை மாற்றி முயற்சியுடையனாக நீங்கு மென்பதாம். (கூ)

கூகഠ. **மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்**
**தாஅய தெல்லாம் ஒருங்கு.**

(இ - ள்.) அடி அளந்தான் தாயது எல்லாம் - தன்னடி யளவானே எல்லா வுலகையும் அளந்த இறைவன் கடந்த பரப்பு முழுதையும்; மடி இலா மன்னவன் ஒருங்கு எய்தும் - மடியிலாத அரசன் முறையானன்றி ஒருங்கே யெய்தும்.

'அடியளந்தா' னென்றது வாளா பெயராய் நின்றது. தாவிய தென்பது இடைக்குறைந்து நின்றது. எப்பொழுதும் வினையின் கண்ணே முயறலின், இடையீடின்றி யெய்து மென்பதாம். இவையிரண்டு பாட்டானும் மடியிலாதான் எய்தும் பயன் கூறப்பட்டது.

---

## அதி. கூஉ—ஆள்வினையுடைமை

[அஃதாவது, இடைவிடாது மெய்ம்முயற்சி யுடையனாதல்; அஃது ஆளும் வினையெனக் காரியத்தாற் கூறப்பட்டது. மடி கெடுத்தாலும் வினை முயற்சியானன்றி யாளப்படாமையின் இது மடியின்மையின் பின் வைக்கப்பட்டது.]

கூகக. **அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்**
**பெருமை முயற்சி தரும்.**

(இ - ள்.) அருமைஉடைத்து என்று அசாவாமை வேண்டும்- தஞ் சிறுமை நோக்கி நாமிவ் வினைமுடித்தல் அருமையுடைத்தென்று கருதித் தளராதொழிக; பெருமை முயற்சி தரும் - அது முடித்தற்கேற்ற பெருமையைத் தமக்கு முயற்சி யுண்டாக்கும்

சிறுமைநோக்கி யென்பது பெருமை தரு மென்றதனானும், வினைமுடித்தலென்பது அதிகாரத்தானும் வருவிக்கப்பட்டன.

---

* காலம் இடம் செய்வினையின் மூலம், முடிவு முதலிய அறியாமையும், சூழ்வன சூழாமையும், துணைவலி தெரியாமை முதலியவுமாம்.

விடாது முயலத் தாம் பெரியராவர்; ஆகவே, அரியனவும் எளி தின் முடியுமென்பதாம். (௧)

௬௧௨. வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை

தீர்ந்தாரின் தீர்ந்தன் றுலகு.

(இ - ள்.) வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று - வினையாகிய குறையைச் செய்யாது விட்டாரை உலகம் விட்டது; வினைக்கண் வினை கெடல் ஓம்பல் - ஆதலால், செய்யப்படும் வினைக்கண் தவிர்ந்திருத்தலை யொழிக.

'குறை' இன்றியமையாப் பொருள். அது "பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே"* என்பதனானு மறிக. இதற்கு வினை செய்யவேண்டுங் குறையை நீங்கினாரி னீங்கிற்றென் றுரைப்பாரு முளர். (௨)

௬௧௩. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே

வேளாண்மை என்னுஞ் செருக்கு.

(இ - ள்.) தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்று- முயற்சியென்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்கண்ணே நிலைபெற்றது; வேளாண்மை என்னும் செருக்கு - எல்லார்க்கும் உபகாரஞ் செய்த லென்னும் மேம்பாடு.

பொருள்கைகூடுதலான் உபகரித்தற்குரியார் முயற்சியுடையா ரென்பார் அவ்வக் குணங்கள்மேல் வைத்தும், அது பிறர்மாட் டில்லை யென்பார் 'தங்கிற்றே' யென்றுங் கூறினார். இவை மூன்று பாட்டானும் முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

௬௧௪. தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை

வாளாண்மை போலக் கெடும்.

(இ - ள்.) தாளாண்மை இல்லாதான் வேளாண்மை-முயற்சி இல்லாதவன் உபகாரியாந் தன்மை; பேடிகை வாள் ஆண்மை போலக் கெடும் - படை கண்டா லஞ்சும் பேடி அதனிடைத் தன் கையில் வாளை ஆளுதற் றன்மைபோல இல்லையாம்.

'ஆ'ளென்பது முதனிலைத் தொழிற்பெயர். பேடி வாளைப் பணிகோடற் கருத்துடையளாயினும் அது தன்னச்சத்தான் முடி யாதவாறுபோல, முயற்சியில்லாதான் பலர்க்கு முபகரித்தற் கருத்துடையனாயினும் அது தன் வறுமையான் முடியாதென்ப தாம். 'வாளாண்மை' யென்பதற்கு வாளாற் செய்யு மாண்மை யென்று உரைப்பாருமுளர். இதனான் அஃதில்லாதானது குற்றங் கூறப்பட்டது. (௪)

* புறநானூறு - ௧௮௮.

௬௧௫. இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.

(இ - ள்.) இன்பம் விழையான் வினை விழைவான் - தனக்கின்பத்தை விரும்பானாகி வினைமுடித்தலையே விரும்புவான், தன் கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண் - தன் கேளிராகிய பாரத்தின் துன்பத்தினை நீக்கி அதனைத் தாங்குந் தூணாம்.

இஃதேகதேச உருவகம். 'ஊன்று'மென்றது அப்பொருட்டாதல் ''மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு''* என்பதனானறிக. சுற்றத்தார் நட்டாரது வறுமையுந் தீர்த்து அவர்க்கேமஞ் செய்யு மாற்றலை உடையனா மெனவே தன்னைக் கூறவேண்டாவாயிற்று. காரியத்தை விழையாது காரணத்தை விழைவான் எல்லாப் பயனுமெய்து மென்றதனால், காரணத்தை விழையாது காரியத்தை விழைவான் யாதும் எய்தானென்பது பெற்றாம். இதனால் அஃதுடையானது நன்மை கூறப்பட்டது. (௫)

௬௧௬. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

(இ - ள்.) முயற்சி திருவினை ஆக்கும் - அரசர்மாட்டுளதாய முயற்சி அவரது செல்வத்தினை வளர்க்கும்; முயற்று இன்மை இன்மை புகுத்தி விடும் - அஃதில்லாமை வறுமையை அடைவித்து விடும்.

செல்வம் அறுவகை அங்கங்கள்.† வறுமை அவற்றான் வறியராதல். அதனை யடைவிக்கவே, பகைவரா னழிவரென்பது கருத்து. (௬)

௬௧௭. மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்.

(இ - ள்.) மா முகடி மடி உளாள் - கரியசேட்டை ஒருவன் மடியின்கண்ணே உறையும்; தாமரையினாள் மடி இலான் தாள் உளாள் என்ப - திருமகள் மடியிலாதானது முயற்சிக்கண்ணே உறையுமென்று சொல்லுவர் அறிந்தோர்.

பாவத்தின் கருமை அதன் பயனாய 'முகடி'மே லேற்றப்பட்டது. மடியும் முயற்சியு முடையார்மாட்டு நிலையை அவை தன்மேல் வைத்துக் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் அவ் விருமைக்கும் ஏது கூறப்பட்டது. (௭)

* நாலடியார் - ௩௯௭. † குறள் - ௩௮௧.

௬௱௧௮. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை இன்மை பழி.

(இ - ள்.) பொறி இன்மை யார்க்கும் பழியன்று - பயனைத் தருவதாய விதியில்லாமை ஒருவற்கும் பழியாகாது; அறிவு அறிந்து ஆள்வினை இன்மை பழி - அறிய வேண்டுமவற்றை அறிந்து வினை செய்யாமையே பழியாவது.

அறிய வேண்டுவன வலி முதலாயின.* தெய்வ மியையா வழி ஆள்வினை உடைமையாற் பயனில்லை யென்பாரை நோக்கி, உலகம் பழவினைபற்றிப் பழியாது, ஈண்டைக் குற்றமுடைமை பற்றியே பழிப்பதென்றார். அதனால் விடாது முயல்கவென்பது குறிப்பெச்சம். (௮)

௬௱௧௯. தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

(இ - ள்.) தெய்வத்தான் ஆகாது எனினும் - முயன்ற வினை பால்வகையாற் கருதிய பயனைத் தாராதாயினும்; முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும் - முயற்சி தனக்கிடமாய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும், பாழாகாது.

தெய்வத்தா னியவழித் தன்னளவின் மிக்க பயனைத் தருமென்பது உம்மையாற் பெற்றாம். இரு வழியும் பாழாக லின்மையின் தெய்வ நோக்கி யிராது முயல்க வென்பது கருத்து. (௯)

௬௱௨௰. ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(இ - ள்.) ஊழையும் உப்பக்கம் காண்பர் - பயனை விலக்குவதாய ஊழினையும் புறங் காண்பர்; உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர் - அவ்விலக்கிற் கிளையாது வினையைத் தாழ்வற முயல்வார்.

தாழ்வறுதல்: சூழ்ச்சியினும், வலி முதலிய வறிதலினும், செயலினுங் குற்றமறுதல். ஊழ் ஒருகாலாக இருகாலாக அல்லது விலக்கலாகாமையிற் பலகான் முயல்வார் பயனெய்துவ ரென்பார் 'உப்பக்கங் காண்ப' ரென்றார். தெய்வத்தா னிடுக்கண் வரினும் முயற்சி விடற்பால தன்றென்பது இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது. (௧௦)

---

* காலமும், இடமும்.

## அதி. சுரு—இடுக்கணழியாமை

[அஃதாவது, வினையின்கண் முயல்வான், தெய்வத்தானாக, பொருளின்மையானாக, மெய்வருத்தத்தானாகத் தனக்கிடுக்கண் வந்துழி, அதற்கு மனங் கலங்காமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

சுஉக. **இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வ தஃதொப்ப தில்.**

(இ - ள்.) இடுக்கண் வருங்கால் நகுக - ஒருவன் வினையால் தனக் கிடுக்கண் வருமிடத்து அதற்கழியாது உண்மகிழ்க; அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்-அவ் விடுக்கணை மேன்மேல் அடரவல்லது அம்மகிழ்ச்சி போல்வது பிறிதில்லை யாகலான்.

வினை இனிது முடிந்துழி நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற்கிடையே இடுக்கண் வருவழிச் செய்யவே, அவன் அழிவின்றி மனவெழுச்சியான் அதனைத் தள்ளி அக்குறை முடிக்குமாற்றலுடையனுமாகலின், 'அதனை, யடுத்தூர்வ தஃதொப்ப தில்'லென்றார். (க)

சுஉஉ. **வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்.**

(இ - ள்.) வெள்ளத்து அனைய இடும்பை-வெள்ளம்போலக் கரையிலவாய இடும்பைகளெல்லாம்; அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும் - அறிவுடையவன் தன்னுள்ளத்தான் ஒன்றனை நினைக்க, அத்துணையானே கெடும்.

'இடும்பை'யாவது உள்ளத்து ஒரு கோட்பாடே யன்றிப் பிறிதில்லை யென்பதூஉம் அது மாறுபடக்கொள்ள நீங்குமென்பதூஉம் அறிதல் வேண்டுதலின், 'அறிவுடையா' னென்றும், அவ்வுபாயத் தெண்மை தோன்ற 'உள்ளத்தி னுள்ள' வென்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் ஊழினானாய இடுக்கணால் அழியாமைக்கு உபாயங் கூறப்பட்டது. (உ)

சுஉரு. **இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்**
**கிடும்பை படாஅ தவர்.**

(இ - ள்.) இடும்பைக்கு இடும்பை படாதவர் - வினைசெய்யுங்கால் அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர்; இடும்பைக்கு இடும்பை படுப்பர் - அத் துன்பந்தனக்குத் தாந் துன்பம் விளைப்பர்

வருந்துதல் இளைத்துவிட நினைத்தல். மனத்திட்பமுடைய ராய் விடாது முயலவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே, எல்லா விடும்பையும் இலவாமாகலின், 'இடும்பைக் கிடும்பை படுப்ப' ரென்றார். வருகின்ற பாட்டிரண்டினும் இதற் கிவ்வாறே கொள்க. சொற்பொருட் பின்வருநிலை. (௩)

௬௨௪. மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து.

(இ - ள்.) மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான்-விலங்கிய இடங்களெல்லாவற்றினுஞ் சகட மீர்க்கும் பகடுபோல வினையை யெடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை; உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து-வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை யுடைத்து.

'மடுத்தவா யெல்லா' மென்பது பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்றுநில முதலியவாகவும், வினைக்கு இடையூறு களாகவுங் கொள்க. பகடு மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாட வழ்ந்தும்* அரிதி னுய்க்குமாறுபோலத் தன் மெய்வருத்த நோக் காது முயன்றுய்ப்பானென்பார் 'பகடன்னா'னென்றார். (௪)

௬௨௫. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்.

(இ - ள்.) அடுக்கி வரினும் - இடைவிடாது மேன்மேல் வந் தனவாயினும், அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட்படும் - தன் னுள்ளக் கோட்பாடு விடாதான் உற்ற இடுக்கண் தாம் இடுக் கணிலே பட்டுப்போம்.

ஒன்றே பலகால் வருதலும், வேறுபட்டன விராய்வருதலு மடங்க, 'அடுக்கிவரினு' மென்றார். அழிவென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மே னின்றது. இவை மூன்று பாட்டானும் தெய்வத் தானாயதற் கழியாமை கூறப்பட்டது. (௫)

௬௨௬. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புதல் தேற்றா தவர்.

(இ - ள்.) அற்றேம் என்று அல்லற் படுபவோ - வறுமைக் காலத்து யாம் வறியமாயினேமென்று மனத்தால் துயருழப் பாரோ?; பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர் - செல்வக் காலத்து இது பெற்றேமென்று இவறுதலை யறியாதார்.

* சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம் - ௧௮௬.

பெற்றவழி இவருமை நோக்கி, அற்றவழியும் அப்பகுதி விடா தாகலின், அல்லற்பா டில்லையாயிற்று. இதனுற் பொருளின்மையா னுயதற்கு அழியாமையும், அதற்குபாயமும் கூறப்பட்டன. (சு)

சூஉஎ. இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாருக் கொள்ளாதா மேல்.

(இ - ள்.) உடம்பு இடும்பைக்கு இலக்கம் என்று-நாற்கதி யினுமுள்ள உடம்புகள் இடும்பையென்னும் வாளுக் கிலக்கென்று தெளிந்து; கலக்கத்தைக் கையாருக் கொள்ளாதாம்மேல்-தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடையார்.

ஏகதேச உருவகம். 'உடம்பு' சாதிப்பெயர். 'கலக்க'மென் னுங் காரியப்பெயர் காரணத்தின்மேனின்றது. 'கையா'றென்பது ஒருசொல்; இதற்கு ஒழுக்க நெறியென் றுரைப்பாரு முளர். இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பெச்சம். (எ)

சூஉஅ. இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்ப முறுதல் இலன்.

(இ - ள்.) இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான்- தன்னுடம்பிற்கு இன்பமாயவற்றை விரும்பாதே வினையால் இடும்பை யெய்துதல் இயல்பென்று தெளிந்திருப்பான்: துன்பம் உறுதல் இலன் - தன் முயற்சியால் துன்பமுறுன்.

இன்பத்தை விழையினும், இடும்பையை இயல்பென்னுது காக்கக் கருதினும், துன்பம் விளைதலின், இவ்விரண்டுஞ் செய்யா தானைத் 'துன்ப முறுதலில' னென்ருர். (அ)

சூஉகூ. இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்ப முறுதல் இலன்.

(இ - ள்.) இன்பத்துள் இன்பம் விழையாதான் - வினையால் தனக்கின்பம் வந்துழி அதனை அதனுபவியாநின்றே மனத்தான் விரும்பாதான்; துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் - துன்பம் வந்துழியும் அதனை அனுபவியாநின்றே மனத்தான் வருந்தான்.

'துன்பம்' முயற்சியான் வரும் இடுக்கண். இரண்டையும் ஒரு தன்மையாகக் கோடலின், பயன்களு மிலவாயின. (கூ)

சூருo. இன்னுமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னுர் விழையுஞ் சிறப்பு.

(இ - ள்.) இன்னாமை இன்பம் எனக் கொளின் - ஒருவன் வினைசெய்யு மிடத்து முயற்சியான் வருந் துன்பந்தன்னையே தனக் கின்பமாகக் கற்பித்துக்கொள்வனாயின்; தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும் - அதனால் தன் பகைவர் நன்கு மதித்தற் கேதுவாய உயர்ச்சி யுண்டாம்.

துன்பந்தானும் உயிர்க்கியல்பன்றிக் கணிகமாய்* மனத்திடை நிகழ்வதொரு கோட்பாடாகலின், அதனை மாறுபடக்கொள்ளவே, அதற்கழிவின்றி மனமகிழ்ச்சி யுடையனாய் அதனால் தொடங்கிய வினை முடித்தேவிடும் ஆற்றலுடையனா மென்பது கருத்து. இவை நான்கு பாட்டானும் மெய் வருத்தத்தா னாயதற்கு அழியாமையும் அதற்குபாயமுங் கூறப்பட்டன. (௩0)

அரசியல் முற்றிற்று.

---

## உ. அங்கவியல்

இனி முறையானே அரசியனடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையாய அங்கங்கள் ஆறனதியல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவானெடுத்துக்கொண்டு, அவை யாறனுள்ளும் 'காவற்சாகா டுகைத்தற்'† கண் அவ்வரசற்கினையாய அமைச்சனதியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான்தொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

### அதி. ௬௪—அமைச்சு

[அஃதாவது, அமைச்சனது தன்மை: என்றது அவன்றன் குணங் களையுஞ் செயல்களையும்.]

௬௩௧. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு.

(இ - ள்.) கருவியும்-வினை செய்யுங்கால் அதற்கு வேண்டுங் கருவிகளும்; காலமும்-அதற்கேற்ற காலமும்; செய்கையும்-அது செய்யுமாறும்; செய்யும் அருவினையும்-அவ்வாற்றிற் செய்யப்படும் அவ்வரிய வினைதானும்; மாண்டது அமைச்சு-வாய்ப்ப எண்ண வல்லவனே அமைச்சனாவான்.

---

* எப்பதார்த்தத்திற்குத் தனதுற்பத்திக் கணத்தின் பிற் கணத்திற் சம்பந்தம் சம்பவிப்பதன்றோ; ஆனால், உற்பத்திக் கண மாத்திரத்திலேயே சம்பந்தம் சம்பவிக்கின்றதோ அப்பதார்த்தம் கணிகமாம் என்று நியாய நூல் கூறும். † புறநானூறு - ௧அ௫.

'கருவி'கள்; தானையும் பொருளும். 'காலம்' அது தொடங்குங் காலம். 'செய்கை'யெனவே, அது தொடங்கு முபாயமும், இடையூறுநீக்கிமுடிவுபோக்குமாறும் அடங்கின. சிறியமுயற்சியாற் பெரிய பயன்றருவ தென்பார், 'அருவினை' யென்றார். இவை யைந்தனையும் வடநூலார் மந்திரத்திற் கங்கமென்ப. (க)

சாநஉ. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

(இ - ள்.) வன்கண் - வினைசெய்தற்கண் அசைவின்மையும்; குடி காத்தல்-குடிகளைக் காத்தலும்; கற்று அறிதல்-நீதிநூல்களைக் கற்றுச்செய்வன தவிர்வன வறிதலும்; ஆள்வினை - முயற்சியும்; ஐந்துடன் மாண்டது அமைச்சு - மேற்சொல்லிய அவ்வங்கங்களைந் துடனே திருந்த உடையானே அமைச்சனாவான்.

எண்ணொடுநீண்டது. அவ்வைந்தெனச் சுட்டு வருவிக்க. இந் நான்கனையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையு மிவற்றோடுகூடியே மாட்சிமைப்பட வேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னும் தொகை பெறுதற்கும். இனி இதனை ஈண்டெண் ணியவற்றிற்கே தொகையாக்கிக் 'குடிகாத்த'லென்பதனைக் குடிப் பிறப்பும் அதனை யொழுக்கத்தாற் காத்தலுமெனப் பகுப்பாரும், 'கற்றறித'லென்பதனைக் கற்றலும் அறிதலுமெனப் பகுப்பாரு முளர். அவர் 'உட'னென்பதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், 'குடி'யென்பதனை ஆகுபெயராக்கியும் இடர்ப்படுப. (உ)

சாநந. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) பிரித்தலும்-வினை வந்துழிப் பகைவர்க்குத் துணை யாயினாரை அவரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும்; பேணிக்கொள லும் - தம்பாலாரை அவர் பிரியாமற் கொடை இன்சொற்களாற் பேணிக் கொள்ளுதலும்; பிரிந்தார்ப் பொருத்தலும் முன்னே தம் மினுந் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டும் பொருத்த வேண்டிற் பொருத்தலும்; வல்லது அமைச்சு-வல்லவனே அமைச்சனாவான்.

இவற்றுள் அப்பொழுதை நிலைக்கேற்ற செயலறிதலும் அதனை அவரறியாமல் ஏற்ற உபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரியவாத னோக்கி, 'வல்ல'தென்றார். வடநூலார் இவற்றுட் பொருத்தலைச் சந்தியென்றும், பிரித்தலை விக்கிரக மென்றுங் கூறுப. (ந)

சுரு௪. தெரிதலுந் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) தெரிதலும் - ஒரு காரியச்செய்கை பலவாற்றால் தோன்றின் அவற்றுள் ஆவ தாராய்ந் தறிதலும்; தேர்ந்து செயலும் - அது செய்யுங்கால் வாய்க்குந்திறனாடிச் செய்தலும்; ஒருதலையாச் சொல்லலும்-சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கு இதுவே செயற்பாலதென்று துணிவு பிறக்கும் வகை சொல்லுதலும்;வல்லது அமைச்சு-வல்லவனே அமைச்சனாவான்.

'தெரிதல்' செயல்மேலதாயிற்று; வருகின்றது அதுவாகலின்.

சுரு௫. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை.

(இ - ள்.) அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான் - அரசனாற் செய்யப்படும் அறங்களை அறிந்து தனக்கேற்ற கல்வியானிறைந்தமைந்த சொல்லை யுடையனாய்; எஞ்ஞான்றும் திறன் அறிந்தான் - எக்காலத்தும் வினை செய்யுந் திறங்களை யறிந்தான்; தேர்ச்சித் துணை - அவர்க்குச் சூழ்ச்சித் துணையாம்.

தன்னரசன் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடை நிகராய காலத்து மென்பார், 'எஞ்ஞான்று'மென்றார். 'சொல்லா' னென்பதனை ஒடு வுருபின் பொருட்டாய ஆனுருபாக்கி உரைப் பாருமுளர். இவை ஐந்துபாட்டானும் அமைச்சரது குணத்தன்மை கூறப்பட்டது (௫)

சுரு௬. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

(இ - ள்.) மதி நுட்பம் நூலோடு உடையார்க்கு - இயற்கையாகிய நுண்ணறிவைச் செயற்கையாகிய நூலறிவோடு உடையராய அமைச்சர்க்கு, அதி நுட்பம் முன் நிற்பவை யா உள - மிக்க நுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்னிற்பன யாவை யுள?

'மதிநுட்ப' மென்பது பின்மொழிநிலையல். அது தெய்வந் தர வேண்டுதலின் முற்கூறப்பட்டது. 'நூ'லென்பதூஉம், 'அதி நுட்ப' மென்பதூஉம் ஆகுபெயர். 'அதி' யென்பது வடசொல்லுள் மிகுதிப்பொருளதோ ரிடைச்சொல்; அது திரிந்து நுட்ப மெனபதனோடு தொக்கது. முன்னிற்றல், மாற்றார் சூழ்ச்சியாயின தஞ்சூழ்ச்சியால் அழியாது நிற்றல். இனி அதிநுட்பமென்று பாட

மோதி, அதனினுட்பம் யா வென்றுரைப்பாரு முளர்.* அவர் சூழ்ச்சிக் கினமாய் முன் சுட்டப்படுவ தொன்றில்லாமையும், சுட்டுப்பெயர் ஐந்தா முருபேற்றவழி அவ்வாறு நில்லாமையும் அறிந்திலர். பகைவர் சூழ்வனவற்றைத் தாமறிந்து அழித்து அவரறிந் தழியாதன தாஞ்சூழ்வரென்பது கருத்து. இதனால் அவரது சிறப்புக் கூறப்பட்டது. (சு)

சூ௬எ. செயற்கை அறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை அறிந்து செயல்.

(இ - ள்.) செயற்கை அறிந்தக் கடைத்தும்-நூல்நெறியான் வினை செய்யுந் திறங்களை அறிந்த விடத்தும்; உலகத்து இயற்கை அறிந்து செயல் - அப்பொழுது நடக்கின்ற உலக வியற்கையை யறிந்து அதனோடு பொருந்தச் செய்க.

'கடைத்து' மென்புழி 'து' பகுதிப்பொருள் விகுதி. நூல் நெறியேயாயினும் உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க; செய்யின் அது பழிக்குமென இயற்கையறிவாற் பயன் கூறியவாறு.

சூ௬அ. அறிகொன் றறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.

(இ - ள்.) அறி கொன்று அறியான் எனினும் - அறிந்து சொல்லியாரது அறிவையு மழித்து அரசன் தானு மறியானேயாயினும்; உறுதி கூறல் உழையிருந்தான் கடன் - அக்குற்ற நோக்கி ஒழியாது அவனுக்கு உறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு முறைமை.

'அறி'யென்பது முதனிலைத்தொழிற்பெயர். கோறல் தான் கொள்ளாமை மேலும் இகழ்ந்து கூறுதல். 'உழையிருந்தா' னெனப் பெயர்கொடுத்தார், அமாத்தியரென்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். உறுதி கூறுக்கால் அவன திறுதி யெய்தற் குற்றத்தை உலகந் தன்மேலேற்றுமென் பார், 'கூறல் கட'னென்றார். இவை இரண்டு பாட்டானும் அவர் செயல் கூறப்பட்டது. (அ)

சூ௬சூ. பழுதெண்ணும் மந்திரியிற் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும்.

(இ - ள்.) பக்கத்துள் பழுது எண்ணும் மந்திரியின்-பக்கத் திருந்து பிழைப்ப வெண்ணும் அமைச்சனொருவனில்; ஓரெழுபது கோடி தெவ் உறும் - அரசனுக்கு எதிர்நிற்பார் ஓரெழுபது கோடி பகைவ ருறுவர்.

---

* மணக்குடவர்.

'எழுபது கோடி' யென்றது மிகப் பலவாய எண்ணிற் கொன்றுகாட்டியவாறு. வெளிப்பட நிற்றலான் அவர் காக்கப் படுவர், இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப்படா னென்பது பற்றி இவ்வாறு கூறினர். எழுபதுகோடி மடங்கு நல்லரென் றுரைப்பாரும், எழுபதுகூறுதலையென்றுபாடமோதுவாரு முளர்.*

சுசுO. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

(இ - ள்.) முறை படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர் - செய்யப்படும் வினைகளை முன் அடைவுபட வெண்ணி வைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்யாநிற்பர்; திறப்பாடு இலாதவர் - முடித்தற்கேற்ற கூறுபாடில்லாதார்.

அக்கூறுபாடாவன: வந்த வந்த இடையூறுகட்கு ஏற்ற வேற்ற பரிகாரமறிந்துசெய்தலும், தாந்திண்ணியராதலுமாம். பிழையாம லெண்ணவல்லராய் வைத்தும் செய்து முடிக்கமாட்டாரு முள ரென்பதாம். இவை இரண்டு பாட்டானும் அமைச்சருள் விடப் படுவாரது குற்றங் கூறப்பட்டது. (௬O)

---

## அதி. சுரு—சொல்வன்மை

[அஃதாவது, தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சியல் நடத்தற்கேதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல். மேல் ''ஒருதலையாச் சொல்லலும் வல்ல''† தென்றதனையே சிறப்புப் பற்றி விரித்துரைக்கின்றமையின், இஃது அமைச்சின் பின் வைக்கப்பட்டது.]

சுசுக. நாநல மென்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத் துள்ளதூஉம் அன்று.

(இ - ள்.) நா நலம் என்னும் நலன் உடைமை-அமைச்சர்க்கு இன்றியமையாக் குணமாவது சான்றோரான் நாநலமென்று சிறப் பித்துச் சொல்லப்படும் நலத்தினை யுடையராதல்; அந்நலம் யாநலத்துஉள்ள தூஉம் அன்று-அந்நலம் பிறர்க்கும்பிறநலமெல்லா வற்றுள்ளும்‡ அடங்குவதன்றி மிக்கதாகலான்.

நாவாலுளதாய நலமென விரியும். இந்நலம் உலகத்தைத்தம் வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேறாக வேண்டுமென்னும் நீதிநூல்

---

*'எழுபதுகோடிதலை' என்றுபாடங்கொண்டார் மணக்குடவர்.
†குறள்-சுகூச. ‡கல்வி, பொருள், ஆண்மை அழகு முதலிய.

வழக்குப்பற்றி 'நாநல மென்னு நல' னென்றும், பிறர்க்கும் இது போற் சிறந்தது பிறிதின்மையான் 'அந்நலம் யாநலத்துள்ளு தூஉமன்' றென்றுங் கூறினர். பிரித்தல் பொருத்தல் முதலிய தொழில் இல்லாதார்க்கும் இஃதின்றியமையாதாய பின் அத் தொழிலார்க்குக் கூறவேண்டுமோ வென்பது கருத்து. (க)

சுசஉ. ஆக்கமுங் கேடும் அதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(இ - ள்.) ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்-தம்மரசற் கும் அங்கங்கட்கும் ஆக்க வழிவுகள் தஞ் சொல்லான் வரு மாக லான்; சொல்லின்கண் சோர்வு காத்து ஓம்பல் - அப்பெற்றித்தாய சொல்லின்கட் சோர்தலை அமைச்சர் தங்க ணிகழாமற் போற்றிக் காக்க.

ஆக்கத்திற் கேதுவாய நற்சொல்லையும், கேட்டிற்கேதுவாய தீச்சொல்லையும் சொல்லாத லொப்புமைபற்றி 'அதனு' லென்றார். செய்யுளாகலின், சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வு போலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்கு வருதலால், 'காத்தோம்ப' லென்றார். இவை இரண்டு பாட்டானும் இஃது இவர்க் கின்றி யமையாதென்பது கூறப்பட்டது. (உ)

சுசந. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்.

(இ - ள்.) கேட்டார்ப்பிணிக்கும் தகை அவாய்-நட்பா யேற் றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பிணிக்கும் குணங்களை அவாவி; கேளாரும் வேட்ப மொழிவது-மற்றைப் பகையாய் ஏற் றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமையொழிந்து நட்பினை விரும் பும் வண்ணஞ் சொல்லப்படுவதே; சொல்லாம் - அமைச்சர்க்குச் சொல்லாவது.

அக்குணங்களாவன: வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்றருதலென்றிவை முதலாயின.* அவற்றை அவாவுதலாவது சொல்லுவான் குறித்தனவேயன்றி, வேறு நுண் ணுணர்வுடையோர்கொள்பவற்றின்மேலும்நோக்குடைத்தாதல். 'அவா'யென்னுஞ் செய்தெனெச்சம் மொழிவ தென்னுஞ் செயப் பாட்டு வினைகொண்டது. இனிக் 'கேட்டார்', 'கேளா' ரென்ப தற்கு நூல் கேட்டார் கேளாதாரெனவும்,வினவியார் வினவாதா† ரெனவு முரைப்பாரு முளர். 'தகையவா' யென்பதற்கு எல்லாருந் தகுதியையுடையவாயென்றுரைத்தார், அவர்அப்பன்மைமொழிவ

* நன்னூல், சூ - கரு. † மணக்குடவர்.

தென்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர். இதனாற் சொல்லின திலக்கணங் கூறப்பட்டது. (௩)

௬௪. திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங் கில்.

(இ - ள்.) சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக - அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவுங் கேட்பாருடையவுமாய திறங்களை யறிந்து சொல்லுக; அதனின் ஊங்கு அறனும் பொருளும் இல் - அங்ஙனஞ் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளுமில்லையாகலான்.

அத்திறங்களாவன: குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவ மென்பனவற்றான் வருந் தகுதி வேறுபாடுகள். அவற்றை'யறிந்துசொல்லு'தலாவது: அவற்றால்தமக்கும்அவர்க்கு முளவாய ஏற்றத்தாழ்வுகளை அறிந்துஅவ்வம்மரபாற்சொல்லுதல். அஃது உலகத்தோ டொட்ட ஒழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறனாயிற்று; தங்காரிய முடித்தலிற் பொருளாயிற்று. அறனும் பொருளுமெனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினார்.

௬௫. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.

(இ - ள்.) சொல்லைப் பிறிது ஓர் சொல் வெல்லும் சொல் இன்மை அறிந்து-தாஞ் சொல்லக் கருதிய சொல்லைப் பிறிதொரு சொல்லால் வெல்லவல்ல தொரு சொல் இல்லாமையறிந்து; அச் சொல்லைச் சொல்லுக - பின் அச்சொல்லைச் சொல்லுக.

'பிறிதோர்சொல்' மாற்றாரது மறுதலைச்சொல். 'வெல்லு'தல் குணங்களான் மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக என்பதாம். இனிப் பிறிதோர் சொல் வெல்லுஞ் சொல்லெனச் செவ்வெண்ணாக்கி, ஒத்த சொல்லும் மிக்க சொல்லு முளவாகாமற் சொல்லுக வென் றுரைப்பாரு முளர்.* இது சொற்பொருட்பின் வருநிலை.(௫)

௬௬. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

(இ - ள்.) வேட்பத் தாம் சொல்லிப் பிறர் சொற் பயன் கோடல் - பிறர்க்குத் தாஞ் சொல்லுங்கால் அவர் பின்னுங் கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்

* மணக்குடவர்.

சொல்லின் பயனைக் கொண்டொழிதல்; மாட்சியின் மாசு அற்ருர் கோள் - அமைச்சியலுட் குற்றமற்ருரது துணிபு.

பிறர் சொற்களுட் குற்றமுளவாயினும் அவை நோக்கியிகழா ரென்பதாம். வல்லாரையிகழ்தல் வல்லுநர்க்குத்தகுதியன்மையின். இதுவு முடன் கூறினர். இவை மூன்று பாட்டானும் அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது. (கா)

சுசஎ. சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது.

(இ - ள்.) சொலல் வல்லன் - தானெண்ணிய காரியங்களைப் பிறர்க் கேற்பச்சொல்லுதல் வல்லனுய்; சோர்வுஇலன்-அவைமிகப் பலவாயவழி ஒன்றுஞ் சோர்விலனுய்; அஞ்சான் - அவைக்கஞ்சா ஞயினுன்யாவன்;அவனை இகல் வெல்லல் யார்க்கும் அரிது - அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கு மரிது.

ஏற்பச் சொல்லுதல் அவர்க்கு அவை காரியமல்லவாயினும் ஆமெனத் துணியும்வகை சொல்லுதல். 'சோர்வு' சொல்லவேண்டு வதனை மறப்பா ெனுழிதல். இம்மூன்று குணமு முடையானை மாற்ருராய்ப் பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வாரில்லை யென்பதாம். (எ)

சுசஅ. விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(இ - ள்.) தொழில் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின் - சொல்லப்படுங் காரியங்களை நிரல்படக்கோத்து இனி தாகச் சொல்லுதல் வல்லாரைப் பெறின்; ஞாலம் விரைந்து கேட்கும் - உலகம் அவற்றை விரைந் தேற்றுக்கொள்ளும்.

'தொழில்' சாதியொருமை. நிரல்படக் கோத்தல்:முன்சொல் வனவும் பின் சொல்வனவு மறிந்து அம்முறையே வைத்தல். இனி தாதல் கேட்டார்க்கின்பம் பயத்தல். சொல்லுதல் வல்லான் நூரு யிரவருளொருவன் என்ற வடமொழிபற்றிப் 'பெறி' னென்ருர். ஈண்டுங் கேட்டல் ஏற்றுக் கோடல்.* இவை இரண்டு பாட்டானும் அவ்வாற்ருற் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது. (அ)

சுசகூ. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்ரு தவர்.

* குறள் - சுசஉ.

(இ - ள்.) மாசு அற்ற சில சொல்லல் தேற்றாதவர் - குற்ற மற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை அவ்வாற்றாற் சொல்லுதலை யறியாதார்; பல சொல்லக் காமுறுவர் - பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச் சொல்ல விரும்புவர்.

குற்றம்மேற்சொல்லிய குணங்கட்கு* மறுதலையாயின. இடை விடாது பல சொல்லுதலையுஞ் சொல்வன்மையென்று விரும்பு வாருமுளர். அவர் இவ்வாறு சொல்லமாட்டாதாரே; வல்லார் அது செய்யாரென யாப்புறுப்பார், 'மன்ற' வென்றார். (கூ)

சுஙO. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(இ - ள்.) கற்றது உணர விரித்துரையாதார் - கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்க மாட்டாதவர்; இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர் - கொத்தின்கண்ணே மலர்ந்து வைத்தும் நாறாத பூவை யொப்பர்.

செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றமில்லாத பூச்சூடப்படாத வாறு போல நூலைக் கற்றுவைத்துஞ் சொல்ல மாட்டாதார் நன்கு மதிக்கப்படா ரென்றமையின், இது தொழிலுவமமாயிற்று. இவை இரண்டுபாட்டானும் அதுமாட்டாதார திழிபு கூறப்பட்டது. (கO)

---

## அதி. சுசு—வினைத்தூய்மை

[அஃதாவது, செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாக வேண்டு மென்கின்றமையின், இது சொல்வன்மை யின் பின்வைக்கப்பட்டது.]

சுஙக. துணைநலம் ஆக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாந் தரும்.

(இ - ள்.) துணை நலம் ஆக்கம் தரூஉம் - ஒருவனுக்குத் துணை யது நன்மை செல்வ மொன்றனையுங் கொடுக்கும்; வினை நலம் வேண்டிய எல்லாம் தரும் - அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையுங் கொடுக்கும்.

'வேண்டியவெல்லா' மென்றது, இம்மைக்கண் அறம் பொரு ளின்ப முதலாயவற்றையும், மறுமைக்கண் தான் விரும்பிய பதங் களையும். இதனாற் காணப்படுந் துணை நன்மையினுங் கருதப்படும்

---

* சுஙஅ ஆம் குறளுரை.

வினைநன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புக் கூறப் பட்டது. (க)

சுருஉ. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

(இ - ள்.) புகழொடு நன்றி பயவா வினை - தம் மரசனுக்கு இம்மைக்கண் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை; என்றும் ஒருவுதல் வேண்டும் - அமைச்சர்க்கு எக்காலத்தும் ஒழிதல் வேண்டும்.

பெருகல், சுருங்கல், இடைநிற்ற லென்னும் நிலைவேறுபாடு* காலத்தான் வருதலின், 'என்று' மென்றார். 'வேண்டு' மென்பது ஈண்டு இன்றியமையாதென்னும் பொருட்டு. (உ)

சுருந. ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர்.

(இ - ள்.) ஆஅதும் என்னு மவர்-மேலாகக் கடவே மென்று கருதுவார்; ஒளி மாழ்கும் வினை செய் ஓஒதல் வேண்டும் - தம் மொளி கெடுதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க.

'ஓஒதல் வேண்டு' மென்பது ஒருசொல் னீர்மைத்து. ஒவுத லென்பது குறைந்துநின்றது 'ஒளி' தாமுள காலத்து எல்லா ரானும் நன்கு மதிக்கப்படுதல்.† செய்யென்னும் முதனிலைத் தொழிற் பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் 'செய்வினை'யென வினைத்தொகையாக்கியவழிப் பொருளின்மை யறிக. ஒளி கெட வருவது ஆக்கமன் றென்பதாம். (ங)

சுருச. இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்-தாமிடுக் கணிலே படவரினும், அது தீர்தற்பொருட்டு முன் செய்தார்க்கு இளிவந்த வினைகளைச் செய்யார்; நடுக்கு அற்ற காட்சியவர்-துளக்க மற்ற தெளிவினை யுடையார்.

சிறிது போழ்திற்கழிவதாய இடுக்கணோக்கி, எஞ்ஞான்றும் கழி யாத இழிவு எய்தற்பாலதன்றென்பதூஉம், அஃதெய்தினும் வரு வது வருமென்பதூஉம் தெளிவராகலால், 'செய்யா'ரென்றார். (ச)

சுருரு. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

* சுகூடு ஆம் குறளுரை. † குறள் - சுஎக.

(இ - ள்.) எற்று என்று இரங்குவ செய்யற்க-யான்செய்தது எத்தன்மைத்தென்று பின் தானே இரங்கும் வினைகளை ஒருகாலுஞ் செய்யா தொழிக; செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று - அன்றி ஒருகால் மயங்கி அவற்றைச் செய்யுந் தன்மையனாயினனாயின், பின்னிருந்து அவ் விரங்கல்களைச் செய்யா தொழிதல் நன்று.

'இரங்குவ' வென முன்வந்தமையிற் பின் 'அன்ன' வெனச் சுட்டி யொழிந்தார். அவ் வினைகளது பன்மையான், இரக்கமும் பலவாயின. அச்செயற்குப் பின்னிருந் திரங்குவனாயின், அது தீரும் வாயிலறிந்திலனெனவும், திட்பமிலனெனவும், பயனில்லன செய்கின்றானெனவும், தன் பழியைத் தானே தூற்றுகின்றானெனவும், எல்லாரு மிகழ்தலிற் பின்னிரங்காமை நன்றென்றார். இதுவும் வினைத்தூயார் செயலாதலின், உடன் கூறப்பட்டது. பிற்றொடருக்குச் செய்வானாயின் அவைபோல்வனவுஞ் செய்யாமை நன்றெனப் பிறரெல்லாம் இயைபற உரைத்தார்.　(ரு)

கூருசு. ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(இ - ள்.) ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் - தன்னைப் பயந்தாளது பசியை வறுமையாற் கண்டிரங்குந் தன்மையனாயினானெனினும்; சான்றோர் பழிக்கும் வினை செய்யற்க - அது சுட்டி அறிவுடையார் பழிக்கும் வினைகளை ஒருவன் செய்யாதொழிக.

இறந்த மூப்பினராய இருமுதுகுரவருங், கற்புடை மனைவியுங் குழவியும் பசியான் வருந்து மெல்லைக்கண் தீயன பலவுஞ் செய்தாயினும் புறந்தருக வென்னும் அறநூற் பொதுவிதி, பொருணூல் வழி யொழுகுதலும் அரசர் தொழிற்குரியராதலும் நன்கு மதிக்கற்பாடுமுடைய அமைச்சர்க் கெய்தாமைபற்றி இவ்வாறு கூறினார். இவையைந்து பாட்டானும் பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்க வென்பது கூறப்பட்டது.　(சு)

கூருஎ. பழிமலைந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

(இ - ள்.) பழி மலைந்து எய்திய ஆக்கத்தின்-சாலாதார் தீய வினைகளைச் செய்து அதனாற் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற செல்வத்தின்; சான்றோர் கழி நல்குரவே தலை - அது மேற்கொள்ளாத சான்றோ ரனுப்விக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது.

* மணக்குடவர்.

நிலையாத செல்வத்தின்பொருட்டு நிலையின பழியை மேற்கோடல் சால்போ டியையாமையின், 'சான்றோர் கழிநல்குரவே தலை'யென்றார். (எ)

சுருஅ. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

(இ - ள்.) கடிந்த கடிந்து ஓரார் செய்தார்க்கு - நூலோர் கடிந்த வினைகளைத் தாமுங் கடிந்தொழியாது பொருளுணேக்கிச் செய்த அமைச்சர்க்கு; அவை தாம் முடிந்தாலும் பீழை தரும் - அவை தூய வன்மையின் முடியா, ஒருவாற்ருன் முடியினும் பின் துன்பத்தையே கொடுக்கும்.

முடிதல், கருதிய பொருள் தருதல். பீழை தருதலாகிய பொருளின்ருெழில், அதற்குக் காரணமாய வினைகள்மே லேற்றப்பட்டது.

சுருகூ. அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.

(இ - ள்.) அழக்கொண்ட எல்லாம் அழப் போம் - ஒருவன் தீவினைகளைச் செய்து பிறரிரங்கக் கொண்ட பொருளெல்லாம் இம்மையிலே அவன்ருனிரங்கப் போகாநிற்கும்; நற்பாலவை இழப்பினும் பிற்பயக்கும்-மற்றைத் தூயவினையான் வந்தபொருள்கள் முன்னிழந்தாளுயினும் அவனுக்குப் பின்னர் வந்து பயன் கொடுக்கும்.

'பின்' எனவே மறுமையும் அடங்கிற்று. பொருள்களான் அவற்றிற்குக் காரணமாய வினைகள தியல்பு கூறியவாறு. (கூ)

சுகூ௦. சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(இ - ள்.) சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல்-அமைச்சன் தீயவினைகளாற் பொருள் படைத்து அதனல் அரசனுக்கேமஞ் செய்தல்; பசுமண்கலத்துள் நீர்பெய்து இரீஇயற்று-பசியமண்கலத்துள்ளே நீரைப்பெய்து அதற்கேமஞ் செய்ததனே டொக்கும்.

முன் ஆக்கம் பயப்பனபோல் தோன்றிப் பின் அழிவேபயத்தலால், அவை 'சல' மெனப்பட்டன. ஏமமார்த்த லென்பது 'ஏமார்த்த' லென்ருயிற்று; ஏமத்தை அடையப்பண்ணுத லென்றவாறு. இருத்துதல்-நெடுங்காலம் இருப்பச் செய்தல். அரசனும் பொருளும்சேரப்போ மென்பதாம்.பிறரெல்லாம் ஏமாத்தலென்று பாடமோதி, அதற்கு மகிழ்தலென்றும், 'இரீஇயற்' றென்பதற்கு

வைத்தாற்போலுமென்று முரைத்தார்;* அவர் அவை தன் வினையும் பிறிதின் வினையுமாய் உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர். இவை நான்கு பாட்டானும் அதற்குக் காரணம் கூறப்பட்டது. (கo)

---

## அதி. கூஎ—வினைத்திட்பம்

[அஃதாவது, அத் தூயவினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத் திண்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

கூகூக. **வினைத்திட்பம் என்ப தொருவன் மனத்திட்பம்**
**மற்றைய எல்லாம் பிற.**

(இ - ள்.) வினைத் திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம் - வினைசெய்தற்கண் திண்மையென்று சொல்லப்படுவது அதனை முடித்தற்குரியா னொருவன் மனத்தினது திண்மை; மற்றைய எல்லாம் பிற - அஃதொழிந்தன வெல்லாம் அதற்குத் திண்மை யென்று சொல்லப்படா.

ஒழிந்தனவாவன: படை, அரண், நட்பு முதலியவற்றின்திண்மைகள். அவையும் அதற்கு வேண்டுவனவாய் இனமாகலின் 'மற்றைய' வென்றும், வேண்டினும் அஃதில்வழிப் பயனிலவாகலிற் பிறவென்றுங் கூறினார். இதனால் 'வினைத்திட்ப'மாவது இன்ன தென்பது கூறப்பட்டது. (க)

கூகூஉ. **ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்**
**ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்.**

(இ - ள்.) ஆய்ந்தவர் கோள்-முன் நீதி யாராய்ந்த அமைச்சரது துணிபு; ஊறு ஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின் ஆறு என்பர் - பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும் செய்யும் வினை தெய்வத்தாற் பழுதுபட்டவழி அதற்குத் தளராமையுமாகிய இவ்விரண்டன் வழி யென்பர் நூலோர்.

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத்தூய்மையும் உடன் கூறினார். உறுதலுடையதனை முன் 'ஊ' றென்றமையின், 'உற்றபி' னென்றும், இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார் 'இரண்டினு' றென்றுங் கூறினார். ஊறொராரென்று பாடமோதுவாரு முளர்;

---

* மணக்குடவர்.

அஃது, 'ஒல்காமை' யென்னு மெண்ணேடும் 'இரண்'டென்னுந் தொகையோடும் இயையாமை அவ ரறிந்திலர். (உ)

சுசுங. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்
எற்ரு விழுமந் தரும்.

(இ - ள்.) கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை-செய்யப் படும் வினையை முடிவின்கண் புலப்படும் வகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது; இடைக்கொட்கின் எற்ரு விழுமம் தரும்-அங்ஙனமன்றி இடையே புலப்படுமாயின் அப்புலப் பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும்.

மறைத்துச் செய்வதாவது அங்கமைந்தும் எண்ணியவாறு பிற ரறியாமலும்; தானறிந்ததூஉம், தன்னிங்கிதம், வடிவு, செயல், சொற்களான் அவருய்த்துணராமலும், அடக்கிச் செய்தல். அத் திட்பம், ஆண்தன்மையான்வருதலின், 'ஆண்மை'யெனப்பட்டது. 'எற்ரு விழும' மாவன: பகைவர் முன்னறிந்து அவ்வினையை விலக்குதல், செய்வானை விலக்குதல் செய்வராகலின், அவற்றான் வருவன. 'விழுமம்' சாதிப்பெயர். இவை இரண்டு பாட்டானும் அதனது பகுதி கூறப்பட்டது. (ங)

சுசுச. சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம
சொல்லிய வண்ணம் செயல்.

(இ - ள்.) சொல்லுதல் யார்க்கும் எளிய-யாம் இவ்வினையை இவ்வாற்ருற் செய்துமென நிரல்படச் சொல்லுதல் யாவர்க்கும் எளிய; சொல்லியவண்ணம் செயல் அரியவாம்-அதனை அவ்வாற் ருனே செய்தல் யாவர்க்கும் அரியவாம்.

'சொல்லுதல்' 'செய'லென்பன சாதிப்பெயர். அரியவற்றை யெண்ணிச்சொல்லுதல் திட்ப மில்லாதார்க்கு மியறலின், 'எளிய' வென்ருர். இதனல் அதனதருமை கூறப்பட்டது. (ச)

சுசுரு. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி உள்ளப் படும்.

(இ - ள்.) வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம்-எண்ணத் தாற் சிறப்பெய்திப்* பிற இலக்கணங்களாலும் மாட்சிமைப்பட்ட அமைச்சரது வினைத்திட்பம்; வேந்தன்கண் ஊறு எய்தி உள்ளப் படும் - வேந்தன்கண்ணே உறுதலை யெய்தலான், எல்லாராலும் நன்கு மதிக்கப்படும்.

* குறள். சுஅ ஆம் அதிகாரம்.

'வேந்தன்க ணூறெய்'தல், எடுத்தவினை அதனால் முற்றுப் பெற்றுச் செல்வமும் புகழும் அவன் கண்ணவாதல். எய்தலா னென்பது திரிந்து நின்றது. 'உள்ளல்': மதிப்பான் மறவாமை. இதனால் அதன் சிறப்புக் கூறப்பட்டது. (ரு)

சாசாசா. எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
　　திண்ணியர் ஆகப் பெறின்.

(இ - ள்.) எண்ணிய எண்ணியாங்கு எய்துப - தாமெய்த எண்ணிய பொருள்களெல்லாவற்றையும் அவ் வெண்ணியவாறே எய்துவர்; எண்ணியார் திண்ணியராகப் பெறின் - எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கண் திண்மையுடைராகப்பெறின்.

எளிதி னெய்துப வென்பார், 'எண்ணியாங் கெய்துப' வென்றார். அவர் அவ்வாறல்ல தெண்ணுமையின், திண்ணியராகவே வினை முடியும்; அது முடிய, அவை யாவையுங் கை கூடுமென்பது கருத்து. இதனால் அஃதுடையாரெய்தும் பயன்கூறப்பட்டது. (சா)

சாசாஎ. *உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்
　　கச்சாணி யன்னார் உடைத்து.

(இ - ள்.) உருள் பெருந் தேர்க்கு அச்சு ஆணி அன்னார் உடைத்து-உருளாநின்ற பெரிய தேர்க்கு அச்சின்க ணாணிபோல வினைக்கண் திண்ணியாரை யுடைத்து உலகம்; உருவு கண்டு எள்ளாமை வேண்டும் - அதனால் அவரை வடிவின் சிறுமை நோக்கி இகழ்தலை யொழிக.

சிறுமை, 'எள்ளாமை வேண்டு' மென்பதனானும், உவமை யானும் பெற்றும். 'அச்சு' உருள் கோத்த மரம். 'ஆணி' உருள் கழலாது அதன் கடைக்கட் செருகுமது. அது வடிவாற் சிறிதா யிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டுய்க்குந் திட்பமுடைத்து; அதுபோல, வடிவாற் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக்கொண் டுய்க்குந் திட்பமுடைய அமைச்சரு முளர், அவரை அத்திட்ப நோக்கி அறிந்துகொள்க வென்பதாம். இதனால் அவரை அறியு மாறு கூறப்பட்டது. (எ)

சாசாஅ. கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
　　தூக்கங் கடிந்து செயல்.

(இ - ள்.) கலங்காது கண்ட வினைக்கண் - மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண், துளங்காது தூக்கம் கடிந்து செயல் - பின்னசைதலின்றி நீட்டித்தலை யொழிந்து செய்க.

---

* அறநெறிச்சாரம், எகூ.　மூதுரை கஉ.

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோல் தோன்றுமாகலின், தெளிந்து பலகா லாராய்ந்து தாஞ் செய்வதாக ஓர்த்த வினையைக் 'கலங்காது கண்ட வினை' யென்றார். துளங்காமை - திட்ப முடைமை. (அ)

சுசுசு. துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.

(இ ள்.) துன்பம் உற வரினும் - முதற்கண் மெய்ம்முயற்சி யால் தமக்குத் துன்பம் மிகவருமாயினும்; இன்பம் பயக்கும்வினை துணிவு ஆற்றிச் செய்க - அது நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க

'துணிவு' கலங்காமை. அஃதுடையார்க்கல்லது கணிகமாய முயற்சித்துன்பம் நோக்காதுநிலையுதலுடைய பரிணும இன்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், 'துணிவாற்றிச் செய்க' வென் ருர். இவை இரண்டு பாட்டானும் அவர் வினைசெய்யுமாறு கூறப் பட்டது. (கூ)

சுஎ௦. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

(இ - ள்.) வினைத் திட்பம் வேண்டாரை- வினைத் திட்பத்தை இது நமக்குச் சிறந்ததென்று கொள்ளாத அமைச்சரை; எனைத் திட்பம் எய்தியக் கண்ணும்-ஒழிந்த திட்பங்களெல்லாம் உடை யராயஇடத்தும்; வேண்டாது உலகு-நன்கு மதியார் உயர்ந்தோர்.

மனத்தின்கண் திட்ப மில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும், வினை முடியா தாம்; ஆகவே, அவையெல்லாம் கெடு மென்பதுபற்றி 'உலகு வேண்டா' தென்றார். இதனால் வினைத்திட்ப மில்லாதார திழிபு கூறப்பட்டது. (க௦)

---

## அதி. சுஅ—வினைசெயல்வகை

[அஃதாவது, அத்திட்பமுடைய அமைச்சன் அவ்வினையைச் செய்யுந் திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

சுஎக. சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

(இ - ள்.) சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் - விசாரத்திற் கெல்லையாவது விசாரிக்கின்றான் இனி இது தப்பா தென்னுந்

துணிவினைப் பெறுதல்; அத் துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது - அங்ஙனந் துணிவுபெற்ற வினை பின் நீட்டிப்பின்கண் தங்குமாயின் அது குற்றமுடைத்து.

'சூழ்ச்சி முடிவு துணிவெய்த' லெனவே துணிவெய்து மள வுஞ் சூழ வேண்டுமென்பது பெற்றாம். பின்னர்த் 'துணிவு' ஆகு பெயர். நீட்டிப்பு, செய்யுங் காலத்துச் செய்யாமை. அஃதுள் வழிக் காலக் கழிவாகலானும், பகைவர் அறிந்தழித்தலானும் முடி யாமையின் அதனைத் 'தீ' தென்றார். (க)

௬௭௨. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
　　தூங்காது செய்யும் வினை.

(இ - ள்.) தூங்கிச் செயற்பால தூங்குக - நீட்டித்துச் செய் யும் பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க; தூங்காது செய்யும் வினை தூங்கற்க - நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியா தொழிக.

இருவழியும் இறுதிக்கண் தொக்க ஏழாவது விரிக்கப்பட்டது. இருவகை வினைகளும் வலியானும் காலத்தானும் அறியப்படும். மாறிச் செய்யின், அவை வாயாவென்பது கருத்து. மேல் தூங் காமையென்றார்,* ஈண்டதனைப் பகுத்துக் கூறினர். இவைஇரண்டு பாட்டானும் பொதுவகையால் வினைசெய்யுந்திறங் கூறப்பட்டது.

௬௭௩. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
　　செல்லும்வாய் நோக்கிச் செயல்.

(இ - ள்.) ஒல்லும்வாய் எல்லாம் வினை நன்று - வினைசெய் யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போராற்செய்தல் நன்று; ஒல்லாக் கால் செல்லும் வாய் நோக்கிச் செயல் - அஃதியலாவிடத்து† ஏனை மூன் றுபாயத்துள்ளும் அது முடிவதோர் உபாயநோக்கிச் செய்க.

இயலுமிடம்: பகையில் தான் வலியனாய காலம். அக் காலத் துத் தண்டமே நன்றென்றார், அஞ்சுவது அதற்கேயாகலின். இயலாவிடம் ஒத்த காலமும் மெலிய காலமும். அவ்விரண்டு காலத்துஞ் சாம பேத தானங்களுள் அது முடியும் உபாயத்தாற் செய்கவென்றார், அவை ஒன்றற்கொன்று வேறுபாடுடையவேனும் உடம்படுத்தற் பயத்தால் தம்மு ளொக்குமாகலின். இதனான் வலியான், ஒப்பான், மெலியானென நிலை மூவகைத்தென்பதூ உம், அவற்றுள் வலியது சிறப்பும் கூறப்பட்டன. (௩)

* குறள் - ௩௮௩.　　† ௪௬௮ ஆம் குறள் உரை.

௬௭௪. வினைபகை யென்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்.

(இ - ள்.) வினை பகை என்ற இரண்டின் எச்சம்-செய்யத் தொடங்கிய வினையும், களையத்தொடங்கிய பகையுமென்று சொல்லப்பட்ட இரண்டனதொழிவும்; நினையுங்கால் தீயெச்சம் போலத் தெறும் - ஆராயுங்கால் தீயின தொழிவுபோலப் பின் வளர்ந்து கெடுக்கும்.

இனி இக்குறை என்செய்வதென்று இகழ்ந்தொழியற்க, முடியச் செய்க வென்பதாம். பின் வளர்த லொப்புமைபற்றிப் பகை யெச்சமும் உடன் கூறினர். இதனான் வலியான் செய்யுந் திறங் கூறப்பட்டது. (௪)

௬௭௫. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்.

(இ - ள்.) பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும் - வினை செய்யுமிடத்துப் பொருளுங் கருவியுங் காலமும் வினையும் இடனுமாகிய இவ்வைந்தனையும்; இருள் தீர எண்ணிச் செயல்- மயக்கமற எண்ணிச் செய்க.

* எண்ணொடு பிற வழியுங் கூட்டப்பட்டது. 'பொருள்' அழியும் பொருளும் ஆகும்பொருளும். 'கருவி' தன்தானையும் மாற்றார் தானையும். 'காலம்' தனக்காங் காலமும் அவர்க்காங் காலமும். 'வினை' தான் வல்ல வினையும் அவர் வல்ல வினையும். 'இடம்' தான் வெல்லுமிடமும் அவர் வெல்லுமிடமும். இவற்றைத் தான் வென்றி யெய்துந் திறத்திற் பிழையாம லெண்ணிச் செய்க வென்பதாம். (௫)

௬௭௬. முடிவும் இடையூறும் முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(இ - ள்.) முடிவும் - வினை செய்யுங்கால் அது முடிதற்குள தாம் முயற்சியும்; இடையூறும் - அதற்கு வரு மிடையூறும்; முற்றியாங்கு எய்தும் படுபயனும் - அது நீங்கி முடிந்தால் தானெய்தும் பெரும்பயனும்; பார்த்துச் செயல் - சீர்தூக்கிச் செய்க.

'முடிவு' ஆகுபெயர். முயற்சி இடையூறுகளதளவிற் பயன தளவு பெரிதாயிற் செய்க வென்பதாம். (௬)

௬௭௭. செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளங் கொளல்.

* தொல். சொல். - உ௬௪.

(இ - ள்.) செய்வினை செய்வான் செயல்முறை-அவ்வாற்றாற் செய்யப்படும் வினையைத் தொடங்கினான் செய்யு முறைமை யாவது; அவ்வினை உள் அறிவான் உள்ளம் கொளல் - அதனதுளப் பாட்டினை அறிவான் கருத்தினைத் தானறிதல்.

அவ்வாறென்றது பொருள் முதலிய எண்ணலையும் முடிவு முதலிய தூக்கலையும். 'உள்ளறிவான்' முன் செய்து போந்தவன். அவன் கருத்து. அவன் செய்து போந்த உபாயம். அதனை யறியவே, தானும் அதனாற் செய்து பயனெய்து மென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஒப்பான் செய்யும் திறம் கூறப்பட்டது. (எ)

௬எஅ. வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(இ - ள்.) வினையான் வினை ஆக்கிக்கோடல் - செய்கின்ற வினையாலே அன்னது பிறிதுமோர் வினையை முடித்துக் கொள்க; நனை கவுள் யானையால் யானை யாத்தற்று-அது மதத்தானனைந்த கபோலத்தினையுடைய யானையாலே அன்னது பிறிதுமோர் யானையைப் பிணித்ததனோ டொக்கும்.

பிணித்தற் கருமை தோன்ற 'நனைகவு' ளென்பது பின்னுங் கூட்டப்பட்டது. தொடங்கிய வினையானே பிறிதுமோர் வினையை முடித்தற் குபாயமாமறு எண்ணிச் செய்க; செய்யவே, அம்முறையான் எல்லாவினையும் எளிதில் முடியு மென்பதாம். (அ)

௬எ௯. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்.

(இ - ள்.) நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே - வினை செய்வானால் தன் நட்டார்க்கு இனியவற்றைச் செய்தலினும் விரைந்து செய்யப்படும்; ஒட்டாரை ஒட்டிக் கொளல் - தன் பகைவரோடு ஒட்டாரைத் தனக்கு நட்பாக்கிக் கோடல்.

அவ்வினை வாய்த்தற்பயத்தவாய இவ்விரண்டும் பகைவர்க்குத் தன் மெலிவு புலனாவதன் முன்னே செய்க என்பார், 'விரைந்த' தென்றார்; விரைந்து செய்யப்படுவதென்றவாறு. வினை செய்யுந் திறமாகலிற் பகைவரோ டொட்டாராயிற்று. தன்னொட்டார் பிறருட் கூடாமல் மாற்றி வைத்த லெனினு மமையும். (௯)

௬அ௦. உறைசிறியார் உண்ணடுங்கல் அஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(இ - ள்.) உறை சிறியார்-ஆளுமிடஞ்சிறியராய அமைச்சர்; உள் நடுங்கல் அஞ்சி - தம்மின் வலியார் எதிர்ந்த வழித் தம்பகுதி நடுங்கலையஞ்சி; குறைபெறின் பெரியார்ப் பணிந்து கொள்வர் - அந் நிலைக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை யேற்றுக் கொள்வர்.

இடம்-நாடும், அரணும். அவற்றது சிறுமை ஆள்வார்மேலேற்றப்பட்டது. மெலியாரோடு சந்திக்கு வலியார் இயைதலரிதாகலின், 'பெறி'னென்றார். அடியிலே மெலியராயினார் தன் பகுதியுமஞ்சி நீங்கின் முதலொடுங் கெடுவராகலின் அதுவாராமற் சிறிது கொடுத்துஞ் சந்தினை யேற்றுக் கொள்க வென்பதாம். பணிதல் மானமுடையார்க்குக் கருத்தன்மையின், கொள்வரென உலகியலாற் கூறினார். இவை மூன்று பாட்டானும் மெலியான் செய்யுந் திறங் கூறப்பட்டது. (௧0)

---

## அதி. ௬௯—தூது

[அஃதாவது, சந்தி விக்கிரகங்கட்கு* வேற்றுவேந்தரிடைச் செல்வாரது தன்மை. அவ்விரண்டனையும் மேல் வினைசெயல்வகை யென்றமையின், இஃததன் பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவானெனத் தூது இருவகைப் படும். அவருள் முன்னோன் அமைச்சனோடொப்பானாகலானும், பின்னோன் அவனிற் காற்கூறு குணங்குறைந்தோனாகலானும் இஃதமைச்சியலாயிற்று.]

௬௮௧. அன்புடைமை ஆன்ற குடிப்பிறந்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

(இ - ள்.) அன்பு உடைமை - தன் சுற்றத்தார்மாட்டு அன்புடையனாதலும்; ஆன்றகுடிப்பிறத்தல்-அமைச்சுப் பூணற்கமைந்த குடியின்கட் பிறத்தலும்; வேந்து அவாம் பண்பு உடைமை - அரசர் சாதி விரும்பும் பண்புடையனாதலும்; தூது உரைப்பான் பண்பு - தூது வார்த்தை சொல்வானுக்கிலக்கணம்.

முன்னைய இரண்டானும் முறையே சுற்றத்தார்க்குத் தீங்கு வாராமல் தான் பேணியொழுகலும், தன் முன்னோர் தூதியல் கேட்டறிதலும் பெறும். 'வேந்தவாம் பண்புடைமை'† முன்னர் மன்னரைச் சேர்ந்தொழுகற்கட் பெறப்படும். அதனால் வேற்றரசரும் அவன் வயத்தாராதல் பெறுதும். (௧)

---

* ௬௩௩ ஆம் குறளுரை. † கலித்தொகை - ௧௩௩.

௬௮௨. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(இ - ள்.) அன்பு - தம்மரசன் மாட்டன் புடைமையும்; அறிவு - அவனுக்கு ஆவன அறியும் அறிவுடைமையும்; ஆராய்ந்த சொல் வன்மை - அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையுமென; தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று - தூதுரைக்க உரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று.

'ஆராய்'தல்: அவற்றிற் குடம்படுஞ் சொற்களைத் தெரிதல். 'இன்றியமையாத மூன்'றெனவே, அமைச்சர்க்குச் சொல்லிய பிற குணங்களும் வேண்டு மென்பது பெற்றாம். இவை இரண்டு பாட்டானும் இருவகையார்க்கும் பொது விலக்கணங் கூறப் பட்டது. (உ)

௬௮௩. நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(இ - ள்.) வேலாருள் வென்றி வினை உரைப்பான் பண்பு - வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வென்றி தரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது; நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் - நீதி நூலையுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந் நூலை வல்லனாதல்.

அஃறன் மாலையரென்பது தோன்ற 'வேலா'ரென்றும், தூது வினையிரண்டு மடங்க 'வென்றிவினை' யென்றுங் கூறினார். 'வல்ல' னாதல் உணர்வுமாத்திர முடையராய அவர் முன் வகுக்கு மாற்ற லுடையனாதல். (௩)

௬௮௪. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(இ - ள்.) அறிவு - இயற்கையாகிய அறிவும்; உரு-கண்டார் விரும்புந் தோற்றப் பொலிவும்; ஆராய்ந்த கல்வி - பலரோடும் பல காலும் ஆராயப்பட்ட கல்வியுமென; இம் மூன்றன் செறிவு உடையான் - நன்கு மதித்தற் கேதுவாய இம் மூன்றனது கூட்டத் தையுடையான்; வினைக்குச் செல்க - வேற்று வேந்தரிடைத் தூது வினைக்குச் செல்க.

இம் மூன்றும் ஒருவன்பாற் கூடுதலரிதாகலின், 'செறிவு டையா'னென்றார். இவற்றான் நன்கு மதிப்புடையனாகவே, வினை இனிது முடியுமென்பது கருத்து. (௪)

சு அரு. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

(இ - ள்.) தொகச் சொல்லி - வேற்றரசர்க்குப் பல காரியங்களைச் சொல்லும் வழிக் காரண வகையால் தொகுத்துச் சொல்லியும்; தூவாத நீக்கி நகச் சொல்லி - இன்னாத காரியங்களைச் சொல்லும் வழி வெய்ய சொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும்; நன்றி பயப்பது தூதாம்-தன்னரசனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான்.

பல காரியங்கட் குடம்படாதார் பரம்பரையான் அவற்றிற்குக் காரணமாய தொன்றைச் சொல்ல, அதனால் அவை விளையுமாறுய்த்துணர அருமையானுஞ் சுருக்கத்தானு முடம்படுவர்; இன்னாதவற்றிற் குடம்படாதார் தம் மனமகிழச்சொல்ல, அவ்வின்னாமை காணாது உடம்படுவராதலின், அவ்விருவாற்றானும் தன் காரியந் தவறாமல் முடிக்கவல்லானென்பதாம். எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன. (ரு)

சு அசு. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்க தறிவதாந் தூது.

(இ - ள்.) கற்று - நீதிநூல்களைக் கற்று; செலச் சொல்லி - தான் சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச் சொல்லி; கண் அஞ்சான் - அவர் செயிர்த்து நோக்கின் அந் நோக்கிற் கஞ்சாது, காலத்தால் தக்கது அறிவது தூதாம் - காலத்தோடு பொருந்த அது முடிக்கத்தக்க உபாய மறிவானே தூதனாவான்.

அவ்வுபாய மறிதற்பொருட்டு நீதிநூற் கல்வியும், அதனானன்றிப் பிறிதொன்றான் முடியுங் காலம் வரின், அவ்வாறு முடிக்க வேண்டுதலிற் 'காலத்தால் தக்க தறித'லும் இலக்கணமாயின. (சு)

சு அஎ. கடனறிந்து காலங் கருதி இடனறிந்
தெண்ணி உரைப்பான் தலை.

(இ - ள்.) கடன் அறிந்து - வேற்றரசரிடத்துத் தான் செய்யு முறைமை யறிந்து; காலம் கருதி - அவர் செவ்வி பார்த்து; இடன் அறிந்து - சென்ற கருமஞ் சொல்லுதற் கேற்ற இடமறிந்து; எண்ணி - சொல்லு மாற்றை முன்னே விசாரித்து, உரைப்பான் தலை - அவ்வாறு சொல்லுவான் தூதரின் மிக்கான்.

செய்யு முறைமையாவது அவர் நிலையும்; தன்னரச னிலையும் தன்னிலையும் தூக்கி அவற்றிற் கேற்பக் காணுமுறைமையும்

சொல்லு முறைமையும் முதலாயின. செவ்வி: தன் சொல்லை யேற்றுக் கொள்ளும் மனநிகழ்ச்சி; காலவயத்த தாகலிற் 'கால' மென்றார். 'இடம்' தனக்குத் துணையாவா ருடனுயவிடம். எண்ணுதல்: தான் அது சொல்லு மாறும், அதற்கு அவர் சொல்லு முத்தரமும், அதற்குப் பின் தான் சொல்லுவனவுமாக, இவ்வாற் றான் மேன்மேல் தானே கற்பித்தல். வடநூலார் இவ்விருவகை யாருடன் ஓலை கொடுத்து நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடையென்று வகுத்துக் கூறினாராகலின், அவர் மதமுந் தோன்றத் 'தலை' யென்றார். தூதென்பது அதிகாரத்தான் வந்தது. இவை ஐந்து பாட்டானும் தான் வகுத்துக் கூறுவான திலக்கணங் கூறப்பட்டது. (எ)

சூ அஅ. தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

(இ - ள்.) வழி உரைப்பான் பண்பு - தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்றரசர்க்குச் சென்று சொல்லுவான திலக்கணமாவன ; தூய்மை - பொருள் காமங்களால் தூயனாதலும்; துணைமை - தனக்கு அவரமைச்சர் துணையாந் தன்மையும்; துணிவுடைமை-துணிதலுடைமையும்; இம் மூன்றின் வாய்மை - இம்மூன்றோடு கூடிய மெய்ம்மையுமென இவை.

பொருள் காமங்கள் பற்றி வேறுபடக் கூறாமைப் பொருட்டுத் 'தூய்மை'யும், தன்னரசனுக்கு உயர்ச்சி கூறிய வழி எம்மனோர்க் கஃதியல்பெனக் கூறி, அவர் வெகுளி நீக்குதற் பொருட்டுத் 'துணைமை'யும், இது சொல்லின் இவ ரேதஞ் செய்வரென் றொழியாமைப் பொருட்டுத் 'துணிவுடைமை'யும், யாவரானுந் தேறப் படுதற் பொருட்டு 'மெய்ம்மை'யும், வேண்டப்பட்டன. 'இன்' ஒடுவின் பொருட்கண் வந்தது. (அ

சூ அகூ. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(இ - ள்.) விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் - தன்னரசன் சொல்லி விட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்ல உரியான்; வடுமாற்றம் வாய் சோரா வன்கணவன் - தனக்கு வருமேதத்திற் கஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய் சோர்ந்துஞ் சொல்லாத திண்மையை யுடையான்.

தாழ்வு சாதிதரும மன்மையின், 'வடு' வென்றார். 'வாய் சோரா'வெனக் காரியங் காரணத்துள் அடக்கப்பட்டது. (கூ)

௬௯0. இறுதி பயப்பினும் எஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாம் தூது.

(இ - ள்.) இறுதி பயப்பினும் எஞ்சாது - அவ்வார்த்தை தன்னுயிர்க்கிறுதி தருமாயினும் அதற் கஞ்சி யொழியாது; இறைவற்கு உறுதி பயப்பது தூதாம்-தன்னரசன் சொல்லியவாறே அவனுக்கு மிகுதியை வேற்றரசரிடைச் சொல்லுவானே தூதனுவான்.

'இறுதி பயப்பினு' மென்றதனுல், ஏனைய பயத்தல் சொல்ல வேண்டாவாயிற்று. இவை மூன்று பாட்டானுங் கூறியது கூறுவான திலக்கணங் கூறப்பட்டது. (க0)

———

## அதி. எ0—மன்னரைச் சேர்ந்தொழுகல்

[அஃதாவது, அமைச்சர் அரசரைப் பொருந்தி யொழுகுமாறு. இது, வேந்தவாம் பண்புடைமை* யென மேலே வேண்டப் பட்டமையின், தூதின் பின் வைக்கப்பட்டது.]

௬௯க. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(இ - ள்.) இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார் - மாறுபடுதலையுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர்; அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க - அவரை மிக நீங்குவதும் மிகச் செறிவதுஞ் செய்யாது தீக்காய்வார் போல இடை நிலத்திலே நிற்க.

கடிதின் வெகுளுந் தன்மைய ரென்பது தோன்ற, 'இகல் வேந்த' ரென்ருர். மிக வகலிற் பயன் கொடாது, மிக வணுகின் அவமதி† பற்றித் தெறும் வேந்தர்க்கு, மிக வகலிற் குளிர் நீக்காது மிக வணுகிற் சுடுவதாய தீயோடுளதாய தொழிலுவமம் பெறப் பட்டது. (க)

௬௯உ. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய ஆக்கந் தரும்.

(இ - ள்.) மன்னர் விழைப விழையாமை - தம்மாற் சேரப் பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பா தொழிதல்; மன்னரான் மன்னிய ஆக்கம் தரும் - அமைச்சர்க்கு அவரானே நிலை பெற்ற செல்வத்தைக் கொடுக்கும்.

ஈண்டு 'விழைப'வென்றது அவர்க்குச் சிறப்பாக உரியவற்றை; அவை நுகரப்படுவன, ஒப்பனை, மேன்மை யென்றிவை முதலாயின.

---

* குறள் ௬௮க. † மதியாமை.

இவற்றை ஒப்பிற் கஞ்சித் தாம் விழையா தொழியவே, அவ்வச்ச நோக்கி யுவந்த அவர் தாமே எல்லாச் செல்வமும் நல்குவ ரென்பது கருத்து. எனவே, அவற்றை விரும்பிற் கேடுதரு மென்ப தாம். (உ)

சுகூரு. போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது.

(இ - ள்.) போற்றின் அரியவை போற்றல் - அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரிய பிழைகள் தங்கண் வாராமற் காக்க; கடுத்த பின் தேற்றுதல் யார்க்கும் அரிது-அவற்றை வந்தனவாகக் கேட்டு அவ்வரசர் ஐயுற்ருல் அவரைப் பின் தெளிவித்தல் யாவர்க்கு மரிதாகலான்.

அரிய பிழைகளாவன: அவராற் பொறுத்தற்கரிய அறை போதல், உரிமையொடு மருவல், அரும் பொருள் வெளவ லென்றிவை முதலாயின. அவற்றைக் காத்தலாவது, ஒருவன் சொல்லியக்கால், தகுமோ வென் றையுருது தகாதென்றே அவர் துணிய வொழுகல். ஒருவாற்ருல் தெளிவித்தாலும் கடன் கொண்டான் தோன்றப் பொருள் தோன்றுமாறு போலக் கண்டுழி யெல்லாம் அவை நினைக்கப்படுதலின் 'யார்க்குமரி தென்ருர். இவை மூன்று பாட்டானும் அது பொது வகையாற் கூறப்பட்டது. (௩)

சுகூச. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.

(இ - ள்.) ஆன்ற பெரியா ரகத்து-அமைந்த வரச ரருகிருந்தால்; செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல் - அவர் காண ஒருவன் செவிக்கட் சொல்லுதலையும் ஒருவன் முக நோக்கி நகுதலையுந் தவிர்ந் தொழுகுக.

சேர்தல் : பிறனேடு சேர்தல். செய்தொழுகின், தம் குற்றங் கண்டு செய்தனவாகக் கொள்வ ரென்பது கருத்து. (ச)

சுகூரு. எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

(இ - ள்.) மறை - அரசனுக்குப் பிறரோடு மறை நிகழ்வுழி; எப்பொருளும் ஓரார்-யாதொரு பொருளையுஞ் செவி கொடுத்துக் கேளாது; தொடரார் - அவனை முடுகி வினவுவதுஞ் செய்யாது; அப்பொருளை விட்டக்கால் கேட்க - அம் மறைப் பொருளை அவன் தானே அடக்காது சொல்லியக்காற் கேட்க.

ஓர்தற் கேற்கும் பொருளாயினு மென்பார், 'எப்பொருளு' மென்ருர். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. (ரு)

சுகூசு. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

(இ - ள்.) குறிப்பு அறிந்து - அரசனுக்குக் காரியஞ் சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினை யறிந்து; காலம் கருதி - சொல்லுதற் கேற்ற காலத்தையும் நோக்கி; வெறுப்பு இல வேண்டுப வேட்பச் சொலல் - வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாகிய காரியங்களை அவன் மனம் விரும்பும் வகை சொல்லுக.

குறிப்புக் காரியத்தின்க ணன்றிக் காம வெகுளி யுள்ளிட்டவற்றினிகழ்வுழியும் அதற்கேலாக் காலத்துஞ் சொல்லுதல் பயனின்றாகலிற் 'குறிப்பறிந்து காலங் கருதி' யென்றும், அவனுடம்படாதன முடிவு போகாமையின் 'வெறுப்பில' வென்றும் பயனில்லவும் பயன் சுருங்கியவுஞ் செய்தல் வேண்டாமையின் 'வேண்டுப' வென்றும், அவற்றை இனியவாய்ச் சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களாற் சொல்லுக வென்பார் 'வேட்பச்சொல' லென்றுங் கூறினார். (சு)

சுகூஎ. வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல்.

(இ - ள்.) வேட்பன சொல்லி - பயன் பெரியனவுமாய் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி; எஞ்ஞான்றும் வினை இல கேட்பினும் சொல்லா விடல் - எஞ்ஞான்றும் பயனிலவாயவற்றைத் தானே கேட்டாலுஞ் சொல்லாது விடுக.

'வினையில' எனவுங் 'கேட்பினும்' எனவும் வந்த சொற்களான், அவற்றின் மறுதலைச் சொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான் வருதலின் 'வினை' யென்றும், வறுமைக்காலமு மடங்க 'எஞ்ஞான்று' மென்றுங் கூறினார். சொல்லுவனவுஞ் சொல்லாதனவும் வகுத்துக் கூறியவாறு. இவை நான்கு பாட்டானும் சிறப்பு வகையாற் கூறப்பட்டது. (எ)

சுகூஅ. இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

(இ - ள்.) இளையர் இன முறையர் என்று இகழார் - இவர் எம்மின் இளைய ரென்றும் எமக்கின்ன முறையினையுடைய ரென்றும் அரசரை அவமதியாது; நின்ற ஒளியோடு ஒழுகப்படும் - அவர் மாட்டு நின்ற ஒளியோடு பொருந்த ஒழுகுதல் செயப்படும்.

'ஒளி' உறங்காநிற்கவுந் தா முலகங் காக்கின்ற அவர் கடவுள் தன்மை. அதனோடு பொருந்த வொழுகலாவது அவர் கடவுளருந் தாம் மக்களுமா யொழுகுதல். அவ்வொளியாற் போக்கப்பட்ட இளமையும் முறையும் பற்றி இகழ்வராயின், தாமும் போக்கப்படு வரென்பது கருத்து. (அ)

சுகக. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) கொளப்பட்டேம் என்று எண்ணிக் கொள்ளாத செய்யார் - அரசனால் யாம் நன்கு மதிக்கப்பட்டே மென்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார்; துளக்கு அற்ற காட்சியவர்- நிலைபெற்ற அறிவினை யுடையார்.

கொள்ளாதன செய் தழிவெய்துவார் கொளப்பாட்டிற்குப் பின் தம்மை வேறொருவராகக் கருதுவராதலின். முன்னையராகவே கருதி யஞ்சி யொழுகுவாரைத் 'துளக்கற்ற காட்சியவ' ரென்றார்.

எOO. பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.

(இ - ள்.) பழையம் எனக் கருதிப் பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை-அரசனுக்கு யாம் பழையமெனக் கருதித் தமக்கியல் பல்லாதவற்றைச் செய்யும் உரிமை; கேடு தரும்-அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும்.

அவன் பொறுது செறும் பொழுதின் அப்பழைமை நோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுதலான், அவன் வேண்டாதன செய்தற்கேதுவாய 'கெழுதகைமை கேடு தரு' மென்றார். இவை மூன்று பாட்டானும் பொறுப்பரென்று அரசர் வெறுப்பன செய்யற்க என்பது கூறப்பட்டது. (கO)

---

## அதி. எக—குறிப்பறிதல்

[அஃதாவது, அரசர் கருதிய வதனை அவர் கூறாம லறிதல். இது மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையாதாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.]

எOக. கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

(இ - ள்.) குறிப்புக் கூறாமை நோக்கி அறிவான் - அரசனாற் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டாவகை அவன் முகத்

* சீவக சிந்தாமணி, நாமகளிலம்பகம்—உகக.

தானுங் கண்ணுனும் நோக்கி அறியும் அமைச்சன்; எஞ்ஞான்றும் மாறு நீர் வையக்கு அணி-எஞ்ஞான்றும் வற்றாத நீரால் சூழப்பட்ட வையத் துள்ளார்க்கு ஓராபரணமாம்.

ஒட்பமுடையனுய் எல்லார்க்கும் அழகு செய்தலான், 'வையக் கணி' யென்றார். 'குறிப்'பும் 'வைய'மும் ஆகுபெயர். வையத்திற் கென்பது விகாரப்பட்டு நின்றது. (க)

எ0உ. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(இ - ள்.) அகத்தது ஐயப்படாஅது உணர்வானை-ஒருவன் மனத்தின்க ணிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக உணரவல் லானை; தெய்வத்தோடு ஒப்பக் கொளல்-மகனேயாயினும், தெய் வத்தோ டொப்ப நன்கு மதிக்க.

உடம்பு முதலியவற்றன் ஒவ்வானுயினும் பிறர் நினைத்த துணருந் தெய்வத்தன்மை யுடைமையின் 'தெய்வத்தோ டொப்ப' வென்றார். (உ)

எ0௩. குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(இ - ள்.) குறிப்பின் குறிப்பு உணர்வாரை - தங் குறிப்பு நிகழுமா றறிந்து, அதனற் பிறர்குறிப் பறியுந் தன்மையாரை; உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல் - அரசர் தம்முறுப்புக்க ளுள் அவர் வேண்டுவ தொன்றனைக் கொடுத்தாயினும், தமக்குத் துணையாகக் கொள்க.

உள்நிகழும் நெறி யாவர்க்கும் ஒத்தலின், பிறர் குறிப்பறி தற்குத் தங்குறிப்புக் கருவியாயிற்று. 'உறுப்பு'க்களாவன: பொரு ளும் நாடும் யானை குதிரைகளும் முதலிய புறத்துறுப்புக்கள். இதற்குப் பிறர் முகக்குறிப்பானே அவர் மனக்குறிப்புணர்வாரை யென்றுரைப்பாரு முளர்.* இவை மூன்று பாட்டானுங் குறிப்பறி வாரது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

எ0௪. குறித்தது கூருமைக் கொள்வாரோ டேனை
உறுப்போ ரனையரால் வேறு.

(இ - ள்.) குறித்தது கூருமைக் கொள்வாரோடு - ஒருவன் மனத்துக் கருதிய வதனை அவன் கூறவேண்டாமல் அறியவல்லா ரோடு; ஏனை உறுப்பு ஓரனையர்-மற்றை மாட்டாதார் உறுப்பா லொருதன்மையராக வொப்பாராயினும்; வேறு-அறிவான் வேறு-

* மணக்குடவர்.

கொள்ளாதா ரென்பதூஉம் ஆயினு மென்பதூஉம் அவாய் நிலையான் வந்தன. சிறந்த அறிவின்மையின்,* விலங்கென்னுங் கருத்தான் 'வே'றென்றுர். (ரு)

எ0௬. குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்.†

(இ - ள்.) குறிப்பின் குறிப்பு உணராவாயின் - குறித்தது காணவல்ல தங்காட்சியாற் பிறர்குறிப்பினை யுணரமாட்டாவாயின்; உறுப்பினுள் கண் என்ன பயத்தவோ - ஒருவ னுறுப்புக்களுட் சிறந்த கண்கள் வேறென்ன பயனைச் செய்வன!

முதற்கண் 'குறிப்பு' ஆகுபெயர். குறிப்பறிதற்கண் துணையாதற் சிறப்புப்பற்றி உயிர துணர்வு கண்மேலேற்றப்பட்டது. அக் கண்க ளாற் பயனில்லை யென்பதாம். இவை இரண்டு பாட்டானுங் குறிப் பறியார திழிபு கூறப்பட்டது. (௬)

எ0௬. ‡அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

(இ - ள்.) அடுத்தது காட்டும் பளிங்குபோல் - தன்னையடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்குபோல; நெஞ்சங் கடுத்தது முகங் காட்டும் - ஒருவனெஞ்சத்து மிக்கதனை அவன் முகந் தானே கொண்டு காட்டும்.

'அடுத்த' தென்பது ஆகுபெயர். 'கடுத்த' தென்பது கடி யென்னு முரிச்சொலடியாய் வந்த தொழிற்பெயர். உவமை ஒரு பொருள் பிறிதொரு பொருளின் பண்பைக்கொண்டு தோற்றுத லாகிய தொழில் பற்றி வந்தது. (௬)

எ0எ. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்.

(இ - ள்.) உவப்பினும் காயினும் தான் முந்துறும் - உயிர் ஒருவனை உவத்தலானும் காய்தலானு முறின், தானறிந்து அவற் றின்கண் அதனின் முற்பட்டு நிற்குமாகலான்; முகத்தின் முதுக் குறைந்தது உண்டோ - முகம்போல அறிவு மிக்கது பிறிதுண்டோ? இல்லை.

உயிர்க்கே அறிவுள்ளது, ஐம்பூதங்களால் இயன்ற முகத்திற் கில்லை யென்பாரை நோக்கி, உயிரது கருத்தறிந்து அஃதுவக் குறின் மலர்ந்துங் காய்வுறிற் கருகியும் வரலான், உண்டென மறுப்பார் போன்று குறிப்பறிதற்குக் கருவி கூறியவாறு. (எ)

*குறள்-சக0. †நான்மணிக்கடிகை-௫௫. ‡நான்மணிக் கடிகை-சசு.

எ0அ. முகநோக்கி நிற்க அமையும் அகநோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) அகம் நோக்கி உற்றது உணர்வார்ப் பெறின் - குறையுறுவானும் தன் மனத்தைக் குறிப்பா னறிந்து தானுற்றவதனைத் தீர்ப்பாரைப் பெறின்; முகநோக்கி நிற்க அமையும் - அவர் தன் முகம்நோக்கும் வகை தானும் அவர்முகநோக்கிய அவ்வெல்லைக்கணிற்க வமையும்.

'உணர்வா'ரெனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினார். அவ்வெல்லையைக் கடந்து சொல்லுமாயின் இருவர்க்குஞ் சிறுமையாமாகலின், அது வேண்டா வென்பதாம். குறையுறுவானியல்பு கூறுவார் போன்று கருவி கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் குறிப்பறிதற் கருவி முகமென்பது கூறப்பட்டது. (அ)

எ0கூ. பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின் - வேந்தர்தம் நோக்கு வேறுபாட்டின் தன்மையை அறியவல்ல அமைச்சரைப் பெறின்; பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் - அவர்க்கு மனத்துக்கிடந்த பகைமையையும் ஏனைக் கேண்மையையும் வேற்று வேந்தர் சொல்லிற்றிலராயினும் அவர் கண்களே சொல்லும்.

இறுதிக்கட் 'கண்' ஆகுபெயர். நோக்கு வேறுபாடாவன வெறுத்த நோக்கமும் உவந்த நோக்கமும். 'உணர்தல்' அவற்றை அவ்வக் குறிகளா னறிதல். (கூ)

எக0. நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற.

(இ - ள்.) நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் - யாம் நுண்ணறிவுடையே மென்றிருக்கும் அமைச்சர் அரசர் கருத்தினை அளக்குங் கோலாவது; காணுங்கால் கண்ணல்லது பிற இல்லை - ஆராயுமிடத்து அவர் கண்ணல்லது பிற வில்லை.

அறிவி னுண்மை அஃதுடையார்மே லேற்றப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில், சொல்லென்பன முதலாகப் பிறர் கருத்தளக்கு மளவைகள் பல. அவையெல்லாம் முன்னறிந்தவழி அவரான் மறைக்கப்படும் நோக்கம் மனத்தொடு கலத்தலான் ஆண்டு மறைக்கப்படாதென்பது பற்றி, அதனையே பிரித்துக் கூறினார். இனி, அலைக்குங் கோ லென்று பாடமோதி, நுண்ணிய மென்

றிருக்கும் அமைச்சரை அரசர் அலேக்குங் கோலாவது கண்ணென உரைத்து, தம் வெகுளி நோக்கால் அவர் வெகுடற்குறிப் பறிக வென்பது கருத்தாக்குவாரு முளர். இவை இரண்டு பாட்டானும் நுண்கருவி நோக்கென்பது கூறப்பட்டது. (கO)

## அதி. எஉ—அவையறிதல்

[அஃதாவது, அரசனேடிருந்த அவையின தியல்பை யறிதல், காரியஞ் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யன்றி, இது வும் வேண்டுதலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.]

எகக. **அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்**
**தொகையறிந்த தூய்மை யவர்.**

(இ-ள்.) சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்-சொல் லின் குழுவினை யறிந்த தூய்மையினை யுடையார்; அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக-தாமொன்று சொல்லுங்கால் அப்பொழுதை யவையினை யறிந்து ஆராய்ந்து சொல்லுக.

சொல்லின் குழு வெனவே, செஞ்சொல் இலக்கணச்சொல் குறிப்புச்சொல் என்னும் மூவகைச் சொல்லு மடங்கின. 'தூய்மை' அவற்றுள் தமக்காகாதன வொழித்து ஆவன கோடல். 'அவை' யென்றது ஈண்டத னளவை. அது மிகுதி, ஒப்பு, தாழ்வென மூவகைத்து. 'அறி'தல் : தம்மொடு தூக்கி யறிதல். 'ஆராய்'தல்: இவ் வவைக்கட் சொல்லும் காரியம் இது, சொல்லுமாறிது, சொன்னல் அதன்முடி விதுவென்று இவை யுள்ளிட்டன ஆராய்தல். (க)

எகஉ. **இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்**
**நடைதெரிந்த நன்மை யவர்.**

(இ-ள்.) சொல்லின் நடை தெரிந்த நன்மையவர்-சொற் களி னடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினை யுடையார்; இடை தெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக-அவைக்கண் ஒன்று சொல் லுங்கால் அதன் செவ்வியை ஆராய்ந்தறிந்து வழுப்படாமல் மிக வுந் தெளிந்து சொல்லுக.

சொற்களின் 'நடை'யாவது அம்மூவகைச் சொல்லும் செம் பொருள், இலக்கணப்பொருள், குறிப்புப்பொரு ளென்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி, கேட்டற்கண் விருப் புடைமை. வழு, சொல் வழுவும், பொருள் வழுவும். இவை இரண்டு பாட்டானும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டுமென்பது கூறப்பட்டது. (உ)

எகங. **அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல்.**

(இ - ள்.) அவை அறியார் சொல்லல்மேற்கொள்பவர்சொல்லின் வகை அறியார்-அவையினதளவை யறியாது ஒன்றுசொல்லுதலைத் தம்மேற் கொள்வார் அச் சொல்லுதலின் கூறுபாடும் அறியார்; வல்லதூஉம் இல் - கற்றுவல்ல கலையும் அவர்க்கில்லை.

அம் முவகைச் சொற்களால் வருஞ் சொல்லுதல் வகைமை கேட்பாரதுணர்வு வகைமைபற்றி வருதலாற் 'சொல்லின் வகையறியா'ரென்றும், இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாரானும் இகழப்படுதலின் 'வல்லதூஉமில்' என்றுங் கூறினார். இதனால் அவையறியாக்கால் வருங் குற்றம் கூறப்பட்டது. (ங)

எகச. **ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.**

(இ - ள்.) ஒளியார் முன் ஒள்ளியர் ஆதல்-அறிவா லொள்ளியா ரவைக்கண் தாமுமொள்ளியராக; வெளியார்முன் வான் சுதை வண்ணம் கொளல்-ஏனை வெள்ளைக ளவைக்கட் டாமும் வாலிய சுதையி னிறத்தைக் கொள்க.

ஒள்ளியர் ரென்றது மிக்காரையும் ஒத்தாரையும். அது விகாரத்தால் 'ஒளியா'ரென நின்றது. ஒள்ளியராதல், தந்நூலறிவுஞ் சொல்வன்மையுந் தோன்ற விரித்தல். அவை யறியாத புல்லரை 'வெளியா'ரென்றது, வயிரமின் மரத்தை வெளிறென்னும் வழக்குப்பற்றி. அவர் மதிக்கும் வகை அவரினும் வெண்மையுடையராக வென்பார், 'வான்சுதை வண்ணங்கொள'லென்றார். அவையளவறிந்தார் செய்யுந் திறம் இதனால் தொகுத்துக்கூறப்பட்டது. முன்னர் விரித்துக் கூறுப. (ச)

எகரு. **நன்றென் றவற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.**

(இ - ள்.) நன்று என்றவற்றுள்ளும் நன்றே-ஒருவர்க்கு இது நன்றென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும் நன்றே; முதுவருள் முந்து கிளவாச் செறிவு - தம்மின் மிக்கா ரவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம்.

தங்குறையும் அவர் மிகுதியும் முந்து கிளந்தாற்படுமிழுக்கும் கிளவாக்கா லெய்து நன்மையும் அறிந்தே யடங்கினமையின், அவ்வடக்கத்தினை 'நன்றென் றவற்றுள்ளும் நன்' றென்றார். முன்

கிளத்தலையே விலக்கினமையின், உடன்கிளத்தலும் பின்கிளத் தலுமாமென்பது பெற்றும். இதனுன் மிக்கா ரவைக்கட் செய்யுந் திறங் கூறப்பட்டது. (௫)

எகசு. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு.

(இ-ள்.) ஆற்றின் நிலை தளர்ந்தற்று-வீடெய்தற்பொருட்டு நன்னெறிக்கணின்ற ஒருவன் அந்நெறியினின்றும் நிலை தளர்ந்து வீழ்ந்தா லொக்கும்; வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு-அகன்ற நூற்பொருள்களை உட்கொண்டு அவற் றின் மெய்ம்மை யுணரவல்லா ரவைக்கண் வல்லாஒருவன் சொல்லிழுக்குப்படுதல்.

'நிலைதளர்ந்து' வீழ்தல், "உரனென்னுந்தோட்டியா னோரைந் துங்கா"* த் தொழுகியான் பின் னிழுக்கிக் கூடாவொழுக்கத்த னுதல். பயனிழத்தலேயன்றி இகழவும் படுமென்பதாம். இதனுன் அதன்க ணிழுக்கியவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது. (௬)

எகஎ. கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லார் அகத்து.

(இ-ள்.) கசடு அறச் சொல் தெரிதல் வல்லாரகத்து-வழுப் படாமற் சொற்களை யாராய்தல் வல்லா ரவைக்கண் சொல்லின்; கற்று அறிந்தார் கல்வி விளங்கும்-பல நூல்களையுங் கற்று அவற்றி னுய பயனை யறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித் தோன்றும்.

சொல்லி னென்பது அவாய்நிலையான் வந்தது. ஆண்டே சொல்லுக வென்பதாம். (எ)

எகஅ. உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.

(இ-ள்.) உணர்வது உடையார் முன் சொல்லல்-பிற ருணர்த்தலின்றிப் பொருள்களைத் தாமே உணரவல்ல அறிவினை யுடையார் அவைக்கண் கற்ருர் ஒன்றனைச் சொல்லுதல்; வளர் வதன் பாத்தியுள் நீர் சொரிந்தற்று-தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற்போலும்.

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளரு மென்பதாம். இவை இரண்டு பாட்டானும்ஒத்தாரவைக்கண்எவ்வழியுஞ் சொல் லுக வென்பது கூறப்பட்டது. (அ)

* குறள் - உச.

எகசு. புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.

(இ - ள்.) நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார்-நல்லா ரிருந்த அவைக்கண் நல்ல பொருள்களை அவர் மனங்கொள்ளச் சொல்லுதற்குரியார்; புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க - அவை யறியாத புல்ல ரிருந்த அவைக்கண் அவற்றை மறந்துஞ் சொல்லாதொழிக.

சொல்லின், தம்மை அவை யறியாமை நோக்கி 'நல்லவை'யும் பொருளறியாமையாற் 'புல்லவை' தானும் இகழ்தலின், இரண் டவைக்கு மாகாரென்பது கருதிப் 'பொச்சாந்துஞ் சொல்லற்க' என்றார். (கூ)

எஉ0. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்.

(இ - ள்.) தம் கணத்தார் அல்லார்முன் கோட்டி கொளல்- நல்லார் தம் மினத்த ரல்லாதா ரவைக்கண் ஒன்றனையுஞ் சொல லற்க; அங்கணத்துள் உக்க அமிழ்தற்று - சொல்லின் அது தூய தல்லாத முற்றத்தின்க ணுக்க அமிழ்தினை யொக்கும்.

'கொள்'ளென்னும் முதனிலைத் தொழிற்பெயர் முன்னின்று பின்னெதிர்மறை அல் விகுதியோடு கூடி "மகனெனல்"* என் பதுபோ னின்றது. சொல்லின் அது என்பன அவாய்நிலையான் வந்தன. பிறரெல்லாங் 'கொள' லென்பதனைத் தொழிற்பெய ராக்கி யுரைத்தார்: அவர் அத்தொழில் 'அமிழ்'தென்னும் பொரு ளுவமையோடு இயையாமை நோக்கிற்றிலர். சாவா மருந்தாத லறிந்து நுகர்வார் கையினும்படாது, அவ்வங்கணத்துக்கும் இயை பின்றிக் கெட்டவாறு தோன்ற, 'உக்கவமிழ்'தென்றார். அச்சொற் பயனில்சொல்லா மென்பதாயிற்று. இவை இரண்டு பாட்டானும் தாழ்ந்தா ரவைக்கண் ஒருவழியுஞ் சொல்லற்க வென்பது கூறப் பட்டது. (க0)

---

## அதி. எங— அவையஞ்சாமை

[அஃதாவது, சொல்லுதற்குரிய அவையினை யறிந்து சொல்லுங் கால் அதற்கு அஞ்சாமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

எஉக. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

---

* குறள் - ககூசு.

(இ - ள்.) வகை அறிந்து வல்லவை வாய் சோரார் - கற்று வல்ல அவை அல்லா அவை யென்னும் அவை வகையினை யறிந்து வல்ல அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தான் வழுப்படச் சொல்லார்; சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்-சொல்லின் தொகை யெல்லா மறிந்த தூய்மையினை யுடையார்.

இருந்தாரது வன்மை அவை மேலேற்றப்பட்டது. 'வல்லவை' யென்பதற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களை யென்றுரைப் பாருமுளர். அச்சத்தானென்பது அதிகாரத்தான் வந்தது. 'சொல் லின் தொகை', 'தூய்மை' என்பனவற்றிற்கு மேலுரைத்தாங் குரைக்க. (க)

௭உஉ. கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்.

(இ - ள்.) கற்றாருள் கற்றார் எனப்படுவர் - கற்றா ரெல்லா ரினும் இவர் நன்கு கற்றாரென்று உலகத்தாராற் சொல்லப்படுவார், கற்றார் முன் கற்ற செலச் சொல்லுவார் - கற்றா ரவைக்கண் அஞ் சாதே தாங் கற்றவற்றை அவர் மனங்கொள்ளும்வகை சொல்ல வல்லார்.

உலக மறிவது அவரையேயாகலின், அதனாற் புகழப்படுவாரும் அவரென்பதாம். (உ)

௭உ௩. பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத் தஞ்சா தவர்.*

(இ - ள்.) பகை யகத்துச் சாவார் எளியர்-பகையிடை அஞ் சாது புக்குச்சாவவல்லார் உலகத்துப் பலர்; அவையகத்து அஞ்சாத வர் அரியர் - அவையிடை யஞ்சாது புக்குச் சொல்லவல்லார் சிலர்.

அஞ்சாமை 'சாவா' ரென்பதனோடுங்கூட்டி, அதனாற் சொல்ல வல்லா ரென்பது வருவித் துரைக்கப்பட்டது. இவை மூன்று பாட்டானும் அவை யஞ்சாரது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

௭உ௪. கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்.*

(இ - ள்.) கற்றார் முன் கற்ற செலச்சொல்லி - பல நூல்களை யும் கற்றா ரவைக்கண்தாங் கற்றவற்றை அவர் மனம் கொள்ளுமாற் றாற் சொல்லி; தாம்கற்றமிக்கமிக்காருள் கொளல்-அவற்றின் மிக்க பொருள்களை அம் மிகக் கற்றாரிடத் தறிந்துகொள்க.

---

* குறள் - ௭கக.

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறு வேருய கல்வியுடையார் பலரிருந்த அவைக்கண் தாங் கற்றவற்றை அவர்க் கேற்பச்சொல்லுக; சொல்லவே, அவரும் அவையெல்லாஞ் சொல் லுவராகலான், ஏனைக் கற்கப் பெருதன கேட்டறியலா மென்ப தாயிற்று. இதனுல் அதன தொருசார் பயன் கூறப்பட்டது. (ச)

எஉரு. ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(இ - ள்.) ஆற்றின் அளவு அறிந்து கற்க - சொல்லிலக்கண நெறியானே அளவை நூலை அமைச்சர் உட்பட்டுக் கற்க; அவை அஞ்சா மாற்றம் கொடுத்தற் பொருட்டு-வேற்று வேந்தரவையிடை யஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லுதற் பொருட்டு.

அளவை நூல் சொன்னூல் கற்றே கற்கவேண்டுதலின், அதற் கஃதாறெனப்பட்டது. அளக்குங் கருவியை 'அள' வென்ருர், ஆகு பெயரான். அவர் சொல்லை வெல்வதொருசொற் சொல்லலாவது நியாயத்து வாத செற்ப விதண்டைகளும் சலசாதிகளும் முதலிய கற்ருர்க்கேயாகலின், அவற்றைப் பிழையாமற் கற்க வென்பதாம். இதனுல் அதன் காரணங் கூறப்பட்டது. (ரு)

எஉசு. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு.

(இ - ள்.) வன்கண்ண ரல்லார்க்கு வாளொடு என் - வன் கண்மையுடையரல்லாதார்க்கு வாளோடென்ன இயைபுண்டு? நுண்ணவை அஞ்சுபவர்க்கு நூலொடு என் - அதுபோல நுண்ணி யார தவையை அஞ்சுவார்க்கு நூலோ டென்ன இயைபுண்டு?

இருந்தாரது நுண்மை அவைமே லேற்றப்பட்டது. நூற்குரிய ரல்ல ரென்பதாம். (சு)

எஉஎ. பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

(இ - ள்.) பகை யகத்துப் பேடிகை ஒள் வாள்-எறியப்படும் பகை நடுவண் அதனை யஞ்சும்பேடி பிடித்த கூர் வாளை யொக்கும்; அவை யகத்து அஞ்சுமவன் கற்ற நூல் - சொல்லப்படும் அவை நடு வண் அதனை யஞ்சுமவன் கற்ற நூல்.

* 'பேடி' பெண்ணியல்பு மிக்க ஆணியல்பு முடையவள். களமும் வாய்த்துத் தானும் நன்ருயிருந்ததே யாயினும் பிடித்தவள்

* சீவக சிந்தாமணி, காந்தருவதத்தையா ரிலம்பகம் - கக௦.

குற்றத்தால் வாள் சிறப்பின்ருயினுற்போல, அவையும் வாய்த்துத் தானும் நன்ருயிருந்ததேயாயினுங் கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்ருயிற்று. (எ)

எஉஅ. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

(இ - ள்.) நல்லவையுள் நன்கு செலச் சொல்லாதார்-நல்லா ரிருந்த வவைக்கண் நல்ல சொற்பொருள்களைத் தம் மச்சத்தான் அவர்க்கேற்கச் சொல்லமாட்டாதார்; பல்லவைகற்றும் பயம் இலரே-பல நூல்களைக் கற்ருராயினும் உலகிற்குப் பயன்படுத லிலர்.

அறிவார்முன் சொல்லாமையிற் கல்வியினுண்மை அறிவா ரில்லையென்பதாம் இனிப் 'பயமில' ரென்பதற்குக் கல்விப் பயனு டையரல்லரென் றுரைப்பாரு முளர். (அ)

எஉகூ. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.

(இ - ள்.) கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார்-நூல் களைக் கற்றுவைத்தும், அவற்ருற் பயனறிந்து வைத்தும் நல்லாரிருந்த அவையினை யஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை; கல்லாதவரின் கடை என்ப - உலகத்தார் கல்லாதவரினுங் கடைய ரென்று சொல்லுவர்.

அக் கல்வியறிவுகளாற் பயன் தாமுமெய்தாது பிறரை யெய்து விப்பதுஞ் செய்யாது, கல்வித் துன்பமே யெய்திநிற்றலின் 'கல்லாத வரிற் கடை'யென உலகம் பழிக்கு மென்பதாம். (கூ)

எநூ௦. உளரெனினும் இல்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்

(இ - ள்.) களன் அஞ்சிக் கற்ற செலச்சொல்லாதார்-அவைக் களத்தை அஞ்சித் தாங்கற்றவற்றை அதற்கேற்கச்சொல்லமாட்டா தார்; உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர்-உயிர் வாழ்கின்ருராயி னும், உலகத்தாராலெண்ணப்படாமையின்இறந்தாரோடொப்பர்.

ஈண்டுக் 'களன்'னென்பது ஆண்டிருந்தாரை. இவை ஐந்து பாட்டானும் அவை யஞ்சுவார திழிபு கூறப்பட்டது. (க௦)

அமைச்சியல் முற்றிற்று.

---

## அதி. எச—நாடு

[இனி, அவ்வரசனுலும் அமைச்சனுலுங் கொண்டுய்க்கப்படுவதாய், ஏனை யரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றுய நாடு ஓரதிகாரத்தாற் கூறுகின்றுர்.]

எ௬க. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(இ - ள்.) தள்ளா விளையுளும் - குன்றுத விளையுளைச் செய்வோரும்; தக்காரும் - அறவோரும்; தாழ்வு இலாச் செல்வரும் - கேடில்லாத செல்வமுடையோரும்; சேர்வது நாடு - ஒருங்கு வாழ்வதே நாடாவது.

மற்றை உயர்திணைப் பொருள்களோடுஞ் சேர்தல் தொழிலோடும் இயையாமையின், 'விளையு' ளென்பது உழவர்மே னின்றது. குன்றுமை: எல்லா உணவுகளும் நிறைய உளவாதல். இதனுன் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர்: துறந்தோர் அந்தணர் முதலாயினுர். ''நற்றவஞ் செய்வார்க்கிடந் தவஞ் செய்வார்க்கு மஃதிடம்''* என்றுர் பிறரும். இதனுல் அழிவின்மை பெறப்பட்டது. கேடில்லாமை: வழங்கத் தொலையாமை. செல்வர்: கலத்தினுங் காலினும் அரும்பொருள் தரும் வணிகர். இதனுல் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வாய்த்தல் பெறப்பட்டது. (க)

எ௬உ. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.

(இ - ள்.) பெரும் பொருளாற் பெட்டக்கது ஆகி - அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேயத்தாராலும்விரும்பத்தக்கதாய்; அருங் கேட்டால் ஆற்ற விளைவது நாடு - கேடின்மையோடு கூடி மிக விளைவதே நாடாவது.

அளவிறப்புப் பொருள்களது பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது மிக்க பெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை யென் றிவற்றுன் வருவது. ''மிக்க பெயலோடு பெயலின்மை யெலிவிட்டில்கிளி, அக்கணர சண்மையோ டாறு.'' இவற்றை வடநூலார் ஈதிக ளென்ப. இவற்றுள் முன்னையவற்ற தின்மை அரச னறத்தானும், பின்னைய தின்மை அவன்மறத்தானும் வரும். இவ்வின்மைகளான் மிக விளைவதாயிற்று. (உ)

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம் - சஅ.

எ௲௲. பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்
　　கிறையொருங்கு நேர்வது நாடு.

(இ - ள்.) பொறை ஒருங்கு மேல் வருங்கால் தாங்கி - பிற நாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி; இறைவற்கு இறை ஒருங்கு நேர்வது நாடு - அதன்மேல் தன்னரசனுக்கு இறைப்பொருள் முழுதையும் உடம் பட்டுக் கொடுப்பதே நாடாவது.

பாரங்கள் மக்கள் தொகுதியும், ஆன் எருமை முதலிய விலங் குத் தொகுதியும். 'தாங்கு'தல் அவை தத்தந் தேயத்துப் பகை வந்திறுத்ததாக, அரசு கோல்கோடியதாக, உணவின்மையானுகத் தன்கண் வந்தால் அவ்வத் தேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல். அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானே கொடுப்பதென்பார் 'இறையொருங்கு நேர்வ' தென்றார். (௩)

எ௲௪. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
　　சேரா தியல்வது நாடு.

(இ - ள்.) உறு பசியும் - மிக்க பசியும்; ஓவாப் பிணியும் - நீங்காத நோயும்; செறு பகையும் சேராது-புறத்து நின்றுவந்தழிவு செய்யும் பகையு மின்றி; இயல்வது நாடு - இனிது நடப்பதே நாடாவது.

'உறுபசி' உழவருடைமையானும் ஆற்றவிளைதலானும் சேரா தாயிற்று. 'ஓவாப்பிணி' தீக்காற்று மிக்க குளிர் வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமையு மின்மையிற் சேராதாயிற்று. 'செறு பகை' அரசனுற்றலும் நிலைப்படையும் அடவியும் அரணு முடை மையிற் சேராதாயிற்று. (௪)

எ௲௫. பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
　　கொல்குறும்பும் இல்லது நாடு.

(இ - ள்.) பல் குழுவும் - சங்கேதவயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும்; பாழ் செய்யும் உட்பகையும்-உடனுறையா நின்றே பாழாகச்செய்யும் உட்பகையும்; வேந்து அலைக்கும் கொல் குறும்பும் இல்லது நாடு - அளவு வந்தால் வேந்தனை அலைக்குங் கொல்வினைக் குறும்பரும் இல்லாததே நாடாவது.

சங்கேதம், சாதிபற்றியும் கடவுள் பற்றியும் பலர்க் குளதா மொருமை. 'உட்பகை': ஆறலைப்பார், கள்வர், குறளை கூறுவார் முதலிய மக்களும், பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும்.

'உட்பகை' 'குறும்' பென்பன ஆகுபெயர். இம்மூன்றும் அரசனு லும் வாழ்வாராலுங் கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம். (ரு)

எ௩௬. கேடறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்று
நாடென்ப நாட்டின் தலை.

(இ - ள்.) கேடு அறியா - பகைவராற் கெடுதலறியாததாய்; கெட்ட இடத்தும் வளம் குன்று நாடு - அரிதிற் கெட்டதாயினும் அப்பொழுதுந் தன் வளங் குன்றாத நாட்டினை; நாட்டின் தலை என்ப - எல்லா நாட்டினுந் தலையென்று சொல்லுவர் நூலோர்.

அறியாத குன்றாத வென்னும் பெயரெச்சங்களின் இறுதி நிலைகள் விகாரத்தால் தொக்கன. 'கேடறியாமை' அரசனுற்ற லானுங் கடவுட் பூசை யறங்க ளென் றிவற்றது செயலானும் வரும். 'வளம்' ஆகரங்களிற் படுவனவும் வயலினுந் தண்டலை யினும் விளைவனவுமாம். 'குன்று'மை அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே உளவாயும் முன்னீட்டப்பட்டுங் குறைவறுதல். இவை யாறு பாட்டானும் நாட்ட திலக்கணங் கூறப்பட்டது. (௬)

எ௩எ. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

(இ - ள்.) இரு புனலும் - கீழ்நீர் மேனீ ரெனப்பட்ட தன் கணீரும்; வாய்ந்த மலையும் - வாய்ப்புடைத்தாய மலையும்; வரு புனலும் - அதனினின்றும் வருவதாய நீரும்; வல் அரணும் - அழி யாத நகரியும்; நாட்டிற்கு உறுப்பு - நாட்டிற் கவயவமாம்.

ஈண்டுப் 'புன' லென்றது துரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய ஆதாரங்களை; அவயவ மாதற்குரியன அவையே யாகலின். அவற்றான் வானம் வறப்பினும் வளனுடைமை பெறப் பட்டது. இடையதன்றி யொருபுடையதாகலும் தன் வளந் தருதலும் மாரிக்க ணுண்டநீர் கோடைக்க ணுமிழ்தலு முடைமை பற்றி, 'வாய்ந்த மலை' யென்றார். 'அரண்' ஆகுபெயர். இதனான் அத னவயவங் கூறப்பட்டது. (எ)

எ௩அ. பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(இ - ள்.) பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் இவ் வைந்து-நோயின்மையுஞ் செல்வம் விளைதல் இன்பம் காவ லென் றிவை யுடைமையுமாகிய இவ் வைந்தினையும்; நாட்டிற்கு அணி என்ப - நாட்டிற் கழகென்று சொல்லுவர் நூலோர்.

'பிணியின்மை' நிலநலத்தான் வருவது. 'செல்வம்' மேற் சொல்லியன. 'இன்பம்' விழவும் வேள்வியுஞ் சான்றோரு முடைமையானும், நுகர்வன வுடைமையானும், நில நீர்களது நன்மையானும், வாழ்வார்க்கு உண்ணிகழ்வது. காவலெனவே அரசன் காவலும், வாழ்வோர் காவலும், அரண் காவலு மடங்கின. பிற தேயங்களினுள்ளாரும் விழைந்து பின் அவை யுள்ளாமைக் கேதுவாய அதனழகு இதனாற் கூறப்பட்டது. (அ)

எகூகூ. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(இ - ள்.) நாடா வளத்தன நாடு என்ப-தங்கண் வாழ்வார் தேடி வருந்தாமல் அவர்பால் தானே அடையுஞ் செல்வத்தை யுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர்; நாட வளம் தரும் நாடு நாடு அல்ல-ஆதலால் தேடி வருந்தச் செல்வ மடைவிக்கும் நாடுகள் நாடாகா.

நாடுதல் இருவழியும் வருத்தத்தின்மேல் நின்றது. "பொருள் செய்வார்க்கும் அஃதிடம்"* என்றார் பிறரும். நூலோர் விதிபற்றி எதிர்மறைமுகத்தாற் குற்றங் கூறியவாறு. இவ்வாறன்றி 'என்ப' வென்பதனைப் பின்னுங் கூட்டி இரு பொருள்பட வுரைப்பின்,† அனுவாதமாம். (கூ)

எசுO. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(இ - ள்.) வேந்து அமைவு இல்லாத நாடு - வேந்தனோடு மேவுத லில்லாத நாடு; ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்றே - மேற்சொல்லிய குணங்களெல்லாவற்றானும் நிறைந்திருந்ததாயினும் அவற்றாற் பயனுடைத்தன்று.

'வேந்தமை' வெனவே, குடிகள் அவன்மாட் டன்புடையராதலும் அவன்றான் இவர்மாட் டருளுடையனாதலும் அடங்கின. அவை இல்வழி வாழ்வோ ரின்மையின், அவற்றாற் பயனின்றாயிற்று. இவை இரண்டு பாட்டானும் அதன் குற்றங் கூறப்பட்டது. (கO)

## அதி. எரு—அரண்

[இனி, அந்நாட்டிற்குறுப்பா யடங்குமாயினும் பகைவரால் தொலைவு வந்துழி அது தனக்கும் அரசன் தனக்கும் ஏமமாதற்

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம் - சஅ. † மணக்குடவர்.

சிறப்புப்பற்றிப் பிறிதோ ரங்கமாக ஓதப்பட்ட அரண் இவ் வதிகாரத்தாற் கூறுகின்றார்.]

எ௪க. ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

(இ - ள்.) ஆற்றுபவர்க்கும் அரண் பொருள் - மூவகையாற் றலு முடையராய்ப் பிறர்மேல் செல்வார்க்கும் அரண் சிறந்தது; அஞ்சித் தற் போற்றுபவர்க்கும்(அரண்) பொருள்-அவையின்றித் தம்மேல் வருவார்க் கஞ்சித் தன்னையே அடைவார்க்கும் அரண் சிறந்தது.

பிறர்மேற் செல்லுங்கால் உரிமை பொருள் முதலியவற்றைப் பிறனொருவன் வௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலானும், அப் பெருமை தொலைந் திறுதிவந்துழிக் கடனடுவ ணுடைகலத் தார்போன்று ஏமங்காண திறுவ ராகலானும், ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் 'அரண், பொரு' ளாயிற்று. ஆற்றலுடைய ராயினும் அரணில்வழி அழியும்பாலராகலின், அவரை முற் கூறி னார். இதனால் அரணினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

எ௪உ. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடைய தரண்.

(இ - ள்.) மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்காடும் உடையது அரண்-மணிபோலு நிறத்தினையுடைய நீரும் வெள் ளிடை நிலமும் மலையுங் குளிர்ந்த நிழலையுடைய காடும் உடையதே அரணாவது.

எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார் 'மணிநீ' ரென்றும், நீரு நிழலுமில்லா மருநிலமென்பார் 'மண்' ணென்றும், செறிந்த காடென்பார் 'அணிநிழற்கா' டென்றுங் கூறினார். மதிற்புறத்து மருநிலம் பகைவர் அரண் பற்றாமைப்பொருட்டு. நீரரண், நில வரண், மலையரண், காட்டரணென இயற்கையுஞ் செயற்கையு மாய இந்நான்கரணுஞ் சூழப்படுவது 'அர' ணென்பதாம். (உ)

எ௪௩. உயர்வகலந் திண்மை அருமையிந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்.

(இ - ள்.) உயர்வு அகலம் திண்மை அருமை இந்நானகின் அமைவு-உயர்ச்சியும் அகலமுந் திண்மையும் அருமையுமென்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியையுடைய மதிலை; அரண் என்று உரைக்கும் நூல் - அரணென்று சொல்லுவர் நூலோர்.

'அமைவு', 'நூ' லென்பன ஆகுபெயர். 'உயர்வு': ஏணி யெய்தாதது. 'அகலம்': புறத்தோர்க்கு அகழ லாகா அடி யகலமும், அகத்தோர்க்கு நின்று வினைசெய்யலாந் தலையகலமும். 'திண்மை': கல்லிட்டிகைகளாற் செய்தலிற் குத்தப்படாமை. 'அருமை': பொறிகளான் அணுகற் கருமை பொறிகளாவன: "வளைவிற் பொறியு மயிற்பொறி நிலையுங்—கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்—பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்—காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்—தூண்டிலுந் துடக்கு மாண்டலை யடுப்புங்-கவையுங் கழுவும் புதையும் புழையு—மையவித் துலாமுங் கைபெயரூசியுஞ்—சென்றெறி சிரலும் பன்றியும் பணையு—மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்—கோலும் குந்தமும் வேலும் சூலமும்"* என் றிவை முதலாயின. (கூ)

எசச. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்ப தரண்.

(இ - ள்.) சிறுகாப்பிற் பேர் இடத்தது ஆகி - காக்கவேண்டுமிடஞ் சிறிதாய், அகன்ற இடத்தை யுடைத்தாய்; உறு பகை ஊக்கம் அழிப்பது அரண் - தன்னை வந்து முற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே அரணாவது.

வாயிலும் வழியு மொழிந்த இடங்கள் மலை, காடு, நீர்நிலை யென்றிவற்றுள் ஏற்பனவுடைத்தாதல்பற்றிச் 'சிறுகாப்பி' னென்றும், அகத்தோர் நலிவின்றி யிருத்தல்பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தம் வலி நோக்கி இதுபொழுதே யழித்துமென்று வரும் பகைவர் வந்து கண்டால் அவ்வூக்கமொழிதல் பற்றி 'ஊக்க மழிப்ப' தென்றுங் கூறினார். (ச)

எசரு. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீர தரண்.

(இ - ள்.) கொளற்கு அரிதாய்-புறத்தாராற் கோடற்கரிதாய்; கொண்ட கூழ்த்தாகி - உட்கொண்ட பலவகை உணவிற்றாய்; அகத்தார் நிலைக்கு எளிதாம் நீரது அரண் - அகத்தாரது போர் நிலைக்கெளிதாய நீர்மையையுடையதே அரணாவது.

கோடற்கருமை: இளை கிடங்குகளானும் பொறிகளானும் இடங்கொள்ளுதற் கருமை. உணவு தலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவும் அடங்கின. 'நிலைக்கெளிதா

* சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, வரி - உ0எ, உகசு

நீர்மை'யாவது அகத்தார் விட்ட ஆயுதம் முதலிய புறத்தார்மே லெளிதிற் சேறலும், அவர் விட்டன அகத்தார்மேற் செல்லாமை யும், பதணப் பரப்பும் முதலாயின. (ரு)

எசசு. எல்லாப் பொருளும் உடைத்தா யிடத்துதவும்
நல்லா ளுடைய தரண்.

(இ - ள்.) எல்லாப் பொருளும்உடைத்தாய்-அகத்தோர்க்கு வேண்டும் பொருள்களெல்லாவற்றையும் உள்ளே யுடைத்தாய்; இடத்து உதவும் நல்லாள் உடையது அரண் - புறத்தோரால் அழி வெய்து மெல்லைக்கண் அஃதெய்தாவகை உதவிக் காக்கும் நல்ல வீரரையு முடையதே அரணுவது.

அரசன்மாட் டன்பும் மானமும் மறமும் சோர்வின்மை யும் முதலிய நற்குணங்களுடைமைபற்றி 'நல்லா'ளென்ருர். (சு)

எசஎ. முற்றியும் முற்று தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

(இ - ள்.) முற்றியும் - புகலொடு போக் கொழியும் வகை நெருங்கிச் சூழ்ந்தும்; முற்றுது எறிந்தும் - அங்ஙனஞ் சூழாது நெகிழ்ந்த விடனேக்கி ஒருமுகமாகப் பொருதும்; அறைப்படுத் தும் - அகத்தோரை அவர் தெளிந்தோரை விட்டுக் கீழறுத்துத் திறப்பித்தும்; பற்றற்கு அரியது அரண்-புறத்தோராற் கொள்ளு தற் கரியதே அரணுவது.

இம்மூன்றுபாயத்துள்ளும் முதலாவது 'எல்லாப் பொருளு முடைமை'யானும், ஏனைய 'நல்லாளுடை'மையானும் வாயா வாயின. (எ)

எசஅ. முற்றுற்றி முற்றி யவரையும் பற்றுற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(இ - ள்.) முற்று ஆற்றி முற்றியவரையும்-தானைப்பெருமை யாற் சூழ்தல் வல்லராய்வந்து சூழ்ந்த புறத்தோரையும்;பற்றியார் பற்று ஆற்றி வெல்வது அரண்-தன்னைப்பற்றிய அகத்தோர் தாம் பற்றிய விடம் விடாதே நின்று பொருது வெல்வதே அரணுவது.

உம்மை சிறப்பும்மை. பற்றின்கண்ணே யாற்றியென விரியும். 'பற்று' ஆகுபெயர். 'வெல்வ'தென உடையார்தொழில் அரண்மே னின்றது. பெரும்படையானைச் சிறுபடையான் பொறுத்து நிற்குந் துணையேயன்றி வெல்லு மியல்பின தென்பதாம். இதற்குப் பிறி

துரைப்பாரு முளர். இவை யேழுபாட்டானும் அதன திலக்கணங் கூறப்பட்டது. (அ)

எசகூ. முனை முகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(இ - ள்.) முனை முகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறு எய்தி - போர் தொடங்கின அளவிலே பகைவர் கெடும் வண்ணம் அகத்தோர்செய்யும்வினைவேறுபாடுகளான்வீறுபெற்று; மாண்டது அரண் - மற்றும் வேண்டும் மாட்சியை யுடையதே அரணாவது.

தொடக்கத்திற் கெட்டார் பின்னும் கூடிப்பொருதல் கூடாமையின், 'முனைமுகத்துச் சாய' என்றார். வினை வேறுபாடுகளாவன: பகைவர் தொடங்கிய போரினை அறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுத லென்றிவை முதலாய வினைகளுள் அதனைச் சாய்ப்பன செய்தல். மற்றும் வேண்டு மாட்சியென்றது புறத்தோரறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட சுருங்கைவழி முதலாயின வுடைமை. (கூ)

எடுo. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்ல தரண்.*

(இ - ள்.) அரண் - அரண்; எனைமாட்சித்து ஆகியக்கண்ணும் - மேற்சொல்லப்பட்ட மாட்சியெல்லா முடைத்தாய இடத்தும்; வினைமாட்சி இல்லார்கண் இல்லது - வினைசெய்தற்கண் மாட்சி யில்லாதார்மாட்டு அவை யிலதாம்.

வாளாவிருத்தலும் அளவறியாதுசெய்தலும் ஏலாதது செய்தலுமெல்லாம் அடங்க வினைமாட்சி யில்லா ரென்றும், ஏற்ற வினையை அளவறிந்துசெய்து காவாக்கால் அம்மாட்சிகளாற்பயனின்றியழியுமென்பார் அவையுடைத் தன்றென்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானுங் காப்பாரையின்றி யமையா தென்பது கூறப்பட்டது.

---

## அதி. எசு—பொருள்செயல்வகை

[இனிப் பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவுங் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.]

* 'இல்லை யரண்' என்பது மணக்குடவர்.

௭௫௧. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(இ - ள்.) பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொரு ளல்லது - ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் படுவா ராகச் செய்யவல்ல பொருளை யொழிய; பொருள் இல்லை - ஒரு வனுக்குப் பொருளாவதில்லை.

மதிக்கப்படாதார் அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவுசிறப் பும்மைவிகாரத்தால்தொக்கது. மதிக்கப்படுவாராகச் செய்தல்அறி வுடையாரும் உயர்குலத்தாரும் அவர்பாற் சென்று நிற்கப்பண்ணு தல். அதனால் ஈட்டப்படுவது அதுவே,பிறிதில்லையென்பதாம். (க)

௭௫௨ *இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு.

(இ - ள்.) இல்லாரை எல்லாரும் எள்ளுவர் - எல்லா நன் மையு முடையராயினும் பொருளில்லாரை யாவரு மிகழ்வர்; செல் வரை எல்லாரும் சிறப்புச் செய்வர் - எல்லாத் தீமையு முடையரா யினும் அஃதுடையாரை யாவரும் உயரச் செய்வர்.

உயரச்செய்தல்: தாந் தாழ்ந்துநிற்றல். இகழ்தற்கண்ணுந் தாழ்தற்கண்ணும் பகைவர், நட்டார், நொதுமல ரென்னும் மூவ கையாரு மொத்தலின், யாவரு மென்றார். பின்னுங் கூறியது அதனை வலியுறுத்தற்பொருட்டு. (உ)

௭௫௩. பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று.

(இ - ள்.) பொருள் என்னும் பொய்யா விளக்கம் - பொரு ளென்று எல்லாரானுஞ் சிறப்பிக்கப்படும்நந்தா விளக்கு; எண்ணிய தேயத்துச்சென்று இருள் அறுக்கும்-தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைத்த தேயத்துச்சென்று பகை யென்னும் இருளைக் கெடுக்கும்.

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல் பற்றிப் 'பொய்யா விளக்க' மென்றும், ஏனை விளக்கோடு இதனிடை வேற்றுமை தோன்ற 'எண்ணிய தேயத்துச் சென்' றென்றுங் கூறினார். ஏகதேச உருவகம். இவை மூன்று பாட் டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது. (ங)

௭௫௪. அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

* நல்வழி-௩௪.

(இ - ள்.) திறன் அறிந்து தீது இன்றி வந்தபொருள் - செய்யுந் திறத்தினை யறிந்து அரசன் கொடுங்கோன்மை இலனாக உளதாய பொருள்; அறன் ஈனும் இன்பமும் ஈனும் - அவனுக்கு அறத்தையுங் கொடுக்கும், இன்பத்தையுங் கொடுக்கும்.

செய்யுந் திறம்: தான் பொருள் செய்தற்குரிய நெறி. இலனாக என்பது இன்றியெனத் திரிந்து நின்றது. செங்கோலனென்று புகழப்படுதலானும் கடவுட்பூசை தானங்களாற் பயனெய்தலானும் 'அறனீனு'மென்றும், நெடுங்காலம் நின்று துய்க்கப்படுதலான் 'இன்பமு மீனு' மென்றுங் கூறினார். அதனான் அத்திறத்தான் ஈட்டுகவென்பதாம். (௪)

௭௫௫. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

(இ - ள்.) அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம் - தாங் குடிகள்மாட்டுச் செய்யும் அருளோடும் அவர் தம்மாட்டுச் செய்யும் அன்போடுங் கூடி வாராத பொருளீட்டத்தை; புல்லார் புரளவிடல் - அரசர் பொருந்தாது கழியவிடுக.

அவற்றோடு கூடி வருதலாவது ஆறிலொன்றாய் வருதல். அவ்வாறு வாராத பொருளீட்டம் 'பசுமட் கலத்துணீர்'† போலச் செய்தானையுங்கொண் டிறத்தலின், அதனைப் 'புல்லா'ரென்றொழியாது 'புரளவிட' லென்றுங் கூறினார். (௫)

௭௫௬. உறுபொருளும் உல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

(இ - ள்.) உறு பொருளும் - உடையாரின்மையின் தானே வந்துற்ற பொருளும்; உல்கு பொருளும் - சுங்கமாகிய பொருளும்; தன் ஒன்னார்த் தெறு பொருளும் - தன் பகைவரைத் திறையாகக்கொள்ளும் பொருளும்; வேந்தன் பொருள் - அரசனுக்குரிய பொருள்கள்.

'உறுபொருள்', வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுததூஉமாம். சுங்கம், கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட் கிறையாயது. 'தெறு பொருள்', தெறுதலால் வரும் பொருளென விரியும். ஆறிலொன்றொழியவும் உரியன கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் அஃதீட்டுநெறி கூறப்பட்டது. (௬)

---

* ௨௬ ஆம் குறள் உரை. † குறள் - ௬௬0.

எ௬எ. அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு.

(இ - ள்.) அன்பு ஈன் அருள் என்னும் குழவி - அன்பினால் ஈனப்பட்ட அருளென்னுங் குழவி; பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு - பொருளென்று உயர்த்துச் சொல்லப் படுஞ் செல்வத்தையுடைய செவிலியான் வளரும்.

தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார்மேற் செல்வதாய அருள் தொடர்புபற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்துழி உளதாவ தாகலின் அதனை 'அன்பீன் குழவி' யென்றும், அது வறியார்மேற் செல்வது அவ்வறுமை களைய வல்லார்க்காதலிற் பொருளை அதற்குச் 'செவிலி' யென்றும், அஃது உலகிற் செவிலியர் போலாது, தானே யெல் லாப் பொருளும் உதவி வளர்த்தலிற் 'செல்வச்செவிலி' யென்றுங் கூறினார். (எ)

எ௬அ. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

(இ - ள்.) தன் கைத்து உண்டாக ஒன்று செய்வான் வினை - தன் கையதாகிய பொருளுண்டாக ஒரு வினையை யெடுத்துக் கொண்டான் அதனைச் செய்தல்; குன்று ஏறி யானைப்போர் கண் டற்று - ஒருவன் மலைமேலேறி நின்று யானைப்போரைக் கண்டா லொக்கும்.

'ஒன்'றென்பது வினையாதல் 'செய்வா' னென்றதனாற் பெற் றாம். குன்றேறியான் அச்சமும் வருத்தமும் இன்றி நிலத்திடை யானையும் யானையும் பொருபோரைத் தானினிதிருந்து காணுமது போலக், கைத்துண்டாக வினையை மேற்கொண்டானும் அச்சமும் வருத்தமுமின்றி வல்லாரை யேவித் தானினிதிருந்து முடிக்கு மென்பதாம். (அ)

எ௬௯. *செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.

(இ - ள்.) பொருளைச் செய்க-தமக்கொன்றுண்டாகக் கருது வார் பொருளை உண்டாக்குக; செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு- தம் பகைவர் தருக்கினையறுக்கும் படைக்கலம் அதுவாம்; அதனிற் கூரியது இல் - அதற்கதுபோலக் கூரிய படைக்கலம் பிறிதில்லை.

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையா ரிலம்பகம் - ௫.

அதுவாம், அதற்கென்பன அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே பெரும்படையும் நட்புமுடைய ராவர்; ஆகவே, பகைவர் தருக்கொழிந்து தாமே அடங்குவரென்பார் 'செறுநர் செருக்கறுக்கும் எஃ' கென்றும், ஏனை எஃகுகள் அதுபோல அருவப் பொருளை அறுக்கமாட்டாமையின் 'அதனிற் கூரிய தில்' என்றுங் கூறினர். (௯)

௭௬௦. ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு.

(இ-ள்.) ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு - நெறியான் வரும் பொருளை இறப்ப மிகப் படைத்தார்க்கு; ஏனை இரண்டும் ஒருங்கு எண் பொருள் - மற்றை அறனும் இன்பமும் ஒருங்கே எளிய பொருள்களாம்.

'காழ்'த்தல் - முதிர்தல். பயன் கொடுத்தல்லது போகாமையின் 'ஒண்பொரு' ளென்றும், ஏனை யிரண்டும் அதன் விளைவாகலின் தாமே ஒரு காலத்திலே உளவா மென்பார் 'எண்பொரு' ளென்றுங் கூறினர். இவை நான்கு பாட்டானும் அதனான்வரும் பயன் கூறப்பட்டது. (௰)

---

## அதி. ௭௭—படைமாட்சி

[இனி, அப்பொருளினான் ஆவதாய் வெல்வதாய படை இரண்டதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் படைமாட்சி கூறுகின்றார். அஃதாவது படையினது நன்மை.]

௭௬௧. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை.

(இ-ள்.) உறுப்பு ஆமைந்து ஊறு அஞ்சா வெல் படை - யானை முதலிய நான்குறுப்பானும் நிறைந்து போரின்கண் ஊறுபடுதற் கஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை; வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை - அரசன் செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம்.

ஈண்டுப் 'படை'யென்றது அந்நான்கன் தொகுதியை. ஊறஞ்சியவழி வேறல் கூடாமையின் 'ஊறஞ்சா'வென்றும், ஒழிந்த அங்

கங்கட்கும் அரசன் தனக்குங் காவலாகலின் 'வெறுக்கையு ளெல்லாந் தலை' யென்றுங் கூறினார். (௧)

எ௬௨. உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது.

(இ - ள்.) தொலை விடத்து உலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண் - தான் சிறியதாய வழியும் அரசற்குப் போரின்கண் உலைவு வந்தால் தன்மே லுறுவதற் கஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை; தொல் படைக் கல்லால் அரிது-அவன் முன்னோரைத் தொடங்கி வரும் படைக்கல்லது உளதாகாது.

இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை யென்னும் அறுவகைப் படையுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படையாகலான், அதனை அரசன் "வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தண்ணடையுங்-கொல்களிறு மாவுங் கொடுத்தளிக்க"* என்பது குறிப்பெச்சம். இப்படையை வடநூலார் மௌல மென்ப.

எ௬௩. ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.

(இ - ள்.) எலிப் பகை உவரி ஒலித்தக்கால் என்னும் - எலியாய பகை திரண்டு கடல்போல ஒலித்தால் நாகத்திற்கு என்ன ஏதம் வரும்; நாகம் உயிர்ப்பக் கெடும்-அந் நாகம் உயிர்த்த துணையானே அது தானே கெடும்.

உவமைச்சொல் தொக்கு நின்றது. இத்தொழி லுவமத்தால் திரட்சி பெற்றும். வீரரல்லாதார் பலர் திரண்டார்த்தால் அதற்கு வீர னஞ்சான்; அவன் கிளர்ந்த துணையானே அவர்தாங் கெடுவ ரென்பது தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழித லென்னும் அலங்காரம். வீரரல்லாதார் பலரினும் வீரனொருவனே யாடல் நன்றென்பதாம். இவை மூன்று பாட்டானும் முறையே அரசனுக்குப் படை ஏனை அங்கங்களுட் சிறந்ததென்பதூஉம், அது தன்னுள்ளும் மூலப்படை சிறந்ததென்பதூஉம், அது தன்னுள்ளும் வீரன் சிறந்தான் என்பதூஉம் கூறப்பட்டன. (௩)

எ௬௪. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

---

* புறப்பொருள் வெண்பாமாலை, தும்பை - ௨

(இ - ள்.) அழிவு இன்று - போரின்கட் கெடுதலின்றி; அறை போகாதாகி - பகைவராற் கீழறுக்கப்படாததாய்; வழிவந்த வன்கணதுவே படை - தொன்றுதொட்டு வந்த தறுகண்மையை யுடையதே அரசனுக்குப் படையாவது.

அழிவின்மை'யான் மறமானங்கள் உடைமையும், 'அறை போகாமை'யான் அரசன்மாட் டன்புடைமையும் பெறப்பட்டன. 'வழிவந்த வன்கண்மை' "கன்னின்ற னெந்தை கணவன் களப் பட்டான், முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று; கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி, எய்போற் கிடந்தானென் ஏறு" * என்பதனு னறிக. குற்றியலுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான் வந்தது. இது வருகின்ற பாட்டுள்ளும் ஒக்கும். (௪)

எ௬௫. கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

(இ - ள்.) கூற்று உடன்று மேல்வரினும் - கூற்றுவன் தானே வெகுண்டு மேல்வந்தாலும்; கூடி எதிர் நிற்கும் ஆற்ற லதுவே படை - நெஞ்சொத்து எதிர்நின்று தாங்கும் ஆற்றலை யுடையதே படையாவது.

மருந்தில் கூற்றுகலின் † உம்மை சிறப்பும்மை. மிகப்பலர் நெஞ்சொத்தற்குக் காரணம் அரசன்மே லன்பு. 'ஆற்றல்' — மன வலி. (௫)

எ௬௬. மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு.

(இ - ள்.) மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே - தறுகண்மையும் மானமும் முன் வீரராயினர் சென்ற நன்னெறிக்கண் சேறலும் அரசனல் தேறப்படுதலும் என இந் நான்கு குணமுமே; படைக்கு ஏமம் - படைக்கு அரணாவது.

இவற்றான் முறையே பகைவரைக் கடிதிற் கொன்று நிற்றலும், அரசனுக்குத் தாழ்வு வாராமற் காத்தலும், "அழியுநர் புறக் கொடை அயில்வா ளோச்சா" ‡ மை முதலியவும், அறைபோகா மையுமாகிய செய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கையார்க்குப் பகைவர் நணுகாராகலின், வேறரண் வேண்டா என்பதாம். (௬)

* புறப்பொருள் வெண்பாமாலை, வாகை - உஉ.

† புறநானூறு, ௩.

‡ புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சி - உ0.

எகூஎ. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை அறிந்து.

(இ - ள்.) தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து-மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல் வந்த படையின் போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக்கொண்டு; தார் தாங்கிச் செல்வது தானை - அவர் தூசியைத் தன்மேல் வாராமல் தடுத்துத் தான் அதன்மேற் செல்வதே படையாவது.

படை வகுப்பாவது வியூகம்; அஃது எழுவகை உறுப்பிற்றாய், வகையான் நான்காய், விரியான் முப்பதாம். உறுப்பேழாவன, உர முதற்கோடி யீறாயின. வகை நான்காவன : தண்டம், மண்டலம், அசங்கதம், போக மென இவை. விரி முப்பதாவன: தண்ட விரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரி ஆறும், போகவிரி ஐந்துமென இவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற் பெருகும்; அவையெல்லாம் வடநூல்களுட் கண்டுகொள்க. இவை நான்கு பாட்டானும் படையின திலக்கணங் கூறப்பட்டது. (எ)

எகூஅ. அடல்தகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும்.

(இ - ள்.) தானை - தானை ; அடல்தகையும் ஆற்றலும் இல் எனினும் - பகைமேல் தான் சென்றடுந் தறுகண்மையும் அது தன் மேல் வந்தாற் பொறுக்குமாற்றலும் இல்லையாயினும்; படைத் தகையால் பாடு பெறும் - தன் தோற்றப் பொலிவானே பெருமை யெய்தும்.

'இல்லெனினு'மெனவே, அவற்ற தின்றியமையாமை பெறப் பட்டது. 'படைத்தகை' யென்றது ஒரு பெயர் மாத்திரமாய் நின்றது. தோற்றப் பொலிவாவது: அலங்கரிக்கப்பட்ட தேர் யானை குதிரைகளுடனும், பதாகை கொடி குடை பல்லியம் காகளம் முதலியவற்றுடனும் அணிந்து தோன்றும் அழகு. 'பாடு' கண்ட அளவிலே பகைவரஞ்சும் பெருமை. (அ)

எகூகூ. சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை.

(இ - ள்.) சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் இல்லாயின்-தான் தேய்ந்து சிறிதாகலும் மனத்தினின்று நீங்காத

வெறுப்பும் நல்குரவும் தனக்கில்லையாயின்; படைவெல்லும்-படை பகையை வெல்லும்.

விட்டுப்போதலும், நின்றது நல்கூர்தலும் அரசன் பொருள் கொடாமையான் வருவன. 'செல்லாத் துனி'யாவது: மகளிரை வெளவல், இளிவரவாயின செய்தல் முதலியவற்ருன் வருவது. இவை உள்வழி அவன்மாட் டன்பின்றி உற்றுப் பொராமையின், 'இல்லாயின் வெல்லு' மென்ருர். (க)

எஎ௦. நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்.

(இ-ள்.) நிலைமக்கள் சால உடைத்து எனினும் - போரின் கண் நிலையுடைய வீரரை மிக வுடைத்தேயாயினும்; தலைமக்கள் இல்வழித் தானை இல் - தனக்குத் தலைவராகிய வீரர் இல்லாத வழித் தானை நில்லாது.

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயிற் காண்போரில் லெனப் பொராது தானும்போ மென்பார், 'தலை மக்களில் வழி யில்' லென்ருர். இவை மூன்று பாட்டானும் முறையே படைத்தகையின்மையானும், அரசன் கொடைத் தாழ்வுகளானும் தலைவரின்மையானும், தாழ்வு கூறப்பட்டது. (க௦)

---

## அதி. எஅ—படைச்செருக்கு

[அஃதாவது, அப் படையது மறமிகுதி. அதிகார முறைமையும் இதனுனே விளங்கும்.]

எஎக. என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர்.

(இ-ள்.) தெவ்விர் என் ஐ முன் நின்று கல் நின்றவர் பலர்-பகைவீர்! இன்றினூஉங் கென் தலைவனெதிர் போரேற்று நின்று அவன் வேல்வாய் வீழ்ந்தி பின் கல்லின் கண்ணே நின்ற வீரர் பலர்; என் ஐ முன் நில்லன்மின் - நீவிர் அதன்கணின்றி நும் முடற்கணிற்றல்வேண்டின், என் தலைவனெதிர் போரேற்று நிற்றலை யொழிமின்.

'என்னை' யெனத் தன்னெடு தொடர்புபடுத்துக் கூறினமையின், அவன் வேல்வாய் வீழ்தல் பெற்ரும். கல்: நடுகல்.*

* தொல். பொருள். புறம் - ரு.

'நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சி லல்லால், அம்பொன் முடிப்பூண் அரசும் மிலை' * எனப் பதுமுகன் கூறினாற்போல, ஒரு வீரன் தன் மறம் அரசன்மேல் வைத்துக் கூறியவாறு. இப்பாட்டு நெடுமொழி வஞ்சி †. (க)

எ௭௨. கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.

(இ - ள்.) கான முயல் எய்த அம்பினில் - கானத்தின்கணோடும் முயலைப் பிழையாம லெய்த அம்பை யேந்தலினும்; யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது - வெள்ளிடை நின்ற யானையை யெறிந்து பிழைத்த வேலை யேந்துதல் நன்று.

'கானமுய' லென்றதனால் வெள்ளிடை நின்ற வென்பதும், 'பிழைத்த' வென்றதனாற் பிழையாம லென்பதும், முயற்குத் தக 'எய்த' வென்றதனான் யானைக்குத் தக எறிதலும் வருவிக்கப்பட்டன. இது மாற்றரசன் படையொடு பொருதானொரு வீரன், அது புறங் கொடுத்ததாக நாணிப் பின் னவன்றன்மேற் செல்லலுற்றானது கூற்று. (உ)

எ௭௩. பேராண்மை என்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

(இ - ள்.) தறுகண் பேராண்மை என்ப - பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்க ஆண்டன்மையென்று சொல்லுவர்; ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃகு (என்ப)-அவர்க்கு ஒரு தாழ்வு வந்ததாயிற் கண்ணோடி அது தீர்த்துக் கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மை யென்று சொல்லுவர்.

'என்ப' வென்பது பின்னும் இயைந்தது. 'ஊராண்மை' உபகாரியாந் தன்மை; அஃதாவது, இலங்கையர் வேந்தன் போரிடைத் தன்றானை முழுதும்படத் தமியனா யகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது "இன்று போய் நாளை நின் றானையோடுவா" வென விட்டாற்போல்வது. இவை இரண்டு பாட்டுந் தழிஞ்சி. ‡ (௩)

எ௭௪. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையா ரிலம்பகம் - ௩௭.
† புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சி - கஉ.
‡ புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சி - ௩.

(இ - ள்.) கைவேல் களிற்றெடு போக்கி வருபவன் - தன் கைப் படையாய வேலைத் தன்மேல் வந்த களிற்றேடு போக்கி, வருகின்ற களிற்றுக்கு வேல்நாடித் திரிவான்; மெய் வேல் பறியா நகும் - தன் மார்பின்க ணின்ற வேலைக் கண்டு பறித்து மகிழும்.

களிற்றெடு போக்கல்: களிற்றின துயிரைக் கொடுபோமாறு விடுதல். மகிழ்ச்சி, தேடிய தெய்தலான். இதனுட் களிற்றையல்ல தெறியானென்பதூஉம், சினமிகுதியான் வேலிடை போந்த தறிந் திலனென்பதூஉம், பின்னும் போர்மேல் விருப்பின னென் பதூஉம் பெறப்பட்டன. நூழிலாட்டு.*　　　　　　　　(ச)

எஎரு. விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றே வன்க ணவர்க்கு.

(இ - ள்.) விழித்த கண் - பகைவரை வெகுண்டு நோக்கிய கண்; வேல்கொண்டு எறிய அழித்து இமைப்பின் - அவர் வேலைக் கொண்டெறிய அஃதாற்ருது அந்நோக்கை யழித்து இமைக்குமாயின்; வன்கணவர்க்கு ஓட்டு அன்றே - அது வீரர்க்குப் புறங் கொடுத்தலாம்.

அவ் வெகுளிநோக்க மீட்டலும் போரின்கண் மீட்சியெனக் கருதி அதுவுஞ் செய்யா ரென்பதாம்.　　　　　　　　(ரு)

எஎசு. விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை எடுத்து.

(இ - ள்.) தன் நாளை எடுத்து - தனக்குச் சென்ற நாள்களை யெடுத்தெண்ணி, விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள் வைக்கும் - அவற்றுள் விழுப்புண் படாத நாள்களை யெல்லாம் பயன் படாது கழிந்த நாளுள்ளே வைக்கும் வீரன்.

'விழுப்புண்'-முகத்தினும் மார்பினும் பட்ட புண். போர் பெற்றிருக்கவும் அது பெருத நாள்களோடுங் கூட்டு மென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஊறஞ்சாமை கூறப்பட்டது.　　　　(சு)

எஎஎ. சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(இ - ள்.) சுழலும் இசை வேண்டி வேண்டா உயிரார் - துறக்கத்துத் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும்

* புறப்பொருள் வெண்பாமாலை, தும்பை - கசு.

புகழை வேண்டி உயிர் வாழ்தலை வேண்டாத வீரர்; கழல்யாப்புக் காரிகை நீர்த்து-கழல் கட்டுதல் அலங்கார நீர்மையை உடைத்து.

வையத்தைச் சூழுமெனவே, அதன் பெருமை பெற்றும். செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல்: அகத்திடல். துறக்கமும் புகழும் எளிதி னெய்துவ ராகலின், ஆபரணமாவது அதுவே யென்பதாம். (எ)

எஎஅ. உறினுயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினுஞ்சீர் குன்றல் இலர்.

(இ - ள்.) உறின் உயிர் அஞ்சா மறவர் - போர் பெறின் தம் உயிர்ப்பொருட் டஞ்சாது அதன்மேற் செல்லும் வீரர்; இறைவன் செறினும் சீர் குன்றல் இலர் - தம்மிறைவன் அது வேண்டா வென்று முனியினும் அவ்வீரமிகுதி குன்றார்.

போர் பெற்றறியாமையின், அது பெற்றால் அரசன் தடுப்பினும் நில்லாரென்பதாம். பிறரும், "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்"* என்றும், "புட்பகைக்-கேவானாகலிற் சாவேம் யாமென, நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப"† என்றுங் கூறினார். (அ)

எஎகூ. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

(இ - ள்.) இழைத்தது இகவாமைச் சாவாரை-தாங் கூறின வஞ்சினந் தப்பாமற் பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை; பிழைத்தது ஒறுக்கிற்பவர் யார் - அது தப்பியவாறு சொல்லி எள்ளுதற்குரியார் யாவர்?

'இழைத்தல்': இன்னது செய்யேனாயின் இன்னன் ஆகுக எனத் தான் வகுத்தல். சொல்லியென்பது அவாய்நிலையான் வந்தது. வஞ்சின முடிப்பான்புக்கு முன்னே சாவினுந் தொலை வன்மையின், அது முடித்தாராவரெனச் சாதற்சிறப்புக்கூறியவாறு.

எஅ௦. புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

(இ - ள்.) புரந்தார் கண் நீர் மல்கச் சாகிற்பின்-தமக்குச் செய்த நன்றிகளை நினைந்து ஆண்ட வரசர் கண்கள் நீர் மல்கும் வகை போரிடைச் சாவப்பெறின்; சாக்காடு இரந்து கோட்டக்கது உடைத்து - அச் சாக்காடு இரந்தாயினும் கொள்ளுந் தகுதியை யுடைத்து.

* புறநானூறு, ௩௧. † புறநானூறு, ௬௮.

மல்குதலாகிய இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மே னின்றது. கிளையழ இல்லிடை நோயால் விளிவார் பழவினைப் பயனே யெய்தலின், அடுத்த வினையால் துறக்கமெய்துஞ் சாதலை 'இரந்துகோட் டக்கதுடைத்'தென்றார். இவை நான்கு பாட்டானும் உயிரோம்பாமை கூறப்பட்டது. (கO)

---

## அதி. எகூ—நட்பு

[இனி, அப்படைபோல அரசனுக்கு வினையிடத் துதவுவதாய நட்பினை ஐந்ததிகாரம் விதிமுகத்தானும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறை முகத்தானுங் கூறுவான் தொடங்கி, விதிமுகஅதிகாரம் ஐந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.]

எஅக. செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
　　வினைக்கரிய யாவுள காப்பு.

(இ - ள்.) நட்பின் செயற்கரிய யா உள - நட்புப் போலச் செய்துகோடற் கரிய பொருள்கள் யாவை யுள?; அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள - செய்துகொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரிய காவலாவன யாவை யுள?

நட்புச் செய்தற் காவாரைப் பெறுதலும், பெற்றாற் செய்யும் உபாயமும், செய்தால் திரிபின்றி நிற்றலும் முதலிய அரியவாகலின் நட்பிற் செயற்கரியன இல்லையென்றும்; செய்தாற் பகைவ ரஞ்சி வினை தொடங்காராகலின், அதுபோல வினை வாராமைக்கு அரிய காவலில்லையென்றுங் கூறினார். நட்புத்தான் இயற்கை செயற்கை யென இருவகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்பு முறையானுயதூஉம், தேய முறையானுயதூஉம் என இருவகைப்படும். அவற்றுள் முன்னையது சுற்றமாகலின், அது சுற்றந்தாழலின்* அடங்கிற்று; ஏனையது பகையிடையிட்ட தேயத்ததாகலின், அது துணைவலி யென வலியறிதலுள்† அடங்கிற்று. இனி, ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த உதவிபற்றி வருஞ் செயற்கையேயாகலின், அதன் சிறப்பு இதனாற் கூறப்பட்டது. (க)

எஅஉ. ‡நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
　　பின்னீர பேதையார் நட்பு.

---

*குறள், அதி-ருக. †குறள், அதி-சஅ. ‡நாலடியார், கஉரு.

(இ - ள்.) நீரவர்கேண்மை பிறை நிறை நீர-அறிவுடையார் நட்புக்கள் பிறை நிறையுந் தன்மைபோல நாடோறும் நிறையுந் தன்மையவாம்; பேதையார் நட்பு மதிப் பின் நீர - மற்றைப் பேதைமையுடையார் நட்புக்கள் நிறைந்த மதி பின் குறையுந் தன்மை போல நாடோறுங் குறையுந் தன்மையவாம்.

'நீரவ' ரென்றார், இனிமைபற்றி. 'கேண்மை' 'நட்'பென்பன ஒருபொருட்கிளவி. செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன் சுருங்கிப் பின் பெருகற்கும், பேதையாரும் பேதையாருஞ் செய்தன முன் பெருகிப் பின் சுருங்கற்குங் காரணம் தம்முள் முன்னறியாமையும் பின்னறிதலுமாம். (உ)

எஅங. நவில்தொறும் நூனயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

(இ - ள்.) பண்பு உடையாளர் தொடர்பு பயில்தொறும்-நற்குணமுடைய மக்கள் தம்முட் செய்த நட்புப் பயிலுந்தோறும் அவர்க்கின்பஞ்செய்தல்; நூல் நவில்தொறும் நயம்போலும் - நற்பொருள் கற்குந்தோறுங் கற்றார்க் கின்பஞ் செய்தலை யொக்கும்.

நயத்தினைச் செய்தலான், 'நய' மெனப்பட்டது. இருமையினும் ஒருகாலைக் கொருகால் மிகு மென்பதாம். இவை இரண்டு பாட்டானும் அச் சிறப்பிற் கேது கூறப்பட்டது. (௩)

எஅச. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(இ - ள்.) நட்டல் நகுதற் பொருட் டன்று - ஒருவனோ டொருவன் நட்புச்செய்தல் தம்முள் நகுதற்கியைந்தன சொல்லி நகையாடற் பொருட் டன்று; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு - அவர்க்கு வேண்டாத செய்கை உளதாயவழி முற்பட்டுக் கழறுதற் பொருட்டு.

பழியும் பாவமுந் தருஞ் செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவ தன்மையின் அதனை 'மிகுதி' யென்றும், அது செய்தற்கு முன்னே மீட்டல் வேண்டுதலின் 'மேற்சென்' றென்றும், இன்சொற்கு மீளாமையின் 'இடித்தற் பொருட்' டென்றுங் கூறினார். இதனால் நட்பின் பயன் கூறப்பட்டது. (௪)

எஅரு. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.

(இ - ள்.) புணர்ச்சி பழகுதல் வேண்டா-ஒருவனேடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை; உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்-இருவர்க்கும் ஒத்த உணர்ச்சிதானே நட்பாம் உரிமையைக் கொடுக்கும்.

'புணர்ச்சி': ஒரு தேயத்தாராதல்; "இன்றே போல்க நும் புணர்ச்சி"* என்றதும் அதனை. 'பழகுதல்' பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டு மின்றிக் கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சி யொப்பின், அதுவே உடனுயிர் நீங்கு முரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம்.† நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி யொத்த லென்னுங் காரண மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்தென்பது இதனாற் கூறப்பட்டது. (ரு)

எஅகூ. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(இ - ள்.) முகம் நக நட்பது நட்பு அன்று-கண்டவழி அகமொழிய, முகமாத்திரமே மலரும் வகை நட்குமது நட்பாகாது; நெஞ்சத் தகம்நக நட்பது நட்பு-அன்பால் அகமு மலர நட்குமதே நட்பாவது.

நெஞ்சின்கண் நிகழ்வதனை நெஞ்சென்றார். இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. இதனால் இரண்டும் ஒருங்கே மலரவேண்டுமென்பது பெற்றாம். (கூ)

எஅஎ. அழிவி னவைநீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு.

(இ - ள்.) அழிவினவை நீக்கி ஆறு உய்த்து - கேட்டினைத் தருந் தீநெறிகளைச் செல்லுங்கால் விலக்கி, ஏனைய நன்னெறிகளைச் செல்லாக்காற் செலுத்தி; அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பாம்-தெய்வத்தாற் கேடு வந்துழி அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது.

ஆறென வருகின்றமையின், அழிவினைத் தருமவையென்றொழிந்தார். "தெருண்ட அறிவி னவர்"‡ என்புழிப்போல இன்சாரியை நிற்க இரண்டனுருபு தொக்கது. இனி நவை யென்று பாடமோதி, அதற்குப் போரழிவினுஞ் செல்வ அழிவினும் வந்த

* புறநானூறு, ருஅ † புறநானூறு, உகஎ.

‡ நாலடியார், கூ0க.

துன்பங்க ளென்றும், 'அழிவின்க' ணென்பதற்கு யாக்கை அழி வின்கண் என்றும் உரைப்பாரு முளர். (எ)

எஅஅ. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

(இ - ள்.) உடுக்கை இழந்தவன் கைபோல - அவையிடை ஆடை குலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென் றுதவி அவ்விளி வரல் களையுமாறு போல; ஆங்கே இடுக்கண் களைவது நட்பாம் - நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அத னைக் களைவதே நட்பாவது.

அற்றங்காத்தற்கட் கை தன் மனத்தினும் முற்படுதலின், அவ் விரைவு இடுக்கண்களைவுழியும் அதற்கொத்த தொழிலுவமையினும் வருவிக்க. உடையவன்தொழில் நட்பின்மேல் ஏற்றப்பட்டது. (அ)

எஅகூ. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.

(இ - ள்.) நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின்-நட்பினுக்கு அரசிருக்கை யாதெனின்; கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை-அஃது எஞ்ஞான்றும் திரிபின்றி இயலு மெல்லையெல்லாம் அறம் பொருள்களில் தளராமைத் தாங்குந் திண்மை.

ஒரு ஞான்றும் வேறுபடாது மறுமை இம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களில் தளர்ந்துழி அத்தளர்ச்சி நீக்கி அவற்றின் கண் நிறுத்துதற்கு மேல் ஒரு செயலு மின்மையின், அதனை நட் பிற்கு முடிந்த எல்லை யென்றார். (கூ)

எகூ0. இனையர் இவரெமக் கின்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.

(இ - ள்.) இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும் - இவர் நமக்கித்துணை அன்பினர், யாமிவர்க் கித்தன் மையமென்று ஒருவரை ஒருவர் புனைந்து சொல்லினும்; நட்புப் புல்லென்னும்-நட்புப் புல்லிதாய்த் தோன்றும்.

இவர்க்கென்பது வருவிக்கப்பட்டது. தாம் அவரென்னும் வேற்றுமையின்றி வைத்துப் புனைந் துரைப்பினும் வேற்றுமை உண்டாமாகலின், நட்புப் 'புல்லென்னு' மென்றார். இவை ஐந்து பாட்டானும் நட்பின திலக்கணங் கூறப்பட்டது. (க0)

# அதி. அ௦—நட்பாராய்தல்

[அஃதாவது, மேற்சொல்லிய இலக்கணத்தாரை ஆராய்ந்தறிந்தே நட்க வேண்டுதலின், அவரை ஆராயுந் திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

எகூக. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(இ - ள்.) நட்பு ஆள்பவருக்கு நட்டபின் வீடுஇல்லை-நட்பினை விரும்பி அதன் கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச் செய்த பின் அவனை விடுத லுண்டாகாது; நாடாது நட்டலிற் கேடு இல்லை - ஆகலான்; ஆராயாது நட்புச் செய்தல் போலக் கேடு தருவது பிறிதில்லை.

ஆராய்தல்: குணஞ் செய்கைகளது நன்மையை ஆராய்தல். 'கேடு' ஆகுபெயர். நட்கின் தா மவ ரென்னும் வேற்றுமையின்மை யின் 'வீடில்லை'யென்றும், அவ் வேற்றுமையின்மையான் அவன் கட் பழி பாவங்கள் தமவா மாகலின் இருமையுங் கெடுவரென்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' யென்றுங் கூறினார். (க)

எகூஉ. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும்.

(இ - ள்.) ஆய்ந்து ஆய்ந்து கேண்மைகொள்ளாதான் - குண முஞ் செய்கையும் நல்லனென்பது பலகாலும் பலவாற்றானும் ஆராய்ந்து ஒருவனோடு நட்புக்கொள்ளாதவன்; கடைமுறை தான், சாம் துயரம் தரும்-முடிவில் தான் சாதற்கேதுவாய துன்பத் தினைத் தன் மாற்றார் விளைக்கவேண்டாமல் தானே விளைக்கும்,

கடைமுறைக் கண்ணென இறுதிக்கண் தொக்க ஏழாவது விரிக்க. குணமுஞ் செயலுந் தீயானோடு கொள்ளின் அவற்கு வரும் பகையை யெல்லாந் தன்மேலவாய்ப் பின் அவற்றான் இறந்து விடுமென்பதாம். இவை இரண்டு பாட்டானும் ஆராயாவழிப் படும் இழுக்குக் கூறப்பட்டது. (உ)

எகூங. குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.

(இ - ள்.) குணனுங் குடிமையுங் குற்றமும் குன்றா இனனும் அறிந்து - ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்

தினையும் குறைவற்ற சுற்றத்தினையும் ஆராய்ந்தறிந்து; நட்பு யாக்க - அவனோடு நட்புச் செய்க.

குற்றமில்லாதார் உலகத் தின்மையின் உள்ளது பொறுக்கப் படுவதாயின் அவர் நட்பு விடற்பாற் றன்றென்பார் 'குற்றமு' மென்றும், சுற்றப்பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருதலிற் 'குன்று வினனு' மென்றும், விடப்படின் தங் குறையா மென்பார் 'அறிந்தியாக்க' என்றுங் கூறினர். (௩)

௭௯௪. குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டும் நட்பு.

(இ - ள்.) குடிப்பிறந்து தன்கண் பழி நாணுவானை-உயர்ந்த குடியின்கண் பிறந்து தன்மாட்டு உலகர் சொல்லும் பழிக் கஞ்சு வானை; கொடுத்தும் நட்புக் கொளல் வேண்டும் - சில கொடுத்தா யினும் நட்புக்கோடல் சிறந்தது.

குடிப்பிறப்பால் தான் பிழைசெய்யாமையும், பழிக்கஞ்சலாற் பிழைத்தன பொறுத்தலும் பெற்றும். இவை இரண்டு முடை யானைப் பெறுதல் அருமையின், அவன் நட்பை விலைகொடுத் தும் கொள்க என்பதாம். (௪)

௭௯௫ அழச்சொல்லி அல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(இ - ள்) அல்லது அழச்சொல்லி-தாம் உலக வழக்கல்லது செய்யக் கருதிற் சோகம் பிறக்கும் வகைசொல்லி விலக்கியும்; இடித்து-செய்தக்காற் பின்னுஞ்செய்யாவகை நெருக்கியும்; வழக்கு அறிய வல்லார் - அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல் லாரை; ஆய்ந்து நட்புக் கொளல்-ஆராய்ந்து நட்புக்கொள்க.

'அழச்சொல்லி' 'இடித்'தென வந்த பரிகார வினைகளான் அவற்றிற்கேற்ற குற்ற வினைகள் வருவிக்கப்பட்டன. 'வழக்கு' உலகத்தார் அடிப்படச் செய்துபோந்த செயல். தம்மோடு நட்டா ரும் அறியும் வகை அறிவித்தல் அரிதாகலின், 'அறியவல்லா' ரென்றார். இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. (௫)

௭௯௬. கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.

(இ - ள்.) கிளைஞரை நீட்டி அளப்பது ஓர் கோல் - ஒருவ னுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய புலன்களை யெஞ்சாம

லளப்பதொரு கோல்; கேட்டினும் ஓர் உறுதி உண்டு - ஆகலின் அதன் கண்ணும் அவனுற் பெறப்படுவதோர் நல்லறி வுண்டு.

தத்த நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் புறத்துத் தோன்ருமற் போந்தார் பின் கேடுவந்துழிச் செயல் வேறுபடுதலின், அக்கேட்டால் அவை வரையறுக்கப்படுமென்பது பற்றிக் கேட்டினைக் 'கோ' லாக்கியும், அதனுல் அவரை அளந்தறிந்தால் ஆவாரையே கோடலின் அவ்வறிவை 'உறுதி'யென்றுங் கூறினுர். 'கிளைஞர்' ஆகுபெயர். இஃ தேகதேச உருவகம். இவை நான்கு பாட்டானும் ஆராயுமாறும், ஆராய்ந்தால் நட்கப் படுவார் இவரென்பதூஉங் கூறப்பட்டன. (௬)

௭௯௭. ஊதியம் என்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.

(இ - ள்.) ஒருவற்கு ஊதிய மென்பது - ஒருவனுக்குப் பேறென்று சொல்லப்படுவது; பேதையார் கேண்மை ஒரீஇ விடல் - அறிவிலாரோடு நட்புக் கொண்டானுயின் அதனை ஒழிந்து அவரினீங்குதல்.

நட்பொழிந்தாலும் நீங்காக்கால் ''வெறிகமழ் சந்தனமும் வேங்கையும்வே''* மாறுபோலத் தீங்குவருதலின் 'விட'லென்றும், நீங்கியவழித் தீங்கொழிதலேயன்றி இருமையின்பத்திற் குரிமை யெய்தலுமுடைமையின் அதனை 'ஊதிய'மென்றுங் கூறினுர். (௭)

௭௯௮. உள்ளற்க உள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.

(இ - ள்.) உள்ளம் சிறுகுவ உள்ளற்க-தம்மூக்கஞ் சுருங்குதற் குக்காரணமாய வினைகளைச்செய்ய நினையாதொழிக; அல்லற்கண் ஆற்று அறுப்பார் நட்புக் கொள்ளற்க - அதுபோலத் தமக்கொரு துன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளா தொழிக.

'உள்ளஞ் சிறுகுவ' வாவன தம்மின் வலியாரோடு தொடங்கி யனவும் பயனில்லனவுமாம். 'ஆற்'றென்பது முதனிலைத் தொழிற் பெயர். முன்னெல்லாம் வலியராவார் போன்று ஒழிதலின், வலி யறுப்பாரென்ருர். எடுத்துக் காட்டுவமை. கொள்ளின் அழிந்தே விடுமென்பதாம். (௮)

௭௯௯. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளஞ் சுடும்.

* நாலடியார் - ௧௮௦. நீதிவெண்பா - ௬௬.

(இ - ள்.) கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை - ஒருவன் கெடுங்காலத்து அவனை விட்டு நீங்குவார் முன் அவனோடு செய்த நட்பு; அடுங்காலை உள்ளினும் உள்ளம் சுடும் - தன்னைக் கூற்றடுங் காலத்து ஒருவ னினைப்பினும், அந்நினைத்த வுள்ளத்தைச் சுடும்.

நினைத்த துணையானே இயைபில்லாத பிறனுக்குங் கூற்றினுங் கொடிதாமெனக் கைவீ டெண்ணிச் செய்த நட்பின் கொடுமை கூறியவாறு. இனி, அவன்றானே ஆக்கிய கேடு தன்னை அடுங்காலை உள்ளினும் அக் கேட்டினுஞ் சுடுமென் றுரைப்பாருமுளர்.* இவை மூன்று பாட்டானும் ஆராய்ந்தால் நட்கப்படாதார் இவரென்பது கூறப்பட்டது. (௯)

௮௦௦. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.

(இ - ள்.) மாசு அற்றார் கேண்மை மருவுக - உலகோடொத் துக் குற்றமற்றார் நட்பினையே பயில்க; ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக - உலகோ டொத்தில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர் வேண்டிய தொன்றனைக் கொடுத் தாயினும் விடுக.

உலகோ டொத்தார் நட்பு இருமை இன்பமும் பயத்தலின், 'மருவுக'வென்றும், அதனோடு மாறாயினார் நட்புத் துன்பமே பயத் தலின் அத னொழிவை விலைகொடுத்துங் கொள்க வென்றுங் கூறினார். இதனால் அவ்விருமையுந் தொகுத்துக் கூறப்பட்டன. (௧௦)

---

## ௮௧. அக—பழைமை

[அஃதாவது, நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத் தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற் காயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாரெனினும் பொறுக்கப்படுங் குற்ற முடையராகலானும் ஊழ்வகையானும் நட்டார்மாட்டுப் பிழையுளதா மென்பது அறிவித்தற்கு இது நட்பாராய்தலின் பின் வைக்கப்பட்டது.]

௮௦௧. பழைமை எனப்படுவ தியாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

* மணக்குடவர்.

(இ-ள்.) பழைமை எனப்படுவது யாதெனின் - பழைமை யென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்; கிழமையை யாதும் கீழ்ந்திடா நட்பு - அது பழைமையோர் உரிமையாற் செய் வனவற்றைச் சிறிதுஞ் சிதையாது அவற்றிற் குடம்படும் நட்பு.

'கிழமை' ஆகுபெயர்; கெழுதகைமையென வருவனவும் அது உரிமையாற் செய்வனவாவன : கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவச்சங்களின்மை யென்றிவை முதலாயின. சிதைத்தல் : விலக்கல், இதனாற் பழைமையாவது காலஞ்சென்ற தன்று, இப்பெற்றித்தாய நட்பென்பது கூறப்பட்டது. (௧)

அ0௨. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

(இ-ள்.) நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை-நட்பிற்கவயவ மாவன நட்டார் உரிமையாற் செய்வன; அதற்கு உப்பாதல் சான் றோர் கடன் - அதனால் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைந் தார்க்கு முறைமை.

வேறன்மை தோன்ற 'உறுப்'பென்றார். உறுப்பென்பது ஈண் டிலக்கணையடியாக வந்த குறிப்புச்சொல். அவயவமாத லறிந்தே இனியவ ராவரென்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார். (௨)

அ0௩. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(இ-ள்.) கெழுதகைமை செய்தாங்கு அமையாக் கடை - தா முடம்படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற் குத் தாஞ் செய்தாற்போல உடம்படாராயின்; பழகிய நட்பு எவன் செய்யும் - அவரோடு பழையதாய் வந்த நட்பு என்ன பயனைச் செய்யும் ?

செய்தாற்போல உடம்படுதலாவது தாமும் அவரிடத்துரிமை யால் உடம்படுதல். இவை இரண்டு பாட்டானும் பழைமையான் வரும் உரிமையது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

அ0௪. விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

(இ-ள்.) நட்டார் கெழுதகையால் கேளாது செயின்-தன் கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின்; விழை

தகையான் வேண்டியிருப்பர் - அச்செயலது விழையப்படுந்தன்மை பற்றி அதனை விரும்புவர் அறிவுடையார்.

ஒருவர்க்குத் தங்கருமந் தாமறியாமன் முடிந்திருத்தலினூ உங்கு நன்மை யின்மையின், அச்செயல் விழையத்தக்கதாயிற்று. அதனை அவ்வாறறிந்து விரும்புதல் அறிவுடையார்க் கல்ல தின்மையின், அவர்மேல் வைத்துக்கூறினர். 'வேண்டியிருப்ப' ரென்பது எழுந் திருப்பரென்பதுபோல ஒருசொன் னீர்மைத்து. இதனாற் கேளாது செய்துழி அதனை விரும்புக வென்பது கூறப்பட்டது. (௪)

அ௦௫. பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

(இ - ள்.) நோதக்க நட்டார் செயின் - தாம் வெறுக்கத் தக்கனவற்றை நட்டார் செய்தாராயின்; பேதைமை ஒன்றோ பெருங் கிழமை என்று உணர்க - அதற்குக் காரணம் ஒன்றிற் பேதைமை யென்றுதல் ஒன்றின் மிக்க உரிமை யென்றுதல் கொள்க.

'ஒன்றோ' என்பது எண்ணிடைச்சொல். 'செயி'னெனவே தம்மியல்பாற் செய்யாமை பெற்றும். இது வருகின்றவற்றுள்ளு மொக்கும். இழவூழான் வரும் 'பேதைமை' யாவர்க்கும் உண்மை யின் தமக் கேதங்கொண்டாரென்றுதல், ஊழ்வகையான் எம்மின் வரற்பாலது ஒற்றுமை மிகுதிபற்றி அவரின் வந்ததென்றுதல் கொள்வதல்லது அன்பின்மை யென்று கொள்ளப்படா தென்ப தாம். கெடும் வகை செய்யின் அதற்குக் காரணம் இதனாற் கூறப்பட்டது. (௫)

அ௦௬. எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

(இ - ள்.) எல்லைக்கண் நின்றார் - நட்பு வரம்பிகவாது அதன் கண்ணே நின்றவர்; தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலை விடத்தும் துறவார் - தம்மொடு பழைமையின் திரியாது நின்றாரது நட்பினை அவரால் தொலைவு வந்த விடத்தும் விடார்.

பழைமையிற் றிரியாமை: உரிமை யொழியாமை. 'தொலைவு' பொருட் கேடும் போர்க்கேடும். (௬)

அ௦௭. அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(இ - ள்.) அழிவந்த செய்யினும் அன்பு அறார் - நட்டார் தமக் கழிவு வந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட்டன்பொழியார்;

அன்பின்வழி வந்த கேண்மையவர் - அன்புடனே பழையதாய் வந்த நட்பினை உடையார்.

'அழி' யென்பது முதனிலைத் தொழிற்பெயர்; அழிவு; மேற் சொல்லிய கேடுகள். இவை இரண்டு பாட்டானுங் கேடு செய்தக் கண்ணும் நட்பு விடற்பாற் றன்றென்பது கூறப்பட்டது. (எ)

௮௦௮. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின்.

(இ - ள்.) கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு - நட்டார் செய்த பிழையைத் தாமாகவேயன்றிப் பிறர் சொன்னாலுங் கொள்ளாத உரிமை யறியவல்லார்க்கு ; நட்டார் இழுக்கம் செயின் நாள் - அவர் பிழைசெய்வாராயின், அது பயன் பட்ட நாளாம்.

பிழையாவன: சொல்லாது நற்பொருள் வெளவல், பணியாமை அஞ்சாமை முதலாயின. கேட்டல்: உட்கோடல். 'கெழுதகைமை வல்லா'ரென்பது ஒருபெயராய்க் கேளாத வென்னும் எச்சத்திற்கு முடிபாயிற்று. செய்து போந்துழியல்லது அவ்வுரிமை வெளிப் படாமையின், செய்யாதன நாளல்லவாயின. இதனுற் பிழை பொறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது (அ)

௮௦௯. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு.

(இ - ள்.) கெடாஅ வழி வந்த கேண்மையார் கேண்மை - உரிமையறுது பழையதாய் வந்த நட்பினை யுடையாரது நட்பினை ; விடாஅர் உலகு விழையும் - அவர் பிழைநோக்கி விடுதல்செய்யா தாரை உலகம் நட்புக்குறித்து விரும்பும்.

'கெடா' தென்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது. விடாதாரை யெனவே, விடுதற்காரணங் கூறப்பட்டது. நம்மாட்டு இவரித்தன்மைய ராவரென்று யாவருந் தாமே வந்து நட்பாவ ரென்பதாம். கெடா ரென்று பாடமோதி, நட்புத்தன்மையிற் கெடாராகியென் றுரைப்பாரு முளர்.* (கூ)

௮௧௦. விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார்.

(இ - ள்.) பழையார்கண் பண்பின் தலைப்பிரியாதார்-பழைய நட்டார் பிழைசெய்தாராயினும் அவர்மாட்டுத் தம் பண்பினீங்கா தார்; விழையார் விழையப்படுப - பகைவரானும் விரும்பப்படுவர்.

---

* மணக்குடவர்.

தம் பண்பாவது : செய்யாத முன்போல அன்புடையராதல். மூன்ற னுருபுஞ் சிறப்பும்மையும் விகாரத்தால் தொக்கன. அத் திரிபின்மை நோக்கிப் பகைவரும் நட்டாராவ ரென்பதாம். இவை இரண்டு பாட்டானும் பழைமையறிவார் எய்தும் பயன் கூறப் பட்டது. (௧0)

---

## அதி. அ௨—தீநட்பு

[இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு, நட்பாராய்தற்*கட் சுருங்கச்சொல்லிய துணையான் அடங்காமையின், அதனை இருவகைப்படுத்து இரண்டதி காரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் தீநட்புக் கூறு கின்றார். அஃதாவது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின் தீமை ஒற்றுமைபற்றி உடையார்மேற்றாய், அது பின் அவரோடு செய்த நட்பின்மேற் றாயிற்று. அதிகார முறைமை கூறுமையே விளங்கும்.]

அ௧௧. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது.

(இ - ள்.) பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை - காதல் மிகுதியாற் பருகுவார்போன்றாராயினுந் தீக்குணமுடையார் நட்பு, பெருகலின் குன்றல் இனிது-வளர்தலின் தேய்தல் நன்று.

'பருகு வன்ன அருகா நோக்கமொடு'' † என்றார் பிறரும். நற் குணமில்லா ரெனவே, தீக்குணமுடையாரென்பது அருத்தாபத்தி யான் வந்தது. பெருகினல் வருங்கேடு குன்றினல் வாராமையின், 'குன்றலினி' தென்றார். இதனல் தீநட்பினது ஆகாமை பொது வகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்பு வகையாற் கூறுப. (௧)

அ௧௨. உறினட் டறினொரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்.

(இ - ள்.) உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை-தமக்குப் பயனுள்வழி நட்புச்செய்து அஃதில்வழி ஒழி யும் ஒப்பிலாரது நட்பினை ; பெறினும் இழப்பினும் என்-பெற்றால் ஆக்க மியாது ? இழந்தாற் கேடியாது ?

---

* அதி - அ0. † பொருநராற்றுப்படை, அடி - எஅ.

தமக்குற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்தமில ராகலின், அவரை 'ஒப்பிலா' ரென்றார். அவர்மாட்டு நொதுமற் றன்மையே அமையு மென்பதாம். (௨)

அகங. உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்.

(இ - ள்.) உறுவது சீர்தூக்கும் நட்பும் - நட்பளவு பாராது அதனால் வரும் பயனளவு பார்க்கும் நட்டாரும்; பெறுவது கொள்வாரும் - கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் பொதுமகளிரும்; கள்வரும் - பிறர் கேடு நோக்காது அவர் சோர்வு நோக்குங் கள்வரும்; நேர் - தம்முளொப்பர்.

'நட்பு' ஆகுபெயர். பொருளையே குறித்து வஞ்சித்தொழுகலின், கணிகையர் கள்வரென் றிவரோ டொப்பர் என்பதாயிற்று. இவை இரண்டு பாட்டானுந் தமக்குறுவது பார்ப்பார் நட்பின் தீமை கூறப்பட்டது. (௩)

அகச. அமரகத் தாற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை.

(இ - ள்.) அமரகத்து ஆற்று அறுக்கும் கல்லா மா அன்னார் தமரின்-அமர் வாராத முன்னெல்லாந் தாங்குவது போன்று, வந்துழிக் களத்திடை விழ்த்துப்போங் கல்வியில்லாத புரவி போல்வாரது தமர்மையில்; தனிமைதலை - தனிமை சிறப்புடைத்து.

'கல்லாமை கதி யைந்தும், சாரி பதினெட்டும், பொருமர ணுற்றலும்'* அறியாமை. துன்பம் வாராத முன்னெல்லாந் துணையாவார் போன்று வந்துழி விட்டு நீங்குவ ரென்பது உவமையாற் பெற்றாம். அவர் தமரானால் வரு மிறுதி தனியானால் வாராமையின், தனிமையைத் 'தலை'யென்றார்; எனவே, அதுவுந் தீதாதல் பெறுதும்.

அகரு. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று.

(இ - ள்.) செய்து ஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை - செய்து வைத்தாலும் அரணாகாத கீழ்மக்களது தீநட்பு; எய்தலின் எய்தாமை நன்று - ஒருவர்க்குண்டாதலின் இல்லையாதல் நன்று.

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அரணாகாமை தொலைவின்கண் விட்டு நீங்குதல். எய்தலின் எய்தாமை நன்றென்பதற்கு

* புறப்பொருள் வெண்பாமாலை, பெருந்திணை -௧௩.

மேலுரைத்தாங்* குரைக்க. சாராத வென்னும் பெயரெச்சங் 'கேண்மை' யென்னும் பெயர் கொண்டது; 'சிறியவ' ரென்பதனைக் கொள்ளின், செய்தென்பது நின்று வற்றும். இவை இரண்டு பாட்டானுந் தொலைவில் துணையாகாத நட்பின் தீமை கூறப்பட்டது. (ரு)

அகசு. பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி† உறும்.

(இ - ள்.) பேதை பெருங் கெழீஇ நட்பின் - அறிவிலானது மிகச்செறிந்த நட்பின் ; அறிவுடையார் ஏதின்மை கோடி உறும்- அறிவுடையானது பகைமை கோடி மடங்கு நன்று.

கெழீஇய என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது. பன்மை உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான் பகைமை ஒரு தீங்கும் பயவாமையானும், பேதை நட்பு எல்லாத் தீங்கும் பயத்தலானும், 'கோடியுறு'மென்றார். பெருங்கழிநட்பென்று பாடமோதுவாரு முளர். (சு)

அகஎ. நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி† உறும்.

(இ - ள்.) நகை வகையர் ஆகிய நட்பின் - தாமறிதல் வகையராகாது நகுதல் வகையராதற் கேதுவாகிய நட்பான் வருவனவற்றின் ; பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் - பகைவரான் வருவன பத்துக்கோடி மடங்கு நல்ல.

'நட்பு' ஆகுபெயர். அந் நட்பாவது : விடமருந் தூர்த்தரும் வேழம்பரும்போன்று பலவகையால் நகுவித்துத்தாம் பயன் கொண்டொழிவாரோடு உளதாயது. 'பகைவரா'மென்பது அவாய்நிற்றலின், வருவன வென்பது வருவிக்கப்பட்டது. 'பத்தடுத்த கோடி' பத்தாகத்தொகுத்தகோடி. அந்நட்பான்வரும் இன்பங்களின் அப்பகைவரான் வருந்துன்பங்கள் இறப்பநல்லவென்பதாம். இதற்குப் பிற‡ரெல்லாஞ் சொல்லிலக்கணத்தோடு மாறுகொளவுரைத்தார்.

அகஅ. ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.§

(இ - ள்.) ஒல்லுங் கருமம் உடற்றுபவர் கேண்மை-தம்மான் முடியுங் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரோடு$ கொண்ட

* அகச ஆம் குறளுரை. † சுஙக, ஆம் குறளுரை.
‡ மணக்குடவர். § நாலடியார் - எடு.
$ 'முடியாதாகச் செய்தாரோடு,' என்றும் பாடம்.

நட்பினை ; சொல்லாடார் சோரவிடல் - அது கண்டால் அவரறியச் சொல்லாதே சோர விடுக.

முடியாதாக்குதல்: முடியாதாக நடித்தல். 'சோரவிடல்' விடுகின்றவாறு தோன்ருமல் ஒருகாலைக் கொருகால் ஒயவிடுதல். அறியச்சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும், அதுபொழுது பரிகரித்துப் பின்னும் நட்பா யொழுகக் கருதுவாராகலின், 'சொல் லாடா' ரென்றுஞ் 'சோரவிட' லென்றுங் கூறினுர். இவை மூன்று பாட்டானும் முறையே பேதையார், நகுவிப்பார், இயல்வது செய் யாதா ரென்றிவர்கள் நட்பின் தீமை கூறப்பட்டது. (அ)

அகூ. கனவினும் இன்னது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

(இ - ள்.) வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு - வினையுஞ் சொல்லுமொவ்வாது வேறு வேரு யிருப்பார் நட்பு; கனவினும் இன்னது - நனவின்கண்ணே அன்றிக் கனவின்கண் ணும் இன்னுது.

வினை சொற்கள தொவ்வாமை முதல்மேல் ஏற்றப்பட்டது. அஃதாவது வினையில் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத் தல். நிகழ்வின்கண் உளதாயிருத்தலால், 'கனவினும் இன்ன' தென்ருர். உம்மை எச்ச உம்மை; இழிவு சிறப்பும்மையுமாம். 'மன்'னும் 'ஓ'வும் அசை நிலை. (கூ)

அ௨௦. எனைத்துங் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

(இ - ள்.) மனைக் கெழீஇ மன்றிற் பழிப்பார் தொடர்பு- தனியே மனைக்க ணிருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்க ணிருந்துழிப் பழி கூறுவார் நட்பு; எனைத்தும் குறுகுதல் ஓம்பல்- சிறிதாயினுந் தம்மை நணுகுதலைப் பரிகரிக்க.

மனைக்கட் கெழுமலும் மன்றின்கட் பழித்தலுந் தீதாகலின், அவர் ஒருகாலுந் தம்மை நணுகாவகை குறிக்கொண்டு காக்க வென்பார், அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினுர். இவை இரண்டு பாட்டானும் வஞ்சகர் நட்பின் தீமை கூறப்பட்டது. (க0)

———

## அதி. அ௩—கூடாநட்பு

[இனி, ஏனைக் கூடாநட்புக் கூறுகின்ருர். அஃதாவது பகைமை யான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந் துணையும் புறத்தாற் கூடி யொழுகுவார் நட்பு.]

அ௨௧. சீரிடங் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

(இ - ள்.) நேரா நிரந்தவர் நட்பு - கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையுங் கூடி யொழுகுவார் நட்பு; சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை - அதுபெற்றால், அறவெறிதற்குத் துணையாய பட்டடையாம்.

எறியுமெல்லை வாராமு னெல்லாந் தாங்குவது போன்றிருந்து வந்துழி அறவெறிவிப்பதாய* 'பட்டடைக்'கும் அத்தன்மைத்தாய நட்பிற்குந் தொழிலொப்புமை உண்மையான், அதுபற்றி அந்நட்பினைப் பட்டடையாக உபசரித்தார். தீர்விடமென்று பாடமோதி முடிவிடமென் றுரைப்பாரு முளர். † (௧)

அ௨௨. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

(இ - ள்.) இனம் போன்று இனமல்லார் கேண்மை - தமக் குற்றார்போன்று உறுதாரோடு உளதாய நட்பு; மகளிர் மனம்போல வேறுபடும் - இடம் பெற்றால் பெண்பாலார் மனம்போல வேறு படும்.

அவர் மனம் வேறுபடுதல், 'பெண் மனம் பேதின் றொருப் படுப்பே னென்னு—மெண்ணி லொருவன்'‡ என்பதனானு மறிக. நட்பு வேறுபடுதலாவது பழைய பகையே யாதல். இவை இரண்டு பாட்டானும் கூடா நட்பினது குற்றங் கூறப்பட்டது. (௨)

அ௨௩. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது.

(இ - ள்.) நல்ல பல கற்றக் கடைத்தும் - நல்லன பல நூல் களைக் கற்றவிடத்தும்; மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது - அதனான் மனந்திருந்தி நட்பாதல் பகைவர்க்கில்லை.

நல்லன மனக்குற்றங் கெடுப்பன. 'மனநல்ல' ரெனச் சினை வினை முதல்மேல் நின்றது; 'நல்லராகுதல்': செற்றம் விடுதல். உள்ளே செற்றமுடையாரைக் கல்வியுடைமைபற்றி நட்பென்று கருதற்க வென்பதாம். (௩)

அ௨௪. முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்.

* முழுதும் வெட்டுதற் குதவுவதாய.
† மணக்குடவர். ‡ வளையாபதி.

(இ - ள்.) முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை - கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தால் இன்னாராய வஞ்சரை; அஞ்சப்படும் - அஞ்சல் வேண்டும்.

நகையது வகைபற்றி 'இனிய' வென்றும் அகத்துச் செற்றம் நிகழவும், அதற்கு மறுதலையாய நகையைப் புறத்து விளைத்தலின் 'வஞ்ச'ரென்றும், அச்செற்றங் குறிப்பறிதற் கருவியாய முகத்தானுந் தோன்றாமையின், அஞ்சுதல் செய்யப்படுமென்று கூறினார். இவை இரண்டு பாட்டானுங் குற்றத்திற்கேதுவாய அவர் கொடுமை கூறப்பட்டது. (௪)

**அ௨௫. மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும் சொல்லினால் தேறற்பாற் றன்று.**

(இ - ள்.) மனத்தின் அமையாதவரை - மனத்தால் தம்மொடு மேவாதாரை; எனைத் தொன்றும் சொல்லினால் தேறற்பாற்று அன்று - யாதொரு கருமத்தினுஞ் சொல்லால் தெளிதல் முறைமைத் தன்று நீதிநூல்.

நீதிநூ லென்பது அவாய்நிலையான் வந்தது. பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லைச் செவ்விய சொல்லெனக் கருதி, அவரைக் கருமங்களில் தெளிதல் நீதிநூல் முறைமையன் றென்பதாம். (௫)

**அ௨௬. நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல் ஒல்லை உணரப் படும்.**

(இ - ள்.) நட்டார்போல் நல்லவை சொல்லினும் - நட்டார் போன்று நன்மை பயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும்; ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும் - பகைவர் சொற்கள் அது பயவாமை அச் சொல்லியபொழுதே அறியப்படும்.

'சொல்லினும்' எனவே சொல்லாமையே பெற்றாம். ஒட்டாராதலால் தீமை பயத்தல் ஒருதலையென்பார், 'ஒல்லை உணரப்படு' மென்றார். (௬)

**அ௨௭. சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம் தீங்கு குறித்தமை யான்.**

(இ - ள்.) வில் வணக்கம் தீங்கு குறித்தமையான் - வில்லினது வணக்கம் ஏற்றவர்க்குத் தீமை செய்தலைக் குறித்தமையால்; ஒன்

* 'முறைமைத்தன் றென்றுசொல்லும் நீதிநூல்' என்றும் பாடம்.

னூர்கண் சொல்வணக்கம் கொள்ளற்க - பகைவர்மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று கருதற்க.

தம் வணக்கம் அன்றென்பது தோன்றச் 'சொல்வணக்க' மென்றும், 'வில் வணக்கம்' வேறாயினும் வணங்குதல் ஒப்புமை பற்றி அதன் குறிப்பை ஏதுவாக்கியுங் கூறினார். வில்லியது குறிப்பு அவனுடைய வில் வணக்கத்தின்மே னிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவருடைய சொல் வணக்கத்தின்மேல தாயிற்று. இதுவுந் தீங்கு குறித்த வணக்கமென்றே கொண்டு அஞ்சிக் காக்க வென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவரைச் சொல்லால் தெளியற்க என்பது கூறப்பட்டது. (௭)

௮௨௮. தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. *

(இ - ள்.) ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் - ஒன்னார் குறிப்பை உணரவல்லார்க்கு அவர் தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும்; அழுத கண்ணீரும் அனைத்து - அவரழுத கண்ணீரும் அவ்வாறே அது மறைந்திருத்தற் கிடனும்.

தாம் நட்பென்பதனைத் தங்கையானுங் கண்ணானுந் தேற்றிப் பின் கோறற்கு வாங்க இருக்கின்ற படைக்கலம் உய்த்துணர்வுழித் தேற்றுகின்றபொழுதே அவற்றுள்ளே தோன்று மென்பார், 'ஒடுங்கு' மென்றார். பகைவர் தம் மென்மை காட்டித் தொழினு மழினும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்க வென்பதாம். இதனால் அவரைச் செயலால் தெளியற்க வென்பது கூறப் பட்டது. (௮)

௮௨௯. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

(இ - ள்.) மிகச்செய்து தம் எள்ளுவாரை - பகைமை தோன்றாமற் புறத்தின்கண் நட்பினை மிகச்செய்து அகத்தின்கண் தம்மை இகழும் பகைவரை; நட்பினுள் நகச்செய்து சாப் புல்லற் பாற்று - தாமும் அந்நட்பின் கண்ணே நின்று புறத்தின்கண் அவர் மகிழும் வண்ணஞ்செய்து அகத்தின்கண் அது சாம் வண்ணம் பொருந்தற்பான்மை யுடைத்து அரச நீதி.

நின்றென்பதூஉம் அரசநீதி யென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன - அகனென்று புறனென்றுதல் ஒருவர்க்குத் தகாதெனி

* சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம் - ௩.

னும், பகைவர் மாட்டாயின் தகுமென்பது நீதி நூல் துணிபென் பார், அதன்மேல் வைத்துங் கூறினர். சாவ என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது ; "கோட்டின் வாய்ச் சாக்குத்தி"* என் புழிப்போல. எள்ளுவாரைப் புல்லலெனக் கூட்டுக. (௯)

அ௩௦. பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல்.

(இ - ள்.) பகை நட்பாம் காலம் வருங்கால் - தம் பகைவர் தமக்கு நட்டாரா யொழுகுங் காலம் வந்தால். முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல் - தாமும் அவரோடு முகத்தால் நட்புச்செய்து அகத்தால் அதனை விட்டுப் பின் னதுவுந் தவிர்க.

அக் காலமாவது தம்மானும் பகையென்று வெளிப்பட நீக்க லாகாத அளவு. இதனானே ஆமளவெல்லாம் நீக்குக வென்பது பெற்றாம். இவை இரண்டு பாட்டானும் அந் நட்பிடை யொழுகு மாறு கூறப்பட்டது. (௧௦)

## அ௯. அ௪—பேதைமை

[இனி, அந்நட்பினை எதிர்மறுத்துப் பகை முகத்தாற் கூறிய தொடங்கினர். அப்பகைதான் முற்றக் கடியுங் குற்றமன் மையின்†னுளவாய வெகுளியானுங் காமத்தானும் வருவதாம். அவற்றுள் வெகுளியான் வருவன ஐந்ததிகாரத்தானும் காமத் தான் வருவன ஐந்ததிகாரத்தானுங் கூறுவார், அவ்விரண் டற்கும் அடியாய மயக்கத்தை இருவகைப்படுத்து, இரண் டதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் பேதைமை கூறுகின்றார். அஃதாவது, யாது மறியாமை.]

அ௩௧. பேதைமை என்பதொன் றியாதெனின் ஏதங்கொண்
டூதியம் போக விடல்.

(இ - ள்.) பேதைமை என்பது ஒன்று - பேதைமையென்று சொல்லப்படுவது ஒருவனுக்கு ஏனைக் குற்றங்களெல்லா வற்றினும் மிக்க தொன்று; யாது எனின் ஏதம் கொண்டு ஊதியம் போக விடல் அதுதான் யாதென்று வினவின், தனக்குக் கேடு பயப்பன வற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுதல்.

கேடு : வறுமை, பழி, பாவங்கள். ஆக்கம்: செல்வம், புகழ், அறங்கள். தானே தன்னிருமையுங் கெடுத்துக்கோட லென்பதாம்.

* கலித்தொகை - ௧௦௫. † ௪௪௦ ஆம் குறளுரை.

அ௩௨. பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கண்செயல்.

(இ - ள்.) பேதைமையுள் எல்லாம் பேதைமை - ஒருவனுக்குப் பேதைமை யெல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது ; கையல்ல தன்கண் காதன்மைசெயல் - தனக்காகாத ஒழுக்கத்தின் கண் காதன்மை செய்தல்.

இருமைக்கும் ஆகா வென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்த லென்பதாம். இவை இரண்டு பாட்டானும் பேதைமைய திலக்கணங் கூறப்பட்டது. (௨)

அ௩௩. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(இ - ள்.) நாணாமை-நாண வேண்டு மவற்றுக்கு நாணாமையும்; நாடாமை - நாட வேண்டு மவற்றை நாடாமையும்; நார் இன்மை - யாவர்மாட்டும் முறிந்த சொற்செய லுடைமையும்; யாதொன்றும் பேணாமை - பேண வேண்டு மவற்றுள் யாதொன்றனையும் பேணாமையும்; பேதை தொழில் - பேதையது தொழில்.

நாணவேண்டு மவை : பழி பாவங்கள். நாடவேண்டு மவை; கருமங்களிற் செய்வன தவிர்வன. முறிதல் : கண்ணறுதல். பேண வேண்டு மவை: குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம் முதலாயின. இவை பேதைக்கு எஞ்ஞான்றும் இயல்பாய் வருதலின் 'தொழி'லென்றார்.

அ௩௪. ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையார் இல்.

(இ - ள்.) ஓதி - மன மொழி மெய்க ளடங்குதற் கேதுவாய நூல்களை ஓதியும்; உணர்ந்தும் - அவ் வடக்கத்தான் வரும் பயனை உணர்ந்தும்; பிறர்க்கு உரைத்தும் - அதனை அறியலுறப் பிறர்க் குரைத்தும்; தான் அடங்காப் பேதையின் - தான் அவை அடங்கி யொழுகாத பேதைபோல; பேதையார் இல் - பேதையார் உலகத் தில்லை.

உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு மருந்தாய இவற்றால் தீராமையானும், வேற்று மருந்தின்மை யானும் 'பேதையிற் பேதையா ரில்' லென்றார். இவை இரண்டு பாட்டானும் பேதையது தொழில் பொதுவகையாற் கூறப் பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப. (௪)

அ௩௫. ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு.

(இ - ள்.) பேதை-பேதையாயினுன்; எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு - வரும் பிறவிகளெல்லாந் தான் புக்கழுந்தும் நிரயத்தினை; ஒருமைச் செயல் ஆற்றும் - இவ்வொரு பிறப்புள்ளே செய்து கொள்ள வல்லனும்.

எல்லாப் பிறப்பும் ஏழா யடங்குதல் அறியப்பட்டமையின், முற்றும்மை கொடுத்தார். அழுந்துதற்கிடனுய நிரயம், ஈண்டைப் பிறப்புக்களினுங் கொடுவினை வயத்தால் அந்நிரயத் துன்பமே யுழந்து வருதலின் 'எழுமையுந் தான் புக்கழுந்தும் அள'றென்ருர். முடிவில் காலமெல்லாம் தான் நிரயத்துன்ப முழத்தற்கேதுவாங் கொடுவினைகளையே அறிந்து சில காலத்துள்ளே செய்துகோடல் பிறர்க்கரிதாகலின், 'ஆற்று'மென்ருர். இதனுன் அவன் மறுமைச் செயல் கூறப்பட்டது. (௫)

அ௩௬. பொய்படும் ஒன்ருே புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

(இ - ள்.) கை அறியாப் பேதை வினை மேற்கொளின்-செய்யு முறைமை யறியாத பேதை ஒரு கருமத்தை மேற்கொள்வனுயின்; பொய் படும் ஒன்ருே புனை பூணும்-அதுவும் புரைபடும், தானுந் தளை பூணும்.

புரைபடுதல்: பின் ஆகாவகை உள்ளழிதல். 'ஒன்ருே'வென்பது எண்ணிடைச்சொல். அதனையுங் கெடுத்துத் தானுங் கெடுமென்பதாம். இதனுன் அவன் செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது. (௬)

அ௩௭. ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.

(இ - ள்.) பேதை பெருஞ் செல்வம் உற்றக் கடை-பேதையாயினுன் பெரிய செல்வத்தைத் தெய்வத்தா னெய்தியவழி; ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர்-தன்னுேடோரியையு மில்லாதார் நிறைய எல்லா இயைபுமுடைய தமராயினுர் பசியாநிற்பர்.

எல்லா நன்மையுஞ் செய்து கோடற்கருவியென்பதுதோன்றப் 'பெருஞ் செல்வ'மென்றும், அதனைப் படைக்கு மாற்றல் இல்லாமை தோன்ற 'உற்றக்கடை' யென்றும், எல்லாம் பெறுதல் தோன்ற 'ஆர' வென்றும், உணவும் பெறுமை தோன்றப் 'பசிப்ப'ரென்றுங் கூறினுர். (எ)

அ௩அ. மையல் ஒருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

(இ - ள்.) பேதை தன் கை ஒன்று உடைமை பெறின் - பேதையாயினான் தன் கைக்கண்ணே ஒன்றனை உடைமையாகப் பெற்றானாயின்; மையல் ஒருவன் களித்தற்று - அவன் மயங்குதல் முன்னே பித்தினையுடையா னொருவன் அம் மயக்கத்தின் மேலே மதுவுண்டு மயங்கினாற்போலும்.

'பெறி' னெனவே, தெய்வத்தானன்றித் தன்னாற் பெறுமை பெற்றும். பேதையுஞ் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால் அவன் செய்வன மையலும் மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வன போல் தலைதடுமாறுமென்பதாம். இவை இரண்டுபாட்டானும் அவன் செல்வம் எய்தியவழிப் பயன்கொள்ளுமாறு கூறப்பட்டது. (அ)

அ௩கூ. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன் றில்.

(இ - ள்.) பிரிவின்கண் தருவது பீழை ஒன்று இல் - பின் பிரிவுவந்துழி அஃதிருவர்க்குந் தருவதொரு துன்பமில்லை; பேதையார் கேண்மை பெரிது இனிது - ஆகலாற் பேதையாயினார் தம்முட் கொண்ட நட்பு மிக இனிது.

நாடோறுந் தேய்ந்து வருதலின்* துன்பம் தாராதாயிற்று. புகழ்வார் போன்று பழித்தவாறு. இதனால் அவரது நட்பின் குற்றங் கூறப்பட்டது. (கூ)

அச௦. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

(இ - ள்.) சான்றோர் குழா அத்துப் பேதை புகல்-சான்றோர் அவையின்கண் பேதையாயினான் புகுதல்; கழா அக்கால் பள்ளியுள் வைத்தற்று - தூயவல்ல மிதித்த காலை இன்பந்தரும் அமளிக் கண்ணே வைத்தாற்போலும்.

கழுவாக்கா லென்பது இடக்கரடக்கு. அதனால் அவ் வமளியும் இழிக்கப்படுமாறுபோல, இவனால் அவ்வவையும் இழிக்கப்படு மென்பதாம். இதனால் அவன் அவையிடை இருக்குமாறு கூறப்பட்டது. (க௦)

---

* குறள் - எஅஉ, பார்க்க. † நாலடியார் - உ௩௪.

# அதி. அரு—புல்லறிவாண்மை

[இனி, ஏனைய புல்லறிவாண்மை கூறுகின்றார். அது புல்லிய அறிவினையாடல் தன்மையென விரியும். அஃதாவது, தான் சிற்றறிவினனா யிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொற் கொள்ளாமை.]

அசக. அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு.*

(இ - ள்.) இன்மையுள் இன்மை அறிவின்மை - ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்க இல்லாமையாவது அறிவில்லாமை; பிறிதின்மை இன்மையா வையாதுஉலகு - மற்றைப் பொருளில்லாமையோ வெனின். அதனை அப்பெற்றித்தாய இன்மையாகக் கொள்ளார் உலகத்தார்.

'அறி' வென்பது ஈண்டுத் தலைமைபற்றி நல்லறிவின்மேனின்றது. புல்லறிவாளர் செல்வமெய்திய வழியும் இம்மை மறுமைப் பயனெய்தாமையின் அதனை 'இன்மையு ளின்மை' யென்றும், நல்லறிவாளர் வறுமையெய்திய வழியும் அஃதிழவாமையின் அதனை 'இன்மையா வையா' தென்றுங் கூறினார், இதனாற் புல்லறிவினது குற்றங் கூறப்பட்டது. (க)

அசஉ. அறிவிலான் நெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
இல்லை பெறுவான் தவம்.

(இ - ள்.) அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் - புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று கொடுத்தல் கூடிற்றாயின்; பெறுவான் தவம் பிறிது யாதும் இல்லை - அதற்குக் காரணம் பெறுகின்றவன் நல்வினையே; வேறொன்றுமில்லை.

ஒரோவழி நெஞ்சுவந் தீதல்கூடலிற் புல்லறிவாளரும் நல்வினை செய்ப என்பார்க்குப், பெறுவான் வீழ்பொரு ளெய்தியான் போல்வதல்லது இம்மை நோக்கியாக மறுமைநோக்கியாக ஈகின்றாரல்லரெனக் கூறியவாறு. கூடிற்றாயின் அதற்குக் காரணமென்னுஞ் சொற்கள் அவாய் நிலையான் வந்தன. இதனால் அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தல் அறியாமை கூறப்பட்டது. (உ)

அசந. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்தல் அரிது.

---

*நாலடியார் - உ௫௧.

(இ - ள்.) அறிவிலார் தாந் தம்மைப் பீழிக்கும் பீழை - புல் லறிவுடையார் தாமே தம்மை வருத்தும் வருத்தம்; செறுவார்க் கும் செய்தல் அரிது - அது செய்தற்குரியராய தம் பகைவர்க்குஞ் செய்தலரிது.

பகைவர் தாம் அறிந்த தொன்றனைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது வறுமை, பழி, பாவ முதலிய பலவற்றையும் எக் காலத்துஞ் செய்யமாட்டாமையின், அவர்க்குஞ் 'செய்த லரி' தென்றார். இதனால் அவர் தம்மாட்டுந் தீயன செய்தல் அறிவ ரென்பது கூறப்பட்டது. (௩)

அ௪௪. வெண்மை எனப்படுவ தியாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு.

(இ - ள்.) வெண்மை எனப்படுவது யாது எனின் - புல்லறி வுடைமை யென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்; யாம் ஒண்மை உடையம் என்னும் செருக்கு - அது தம்மைத் தாமே யாம் நல்லறிவுடைய மென்று நன்கு மதிக்கும் மயக்கம்.

'வெண்மை'யாவது அறிவு முதிராமை. 'ஒண்மை' யெனக் காரியப் பெயர் காரணத்திற்காயிற்று. உலகத்தார் இகழ்தல் அறிந்து வைத்தும் அவ்வாறு மதித்தலான், மயக்கமென்றார். (௪)

அ௪௫. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும்.

(இ - ள்.) கல்லாத மேற்கொண்டு ஒழுகல் - புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையும் கற்றாராகத் தாம் மேலிட்டுக்கொண்டு ஒழுகுதல்; கசடு அற வல்லதூஉம் ஐயம் தரும் - கசடறக் கற்ற தொரு நூலுண்டாயின் அதன்கண்ணும் பிறர்க் கையத்தை விளைக்கும்.

'வல்ல'தென ஏழாவது இறுதிக்கண் தொக்கது. உண்டாயி னென்பது அவாய்நிலையான் வந்தது. 'ஐயம்' அதுவல்ல ரென் பதூஉம் இவ்வாறு கொல்லோ வென்பது. (௫)

அ௪௬. அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி.

(இ - ள்.) தம் வயின் குற்றம் மறையாவழி - புல்லறிவாளர் தங்கண் நிகழுங் குற்றங்களை யறிந்து கடியாராயின்; அற்றம்

மறைத்தலோ புல்லறிவு - ஆடையால் அற்ற மறைத்தாராகத் தம் மைக் கருதுதலும் புல்லறிவாம்.

குற்ற மறைத்தலாவது அவற்றை இலவாக்குதல். மறைக்கப் படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றை யெல்லாம் மறையாது தாழ்ந்த தொன்றனையே மறைத்து அவ்வளவால் தம்மையும் உலக வொழுக்கினராக மதித்தலும் 'புல்லறி' வென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் தம்மை வியத்தற் குற்றங் கூறப் பட்டது. (௬)

அ௪௭. அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

(இ - ள்.) அரு மறை சோரும் அறிவிலான் பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் உட்கொள்ளாது போக்கும் புல் லறிவாளன்; தானே தனக்குப் பெருமிறை செய்யும் - அவ்வுறுதி அறியாமையால் தானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்து கொள்ளும்.

'சோரு' மென இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத் தின்மேல் நின்றது. மிக்க வருத்தம், பொறுத்தற்கரிய துன்பங் கள். இனி 'அருமறை சோரு' மென்பதற்குப் பிறரெல்லாம் உள் ளத் தடக்கப்படும் எண்ணத்தை வாய் சோர்ந்து பிறர்க்குரைக்கு மென்* றுரைத்தார்; அது பேணமை யென்னும்† பேதைமை யாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மை யறிக. (எ)

அ௪அ. ஏவவுஞ் செய்கலான் தான்றேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்.

(இ - ள்.) ஏவவும் செய்கலான்-புல்லறிவாளன் தனக் குறுதி யாயவற்றை அறிவுடையார் சொல்லா நிற்கவுஞ் செய்யான்; தான் தேறான்- அதுவன்றித் தானாகவும் இவை செய்வன வென்றறியான், அவ்வுயிர் போஒமளவும் ஓர் நோய் - அவ்வுயிர் யாக்கையின் நீங்கு மளவும் நிலத்திற்குப் பொறுத்தற் கரியதொரு நோயாம்.

உயிர்தான் உணர்தல் தன்மைத்தா யிருந்தும், நின்ற யாக்கை வயத்தான் மருடல் தன்மைத்தாய் வேறுபடுதலின் அவ்வுயி ரென் றும், அதனி னீங்கியபொழுதே அதற்கு இரண்டனுள் ஒன்று கூடுதலிற் 'போஒமளவு' மென்றும், குலமலை முதலிய பொறுக் கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பஞ் செய்தலின் ஒரு 'நோ' யென்றுங் கூறினர். (அ)

* மணக்குடவர். † குறள் - அ௩௩.

அ௪௯. காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு.

(இ - ள்.) காணாதான் காட்டுவான் தான் காணான்-தன்னை எல்லா மறிந்தானாக மதித்தலாற் பிறரால் ஒன்றறியுந் தன்மை இலாதானை அறிவிக்கப்புகுவான் அவனாற் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய் முடியும்; காணாதான் தான் கண்டவாறு கண்டானாம்-இனி அவ்வறியுந் தன்மை யில்லாதான் கொண்டது விடாமையால் * தானறிந்தவாற்றால் அதனை அறிந்தானாய் முடியும்.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயைவதன் றென்பதாம்.

அ௫௦. உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

(இ - ள்.) உலகத்தார் உண்டு என்பது இல் என்பான்-உயர்ந்தோர் பலரும் உண்டென்பதொரு பொருளைத் தன் புல்லறிவால் இல்லையென்று சொல்லுவான், வையத்து அலகையா வைக்கப்படும்-மகனென்று கருதப்படான், வையத்துக் காணப்படுவதொரு பேயென்று கருதப்படும்.

கடவுளும் மறு பிறப்பும் இருவினைப்பயனும் முதலாக அவர் உளவென்பன பலவேனுஞ் சாதிபற்றி 'உண்டென்ப' தென்றும், தானே வேண்டிய கூறலால் ஒப்பும், வடிவால் ஒவ்வாமையு முடைமையின் தன் யாக்கை கரந்து மக்கள் யாக்கையுள் தோன்றுதல் வல்ல 'அலகை' யென்றுங் கூறினர். இவை நான்கு பாட்டானும் உறுதிச் சொற் கொள்ளாமையது குற்றங் கூறப்பட்டது. (௧௦)

---

## அ௯. அ௬—இகல்

[இனி, அவற்றான் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும்பான்மைத்தாகலின், அதனான் வருவன கூறுவான் தொடங்கி, முதற்கண் இகல் கூறுகின்றார். அஃதாவது, இருவர் தம்முட் பொருது வலி தொலைதற்கேதுவாய மாறுபாடு.]

அ௫௧. இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.

---

* திருவாசகம் : 'கொடிறும் பேதையுங் கொண்டது விடா'.

(இ - ள்.) எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய்-எல்லா உயிர்கட்கும் பிற உயிர்களோடு கூடா மையென்னுந் தீக்குணத்தை வளர்க்கும் குற்றம்; இகல் என்ப - இகலென்று சொல்லுவர் நூலோர்.

மக்களையும் விலங்குகளோ டொப்பிப்ப தென்பது தோன்ற 'எல்லா உயிர்க்கு' மென்றும், பகுதிக்குணத்தை இடைநின்று விளைத்தலிற் 'பகலென்னும் பண்பின்மை' யென்றுங் கூறினார். நற்குணமின்மை அருத்தாபத்தியால் தீக்குண மாயிற்று. இதனால் இகலது குற்றம் கூறப்பட்டது. (க)

அருஉ. பகல்கருதிப் பற்ரு செயினும் இகல்கருதி
இன்னுசெய் யாமை தலை.

(இ - ள்.) பகல் கருதிப் பற்ரு செயினும்-தம்மொடு கூடா மையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானாயினும்; இகல் கருதி இன்னா செய்யாமை தலை - அவனோடு மாறுபடுதலைக் குறித்துத் தாமவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமை உயர்ந்தது.

செய்யிற் பகைமை வளரத் தாம் தாழ்ந்து வரலானும், ஒழியின் அப் பற்ருதன தாமே ஒய்ந்துபோகத் தாம் ஓங்கி வரலானும் 'செய்யாமை தலை'யென்ருர். பற்ருதவென்பது விகாரமாயிற்று. (உ)

அருங. இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும்.

(இ - ள்.) இகல் என்னும் எவ்வநோய் நீக்கின் - மாறுபா டென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யும் நோயை ஒரு வன் தன் மனத்தினின்று நீக்குமாயின்; தவல் இல்லாத் தாவில் விளக்கம் தரும் - அவனுக்கு அந்நீக்குதல் எஞ்ஞான்றும் உளனாதற் கேதுவாய புகழைக் கொடுக்கும்.

தவ லில்லாமை அருத்தாபத்தியான் அப்பொருட்டாயிற்று. 'தாவில் விளக்கம்'* வெளிப்படை. யாவரு நண்பராவர், ஆகவே எல்லாச் செல்வமும் எய்திக் கொடை முதலிய காரணங்களாற் புகழ்பெறு மென்பதாம். (ங)

அருச. இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்.

* குறள் - உ௩௩.

(இ - ள்.) இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் - மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க துன்பம் ஒருவனுக் கில்லையாயின்; இன்பத்துள் இன்பம் பயக்கும்-அவ்வின்மை அவனுக்கு இன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க இன்பத்தினைக் கொடுக்கும்.

'துன்பத்துள் துன்பம்' பலரொடு பொருது வலி தொலைத லான் யாவர்க்கு மெளியனா யுறுவது. அதனை இடையின்றியே பயத்தலின், 'இகலென்னு' மென்றார் 'இன்பத்து ளின்பம்,' யாவரு நட்பாகலின் எல்லாப் பயனும் எய்தியுறுவது. (௪)

அருரு. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

(இ - ள்.) இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை - தம் முள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனை ஏற்றுக்கொள்ளாது சாய்ந்தொழுக வல்லாரை; மிகல் ஊக்கும் தன்மையவர் யார் - வெல்லக் கருதுந் தன்மையுடையார் யாவர்?

இகலை ஒழிந்தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாக லின் 'வல்லாரை' யென்றும், யாவர்க்கும் நண்பாகலின் அவரை வெல்லக் கருதுவார் யாவரும் இல்லை யென்றுங் கூறினார். இவை நான்கு பாட்டானும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப் பட்டது. (ரு)

அருசா. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து.

(இ - ள்.) இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை - பிறரொடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று அத னைச் செய்வானது உயிர் வாழ்க்கை; தவலும் கெடலும் நணித்து - பிழைத்தலும் முற்றக் கெடுதலுஞ் சிறிது பொழுதுள் உளவாம்.

மிகுதல்: மேன்மேல் ஊக்குதல். 'இனி'தென்பது, தான் வேறல் குறித்தல். பிழைத்தல் - வறுமையான் இன்னாதாதல். முற்றக் கெடுதல் - இறத்தல். இவற்றோடு 'நணித்' தென்பதனைத் தனித்தனி கூட்டி, உம்மைகளை எதிரதும் இறந்ததும் தழீஇய எச்சவும்மைகளாக உரைக்க, பொருட்கேடும் உயிர்க்கேடும் அப் பொழுதே உளவா மென்பதாம். (சா)

அருஎ. மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர்.

(இ - ள்.) இகல் மேவல் இன்னா அறிவினவர் - இகலோடு மேவுதலையுடைய இன்னாத அறிவினை யுடையார்; மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் - வெற்றி பொருந்துதலையுடைய நீதி நூற் பொருளை அறியமாட்டார்.

'இன்னா அறிவு' தமக்கும் பிறர்க்குந் தீங்கு பயக்கும் அறிவு; வெற்றிவழி நின்றார்க்கு உளதாவது. காணப்படும் பயத்ததா கலின் மெய்ந்நூலெனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின், 'காணா' ரென்றார். இவை இரண்டு பாட்டானும் இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது (எ)

அருஅ. இகலிற் கெதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கின் ஊக்குமாங் கேடு.

(இ - ள்.) இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம்-தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனை யெதிர்தலை யொழிதல் ஒருவனுக்கு ஆக்கமாம்; அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம் - அது செய்யாது அதன்கண் மிகுதலை மேற்கொள்வானாயிற் கேடுந் தன்கண் வருதலை மேற்கொள்ளும்.

எதிர்தல்: ஏற்றுக்கோடல். சாய்ந்தபொழுதே வருதலின் 'சாய்தல் ஆக்க' மென்றார். 'இகலிற்'கெனவும் 'அதனை'யெனவும் வந்தன வேற்றுமை மயக்கம். (அ)

அருகூ. இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு.

(இ - ள்.) ஆக்கம் வருங்கால் இகல் காணான் - ஒருவன் தன்கண் ஆக்கம் வரும் வழிக் காரணமுண்டாயினும் இகலை நினையான்; கேடுதரற்கு அதனை மிகல் காணும் - தனக்குக் கேடுசெய்து கோடற்கண் காரணமின்றியும் அதன்கண் மிகுதலை நினைக்கும்.

இகலான் வருங் கேடு பிறரான் அன்றென்பது தோன்றத் 'தரற்' கென்றார். நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ஆக்கக் கேடுகட்குமுன் நடப்பன இகலினது இன்மை உண்மைக ளென்பதாம். (கூ)

அகூ0. இகலானும் இன்னாத எல்லாம் நகலானும்
நன்னயம் என்னும் செருக்கு.

(இ - ள்.) இகலான் இன்னாத எல்லாம் ஆம் - ஒருவனுக்கு மாறுபாடொன்றானே இன்னாதன எல்லாம் உளவாம்; நகலான்

நன்னயம் என்னும் செருக்கு ஆம் - நட்பொன்ருனே நல்ல நீதி யென்னும் பெருஞ் செல்வம் உளதாம்.

'இன்ருதன': வறுமை, பழி, பாவ முதலாயின. 'நகல்': மகிழ் தல். நகலென்பதூஉஞ் செருக்கென்பதூஉம் தத்தங் காரணங் கட்காயின. 'நயமென்னுஞ் செருக்'கெனக் காரியத்தைக் காரண மாக உபசரித்தார். இவை மூன்று பாட்டானும் அவ்விருமையுங் கூறப்பட்டன. (கO)

---

## அகூ. அஎ—பகைமாட்சி

[அஃதாவது, அறிவின்மை முதலிய குற்றங்கள் உடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல். அரசர்க்கு எவ்வாற்ருனும் பகை யின்மை கூடாமையின் மேற் பொதுவகையான் விலக்கப் பட்ட இகலே, ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்ருராக லின், இஃததன்பின் வைக்கப்பட்டது.]

அகூக. வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.

(இ - ள்.) வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக - தம்மின் வலி யார்க்குப் பகையாயெதிர்தலே ஒழிக; மெலியார்மேல் பகைஓம்பா மேக - ஏனே மெலியார்க்குப் பகையாதலே ஒழியாது விரும்புக.

'வலியா' ரென்புழித் துணேவலியு மடங்கலின், 'மெலியா' ரென்புழித் துணேவலி இன்மையுங் கொள்ளப்படும். அத் துணே தான் படைபொருள் முதலிய வேற்றுமைத் துணேயும், நல்லறி வுடைமை நீதி நூல்வழி ஒழுகல் முதலிய ஒற்றுமைத் துணேயுமென இரண்டாம். அவ்விரண்டும் இல்லாரை வெல்வார்க்கு வலிதொலே யாமையின், அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது, சிங்கநோக் காகிய இதனுட் பகைமாட்சி பொதுவகையாற் கூறப்பட்டது. (க)

அகூஉ. அன்பிலன் ஆன்ற துணேயிலன் தான்றுவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.

(இ - ள்.) அன்பு இலன் - ஒருவன் தன் சுற்றத்தின்மே லன் பிலன்; ஆன்ற துணே இலன் - அதுவேயன்றி வலிய துணேயிலன்; தான் துவ்வான் - அதன்மேல் தான் வலியிலன்; ஏதிலான் துப்பு என் பரியும் - அப்பெற்றியான் மேல்வந்த பகைவன் வலியினே யாங்ஙனந் தொலேக்கும்?

சுற்றமும் இருவகைத் துணையும் தன்வலியும் இலனாகலின், அவன் மேற்செல்வார்க்கு வலி வளர்வதன்றித் தொலையாதென்ப தாம். 'துவ்வான்': துவ்வினைச் செய்யான். (உ)

அ௬௩. அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு.

(இ - ள்.) அஞ்சும் - ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும்; அறியான் - அறியவேண்டுமவற்றை யறியான்; அமைவு இலன் - பிறரோடு பொருத்தமிலன்; ஈகலான் - இவற்றின் மேலும் யாவர்மாட்டும் இவறன்மாலையன்; பகைவர்க்குத் தஞ்ச மெளியன் - இப்பெற்றியான் பகைவர்க்கு மிக எளியன்.

'தஞ்சமெளிய' னென்பன ஒருபொருட் பன்மொழி.* இந் நான்கு குற்றமுமுடையான் பகையின்றியும் அழியுமாகலின் 'தஞ்சமெளிய'னென்றார் (௩)

அ௬௪. நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது.

(இ - ள்.) வெகுளி நீங்கான் - ஒருவன் வெகுளியி னீங்கான்; நிறை இலன் - அதுவேயன்றித் தான் நிறையுடைய னல்லன்: எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது - அவன்மேற் சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கும் எளிது.

'நிறை':† மறைபிறரறியாமை. வெகுடன் மாலையனாகலானும், மறை வெளிப்படுத்தலானும், மேற்செல்வார்க்குக் காலமும் இடனும் வலியுமறிந்து சேறல்வேண்டாதாயிற்று. இனி, இனிதென்று பாடமோதி அவன் பகைமை இனிதென் றுரைப்பாருமுளர். (௪)

அ௬௫. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

(இ - ள்.) வழி நோக்கான் - ஒருவன் நீதிநூலை ஓதான்; வாய்ப்பன செய்யான் - அது விதித்த தொழில்களைச் செய்யான்; பழி நோக்கான் - தனக்கு வரும் பழியைப் பாரான்; பண்பு இலன் - தான் பண்புடைய னல்லன்; பற்றார்க்கு இனிது - அவன் பகைவர்க்கு அப் பகைமை யினிது.

---

* 'தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே'—தொல்காப்பியம், சொல் - உ௩௯.

† 'நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை'-கலித்தொகை, ௧௩௩.

தொல்லோரடிப்பட வழங்கிவந்த தாகலான் 'வழி' யென்றும், தப்பாது பயன்படுதலின் 'வாய்ப்பன' என்றும், இக் குற்றங் களுடையான் தானே யழிதலிற் 'பற்றார்க்கினி' தென்றுங் கூறினார். (௫)

அ௬௬. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

(இ-ள்.) காணாச் சினத்தான்-தன்னையும் பிறரையுந் தானறி யாமைக் கேதுவாகிய வெகுளியை உடையான் யாவன்; கழிபெருங் காமத்தான் - மேன்மேல் வளராநின்ற மிக்க காமத்தை உடை யான் யாவன்; பேணாமை பேணப்படும் - அவரது பகைமை விரும் பிக் கொள்ளப்படும்.

காணாத சினமென்பது விகாரமாயிற்று. முன்னோனுக்கு யாவ ரும் பகையாகலானும் ஏனோனுக்குக் காரியந் தோன்றாமையா னும் தாமே அழிவரென்பதுபற்றி, இவர் 'பேணாமை பேணப்படு' மென்றார். (௬)

அ௬எ. கொடுத்துங் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

(இ-ள்.) அடுத்து இருந்து மாணாத செய்வான் பகை - வினை யைத் தொடங்கியிருந்து அதற்கேலாதன செய்வான் பகைமை; கொடுத்தும் கொளல் மன்ற வேண்டும் - சில பொருளழியக் கொடுத்தாயினுங் கோடல் ஒருதலையாக வேண்டும்.

ஏலாதன : மெலியனை வைத்துத் துணிதலும், வலியனை வைத்துத் தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனாற் சில பொருளழியினும் பின் பல பொருளெய்தற்கு ஐயமின்மையின், 'கொளல் வேண்டு மன்ற' வென்றார். இவை ஆறு பாட்டானும் அது சிறப்பு வகையாற் கூறப்பட்டது. (எ)

அ௬அ. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனாம் ஏமாப் புடைத்து

(இ-ள்.) குணன் இலனாய்க் குற்றம் பலவாயின் இனன் இலனாம் - ஒருவன் குணனென்றும் இலனாய் உடைய குற்றம் பல வாயவழி, அவன் துணையிலனாம்; மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து- அவ்விலனாதல்தானே அவன் பகைவர்க்குத் துணையாதலை யுடைத்து.

'குணம்' இறைமாட்சியுட் * சொல்லியன. 'குற்றம்' இவ்வதி காரத்துச் சொல்லியனவும் மற்றும் அத்தன்மையனவும். துணை,

* குறள் - ௩அ௨, ௩அ௩.

சுற்றம், நட்பு, பொருள், படை முதலாயின. பகைவர்க்கு இவற்றான் உளதாம் பயன் தானே உளதாமாகலின், 'ஏமாப்புடைத்' தென்றார். 'இலனு' யென்னுஞ் செய்தெனெச்சம் உடையவென வந்த பெயரெச்சக் குறிப்புக்கொண்டது. (அ)

அ௬௯. செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.

(இ-ள்.) அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின்-நீதியை அறிதலில்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால்; செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா - அவரைச் செறுவார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்கா.

உபாயம் அறிதலும் அறிந்தாற் செய்துமுடிக்கும் திண்மையும் இல்லாதாரே பகைவராதல் கூடாமையிற் 'பெறி' னென்றும், அவரை அறிந்து மேற்சென்றபொழுதே பகையின்மையுஞ் செல்வமும் ஒருங்கே யெய்தலிற் சேணுடை இன்பங்கள் 'இகவா' என்றுங் கூறினர். (௯)

அ௭௦. கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லா தொளி.

(இ-ள்.) கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை - நீதி நூலைக் கல்லாதானொடு பகைத்தலான் வரும் எளிய பொருளை மேவாதானை; எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது - எஞ்ஞான்றும் புகழ் மேவாது.

'சிறுபொருள்' : முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக்கவும் அது மாட்டாதானை வெற்றியான்வரும் புகழ் கூடாதென்பதாம்; ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயனெய்துக என்றவாறாயிற்று. இதற்குப் பிறரெல்லாம் அதிகாரத்தோடு மாறுதல் மேலும் ஒரு பொருள் தொடர்பு படாமலுரைத்தார். இவை மூன்று பாட்டானும் அதனினுய பயன் கூறப்பட்டது. (௧0)

## அ௯. அஅ—பகைத்திறந்தெரிதல்

[அஃதாவது, மாணுத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகி நின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதுமலாக்கற்பாலதும், அவற்றின்கண் செய்வதும், ஏனைக் களைதற்பாலதன்கண் செய்வனவும், களையும் பருவமும், களையாக்காற் படுமிழுக்கும் என்று இத்திறங்களை ஆராய்தல். இரட்டுறமொழித

லென்பதனாற் பகையது திறமும், பகையிடத்தாக்குந் திறமு மென விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாணுப் பகைய வாகலின் இது பகைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.]

௮௭௧. பகையென்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) பகை என்னும் பண்பு இலதனை - பகையென்று சொல்லப்படுந் தீமை பயப்பதனை; ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று - ஒருவன் விளையாட்டின்கண்ணே யாயினும் விரும்புதல் இயற்கைத்தன்று நீதி நூல்.

மாணாத பகையை ஆக்கிக்கோடல் எவ்வாற்றானும் தீமையே பயத்தலிற் 'பண்பில'தென்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினுஞ் செற்றமே விளைந்து மெய்யாமாகலின் 'நகையேயு' மென்றும், வேண்டாமை தொல்லையோரது துணிவென்பார் நீதி நூல்மேல் வைத்துங் கூறினார். அப் பெயர் அவாய்நிலையான் வந்தது. (௧)

௮௭௨. வில்லேர் உழவர் *பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை.

(இ - ள்.) வில் ஏர் உழவர் பகை கொளினும் - ஒருவன் வில்லை ஏராகவுடைய உழவரோடு பகைகொண்டா னாயினும், சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க - சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொள்ளா தொழிக.

'சொல்' ஆகுபெயரான் நீதி நூல்மே னின்றது. வீரம் சூழ்ச்சி யென்னும் ஆற்றல்களுள் வீரமே யுடையாரோடு பகைகொண்டாற் கேடு வருதல் ஒருதலையன்று, வந்ததாயினுந் தனக்கேயாம்; ஏனைச் சூழ்ச்சியுடையாரோடாயின் தன் வழியி னுள்ளார்க்குந் தப்பாது வருதலின், அது கொள்ளினும் இது கொள்ளற்க வென்றார். உம்மையான் அதுவும் ஆகாமை பெறுதும். இரண்டும் உடையாரோடு கொள்ளலாகாமை சொல்ல வேண்டாவாயிற்று. உருவக விசேடம். (௨)

௮௭௩. ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(இ - ள்.) தமியனாய்ப் பல்லார் பகை கொள்பவன் - தான் தனியனாய் வைத்துப் பலரோடு பகைகொள்வான்; ஏமுற்றவரினும் ஏழை - பித்துற்றாரினும் அறிவிலன்.

* புறப்பொருள் வெண்பாமாலை, வாகை - ௫.

தனிமை: சுற்றம் நட்புப் படை முதலிய இன்மை. மயக்கத்தால் ஒப்பாராயினும் ஏமுற்றவர் அதனுல் தீங்கெய்தாமையின், தீங்கெய்துதலுடைய இவனை 'அவரினும் ஏழை' யென்முர். தீங்காவது துணையுள் வழியும் வேறல் ஐயமாயிருக்க; அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறுவேறு பொருதற்கண்ணும் ஒருங்கு பொருதற்கண்ணும் அழிந்தே விடுதல். இவை மூன்று பாட்டானும் பகைகோடற் குற்றம் பொதுவினுஞ் சிறப்பினுங் கூறப்பட்டது. (௩)

அஎச. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற் றுலகு.

(இ-ள்.) பகை நட்பாக்கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக்கண் - வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாகச்செய்து கொண்டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே; தங்கிற்று உலகு-அடங்கிற்று இவ்வுலகு.

வேண்டிய வழியென்பது ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல்: பகை நிலைமையி னீக்குதல். ஒழுகல்: நீதிவழியொழுகல். பெருமை: பொருள், படையென இருவகைத்தாய ஆற்றல். அதன் வழித்தாதற்கு எஞ்ஞான்றுந் திரிபின்மையின், அத்துணிவுபற்றித் 'தங்கிற்' றென்முர். (௪)

அஎரு. தன்றுணை இன்ருல் பகையிரண்டால் தானொருவன்
இன்றுணையாக் கொள்கவற்றின் ஒன்று.

(இ-ள்.) தன் துணை இன்று - தனக்குதவுந் துணையோ எனின் இல்லை; பகை இரண்டு - நலிவு செய்யும் பகையோ எனின் இரண்டு; ஒருவன் தான் அவற்றின் ஒன்று இன் துணையாக் கொள்க - அங்ஙனமாய் நின்றவழி ஒருவனுகிய தான் அப்பகை இரண்டனுட் பொருந்திய தொன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்துகொள்க.

பொருந்தியது: ஏனையதனை வேறற்கு ஏற்றது. அப்பொழுது: அவ் வெல்லும் பொழுது. திரிபின்ருகச் செய்து கொள்க என்பார், 'இன்துணையா' என்முர். 'ஆல்'கள் அசை. இவை இரண்டு பாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது. (௫)

அஎசு. தேறினுந் தேரு விடினும் அழிவின்கண்
தேருன் பகாஅன் விடல்.

(இ-ள்.) தேறினும் தேருவிடினும் - பகைவனை முன் தெளிந்தானுயினும் தெளிந்திலனுயினும்; அழிவின்கண் தேருன்

பகாஅன் விடல் - தனக்குப் புறத்தொரு வினையால் தாழ்வு வந்துழிக் கூடாது நீக்காது இடையே விட்டு வைக்க.

முன்தெளிந்தானாயினும் அப்பொழுது கூடாதொழிகவென்றது, உள்ளாய் நின்று கெடுத்தலேநோக்கி. தெளிந்திலனாயினும் அப்பொழுது நீக்கா தொழிக வென்றது, அவ்வழிவிற்குத் துணையாதலேநோக்கி. இதனான் நொதுமலாக்கற்பாலது கூறப்பட்டது. (௬)

௮௭௭. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவர் அகத்து.

(இ - ள்.) நொந்தது அறியார்க்கு நோவற்க-நொந்ததனைத் தாமாக அறியாத நட்டார்க்குத் தன்னேவு சொல்லற்க; மென்மை பகைவர் அகத்து மேவற்க - வலியின்மை பார்த்திருக்கும் பகைவர் மாட்டு அவ் வலியின்மையை மேலிட்டுக் கொள்ளற்க.

'நோ' வென்னும் முதனிலைத் தொழிற்பெயர், ஈண்டு அது சொல்லுதற்காயிற்று. பகைவர்கண் தவிர்வது கூறுவார், நட்டார்கண் தவிர்வதும் உடன் கூறினார். இதனால் அவ் விருபகுதிக் கண்ணுஞ் செய்வது கூறப்பட்டது. (௭)

௮௭௮. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு.

(இ - ள்.) வகை அறிந்து தற்செய்து தற்காப்ப-தான் வினை செய்யும் வகையை அறிந்து, அது முடித்தற்கேற்பத் தன்னைப் பெருக்கி மறவி புகாமற் றன்னைக் காக்கவே; பகைவர்கண் பட்ட செருக்கு மாயும் - தன் பகைவர் மாட்டுளதாய களிப்புக் கெடும்.

'வகை': வலியனாய்த் தானெதிரே பொருமாறும், மெலியனாய அளவிற் போர் விலக்குமாறும் முதலாயின. பெருக்கல்: பொருள் படைகளாற் பெருகச்செய்தல். களிப்பு: இவற்றான் வேறுமென்றெண்ணி மகிழ்ந்திருத்தல். இவ்விறுகுத லறிந்து தாமே அடங்குவரென்பதாம். இதனாற் களைதற்பாலதன்கண் செய்வன கூறப்பட்டது. (௮)

௮௭௯. இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து

(இ - ள்.) முள் மரம் இளைதாகக் கொல்க - களைய வேண்டுவதாய முள்மரத்தை இளைதாய நிலைமைக்கண் களைக; காழ்த்த இடத்துக் களையுநர் கை கொல்லும்-அன்றியே முதிர்ந்த நிலைமைக் கண் களையலுறிற் களைவார் கையினை அதுதான் களையும்.

களையப்படுவதாய தம் பகையை அது மெலிதாய காலத்தே களைக, அன்றியே வலிதாய காலத்துக் களையலுறின் தம்மை அது தான் களையுமென்பது தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழி தல். இதனாற் களையும் பருவங் கூறப்பட்டது. (௯)

௮௮௦. உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(இ - ள்.) செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார் - தம்மொடு பகைப்பாரது தருக்கினைக் கெடுக்கலாயிருக்க இகழ்ச்சியான் அது செய்யாத அரசர்; உயிர்ப்ப உளரல்லர் மன்ற - பின் உயிர்க்கு மாத்திரத்திற்கும் உளரல்லர் ஒரு தலையாக.

அவர் வலியராய்த் தம்மைக் களைதல் ஒரு தலையாகலின், இறந்தாரே யாவரென்பதாம். அவருயிர்த்த துணையானே தாமி றப்பரெனினு மமையும். இதனாற் களையாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (௧௦)

---

## ௮௯. அகூ—உட்பகை

[அஃதாவது, புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அது வெல்லுந் துணையும் உள்ளாய் நிற்கும் பகை. இதுவும் களையப்படுவதன் பாலதாகலின் பகைத்திறந் தெரிதலின் பின் வைக்கப் பட்டது.]

௮௮௧. நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்.

(இ - ள்.) நிழல் நீரும் இன்னாத இன்னா-ஒருவனுக்கு அனுப விக்கவேண்டுவனவாய நிழலும் நீரும் முன் இனியவேனும் பின் நோய் செய்வன இன்னாவாம்; தமர் நீரும் இன்னா செயின் இன்னா வாம் - அதுபோலத் தழுவ வேண்டுவனவாய தமர் இயல்புகளும் முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்னாவாம்.

நோய்: பெருங்கால் பெருவயிறு முதலாயின. 'தம'ரென்றதனால் உட்பகையாதற் குரியராய ஞாதியரென்ப தறிக. இன்னா செயல்: முன் வெளிப்படாமை நின்று துணைபெற்ற வழிக் கெடுத்தல். (௧)

௮௮௨. வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(இ - ள்.) வாள்போல் பகைவரை அஞ்சற்க - வாள்போல எறிதுமென்று வெளிப்பட்டு நிற்கும் பகைவர் பகையினை அஞ்சா தொழிக; கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக - அங்ஙனம் நில்லாது கேள்போல மறைந்து நிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக.

'பகைவர்' ஆகுபெயர். முன்னே அறிந்து காக்கப்படுதலான் 'அஞ்சற்க' என்றும், அங்ஙனம் அறியவும் காக்கவும் படாமையிற் கெடுதல் ஒருதலை யென்பதுபற்றி 'அஞ்சுக' என்றுங் கூறினர். பின் செய்யும் பகையினுங் கொடிதாகலானும், காக்கலாகாததாக லானும் அஞ்சப்படுவது முன்செய்த அவர் தொடர்பாயிற்று. இவை இரண்டு பாட்டானும் உட்பகை ஆகாதென்பது கூறப் பட்டது. (௨)

௮௮௩. உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(இ - ள்.) உட்பகை அஞ்சித் தற்காக்க-உட்பகையாயினாரை அஞ்சித் தன்னைக் காத்துக்கொண் டொழுகுக; உலைவிடத்து மட்பகையின் மாணத்தெறும் - அங்ஙனம் ஒழுகாத வழித் தனக் கொரு தளர்ச்சி வந்த விடத்துக் குயவன் மட்கலத்தை அறுக்குங் கருவிபோல அவர் தப்பாமற் கெடுப்பர்.

'கா'த்தல் அவரணையாமலும் அவர்க்குடம் படாமலும் பரி கரித்தல். மண்ணைப் பகுக்கும் கருவி 'மட்பகை' யெனப்பட்டது. பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலின், கெடுதல் தப்பாதென்பதாம். (௩)

௮௮௪. மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா
ஏதம் பலவும் தரும்.

(இ - ள்.) மனம் மாணா உட்பகை தோன்றின் - புறந்திருந்தி யதுபோன்று அகந் திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவ தாயின்; இனம் மாணா ஏதம் பலவும் தரும் - அஃது அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக் கேதுவாகிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும்.

அவை சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறு படுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவழித் தான் தேறாமையும், பின் அவற் றான் விளைவனவுமாம். (௪)

௮௮௫. உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவும் தரும்.

(இ - ள்.) உறல் முறையான் உட்பகை தோன்றின் புறத்து உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்

டாவதாயின்; இறல் முறையான் ஏதம் பலவும் தரும். அஃது அவனுக்கு இறத்தல் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும்.

அவை புறப்பகைத் துணையாய் நின்றே அது தோன்றுமற் கோறன் முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் முதலிய உறுப்புக்களைத் தேய்த்தலும் முதலாயின. (௫)

அஅ௬. ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது.

(இ - ள்.) ஒன்றாமை ஒன்றியார்கண் படின்-பகைமை தனக் குள்ளாயினார் மாட்டே பிறக்குமாயின்; பொன்றாமை ஒன்றல் எஞ்ஞான்றும் அரிது - அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான் றும் அரிது.

பொருள் படை முதலிய உறுப்புக்களாற் பெரியனாய காலத் தும் என்பார், 'எஞ்ஞான்று' மென்றார். இவை நான்கு பாட்டா னும் அதனால் தனக்கு வருந் தீங்கு கூறப்பட்டது (௬)

அஅ௭. செப்பின் புணர்ச்சிபோற் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி.

(இ - ள்.) செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் - செப்பினது புணர்ச்சிபோலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினாராயி னும்; உட்பகை உற்ற குடி கூடாது - உட்பகை உண்டாய குடியி லுள்ளார் அகத்துத் தம்முட் கூடார்.

செப்பினது புணர்ச்சி : செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெற்றுழி வீற்று வீற்றாவரென்பதாம். குடி கூடா தென்பதனை நாடு வந்த தென்பதுபோலக் கொள்க. உட்பகை தானுற்ற குடியோடு கூடா தென்றும், உட்பகை உண்டாய குடி அப் பகையோடு கூடாதென் றும் உரைப்பாரு முளர். (௭)

அஅஅ. அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொரு
துட்பகை உற்ற குடி.

(இ - ள்.) உட்பகை உற்ற குடி - முன் வளர்ந்துவந்த தாயி னும் உட்பகை யுண்டாய குடி; அரம் பொருத பொன்போலப் பொருது உரம் தேயும் - அரத்தாற் பொரப்பட்ட இரும்புபோல அதனாற் பொரப்பட்டு வலி தேயும்.

'பொரு' தென்னுஞ் செயப்பாட்டு வினையெச்சம் தேயுமென் னும் வினைகொண்டது. அஃது உரத்தின் தொழிலாயினும் குடிமேலேற்றுதலின், வினைமுதல் வினையாயிற்று. காரியஞ் செய் வதுபோன்று பொருந்தி மெல்ல மெல்லப் பிரிவித்தலான், வலி தேய்ந்துவிடு மென்பதாம். இவை இரண்டு பாட்டானும் அவன் குடிக்கு வரும் தீங்கு கூறப்பட்டது. (அ)

அஅகூ. எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாங் கேடு.

(இ-ள்.) உட்பகை எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்- அரசனது உட்பகை அவன் பெருமையை நோக்க எள்ளின் பிளவை யொத்த சிறுமையுடைத்தே யாயினும்; கேடு உள்ளதாம்- பெருமையெல்லாம் அழிய வருங்கேடு அத னகத்ததாம்.

எத்தனையும் பெரிதாய கேடு தனக்கெல்லை வருந்துணையும் எத்துணையுஞ் சிறிதாய உட்பகையுள்ளே அடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிற்குமென்பதாம். இதனால் அது சிறிதென்று இகழப்படாதென்பது கூறப்பட்டது. (கூ)

அகூ0. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போ டுடனுறைந் தற்று.

(இ-ள்.) உடம்பாடு இலாதவர் வாழ்க்கை- மனப்பொருத் தம் இல்லாதாரோடு கூட ஒருவன் வாழும் வாழ்க்கை; குடங் கருள் பாம்போடு உடன் உறைந்தற்று- ஒரு குடிலுள்ளே பாம் போடு கூட உறைந்தாற்போலும்.

'குடங்க' மென்னும் வடசொல் திரிந்துநின்றது. இடச் சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம்; ஆகவே, அவ்வுவமையால் அவனுயிர்க்கு இறுதி வருதல் ஒருதலை யென்பது பெற்றும். இதனற் கண்ணோடா தவரைக் கடிகவென்பது கூறப்பட்டது. (க0)

---

## அதி. கூ0—பெரியாரைப் பிழையாமை

[அஃதாவது, பெரியராயினுரை அவமதித்து ஒழுகாமை. இரட்டுற மொழித லென்பதனாற் பெரியாரென்பது ஆற்றலாற் பெரியா ராய வேந்தர்மேலும் தவத்தாற் பெரியாராய முனிவர்மேலும் நின்றது. மேற்சொல்லாது எஞ்சி நின்றதாகலின், இது வெகுளியான் வருவனவற்ற திறுதிக்கண் வைக்கப்பட்டது.]

அ௬௯. ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை.

(இ - ள்.) ஆற்றுவார் ஆற்றல் இகழாமை - எடுத்துக்கொண்டன யாவும் முடிக்கவல்லாருடைய ஆற்றல்களை அவமதியாமை; போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை-தங்கண் தீங்கு வாராமற் காப்பார் செய்யுங் காவல்கள் எல்லாவற்றினும் மிக்கது.

'ஆற்ற'லென்பது பெருமை, அறிவு, முயற்சி யென்னும் மூன்றன்மேலும் நிற்றலிற் சாதி யொருமை, இகழ்ந்தவழிக் களைய வல்லாரென்பது தோன்ற 'ஆற்றுவா' ரென்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிற காவல்கள் அவரா னழியு மாகலின் அவ் விகழாமையைத் 'தலை'யாய காவலென்றுங் கூறினார். பொது வகையால் அவ் விருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இதனாற் கூறப்பட்டது. (க)

அ௯௨. பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாராற்
பேரா இடும்பை தரும்.

(இ - ள்.) பெரியாரைப் பேணாது ஒழுகின் - ஆற்றல்களாற் பெரியராயினாரை வேந்தர் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவாராயின்; பெரியாரால் பேரா இடும்பை தரும் - அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும்.

அத் துன்பங்களாவன இருமையினும் இடையறுது வரும் மூவகைத்* துன்பங்களுமாம். அவையெல்லாந் தாமே செய்து கொள்கின்றனரென்பது தோன்ற, ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியுங் கூறினார். பொது வகையால் அவரைப் பிழைத்தற்குற்றம் இதனாற் கூறப்பட்டது. இனிச் சிறப்பு வகையாற் கூறுப. (உ)

அ௯௩. கெடல்வேண்டிற் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு.

(இ - ள்.) அடல்வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு - வேற்றுவேந்தரைக் கோறல் வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்ய வல்ல வேந்தர்மாட்டுப் பிழையினை; கெடல் வேண்டின் கேளாது செய்க - தான் கெடுதல் வேண்டினானாயின் ஒருவன் நீதி நூலைக் கடந்து செய்க.

---

* தன்னை, பிறவுயிர்களை, தெய்வத்தைப்பற்றி வருவன.

அப்பெரியாரைக் "காலனுங் காலம் பார்க்கும் பாராது, வேலீண்டு தானை விழுமியோர் தொலைய, வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தர்"* என்றார் பிறரும். நீதிநூல் செயலாகா தென்று கூறலின், 'கேளா' தென்றார். (௩)

அ௯௪. கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்
காற்றாதார் இன்னா செயல்.

(இ - ள்.) ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னாசெயல்-மூவகை யாற்றலும் உடையார்க்கு அவையில்லாதவர் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல்; கூற்றத்தைக் கையால் விளித்தற்று - தானேயும் வரற்பாலனாய கூற்றுவனை அதற்குமுன்னே கைகாட்டி அழைத்தாலொக்கும்.

'கையால் விளித்தல்' இகழ்ச்சிக் குறிப்பிற்று. தாமேயும் உயிர் முதலிய கோடற் குரியாரை அதற்கு முன்னே விரைந்து தம்மேல் வருவித்துக் கொள்வார் இறப்பினது உண்மையும் அண்மையுங் கூறியவாறு. இவை இரண்டு பாட்டானும் வேந்தரைப் பிழைத்தலின் குற்றங் கூறப்பட்டது. (௪)

அ௯௫. யாண்டுச்சென் றியாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

(இ - ள்.) வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர் - பகைவர்க்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனாற் செறப்பட்ட அரசர்; யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் - அவனைத் தப்பி எங்கே போயுளராவர்? ஓரிடத்தும் உளராகார்.

இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. 'வெந்துப் பின்வேந்' தாகலால் தன்னிலம் விட்டுப் போயவர்க்கு இடங் கொடுப்பாரில்லை; உளராயின் இவர் இனி யாகாரென்பது நோக்கி அவனோடு நட்புக்கோடற் பொருட்டும் தானே வந்தெய்திய அவருடைமை வௌவுதற் பொருட்டுங் கொல்வர், அன்றெனின் உடனே அழிவரென்பன நோக்கி, 'யாண்டுச்சென் றியாண்டு முளராகார்' என்றார். இதனால் அக்குற்றமுடையார் அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யாரென்பது கூறப்பட்டது. (௫)

அ௯௬. எரியாற் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.†

* புறநானூறு - ௪௧. † குறள் - ௨௯.

(இ - ள்.) எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் - காட்டிடைச் சென்முன் ஒருவன் ஆண்டைத் தீயாற் சுடப்பட்டானுயினும் ஒருவாற்ருன் உயிருய்தல் கூடும்; பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார் - தவத்தாற் பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்ருனும் உயிருய்யார்.

தீ முன் உடம்பினைக் கதுவி அது வழியாக உயிர்மேற் சேறலின் இடையே உய்யவுங் கூடும். அருந்தவர் வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்குங் காத்தலரிதாகலின், அது கூடாதாகலான் அதற்கேதுவாய பிழை செய்யற்க என்பதாம். (௬)

அ௬எ. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின்.

(இ - ள்.) தகை மாண்ட தக்கார் செறின் - சாப அருள்கட்கேதுவாய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வாராயின்; வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும் - உறுப்பழகு பெற்ற அவனரசாட்சியும் ஈட்டிவைத்த பெரும் பொருளும் என்பட்டுவிடும் ?

உறுப்பு: அமைச்சு, நாடு, அரண், படையென இவை. 'செறி' னென்பது அவர் செருமை தோன்ற நின்றது. இவ்வெச்சத்தான் முன் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். அரசர் தஞ் செல்வக் களிப்பான் அருந்தவர் மாட்டுப் பிழை செய்வராயின், அச்செல்வம் அவர் வெகுளித்தியான் ஒரு கணத்துள்ளே வெந்துவிடும் என்பதாம். (எ)

அ௬அ. குன்றன்னர் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னர்* மாய்வர் நிலத்து.

(இ - ள்.) குன்று அன்னர் குன்ற மதிப்பின் - குன்றத்தை ஒக்கும் அருந்தவர் கெட நினைப்பாராயின்; நிலத்து நின்றன்னர் குடியொடு மாய்வர் - அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்ருற் போலுஞ் செல்வர் தங் குடியொடும் மாய்வர்.

வெயில் மழை முதலிய பொறுத்தலும் சலியாமையும் உள்ளிட்ட குணங்களுடைமையின், 'குன்றன்ன' ரென்ருர். "மல்லன் மலையனைய மாதவர்"† என்ருர் பிறரும். நிலைபெற்ருர் போறலாவது இறப்பப் பெரியராகலின் இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லை யென்று கண்டாராற் கருதப்படுதல். (அ)

* உ௬ ஆம் குறள் உரை.
† சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம் - க௬க.

அ௬௯. ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(இ - ள்.) ஏந்திய கொள்கையார் சீறின் - காத்தற்கருமை யான் உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வராயின்; வேந்த னும் இடை வேந்து முரிந்து கெடும் - அவராற்றலான் இந்திரனும் இடையே தன் பதம் இழந்து கெடும்.

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"* என்றார் பிறரும். நகுட னென்பான் இந்திரன் பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழை செய, அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தானென்ப தனை உட்கொண்டு, இவ்வாறு கூறினார். இவை நான்கு பாட்டா னும் முனிவரைப் பிழைத்தலின் குற்றம் கூறப்பட்டது. (௯)

௯00. இறந்தமைந்த சார்புடையர் ஆயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

(இ - ள்.) சிறந்து அமைந்த சீரார் செறின் - கழிய மிக்க தவத்தினையுடையார் வெகுள்வராயின்; இறந்து அமைந்த சார்பு உடையராயினும் உய்யார் - அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரிய சார்பு உடையராயினும், அதுபற்றி உய்யமாட்டார்,

'சார்பு' : அரண், படை, பொருள், நட்பென இவை. அவை யெல்லாம் வெகுண்டவரது ஆற்றலால் திரிபுரம்போல அழிந்து விடுமாகலின், 'உய்யா'ரென்றார். சீருடையது 'சீ'ரெனப்பட்டது. இதனால் அக் குற்றமுடையார் சார்புபற்றியும் உய்யாரென்பது கூறப்பட்டது. (௧0)

---

## அதி. ௯௧—பெண்வழிச்சேறல்

[இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும் ஆக்கஞ் சிதைத்தல் அழிவுதலைத்தருத லென்னுந் தொழில்களாற் பகையோடொத்தலிற் பகைப்பாற்படுவனவா மாகலான் அவற்றைப் பகைப்பகுதிய திறுதிக்கட் கூறுவான் தொடங்கி முதற்கண் பெண்வழிச்சேறல் கூறுகின்றார். அஃதாவது, தன் வழி ஒழுகற்பாலளாய இல்லாள்வழியே தான் ஒழுகுதல்.]

௯0௧. மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது.

---

* தொல். பொருள், அகம் - ௫.

(இ - ள்.) மனை விழைவார் மாண் பயன் எய்தார் - இன்பங் காரணமாகத் தம்மனையாளை விழைந்து அவள் தன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன் துணையாய அறத்தினை எய்தார்; வினை விழைவார் வேண்டாப்பொருளும் அது - இனிப் பொருள்செய்தலை முயல்வார் அதற்கிடையீடென்று இகழும் பொருளும் அவ்வின்பம்.

மனையும் விழைதலும் பயனும் ஆகுபெயர். அவ்வின்பம் அவள் தன்மையராதற்கு ஏதுவாய இன்பம். அஃது அவளாற் பயனுய அறத்திலும் அவ்வறத்திற்குந் தனக்கும் ஏதுவாய பொருளினுஞ் செல்ல விடாமையின், விடற்பாற் றென்பதாம். (௧)

௯0௨. பேணது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணுக நாணுத் தரும்.

(இ - ள்.) பேணது பெண் விழைவான் ஆக்கம் - தன்னுண் மையைவிட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்திநின்ற செல்வம்; பெரியது ஓர்நாண் ஆக நாணுத் தரும் - இவ்வுலகத்து ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாணுண்டாகத் தனக்கும் நாணுதலைக் கொடுக்கும்.

எய்தி நின்றதாயிற்று, படைக்கும் ஆற்றலிலனுகலின். அச்செல்வத்தால் ஈதலும் துய்த்தலும் முதலிய பயன்கொள்வாள் அவளாகலின், அவ்வாண்மைச் செய்கை அவள் கண்ண தாயிற் றென்று ஆண்பாலார் யாவரும் நாண, அதனுல் தன்னுண்மை இன்மை அறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கிப் 'பெரிய தோர் நாணுக நாணுத்தரு' மென்ருர். இவை இரண்டு பாட்டா னும் மனை விழைதற் குற்றங் கூறப்பட்டது. (௨)

௯0௩. இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

(இ - ள்.) இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை - ஒருவன் இல்லாள் மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம்; நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும் - அஃதிலராய நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்துங் கொடுக்கும்.

அவள்தான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவளை அஞ்சு தல் இயல்பின்மையாயிற்று. அங்ஙனமஞ்சி யொழுகுதலின், அவளை நியமிப்பாரில்லையாம். ஆகவே, எல்லாக் குற்றமும் விளையு மென்பது நோக்கி, 'எஞ்ஞான்றும் நாணுத்தரு' மென்ருர். (௩)

௯௰௪. மனையாளை யஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(இ - ள்.) மனையாளை அஞ்சும் மறுமை இலாளன் - தன் மனையாளை யஞ்சி ஒழுகுகின்ற மறுமைப்பய னில்லாதானுக்கு; வினை ஆண்மை வீறு எய்தல் இன்று - வினையை ஆளுந்தன்மை உண்டாய வழியும் நல்லோராற் கொண்டாடப்படாது.

உண்டாய வழியுமென்பது அவாய்நிலையான் வந்தது. இல்லறஞ் செய்தற்குரிய நன்மையின்மையின் 'மறுமையிலாள'னென்றும் வினையை யாளுந் தன்மை தன்றன்மையில்லாத அவனுன் முடிவு போகாமையின் 'வீறெய்தலின்'றென்றுங் கூறினர். (௪)

௯௰௫. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

(இ - ள்.) இல்லாளை அஞ்சுவான் - தன் மனையாளை யஞ்சுவான்; நல்லார்க்கு நல்ல செயல் எஞ்ஞான்றும் அஞ்சும் - தான் தேடிய பொருளேயாயினும் அதனுல் நல்லார்க்கு நல்லன செய்தலை எஞ்ஞான்றும் அஞ்சா நிற்கும்.

'நல்லார்': தேவர், அருந்தவர், சான்றோர், இருமுதுகுரவர் முதலாயினுரும் நல்விருந்தினரும். நல்லன செய்தல்: அவர் விரும்புவன கொடுத்தல். அது செய்யவேண்டும் நாள்களினு மென்பார், 'எஞ்ஞான்று' மென்றார். "இல்லாளை யஞ்சி விருந்தின் முகங் கொன்ற நெஞ்சிற், புல்லாளனுக"* என்றார் பிறரும். (௫)

௯௰௬. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லாள்
அமையார்தோ ளஞ்சு பவர்.

(இ - ள்.) இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர் - தம் மில்லாளுடைய வேய்போலுந் தோளினை அஞ்சுவார்; இமையாரின் வாழினும் பாடு இலர் - வீரத்தால் துறக்கமெய்திய அமரர் போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும், ஆண்மை யிலர்.

அமரர்போல வாழ்தலாவது பகைத்த வீரர் தோள்களை யெல்லாம் வேறலான் நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின் 'வாழினு' மென்றார். 'அமையார்தோ' ளெனவே, அஞ்சுதற்காரணத்தது எண்மை கூறியவாறு. வீரர் தோள்களை வென்றாராயினும் இல்லாள் தோள்களை அஞ்சுவார் ஆண்மையில ரென்பதாம். இவை நான்கு பாட்டானும் அவளை யஞ்சுதற் குற்றங் கூறப்பட்டது. (௬)

* சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம் - உ௧௮.

கூ0எ. பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின்* நாணு
பெண்ணே பெருமை உடைத்து. [டைப்

(இ - ள்.) பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின் - நாணின்றித் தன்னில்லாளது ஏவல்தொழிலைச் செய்து திரிகின்றவனது ஆண் தன்மையின்; நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து - நாணினையுடைய அவள் பெண்தன்மையே மேம்பாடுடைத்து.

'நாணுடைப் பெண்'ணென வேண்டாது கூறியது அவளேவல் செய்வானது நாணின்மை முடித்தற்காதலின், அம்மறுதலைத் தொழில் வருவிக்கப்பட்டது. 'ஏவல்' ஆகுபெயர். இறுதிக்கண் 'பெண்'ணென்பதூஉம் அது. ஏவல் செய்வித்துக்கோடற் சிறப்புத் தோன்றப் 'பெண்ணே'யெனப் பிரித்தார். (எ)

கூ0அ. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

(இ - ள்.) நன்னுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர் - தாம் வேண்டியவாறன்றித் தம் மனையாள் வேண்டியவாறு ஒழுகுவார்; நட்டார் குறை முடியார் - தம்மொடு நட்புச் செய்தார் உற்ற குறை முடிக்கமாட்டார்; நன்று ஆற்றார் - அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ் செய்யவுமாட்டார்.

'நன்னுதலா' ளென்பதனை "அமையார் தோள்"† என்புழிப் போலக் கொள்க. அவள்தானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலுங் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டாரென்பதாம். (அ)

கூ0கூ. அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்கண் இல்.

(இ - ள்.) அறவினையும் - அறச்செயலும்; ஆன்ற பொருளும் - அது முடித்தற்கு ஏதுவாய பொருட்செயலும்; பிற வினையும் - அவ்விரண்டின் வேறாய இன்பச் செயல்களும்; பெண் ஏவல் செய்வார்கண் இல் - தம் மனையாள் ஏவல்செய்வார்மாட்டு உளவாகா.

---

* பெண்மை ஆண்மைகட்குப் பொருள் கட்புலனாகிய அமைதித் தன்மை, ஆளுந்தன்மை என்பர் நச்சினார்க்கினியர்.

† குறள் - கூ0கூ.

புலன்கள் ஐந்தாகலின், 'பிறவினை' எனப் பன்மையாயிற்று. அவை நோக்கி அறச்செயல் பொருட்செயல்கள் முன்னே ஒழிந் தார்க்குத் தலைமை அவள் கண்ணதாகலின், பின் அவைதாமும் இலவாயின என்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக் கூறினர். இவை மூன்று பாட்டானும் அவ ளேவல் செய்தற்குற்றங் கூறப் பட்டது. (௯)

௯௧௦. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல்.

(இ - ள்.) எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு-கருமச் சூழ்ச்சிக்கண் சென்ற நெஞ்சத்தினையும் அதனினாய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு; பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல்-மனையாளைச் சேர்தலான் விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது.

"இடனில் பருவத்தும்"* எனவும், "இடனின்றி இரந் தோர்க்கு"† எனவும் வந்தமையான், 'இட'னென்பது அப்பொருட் டாதலறிக. இளமைக் காலத்து மென்பார், 'எஞ்ஞான்று'மென்றார். அப்'பேதைமை'யாவது: மேற்சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல் செய்த லென்னும் மூன்றற்குங் காரணமாயது. எதிர்மறைமுகத் தான் அம்மூன்றும் இதனல் தொகுத்துக் கூறப்பட்டன. (௧௦)

---

## அதி. ௯௨—வரைவின்மகளிர்

[அஃதாவது, தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதா ரென்னும் வரைவிலாத மகளிரது இயல்பு ; ஆதலால் தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.]

௯௧௧. அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குந் தரும்.

(இ - ள்.) *அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்*-ஒருவனை அன்புபற்றி விழையாது பொருள்பற்றி விழையும் மகளிர்; *இன்சொல் இழுக்குத் தரும்*-அது கையுறுந் துணையும் தாம் அன்புபற்றி விழைந்தாராகச் சொல்லும் இனிய சொல் அவனுக்குப் பின் இன்னாமையைப் பயக்கும்.

---

* குறள் - ௨௧௮. † கலித்தொகை - ௨.

'பொரு'ளென்புழி இன் விகாரத்தால் தொக்கது. ஆய்ந்த தொடியினை உடையா ரென்றதனானும், இனிய சொல் என்றதனானும், அவர் கருவி கூறப்பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று பின் வறுமை பயத்தலின், அது கொள்ளற்க என்பதாம். (க)

௯௧௨. பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்.

(இ-ள்.) பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்புஇல் மகளிர் - ஒருவனுக்கு உள்ள பொருளை அளந்தறிந்து அஃதெய்துந் துணையும் தம் பண்புடைமை சொல்லும் பண்பில்லாத மகளிரது; நயன் தூக்கி நள்ளாவிடல் - ஒழுகலாற்றினை ஆராய்ந்தறிந்து அவரைப் பொருந்தாது விடுக.

பண்பு சொல்லின்கணல்லது தங்கட் கிடவாமை தோன்றப் 'பண்பின் மகளி' ரென்றும், அவர்க்கு அது சாதி தருமமாதல் நூலானேயன்றி அவர் செயலானும் அறிந்தென்பார் 'நயன் தூக்கி' யென்றும், அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமென்பது தோன்றப் பின் 'நள்ளாவிட'லென்றும் கூறினார். (உ)

௯௧௩. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ அற்று.

(இ-ள்.) பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம்-கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொதுமகளிரது பொய்ம்மையையுடைய முயக்கம்; இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇ அற்று - பிணமெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன்னறியாத பிணத்தைத் தழுவினாற்போலும்.

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்துஞ் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதானை முயங்குங்கால் அவர் குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்பார், காணப்படாததோர் இடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர் குறிப்போ டொக்குமெனவே. அகத்தால் அருவராநின்றும் பொருளைநோக்கிப் புறத்தால் தழுவுவர்; இதனை யொழிக வென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் சொல்லும் செயலும் பொய் யென்பது கூறப்பட்டது. (௩)

௯௧௪. பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர்.

(இ - ள்.) பொருட் பொருளார் புன்னலம் - இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லிய நலத்தை; அருட் பொருள் ஆயும் அறிவினவர் தோயார் - அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினையுடையார் தீண்டார்.

அற முதலிய நான்கும் பொருளெனப்படுதலின், 'பொருட் பொருள்' 'அருட் பொரு'ளென விசேடித்தார். புன்மை: இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்ந்நலம் மறுதலையாகலின், 'தோயா'ரென்பதாம். (௪)

௯௧௫. **பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்**
**மாண்ட அறிவி னவர்.**

(இ - ள்.) மதி நலத்தின் மாண்ட அறிவினவர் - இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கை அறிவினை உடையார்; பொதுநலத்தார் புன்னலம் தோயார்-பொருள்கொடுப்பார்க் கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார்.

மதிநன்மை: முற்பிறப்புக்களிற் செய்த நல்வினைகளான் மனந் தெளிவுடைத்தாதல். அதனானன்றிக் கல்வியறிவு மாட்சிமைப்படாமையின் 'மதிநலத்தின் மாண்ட அறிவினவ'ரென்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொதுமையும் மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின், 'தோயா'ரென்றுங் கூறினார். (௫)

௯௧௬. **தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள்.**

(இ - ள்.) தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள் - ஆடல், பாடல் அழ கென்பனவற்றாற் களித்துத் தம் புல்லிய நலத்தை விலை கொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர் தோளினை; தம் நலம் பாரிப்பார் தோயார் - அறிவொழுக்கங்களானுய தம் புகழை உலகத்துப் பரப்புதற்குரியஉயர்ந்தோர் தீண்டார்.

ஆடல் முதலிய மூன்றுமுடைமை அவர்க்கு மேம்பாடாகலின், 'தகை' யென்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியுமாகலின், அவற்றாற் புகழ் பரப்புவார் 'தோயா'ரென்றுங் கூறினார். 'தந்நல' மென்புழி நலம் ஆகுபெயர். இவை மூன்று பாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டா ரென்பது கூறப்பட்டது. (௬)

௯௧எ. நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

(இ - ள்.) நெஞ்சின் பிறபேணி புணர்பவர் தோள்-நெஞ்சினுற் பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் மகளிர் தோள்களை; நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் - நிறையால் திருந்திய நெஞ்சமில்லாதார் தோய்வர்.

பொருளும் அதனுற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு அவற்றின்மேலதாகலின், புணர்வது உடம்புமாத்திர மென்ப தறிந்து அதுவழி ஓடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையின், அஃதிலார் 'தோய்வ' ரென்முர். (எ)

௯௧அ. ஆயும் அறிவினர் அல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(இ - ள்.) மாய மகளிர் முயக்கு-உருவு சொற் செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளிரது முயக்கத்தை, ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப-அவ்வஞ்சனை ஆராய்ந்தறியும் அறிவுடையரல்லார்க்கு அணங்குதாக் கென்று சொல்லுவர் நூலோர்.

'அணங்கு' காம நெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்கு - தீண்டல். இவ்வுருவகத்தான் அம்முயக்கம் முன் இனிது போன்று பின் உயிர்கோடல் பெற்றும். இது நூலோர் துணிவென்பது தோன்ற அவர்மேல் வைத்துக் கூறினர். அப்பெயர் அவாய் நிலையான் வந்தது. (அ)

௯௧௯. வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

(இ - ள்.) வரைவு இலா மாண் இழையார் மென்தோள் - உயர்ந்தோர் இழிந்தோர் என்னுது விலை கொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லிய தோள்கள்; புரை இலாப் பூரியர்கள் ஆழும் அளறு - அக்குற்றத்தை அறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கழுந்து நிரயம்.

உயர்தற் கேதுவாகலின், 'புரை' யெனப்பட்டது. சாதியானிழிந்தாரின் நீக்குதற்குப் 'புரையிலாப் பூரியர்க'ளென்றும், அவர் ஆழ்தற்கேது உருவ முதலிய மூன்றுமென்பது தோன்ற 'மாணிழையார் மென்றோ' ளென்றும், அவர்க்கு அளற்றினை இடையின்றிப் பயக்குமென்பது தோன்ற உருவகமாக்கியுங் கூறினர். (௯)

* குறள் - ௧0அஉ.

௯௨0 இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(இ - ள்.) இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்-கவர்த்த மனத்தினையுடைய மகளிரும் கள்ளும் சூதுமென இம் மூன்றும்; திரு நீக்கப்பட்டார் தொடர்பு-திருமகளால் துறக்கப்பட்டார்க்கு நட்பு.

'இருமனம்' ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒரு காலத்தே உடைய மனம். 'கவறு' ஆகுபெயர். ஒத்த குற்றத்த ஆகலின் கள்ளும் சூதும் உடன் கூறப்பட்டன. வட நூலாரும் இக் கருத்தான் விதனமென உடன் கூறினர். வருகின்ற அதிகாரமுறைமையும் இதனானறிக. திணைவிரா யெண்ணியவழிப் பன்மைபற்றி முடிபுகோடலின், * ஈண்டு, அஃறிணையாற் கொண்டது. திருநீக்கப் பட்டமை இக்குறிகளான் அறியப்படு மென்பதாம். இவை நான்கு பாட்டானும் சேர்வார் இழிந்தோ ரென்பது கூறப்பட்டது. (௧0)

---

## அதி. ௯௩—கள்ளுண்ணாமை

[இனி, ஒழுக்கமும் உணர்வும் அழித்தற்கண் அவ்வரைவில் மகளிரோடொப்பதாய கள்ளினை உண்ணாமையது சிறப்பு எதிர் மறைமுகத்தாற் கூறுகின்றார்.]

௯௨௧. உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்.

(இ - ள்.) கட் காதல் கொண்டு ஒழுகுவார் - கள்ளின்மேற் காதல்செய் தொழுகு மரசர்; எஞ்ஞான்றும் உட்கப்படார் - எஞ்ஞான்றும் பகைவரான் அஞ்சப்படார்; ஒளி இழப்பர் - அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியினையும் இழப்பர்.

அறிவின்மையால் பொருள்படை முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார்; தம் முன்னோரான் எய்திநின்ற ஒளியினையும் இகழற்பாட்டான் இழப்ப ரென்பதாம். இவை இரண்டானும் அரசு இனிது செல்லாதென்பது இதனாற் கூறப்பட்டது. (௧)

௯௨௨. உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

(இ - ள்.) கள்ளை உண்ணற்க - அறிவுடையராயினர் அஃதிலராதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணொழிக; உணில் சான்றோ

* தொல். சொல். ௫௰.

ரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க - அன்றியே உண்ணல் வேண்டுவார் உளராயின், நல்லோரால் எண்ணப்படுதலை வேண்டா தார் உண்க.

பெறுதற்கரிய அறிவைப் பெற்றுவைத்தும் கள்ளான் அழித்துக் கொள்வாரை இயல்பாகவே அஃதில்லாத விலங்குகளுடனும் எண்ணுராகலின், 'சான்ருேரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க' என்ருர். (௨)

௯௨௩. ஈன்ருள் முகத்தேயும் இன்னுதால் என்மற்றுச்
சான்ருேர் முகத்துக் களி.

(இ - ள்.) ஈன்ருள் முகத்தேயும் களி இன்னுது-யாது செய்யினும் உவக்குந் தாய் முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னுதாம்; மற்றுச் சான்ருேர் முகத்து என் - ஆனபின், குற்றம் யாதும் பொருத சான்ருேர் முன்பு களித்தல் அவர்க் கியாதாம்?

மன மொழி மெய்கள் தம்வயத்த அன்மையான் நாணழியும்: அழியவே, ஈன்ருட்கும் இன்னுதாயிற்று; ஆனபின், கள் இருமையுங் கெடுத்த லறிந்து சேய்மைக்கண்ணே கடியுஞ் சான்ருேர்க்கு இன்னுதாதல் சொல்ல வேண்டுமோ என்பதாம். (௩)

௯௨௪. நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு.

(இ - ள்.) கள் என்னும் பேணுப் பெருங் குற்றத்தார்க்கு - கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவரும் இகழும் மிக்க குற்றத்தினையுடையாரை; நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் - நாணென்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற் கஞ்சி அவர்க் கெதிர்முக மாகாள்.

காணுதற்கு மஞ்சி உலகத்தார் சேய்மைக்கண்ணே நீங்குவராகலிற் 'பேணு' வென்றும், பின் ஒருவாற்ருனும் கழுவப்படாமையிற் 'பெருங்குற்ற' மென்றும், இழிந்தோர்பால் நில்லாமையின் 'நல்லா' ளென்றுங் கூறினுர். பெண்பாலாக்கியது வடமொழி முறைமையைப்பற்றி.* இவை மூன்று பாட்டானும் ஒளியிழத்தற் காரணங் கூறப்பட்டது. (௪)

௯௨௫. கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

* பிரயோக விவேகம், திங்குப்படலம்-௧௫.

(இ - ள்.) பொருள் கொடுத்து மெய் அறியாமை கொளல் - ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளால் தனக்கு மெய்ம் மறப்பினைக் கொள்ளுதல்; கை அறியாமை உடைத்து - அவன் பழவினைப் பயனுய செய்வதறியாமையைத் தனக்குக் காரணமாக உடைத்து.

தன்னை அறியாமை சொல்லவே, ஒழிந்தனயாவும் அறியாமை சொல்லல் வேண்டா வாயிற்று. கை அப்பொருட்டாதல் "பழனுடைப் பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று"* என்பதனானு மறிக. 'அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக் கொள்ளுங்கால் தீயது கொள்ளாமையின்' 'மெய்யறியாமை கொளல்' முன்னை யறியாமையான் வந்த தென்பதாம். (ரு)

௯௨௬. துஞ்சினர் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(இ - ள்.) துஞ்சினர் செத்தாரின் வேறு அல்லர் - உறங்கினார் செத்தாரின் வேறுதல் உடையரேனும், அக்காலத்தறிவின்மையான் வேறெனப்படார்; கள் உண்பவர் எஞ்ஞான்றும் நஞ்சு உண்பார் - அவ்வாறே கள்ளுண்பார் நஞ்சுண்பாரின் வேறுதல் உடையரேனும், எக்காலத்தும் அறிவின்மையான் வேறெனப்படார் அவர்தாமே யாவர்.

உறங்கினர்க்கும் கள்ளுண்பார்க்கும் வேற்றுமை உயிர்ப்பு நிற்றல். வேறுதலும் வேறன்மையு முடைமை காட்டற்கு உவமை புணர்க்கப்பட்டது. இதனை நிரனிறையாக்கி, திரிக்கப்படுதலால் உறங்கினரும் நஞ்சுண்பாரு மொப்பர்; கைவிடப்படுதலாற் செத்தாருங் கள்ளுண்பாரும் ஒப்ப ரென்றுரைப்பாரு முளர். அதிகாரப் பொருள் பின்னதாயிருக்க யாதும் இயைபில்லாத நஞ்சுண்பார்க்கு உவமை புணர்த்து ஈண்டுக் கூறல் பயனின்றாகலானும், சொற்கிடக்கை நிரனிறைக் கேலாமையானும் அஃதுரையன்மை யறிக. இவை இரண்டு பாட்டானும் அவர தறிவிழத்தற் குற்றங் கூறப்பட்டது. (சு)

௯௨௭. உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(இ - ள்.) கள் ஒற்றிக் கண் சாய்பவர் - கள்ளை மறைந்துண்டு அக்களிப்பால் தம்மறிவு தளர்வார்; உள்ளூர் உள் ஒற்றி எஞ்

* புறநானூறு - ௨௦௧.

ஞான்றும் நகப்படுவர் - உள்ளூர் வாழ்பவரான் உள்நிகழ்கின்ற துய்த்துணர்ந்து எஞ்ஞான்றும் நகுதல் செய்யப்படுவர்.

'உள்ளூர்' ஆகுபெயர். உண்டென்பது அவாய்நிலையான் வந்தது. உய்த்துணர்தல் தளர்ச்சியாற் களிப்பினை உணர்ந்து அதனாற் கள்ளுண்ட துணர்தல். (எ)

கூ௨அ. களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉம் ஆங்கே மிகும்.

(இ - ள்.) களித்து அறியேன் என்பது கைவிடுக - மறைந்துண்டுவைத்து யான் கள்ளுண்டறியேனென்று உண்ணுதபொழுது தம் ஒழுக்கங் கூறுதலை யொழிக; நெஞ்சத்து ஒளித்ததூஉம் ஆங்கே மிகும் - அவ் வுண்டபொழுதே பிறரறியின் இழுக்காமென்று முன் நெஞ்சத்தொளித்த குற்றமும் முன்னையளவின் மிக்கு வெளிப்படுதலான்.

'களித்தறியே' னெனக் காரியத்தாற் கூறினர். இவை இரண்டு பாட்டானும் அது மறைக்கப்படாதென்பது கூறப்பட்டது. (அ)

கூ௨கூ. களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ அற்று.

(இ - ள்.) களித்தானைக் காரணம் காட்டுதல் - கள்ளுண்டு களித்தான் ஒருவனை இஃ தாகாதென்று பிறனொருவன் காரணங் காட்டித் தெளிவித்தல்; நீர்க்கீழ்க் குளித்தானைத் தீத்துரீஇ அற்று - நீருள் மூழ்கினான் ஒருவனைப் பிறனொருவன் விளக்கினால் நாடுதலை யொக்கும்.

'களித்தானை' யென்னும் இரண்டாவது "அறிவுடை அந்தணன் அவனைக்காட் டென்றானே"* என்புழிப்போல நின்றது. நீருள் விளக்குச் செல்லாதாற்போல அவன் மனத்துக் காரணஞ் செல்லாதென்பதாம். இதனான் அவனைத் தெளிவித்தல் முடியாதென்பது கூறப்பட்டது. (கூ)

கூருo. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.

(இ - ள்.) கள் உண்ணாப் போழ்தில் களித்தானை - கள்ளுண்பான் ஒருவன் தான் அஃதுண்ணாது தெளிந்திருந்த பொழுதின் கண் உண்டு களித்த பிறனைக் காணுமன்றே; காணுங்கால் உண்ட

* கலித்தொகை - எ௨.

தன் சோர்வு உள்ளான்கொல் - காணுங்கால் தானுண்டபொழுது உளதாஞ் சோர்வினை அவன் சோர்வால் அதுவும் இற்றென்று கருதான் போலும்.

'சோர்வு': மன மொழி மெய்கள் தன்வயத்த அல்லவாதல். கருதலளவையான் அதன் இழுக்கினை* உய்த்துணரின் ஒழியுமென இதனால் அஃதொழிதற்காரணங் கூறப்பட்டது. (௧௦)

---

## அதி. ௯௪—சூது

[இனி, அக் கள்ளுண்டல்போல அறம் பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணியுழத்தலுங் கூறுவான் தொடங்கி, முதற்கண் சூதின தியல்பு கூறுகின்றார்.]

௯௩௧. வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி அற்று.

(இ - ள்.) வென்றிடினும் சூதினை வேண்டற்க - தான் வெல்லும் ஆற்றலுடையனாயினும் சூதாடலை விரும்பாதொழிக; வென்றதூஉம் தூண்டிற் பொன் மீன் விழுங்கியற்று - வென்று பொருளெய்துவார் உளராலெனின் அவ்வென்ற பொருள்தானும் இரையான் மறைந்த தூண்டில் இரும்பினை இரையெனக் கருதி மீன் விழுங்கினாற்போலும்.

வேறல் ஒருதலையன்மையின் 'வென்றிடினு' மென்றும் கருமங்கள் பலவுங் கெடுதலின் 'வேண்டற்க' வென்றுங் கூறினார். எய்திய பொருள் சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் தளையென்பதூஉம், அதனாற் பின் துயருழத்தலும், உவமையாற் பெற்றாம். (௧)

௯௩௨. ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.

(இ - ள்.) ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் - அத்தூண்டிற் பொன்போன்ற ஒன்றனை முன்பெற்று இன்னும் பெறுதும் என்னுங் கருத்தால் நூற்றினை இழந்து வறியராஞ் சூதர்க்கும்; நன்று எய்தி வாழ்வது ஓராறு உண்டாங்கொல் - பொருளால் அறனும் இன்பமும் எய்தி வாழ்வதொரு நெறி உண்டாமோ? ஆகாது.

அவ்வாற்றாற் பொருளிழந்தே வருதலான், அதனாலெய்தும் பயனும் அவர்க்கில்லை யென்பதாம். (௨)

---

* 'அவனிழுக்கினை' என்பதும் பாடம்.

௬௩௩. உருளாயம் ஓவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

(இ-ள்.) உருள் ஆயம் ஓவாது கூறின் - உருளுங் கவற்றின்கட்பட்ட ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின்; பொருள் ஆயம் போஒய்ப் புறமே படும்-அரசனீட்டிய பொருளும் அவன் பொருள் வருவாயும் அவனை விட்டுப்போய்ப் பகைவர் கண்ணே தங்கும்.

கவற்றின துருட்சியை அதனினுய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடலை அது கூறலாகிய காரணத்தின்மே லிட்டுங் கூறினர். 'பொருளாய' மென்பது உம்மைத்தொகை. 'ஆயம்' வடமொழித் திரிசொல். காத்தற்கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனுக லின் அவை இரண்டும் பகைவர்பாற் செல்லுமென்பதாம். (௩)

௬௩௪. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(இ-ள்.) சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின்-தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ள புகழையும் கெடுக்குஞ் சூதுபோல்; வறுமை தருவது ஒன்று இல் - நல்குரவினைக் கொடுக்க வல்லது பிறிதொன் றில்லை.

அத்துன்பங்கள் முன்னர்க் கூறுப. நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தீயினத்தையுங் கூட்டுதலால் 'சீரழிக்கு'மென்றார். வறுமைக்கு எல்லையாவ ரென்பதாம். (௪)

௬௩௫. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
இவறியார் இல்லாகி யார்.

(இ-ள்.) இல்லாகியார் - முற்காலத்துத் தாமுளராகியே இலராகி யொழுகினர்; கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார் - கவற்றினையும் அஃதாடுங் களத்தினையும் அவ்வாடற்கு வேண்டுங் கைத்தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர்.

கைத்தொழில்; வெல்லு மாயம்படப் பிடித்தெறிதல். அவ்விவறுதலாற் பாண்டவர் தம்மரசு விட்டு வனத்திடைப் போய் ஆண்டு மறைந்தொழுகினரென அனுபவங் காட்டியவாறு. இவை யைந்து பாட்டானும் அதனது வறுமை பயத்தற்குற்றங் கூறப் பட்டது. (௫)

௯௩௬. அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியான் மூடப்பட் டார்.

(இ-ள்.) சூது என்னும் முகடியான் மூடப்பட்டார் - தன் பெயர் சொல்லல் மங்கலமன்மையிற் சூதென்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார்; அகடு ஆரார் அல்லல் உழப்பர் - இம்மைக்கண் வயிறுரப்பெறுர், மறுமைக்கண் நிரயத்துன்ப முழப்பர்.

செல்வங் கெடுத்து நல்குரவு கொடுத்தற்றொழில் வேறுபடாமையிற் 'சூதென்னு முகடி' யென்றும், வெற்றி தோல்விகணேக்கி ஒருபொழுதும் விடாராகலின் ஈண்டு 'அகடாரா' ரென்றும் பொய்யுங் களவும் முதலிய பாவகங்க ளீட்டலின் ஆண்டு 'அல்லலுழப்ப' ரென்றுங் கூறினர். வயிறுராமை சொல்லவே, ஏனைப் புலன்கணுகரப் பெருமை சொல்ல வேண்டாவாயிற்று. 'உழப்ப' ரென்பது எதிர்காலவினை. (௬)

௯௩௭. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

(இ-ள்.) காலை கழகத்துப் புகின் - அறம் பொருள் இன்பங்கட் கடைத்த காலம் அரசனுக்குச் சூதாடு களத்தின்கட் கழியுமாயின்; பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும் - அக்கழிவு தொன்று தொட்டுவந்த அவன் செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும்.

'பழகிய' என்பது பண்புடனும் இயையும். தான் செய்து கொள்ளும் அறம் முதலியவேயன்றி முன்னோரைத் தொடங்கி வருகின்ற செல்வமும். முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாம் என்பதாம். (எ)

௯௩௮. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்
தல்லல் உழப்பிக்கும் சூது.

(இ-ள்.) சூது - சூது; பொருள் கெடுத்து - தன்னைப் பயின்றவன் பொருளைக் கெடுத்து; பொய் மேற்கொளீஇ - பொய்யை மேற்கொள்ளப் பண்ணி; அருள் கெடுத்து - மனத்தெழும் அருளைக் கெடுத்து; அல்லல் உழப்பிக்கும் - இவ்வாற்றான் அவனை இருமையினுந் துன்ப முறுவிக்கும்.

இத்தொழில்கள் மூன்றற்கும் சூது வினைமுதலாகவும் தோல்வி, வெற்றி, செற்றமென்பன முறையே கருவிகளாகவும் கொள்க. முன்னதனுன் இம்மையினும், ஏனையவற்றான் மறுமையினுமாம். பொருள் கொடுத்தென்பது பாடமாயின், அவ்வெச்சத்

திற்கு முடிவு மேற்கோளீஇ யென்புழி மேற்கோட லாகிய வினை, முதல் வினை. (அ)

௯௩௯. உடைசெல்வம் ஊணொளி கல்வியென் றைந்தும்
அடையாவாம் ஆயங் கொளின்.

(இ - ள்.) ஆயம் கொளின் - அரசன் சூதினைத் தனக்கு விநோதத்தொழிலாக விரும்புமாயின்; ஒளி கல்வி செல்வம் ஊண் உடை என்று ஐந்தும் அடையாவாம் - அவனை ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையுமென் றிவ்வைந்துஞ் சாராவாம்.

'ஆயம்' ஆகுபெயர். இச் சிறப்புமுறை செய்யுணோக்கிப் பிறழ நின்றது. செல்வம்: அறுவகை*யுறுப்புக்கள். ஊணுடையென்பன வற்றால் துப்புரவுகளெல்லாம் கொள்ளப்படும். காலமும் கருத்தும் பெருமையின், இவை உளவாகா வென்பதாம். இவை நான்கு பாட்டானும் சிறுமை பலசெய்து† அவற்றா னிருமையுங் கெடுத்தல் கூறப்பட்டது. (௯)

௯௪0. இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற் றுயிர்.

(இ - ள்.) இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல்-சூதாடலான் இருமைப்பயன்களையும் இழக்குந்தோறும் அதன்மேற் காதல் செய்யுஞ் சூதன்போல; துன்பம் உழத்தொறூஉம் காதற்று உயிர்-உடம்பான் மூவகைத் துன்பங்களையும் அனுபவிக்குந்தோறும் அதன்மேற் காதலை யுடைத்து உயிர்.

'சூது' ஆகுபெயர். உயிரினதறியாமை கூறுவார்போன்று சூதனதறியாமை கூறுதல் கருத்தாகலின், அதனை யாப்புறுத்தற் பொருட்டு உவமமாக்கிக் கூறினார். இதன் எதிர்மறை முகத்தாற் சூதினை வெறுத்தொழிவானை யொக்கும் உடம்பினை வெறுத்தொழியும் உயிரெனவுங் கொள்க. இதனான் அஃதொழிதற் கருமையும் ஒழிந்தாரது பெருமையுங் கூறப்பட்டன. (௧0)

## அதி. ௯௫—மருந்து.

[பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாத முதலிய பிணிகள் வரும்; அவற்றுட் பழவினையான் வருவன அதன் கழிவின்கணல்லது தீராமையின் அவை யொழித்து, ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் திறங்

* குறள் - ௩அ௧.        † குறள் - ௯௩௪.

கூறுகின்றார். காரணங்களாவன உணவு செயல்கள தொவ்வாமையாகலின், பிணிகளுங் காரணத்தான் வருவனவாயின.]

௯௪௧. **மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று.**

(இ - ள்.) மிகினும் குறையினும் - உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த அளவினவன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும்; நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்றும் நோய் செய்யும் - ஆயுள்வேத முடையாரால் வாதம் முதலாக எண்ணப்பட்ட மூன்று நோயும் அவனுக்குத் துன்பஞ் செய்யும்.

நூலோ ரெண்ணிய எனவே, அவர் அவற்றான் வகுத்த வாதப் பகுதி பித்தப்பகுதி ஐப்பகுதி என்னும் பகுதிப்பாடும் பெற்றாம். அவற்றிற் குணவொத்தலாவது, சுவைவீரியங்களானும் அளவானும் பொருந்துதல். செயல்க ளொத்தலாவது, மன மொழி மெய்களாற் செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே யொழிதல். இவை இரண்டும் இங்ஙனமன்றி மிகுதலால் குறைதல் செய்யின், அவை தத்தம் நிலையி னில்லாவாய் வருத்துமென்பதாம். காரண மிரண்டும் அவாய்நிலையான் வந்தன. முற்றும்மை விகாரத்தால் தொக்கது. இதனால் யாக்கைகட் கியல்பாகிய நோய் மூவகைத் தென்பதூஉம், அவை துன்பஞ் செய்தற் காரணம் இருவகைத் தென்பதூஉம், கூறப்பட்டன. இன்பஞ் செய்தற் காரணம் முன்னர்க் கூறுப. (௧)

௯௪௨. **மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய**
**தற்றது போற்றி உணின்.**

(இ - ள்.) அருந்தியது அற்றது போற்றி உணின் - ஒருவன் முன்னுண்டது அற்றபடியைக் குறிகளால் தெளிய அறிந்து பின் உண்ணுமாயின்; யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம் - அவன் யாக்கைக்கு மருந்தென்று வேறு வேண்டாவாம்.

குறிகளாவன: யாக்கை நொய்ம்மை, தேக்கின் தூய்மை, கரணங்கள் தொழிற்குரியவாதல், பசி மிகுத லென இவை முதலாயின. பிணிகள் யாக்கையவாகலின், 'யாக்கைக்' கென்றார். 'உணி'னென்பது அதனருமை தோன்ற நின்றது. (௨)

௯௪௩. **அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு**
**பெற்றான் நெடிதுய்க்கும் ஆறு.**

(இ - ள்) அற்றால் அளவு அறிந்து உண்க - முன்னுண்டது அற்றாற்பின் உண்பதனை அறுமளவறிந்து அவ்வளவிற்றாக உண்க

உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு அஃது - இறப்பவும் பல வாய பிற யாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கரிய இம்மானுட யாக்கையைப் பெற்றான் அதனை நெடுங்காலங்கொண்டுசெலுத்தும் நெறி அதுவாகலான்.

இம்மை மறுமை வீடுபேறுகள் எய்தற்பாலது ஈதொன்றுமே யாகலின் 'உடம்பு பெற்றா' னென்றும், அது நெடிதுநின்றுழி அவை பெருகச்செய்து கொள்ளலாமாகலின் 'நெடிதுய்க்குமா' றென்றுங் கூறினார். பெற்றாலென்று பாடமோதுவாரு முளர். (௫)

௯௪௪. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(இ - ள்.) அற்றது அறிந்து - முன்னுண்டது அற்றபடியை யறிந்து; துவரப் பசித்து - பின் மிகப் பசித்து; மாறல்ல கடைப் பிடித்துத் துய்க்க - உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக் கொண் டுண்க.

'அற்றதறிந்' தென்னும் பெயர்த்துரை* அதனை யாப்புறுத்தற் பொருட்டு. உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரதமரு தாக லான் அதுவும் அறல்வேண்டுமென்பார், 'மிகப்பசித்' தென்றார். பசித்தல்வினை, ஈண்டு உடையான்மேனின்றது. மாறுகொள்ளாமை யாவது உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல் போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால் தம்முள் மாறு கொள்ளாமையுமாம். அவையாவன: முறையே வாத பித்த ஐகளா னுய பகுதிக்கடாதவற்றைச் செய்வனவாதலும், பெரும்பொழுது சிறுபொழு தென்னும் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறி தொன்றற்காகாமையும், தேனும் நெய்யுந் தம்முள் அளவொத்து நஞ்சாதல் போல்வனவுமாம். அவற்றைக் குறிக்கொள்ளாது மனம் பட்டவாற்றால் துய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், 'கடைப்பிடித்' தென்றார். (௬)

௯௪௫. மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை உயிர்க்கு.

(இ - ள்.) மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின் - அம் மூவகை மாறுகோளும் இல்லாத உணவைத் தன் உள்ளம் வேண்டிய அளவினனன்றிப் பிணிவாரா அளவினால் ஒருவன் உண்ணுமாயின்; உயிர்க்கு ஊறுபாடு இல்லை - அவனுயிர்க்குப் பிணி களால் துன்பம் விளைத லுண்டாகாது.

* முன்னர்க் கூறியதொன்றனைப் பின்னரும் ஒரேது கருதிக் கூறல்.

உறுவதனை ஊறென்றார்; அஃது இன்பத்திற் செல்லாதாயிற்று, இல்லையென்பது தொடர்பாகலின். துன்பமுறுவது உயிரேயாதலின், அதன்மேல் வைத்துக் கூறினார். மாறுபா டில்வழியும் குறைதல் நன்றென்பதாம். இவை நான்கு பாட்டானும் உண்ணப்படுவனவும், அவற்றதளவும், காலமும், பயனுங் கூறப்பட்டன. (௫)

௯௪௬. **இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்**
**கழிபேர் இரையான்கண் நோய்.**

**(இ - ள்.)** இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல் - அக்குறைதலை நன்றென்றறிந்து அவ்வாறே உண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்குமாறுபோல்; கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும் - மிகப் பெரிய இரையை விழுங்குவான்மாட்டு நோய் நீங்காது நிலைநிற்கும்.

அவ்வாறே உண்டல்: உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். 'இன்ப'மாவது வாத முதலிய மூன்றும் தத்தநிலையில் திரியாமையின் மன மொழி மெய்கள் அவன் வயத்தவாதலும், அதனான் அற முதலிய நான்கும் எய்தலுமாம். இரையை அளவின்றியெடுத்து அதனான் வருந்தும் விலங்கோடொத்தலின், 'இரையா'னென்றார். விதி யெதிர்மறைகளை உவமமும் பொருளும் ஆக்கியது இரண்டானும் பெறுதற்கு. (௬)

௯௪௭. **தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்**
**நோயள வின்றிப் படும்.**

**(இ - ள்.)** தெரியான் தீ அளவு அன்றிப் பெரிது உண்ணின் - தன் பகுதியும் அதற்கேற்ற உணவும் காலமும் ஆராயாது வேண்டியதோர் உணவை வேண்டியதொரு காலத்து வயிற்றுத் தீயளவன்றி ஒருவன் மிக வுண்ணுமாயின்; நோய் அளவு இன்றிப் படும் - அவன்மாட்டு நோய்கள் எல்லையற வளரும்.

தெரியாமை வினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான் வந்தன. 'நோய்' சாதியொருமை. இவை இரண்டு பாட்டானும் அவ்வகை உண்ணுவழிப்படும் இடுக்குக் கூறப்பட்டது. (௭)

௯௪௮. **நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்.**

**(இ - ள்.)** நோய் நாடி - மருத்துவனாயினான் ஆதுரன்மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளான் இன்னதென்று துணிந்து; நோய் முதல் நாடி - பின் அது வருதற்காரணத்தை ஆராய்ந்து;

தெளிந்து ; அது தணிக்கும் வாய் நாடி-பின் அது தீர்க்கும் உபாயத்தினை யறிந்து ; வாய்ப்பச் செயல் - அதனைச் செய்யும்வழிப் பிழையாமற் செய்க.

காரணம் உணவு செயலென முற்கூறிய இரண்டும்.* அவற்றை ஆயுள்வேதமுடையார் நிதான மென்ப. அவை நாடுதற்பயன் நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்து செய்தல், உதிரங் களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, 'அது தணிக்கும்வா' யென்றார். "கழுவாயுமுள"‡ என்றார் பிறரும். பிழையாமை பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறைமையில் தப்பாமை. (அ)

கூசகூ. **உற்றான் அளவும் பிணியளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல்.**

(இ - ள்.) கற்றான் - ஆயுள் வேதத்தினைக் கற்ற மருத்துவன், உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிச் செயல் - அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால், ஆதுர னளவினையும் அவன்கணிகழ்கின்ற நோயி னளவினையும் தன் செயற்கேற்ற காலத்தினையும் அந்நூலெறியால் நோக்கி அவற்றோடு பொருந்தச் செய்க.

ஆதுரனளவு : பகுதி பருவம் வேதனை வலிகளி னளவு. பிணியளவு : சாத்தியம், அசாத்தியம், யாப்பிய மென்னுஞ் சாதிவேறுபாடும், தொடக்க நடு வீறென்னும் அதன் பருவ வேறுபாடும், வன்மை மென்மைகளும் முதலாயின. காலம் மேற்சொல்லியன.† இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வு மிகுதியானும் ஆராய்ந்து செய்க என்பார், 'கற்றான் கருதிச் செய' லென்றார். இவை இரண்டு பாட்டானும் அவ்விழுக்குட்பட்டுழி மருத்துவன் தீர்க்குமாறு கூறப்பட்டது. (கூ)

கூ௫0. **உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்**
**றப்பானாற் கூற்றே மருந்து.**

(இ - ள்.) மருந்து-பிணிக்கு மருந்தாவது ; உற்றவன்-அதனை உற்றவன் ; தீர்ப்பான்-அதனைத் தீர்க்கு மருத்துவன் ; மருந்து-அவனுக்குக் கருவியாகிய மருந்து ; உழைச் செல்வான் என்ற அப்பால் நாற்கூற்று-அதனைப் பிழையாமல் இயற்றுவானென்று சொல்லப்பட்ட நான்கு பகுதியையுடைய நான்கு திறத்தது.

* கூசக ஆம் குறளுரை.

‡ புறநானூறு-கூ௪.        † கூசச ஆம் குறளுரை.

நான்கென்னு மெண் வருகின்றமையின், அது நோக்கி
'அப்பா' லென்றொழிந்தார். நாற் கூற்ற தென்பது விகார
மாயிற்று. அவற்றுள் 'உற்றவன்' வகை நான்காவன: பொரு
ளுடைமை, மருத்துவன்வழி நிற்றல், நோய்நிலை யுணர்த்தல் வன்
மை, மருத்துத் துன்பம் பொறுத்தலென இவை. 'தீர்ப்பான்' வகை
நான்காவன: நோய்கண்டஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதிய
கல்வியும் நுண்ணறிவு முடைமை, பலகாலுந் தீர்த்துவருதல், மன
மொழி மெய்கள் தூயவாத லென இவை. 'மருந்தின்' வகை நான்
காவன: பல பிணிகட்கு மேற்றல், சுவை வீரியம் விளை வாற்றல்
களான் மேம்படுதல், எளிதினெய்தப்படுதல், பகுதியோடு பொருந்
துத லென இவை. இயற்றுவான் வகை நான்காவன: ஆதுரன்
மாட்டன்புடைமை, மனமொழிமெய்கள் தூயவாதல், சொல்லியன
அவ்வாறே செய்தல்வன்மை, அறிவுடைமையென இவை. இவை
யெல்லாங் கூடியவழியல்லது பிணி தீராமையின், இத்தொகுதியை
யும் 'மருந்'தென்றார். ஆயுள்வேத முடையாரும், இவை கால்களாக
நடக்குமென்பது பற்றிப் பாதமென்றும், இவை மாறுபட்ட வழிச்
சாத்தியமு முதிர்ந்து அசாத்தியமா மென்றுங் கூறினார். இதனால்
அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாந் தொகுத்துக் கூறப்
பட்டன. (௧௦)

அங்கவியல் முற்றிற்று.

—

## ௩. ஒழிபியல்

இனி, அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்காதொழிந்தவற்ற நியல்பு, பதின் மூன்றதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் குடிமை கூறுகின்றார்.

### அதி. ௯௬—குடிமை

[அஃதாவது, உயர்ந்த குடியின்கண் பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின், அச்சிறப்புப்பற்றி இது முன் வைக்கப்பட்டது.]

௯௫௧. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.

(இ - ள்.) செப்பமும் நாணும் ஒருங்கு - செம்மையும் நாணும் சேர; இற்பிறந்தார்கண் அல்லது இயல்பாக இல்லை - குடிப்பிறந்தார் மாட்டல்லது பிறர்மாட் டியற்கையாக உளவாகா.

இல்லுக் குடி நலம் என்பன ஒரு பொருள்; ஈண் டுயர்ந்தவற்றின்மேல. செம்மை: கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாமை. நாண்: பழி பாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்க வேண்டாமல் தாமே உளவாம். பிறர்க்காயிற் கற்பித்த வழியும் நெடிது நில்லா என்பதாம். (௧)

௯௫௨. ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.

(இ - ள்.) குடிப் பிறந்தார் - உயர்ந்தகுடியின்கண் பிறந்தார்; ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார் - தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாணெனப்பட்ட இம் மூன்றன்கண்ணும் கல்வியானன்றித் தாமாகவே வழுவார்.

ஒழுக்கம் முதலியன மெய்ம் மொழி மனங்களின ஆகலின், அம் முறையவாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், 'இழுக்கா' ரென்றார். (௨)

௯௫௩. நகையீகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(இ - ள்.) வாய்மைக் குடிக்கு - எக்காலத்துந் திரிபில்லாத குடியின்கட் பிறந்தார்க்கு; நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப - வறியார் சென்றவழி முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந் நான்கு உரிய கூறென்று சொல்லுவர் நூலோர்.

பொய்ம்மை திரிபுடைமையின் திரிபின்மையை 'வாய்மை' யென்றும், 'இல்லாரை யெல்லாரு மெள்ளுவ'* ராகலின் இகழாமையை அவர் கூறுக்கியுங் கூறினார். 'குடி' ஆகுபெயர். நான்கின் வகை யென்பது பாடமாயின், வாய்மைக் குடிப்பிறந்தார்க்குப் பிறரின் வேறுபாடு இந் நான்கான் உளதாமென் றுரைக்க. இவை மூன்று பாட்டானும் குடிப்பிறந்தாரதியல்பு கூறப்பட்டது. (௩)

௯௫௪. அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

(இ - ள்.) அடுக்கிய கோடி பெறினும் - பலவாக அடுக்கிய கோடி அளவிற்றாய பொருளைப் பெற்றாராயினும்; குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர் - உயர்ந்த குடியின்கண் பிறந்தார் தம் மொழுக்கங் குன்றுந் தொழில்களைச் செய்யார்.

'அடுக்கிய கோடி' யென்பது, எண்ணெண்ணப்படும் பொருள் மேனின்றது. குன்றுந் தொழில்கள் குன்றுதற் கேதுவாய தொழில்கள். (௪)

௯௫௫. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று.†

(இ - ள்.) பழங்குடி - தொன்றுதொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார்; வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும் - தாங் கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கிய இடத்தும்; பண்பின் தலைப்பிரிதல் இன்று - தம் பண்புடைமையின் நீங்கார்.

தொன்றுதொட்டு வருதல் சேர சோழ பாண்டிய ரென்றாற் போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு நல்குரவாவது 'வழங்குவது உள்வீழ்'வதாகலின், அதனையே கூறினார். (௫)

௯௫௬. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(இ - ள்.) மாசு அற்ற குலம்பற்றி வாழ்தும் என்பார் - வசையற்று வருகின்ற நங்குடி மரபினோ டொத்து வாழக்கடவே

* குறள் - ௭௫௨. † நாலடியார் - ௧௪௧.

மென்று கருதி அவ்வாறு வாழ்வார்; சலம்பற்றிச் சால்பு இல செய்யார் - வறுமையுற்ற வழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவிலவாய தொழில்களைச் செய்யார்.

அமைவின்மை: அம்மரபிற் கேலாமை. இவை மூன்று பாட்டானும் அவர் வறுமையுற்ற வழியும் அவ்வியல்பின் வேறுபடா ரென்பது கூறப்பட்டது. (சு)

கூருஎ. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.*

(இ - ள்.) குடிப்பிறந்தார்கண் குற்றம் - உயர்ந்த குடியின்கண் பிறந்தார்மாட்டுளதாங் குற்றம்; விசும்பின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும் - தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும்.

உயர்குடி முதலிய பொருள்வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமை வகையொத்துப் பால் மாறுபட்டது. குடியது உயர்ச்சியானும் மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படு மென்பதாம். (எ)

கூருஅ. நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்.

(இ - ள்.) நலத்தின்கண் நார் இன்மை தோன்றின் - குலநலமுடையனாய் வருகின்றவன்கண்ணே ஈரமின்மை உளதாமாயின்; அவனைக் குலத்தின்கண் ஐயப்படும் - அவனை அக் குலப் பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம்.

நலமும் குலமும் ஆகுபெயர். 'நாரின்மை'யாற் கொடாமையுங் கடுஞ்சொல்லும் முதலிய கூறப்பட்டன. 'தோன்றி' னென்பது தோன்றாமை விளங்கிநின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவை தோன்றலின், உள்ளது ஐயமாயிற்று. உலக மென்பது அவாய்நிலையான் வந்தது. ஐயப்பட லென்பது பாடமாயின், ஐயப்படுகவென விதியாக்கி உரைக்க. இவை இரண்டு பாட்டானும் வேறுபட்டவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது. (அ)

கூருகூ. நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(இ - ள்.) நிலத்திற் கிடந்தமை கால் காட்டும் - நிலத்தின் இயல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும்; குலத்திற் பிறந்

* நாலடியார் - கசுக.

தார் வாய்ச் சொல் காட்டும் - அதுபோலக் குலத்தினியல்பை அதன்கட் பிறந்தார் வாயிற்சொற் காட்டும்.

'இடந்தமை' உள்ளபடி முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந் தெரிதலின், இலை முதலிய கூறுராயினர். ஆகவே பொருளினுஞ் செயல் முதலியன வேண்டாவாயின. குலத்தியல் பறிதற்கருவி கூறுவார்போன்று, இன்சொல் வேண்டு மென்றவாருயிற்று. (௯)

௯௬௦. நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்
வேண்டுக யார்க்கும் பணிவு. [வேண்டின்

(இ - ள்.) நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும் - ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவனாயின், தான் நாணுடையனாதலை வேண்டுக; குலம் வேண்டின் யார்க்கும் பணிவு வேண்டுக - குலனுடைமையை வேண்டுவனாயின், பணியப்படுவார் யாவர்மட்டும் பணிதலை வேண்டுக.

'நலம்' புகழ் புண்ணியங்கள். 'வேண்டு' மென்பது விதிப் பொருட்டாய் நின்றது; "வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்"* என்புழிப்போல. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம் முன்னோர் தந்தைதா யென்றிவ† ரெல்லாரு மடங்க 'யார்க்கு' மென்றார். 'பணிவு' இருக்கை யெழலும் எதிர்செலவும் ‡ முதலாயின. இவை இரண்டு பாட்டானும் குடிமைக்கு வேண்டுவன கூறப்பட்டன. (௧௦)

## அதி. ௯௭—மானம்

[இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் தொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர்வாழாமையுமாம். இஃது அக்குடிப்பிறப்பினை நிறுத்துத லுடைமையின், அச் சிறப்புப்பற்றி முன்வைக்கப் பட்டது.]

௯௬௧. இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.§

---

* தொல். சொல். கிளவியாக்கம் - ௩௪.
† புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண் - ௩௩.
‡ நாலடியார் - ௧௫௩. § நாலடியார் - ௩௦௦.

(இ - ள்.) இன்றி அமையாச் சிறப்பின ஆயினும் - செய்யாத வழித் தாம் அமையாத சிறப்பினை உடையவே யெனினும்: குன்ற வருப விடல் - தம் குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களை யொழிக.

அமையாமை இறத்தல். குடிப்பிறப் பென்பது அதிகார முறைமையான் வந்தது. இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்னும் வடநூல் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும், மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம். (க)

௯௬௨. சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(இ - ள்.) சீரினும் சீர் அல்ல செய்யார் - புகழ் செய்யும் இடத்தும் தம் குடிமைக் கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார்; சீரொடு பேராண்மை வேண்டுபவர் - புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார்.

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றி 'பேராண்மை'யெனப்பட்டது. நிலையுடைய புகழின் பொருட்டாகவும் செய்யா ரென்பதாம். (உ)

௯௬௩. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

(இ - ள்.) பெருக்கத்துப் பணிதல் வேண்டும் - குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வம் உளதாயவழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்; சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும் - குறைந்த நல்குரவுளதாயவழிப் பணியாமை வேண்டும்.

'பணி'யாமை தாழ்வு வாராமற் பழைய உயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலை அஃதுயர்ச்சி செய்யத் தாம் தாழ்தலும், அல்லற்காலை அது தாழ்வு செய்யத் தாமுயர்தலும் வேண்டும் என்பதாம். இவை மூன்று பாட்டானும் தாம் தாழ்தற் கேதுவாயின செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது. (௩)

௯௬௪. தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.

(இ - ள்.) மாந்தர் - குடிப்பிறந்த மாந்தர்; நிலையின் இழிந்தக் கடை - தம் உயர்ந்த நிலையைவிட்டு அதனினின்றுந் தாழ்ந்தவழி; தலையின் இழிந்த மயிர் அனையர் - தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை யொப்பர்.

அந்நிலையை விடாது நின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும், உவமையாற் பெற்றாம். (௪)

௯௬௫. குன்றின் அனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.

(இ - ள்.) குன்றின் அனையாரும் - குடிப்பிறப்பான் மலை போல உயர்ந்தோரும்; குன்றுவ குன்றி அனைய செயின் குன்றுவர் - தாழ்தற்கேதுவாகிய செயல்களை ஒரு குன்றியளவாயினுஞ் செய்வராயின் தாழ்வர்.

குன்றியனையவும் என்னும் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தாழ்தற் கேதுவாய செயல்களாவன இளிவந்தன. சொற்பின் வருநிலை. (௫)

௯௬௬. புகழின்றால் புத்தேணாட் டுய்யாதால் என்மற்
றிகழ்வார்பின் சென்று[*] நிலை.

(இ - ள்.) இகழ்வார்பின் சென்று நிலை - மானத்தை விட்டுத் தன்னை அவமதிப்பார் பின்னே ஒருவன் சென்று நிற்கின்ற நிலை; புகழ் இன்று - இவ்வுலகத்துப் புகழ் பயவாது; புத்தேள் நாட்டு உய்யாது - ஏனைப் புத்தேளுலகத்துச் செலுத்தாது; மற்று என் - இனி அவனுக்கு அது செய்வதியாது?

புகழ் பயப்பதனைப் 'புக' ழென்றார். பயனுடைய இவ்விரண்டு மின்றிக் கொன்னே மானங்கெடுகின்றது என்னை யென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவை செய்தற்குற்றங் கூறப்பட்டது.

௯௬௭. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

(இ - ள்.) ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின் - தன்னை இகழ்வார்பின்னே சென்று பொருள் பெற்று அதனால் ஒருவன் உயிர் வாழ்தலின்; அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று - அது செய்யாது இறந்தானென்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று.

ஒட்டுதல் - பொருந்துதல். 'அந்நிலையே' என்றது செல்லாத முன்னை நிலைக்கண்ணே நின்றென்றவாறு; அப்பொழுதே யென்றுமாம். புகழும் புத்தேணாடும் பயவாதேனும் பொருள்பெற்று உயிர் வாழ்வா மென்பாரை நோக்கிக் கூறியது. (௭)

[*] நாலடியார் - ௨௯௨.

௯௬௮. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து.

(இ - ள்.) பெருந்தகைமை பீடுஅழிய வந்த இடத்து - உயர் குடிப்பிறப்புத் தன்வலியாகிய மானம் அழியவந்துழி; ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ-இறத்தலொழிந்து பயனில்லாத உடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னும் இறவாமைக்கு மருந்தாமோ?

'மற்'றென்பது மேற்சொல்லிய இறப்பினை மாற்றிநின்றது. நற்குணங்கட்கெல்லாம் இடனாதற்சிறப்புப்பற்றிப்'பெருந்தகைமை' யென்றும், அவை யெல்லாவற்றுள்ளும் அதற்கு வலியாதற் சிறப்புப் பற்றிப் 'பீ'டென்றும், அஃதழிந்தால்நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலின் அதனை 'ஊ'னென்றும், பின்னுமிறத்தல் ஒருதலையென்பார் 'மருந்தோ'வென்றுங் கூறினார். மானத்தின் தொழில் அதற்கிடனாகிய குடிப்பிறப்பின் மேல் நின்றது. (அ)

௯௬௯. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

(இ - ள்.) மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் - தன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாவை யொப்பார்; மானம் வரின் உயிர் நீப்பர் - உயிர் நீங்கத் தான் மான மெய்து மெல்லைவரின், அதனைத் தாங்கா திறப்பர்.

இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உயிரும் மானமும் உடனில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரை நீத்து, எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை எய்துவரென்பதாம். உவமை அவர்க்கு அஃதியல்பென்பது விளக்கி நின்றது. (௯)

௯௭௦. இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழு தேத்தும் உலகு.

(இ - ள்.) இளி வரின் வாழாத மானம் உடையார் ஒளி - தமக்கோர் இழிவு வந்துழிப் பொறுத்து உயிர் வாழாது அதனை நீத்த மானமுடையாரது புகழ் வடிவினை; தொழுது எத்தும் உலகு - எஞ்ஞான்றுந் தொழுது துதியாநிற்பர் உலகத்தார்.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவனேவா வானவூர்தி, யெய்து*" வராகலின், துறக்கச்செலவு சொல்லவேண்டாவாயிற்று. இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது. (௧0)

———

* புறநானூறு-உ௭.

## அதி. ௯௮—பெருமை

[அஃதாவது, செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர் குற்றங் கூறாமை என்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை. நிலையினு மேன்மேலுயர்த்தற்* பயத்தவாய இவை உளவாவது நிலையில் தாழாமை உள்வழியாகலின், இது மானத்தின் பின் வைக்கப்பட்டது.]

௯௭௧. **ஒளியொருவற் குள்ள வெறுக்கை இளியொருவற்**
**கஃதிறந்து வாழ்தும் எனல்.**

(இ - ள்.) ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை - ஒருவனுக் கொளியாவது பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ஊக்க மிகுதி; ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல் - ஒருவனுக்கு மாசாவது அச்செயலையொழிந்தும் உயிர்வாழக் கடவேமென்று கருதுதல்.

'ஒளி': தானுளனாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை. "ஒளிநிற்றன் ஓங்குபுகழ் செய்யான்"† என்றார் பிறரும். மேலும் "செயற்கரிய செய்வார் பெரிய"‡ரென்றாராயினும், ஈண்டு அவை அளவிறந்த ஒப்புரவு ஈகை முதலியவாம். அவற்றினாய பெருமையை அதன் காரணத்தின் மேலிட்டு 'உள்ள வெறுக்கை'யென்றும், அது தன்னையே அதன் காரியமாகிய ஒளியாக்கியுங் கூறினார். இவ்வாறு இதன் எதிர்மறைக்கண்ணும் ஒக்கும். இதனாற் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது. (௧)

௯௭௨. **பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்.**

(இ - ள்.) எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும் - எல்லா மக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும்; சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான் - பெருமை சிறுமையெனப் பட்ட சிறப்பியல்புகள் ஒவ்வா, அவை செய்புந் தொழில்களது வேறுபாட்டான்.

வேறுபாடு: நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல்லவாயினவுமாய அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்தாற் பஞ்சபூத பரிணாமமாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன் பயன் அனுபவித்தல் எல்லா வருணத்தார்க்கும் ஒத்

* நாலடியார்-௨௪௮. † நாலடியார்-௯. ‡ குறள்-௨௬.

தலிற் 'பிறப்பொக்கு' மென்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக் கல்*லாகிய தொழிற் பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் 'சிறப்பொவ்வா' வென்றுங் கூறினார். (உ)

கூஎகூ. மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.

(இ - ள்.) மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர் - செயற்கரிய செய்யலாகாது சிறியராயினர், உயர்ந்த அமளி முதலியவற்றின் மிசை இருந்தாராயினும், பெரியராகார்; கீழ்அல்லவர் கீழ் இருந்தும் கீழ் அல்லார் - அவை செய்து பெரியராயினர், தாழ்ந்த வறுநிலத்திருந்தாராயினும், சிறியராகார்.

மேலிருத்தல் கீழிருத்தல்களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன. இவை இரண்டு பாட்டானும் முறையே குடிமை மாத்திரத்தானும் செல்வமாத்திரத்தானும் அஃதுளதாகாமை கூறப்பட்டது. (ங)

கூஎச. ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.

(இ - ள்.) ஒருமை மகளிரே போல - கவராத மனத்தினையுடைய மகளிர் நிறையின் வழுவாமல் தம்மைத் தாம் காத்துக் கொண்டொழுகுமாறு போல; பெருமையும் தன்னைத்தான் கொண்டு ஒழுகின் உண்டு - பெருமைக்குணனும், ஒருவன் நிறையின் வழுவாமல் தன்னைத்தான் காத்துக்கொண் டொழுகுவானாயின் அவன்கண் உண்டாம்.

பொருளின் தொழில் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்சவும்மை. ஒழுகுதல் மன மொழி மெய்களை ஒடுக்கி ஒப்புரவு முதலிய செய்து போதல். இதனால் அஃதுளதாமாறு கூறப்பட்டது. (ச)

கூஎரு. பெருமை யுடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை யுடைய செயல்.

(இ - ள்.) பெருமை உடையவர் - அவ்வாற்றாற் பெருமையுடையாராயினர்; அருமை உடைய செயல் ஆற்றின் ஆற்றுவார் - தாம் வறியராயவழியும் பிறராற் செய்தற்கரியவாய தஞ் செயல்களை விடாது அவை செய்யும் நெறியாற் கடைபோகச் செய்தலை வல்லராவர்.

---

* குறள்-ருoரு.

வறியராய வழியுமென்பது, முன் செய்து போந்தமை தோன்றப் 'பெருமையுடையவ' ரென்றதனானும், 'ஆற்றுவா' ரென்றதனானும் பெற்றாம். இதனால் அதனையுடையார் செய்தி கூறப்பட்டது.

**கூஎசு. சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னும் நோக்கு.**

**(இ-ள்.)** பெரியாரை பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு - அப் பெற்றியராய பெரியாரை வழிபட்டு அவரியல்பினையாங் கோடுமென்னுங் கருத்து; சிறியார் உணர்ச்சியுள் இல்லை - மற்றைச் சிறியராயினார் மனத்தின்கண் உளதாகாது.

குடிமை, செல்வம், கல்வியென் றிவற்றது உண்மைமாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கியல்பென்று அமைந்திருப்பாரை வழிபட்டு அஃதுடையராதல் கூடாதென்பதாம். (சு)

**கூஎஎ. இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான்
சீரல் லவர்கண் படின்.**

**(இ-ள்.)** சிறப்புந் தான் - தனக்கொக்கும் பெரியாரிடத்து அமைந்திருத்தலைச் செய்வதாய சிறப்புத்தானும்; சீர் அல்லவர்கண் படின் - தனக் கொவ்வாத சிறியாரிடத்துப் படுமாயின்; இறப்பே புரிந்த தொழிற்றாம் - அதனை யொழிந்து தருக்கின் கண்ணே மிக்க செயலை யுடைத்தாம்.

தருக்கினை மிகச் செய்யும் என்பதாயிற்று. 'சிறப்பு': குடிமை, செல்வம், கல்விகளினாய மிகுதி. இவை இரண்டு பாட்டானும் அஃதிலார் செய்தி கூறப்பட்டது. (எ)

**கூஎஅ. பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.**

**(இ-ள்.)** பெருமை என்றும் பணியும் - பெருமையுடையார் அச்சிறப்புண்டாய ஞான்றுந் தருக்கின்றி அமைந்தொழுகுவர்; சிறுமை (என்றும்) தன்னை வியந்து அணியும் - மற்றைச் சிறுமையுடையார் அஃதிலாத ஞான்றுந் தம்மை வியந்து புனையாநிற்பர்.

பொருளின்தொழில்கள் பண்பின்மேல் ஏற்றப்பட்டன. இஃது 'அற்ற மறைக்கும்பெருமை'*யென்புழியு மொக்கும். 'என்று'மென்பது பின்னும் வந்தியைந்தது. 'ஆம்' மென்பன இரண்டும் அசை. புனைதல், பிறரின் தமக்கொரு மிகுதியை ஏற்றிக்கோடல். இதற்கு

* குறள்-கூஅ0.

உயர்ந்தார் தாழ்வார், தாழ்ந்தார் உயர்வார், இஃதொரு விரோதமிருந்தவாறென்னென உலகியலை வியந்து கூறிற்றாக்குவாரும் உளர். (அ)

ஙஎகூ. பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்.

(இ - ள்.) பெருமை பெருமிதம் இன்மை-பெருமைக் குணமாவது காரண முண்டாயவழியும் அஃதியல்பாத னேக்கித் தருக்கின்றியிருத்தல்; சிறுமை பெருமிதம் ஊர்ந்துவிடல் - சிறுமைக் குணமாவது அஃதில்வழியும் அதனை யேற்றிக்கொண்டு தருக்கின் முடிவின்கண்ணே நின்றுவிடுதல்.

அளவறத் தருக்குதல் என்பதாயிற்று. *விடுமென்று பாடமோதுவாரு முளர்; முற்றுத் தொடரும் எழுவாய்த் தொடரும் தம்முள் இயையாமையின், அது பாடமன்மை உணர்க. (கூ)

ஙஅ0. அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(இ - ள்.) பெருமை அற்றம் மறைக்கும் - பெருமையுடையார் பிறர் மானத்தையே கூறி அவமானத்தை மறையாநிற்பர்; சிறுமை குற்றமே கூறிவிடும் - மற்றைச் சிறுமையுடையார் பிறர் குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறிவிடுவர்.

மறைத்தலுங் கூறலும் ஏனையிடத்தும் இயைந்தன. 'அற்றம்' ஆகுபெயர். 'தா' னென்பது அசை. இவை மூன்று பாட்டானும் இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன. (க0)

---

## அதி. ௯௯—சான்றாண்மை

[அஃதாவது, பல குணங்களானும் நிறைந்து அவற்றையாடல் தன்மை. பலகுணங்களானு மென்பது சாலுதல் தொழிலாற் பெறப்படுதலின், அவற்றையென்பது வருவிக்கப்பட்டது. பெருமையுளடங்காத குணங்கள் பலவற்றையுந் தொகுத்துக் கொண்டு நிற்றலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.]

ஙஅக. கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

(இ -ள்.) கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு-நமக்குத்தகுவது இதுவென்றறிந்து சான்றாண்மையை மேற்கொண்

---

* மணக்குடவர்.

டொழுகுவார்க்கு; நல்லவை எல்லாம் கடன் என்ப - நல்லன வாய குணங்களெல்லாம் இயல்பா யிருக்குமென்று சொல்லுவர் நூலோர்.

சில குணங்கள் இலவாயவழியும், உள்ளனசெய்துகொண்டன வாயவழியுஞ் 'சான்றாண்மை'யென்னுஞ் சொற்பொருள் கூடாமை யின், நூலோர் இவ்வேதுப் பெயர்பற்றி அவரிலக்கணம் இவ்வாறு கூறுவ ரென்பதாம். (க)

கூஅஉ. குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉ மன்று.

(இ - ள்) சான்றோர் நலன் குணநலனே - சான்றோர் நல மாவது குணங்களானாய நலமே; பிற நலம் எந்நலத்தும் உள்ளது அன்று - அஃதொழிந்த உறுப்புக்களானாய நலம் ஒரு நலத்தினும் உள்ளதன்று.

அகநலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப் புறநலத்தைப் 'பிறநல'மென்றும், அது குடிப்பிறப்புங் கல்வியும் முதலாக நூலோ ரெடுத்த நலங்களுட்புகுதாமையின்'எந்நலத்துள்ளதூஉமன்'றென் றுங் கூறினார். இவை இரண்டு பாட்டானும் சால்பிற்கேற்ற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன. (உ)

கூஅா. அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

(இ - ள்.) அன்பு - சுற்றத்தார்மேலேயன்றிப் பிறர்மேலும் உளதாய அன்பும்; நாண் - பழி பாவங்களின் நாணலும்; ஒப்புரவு- யாவர்மாட்டும் ஒப்புரவு செய்தலும்; கண்ணோட்டம் - பழையார் மேற் கண்ணோடலும்; வாய்மை-எவ்விடத்தும் மெய்ம்மை கூறலு மென; சால்பு ஊன்றிய தூண் ஐந்து-சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்கள் ஐந்து.

எண்ணொடு முன்னவற்றோடுங் கூடிற்று. இக்குணங்கள் இல் வழிச் சால்பு நிலைபெறுமையின், இவற்றைத் 'தூ'ணென்றார். ஏக தேச உருவகம். (ா)

கூஅச. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

(இ - ள்.) நோன்மை கொல்லா நலத்தது - பிறவறங்களும் வேண்டுமாயினும் தவம் ஒருயிரையுங்கொல்லாதஅறத்தின்கண்ண தாம்; சால்பு பிறர் தீமை சொல்லா நலத்தது - அதுபோலப் பிற

குணங்களும் வேண்டுமாயினும் சால்பு பிறர் குற்றத்தைச் சொல்லாத குணத்தின் கண்ணதாம்.

'நல'மென்னும் ஆகுபெயர்ப் பொருளிரண்டினையுந் தலைமை தோன்ற இவ்விரண்டற்கும் அதிகாரமாக்கிக் கூறினார். தவத்திற்குக் கொல்லாவறஞ் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர் குற்றஞ் சொல்லாக் குணஞ் சிறந்ததென்பதாம். (௪

௯௮௫. ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

(இ - ள்.) ஆற்றுவார் ஆற்றல் பணிதல் - ஒரு கருமத்தைச் செய்து முடிப்பாரதாற்றலாவது அதற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்; சான்றோர் மாற்றாரை மாற்றும் படை அது-இனிச் சால்புடையார் தம் பகைவரைப் பகைமையொழிக்குங் கருவியும் அது.

'ஆற்றல்'; அது வல்லராந் தன்மை. இறந்ததுதழீஇய எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது சால்பிற்கேற்ற பணிதற்குணத்தது சிறப்புக் கூறுவார், ஏனையது முடன் கூறினார். (௫)

௯௮௬. சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

(இ-ள்.) சால்பிற்குக் கட்டளை யாது எனின் - சால்பாகிய பொன்னின் அளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின்; தோல்வி துலை அல்லார்கண்ணும் கொளல்-அது தம்மின் உயர்ந்தார் மாட்டுக் கொள்ளும் தோல்வியை இழிந்தார்மாட்டும் கோடல்.

'துலை'-ஒப்பு. எச்சவும்மையான் இருதிறத்தார்கண்ணும் வேண்டுதல் பெற்றாம். கொள்ளுதல்; வெல்லுமாற்றலுடையராயிருந்தே ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோடொப்பித்துக்கொள்ளாது தோல்வியான் அவரினுயர்வராயின், அதனாற் சால்பளவறியப்படுமென்பதாம். (௬)

௯௮௭. இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

(இ - ள்.) இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்-தமக்கின்னாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின்; சால்பு என்ன பயத்தது-அச் சால்பு வேறென்ன பயனை உடைத்து?

சிறப்பும்மை அவர் இன்னா செய்தற்கிடனாதல் விளக்கிநின்றது. 'ஓகாரம்' அசை. வினா எதிர்மறைப்பொருட்டு. தாமும் இன்னாசெய்வாராயின், சால்பா லொரு பயனுமில்லை யென்பதாம். இவை ஐந்து பாட்டானும் சிறப்புவகையாற் கூறப்பட்டது. (எ)

௯௮௮. இன்மை ஒருவற் கிளிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின் - சால்பென்று சொல்லப்படும் வலியுண்டாகப்பெறின்; ஒருவற்கு இன்மை இளிவு அன்று - ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது.

தளராமை நாட்டுதலின், வலியாயிற்று. இன்மையான் வருவதனை 'இன்மை' தானாக உபசரித்துக் கூறினார். சால்புடையார் நல்கூர்ந்தவழியும் மேம்படுதலுடைய ரென்பதாம். (அ)

௯௮௯. ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(இ - ள்.) சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார் - சால்புடைமையாகிய கடற்குக் கரை யென்று சொல்லப்படுவார்; ஊழிபெயரினும் தாம் பெயரார் - ஏனைக் கடலும் கரையுள் நில்லாமற் காலந் திரிந்தாலும் தாம் திரியார்.

சான்றாண்மையது பெருமைதோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியுங் கூறினார்; "பெருகடற் காழி யனையன் மாதோ"* என்றார் பிறரும். ஏகதேச உருவகம். (௯)

௯௯0. சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.

(இ - ள்.) சான்றவர் சான்றாண்மை குன்றின் - பல குணங்களானு நிறைந்தவர் தந்தன்மை குன்றுவராயின்; இரு நிலந்தான் பொறை தாங்காது - மற்றை இருநிலந்தானுந் தன் பொறையைத் தாங்காதாய் முடியும்.

தானுமென்னு மெச்சவும்மை விகாரத்தால்தொக்கது. அவர்க்கது குன்றாமையும் அதற்கது தாங்கலும் இயல்பாகலான், அவை யெஞ்ஞான்றும் உளவாகா என்பது தோன்றநின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. 'ஓகாரம்' அசை. இதற்கு இருநிலம் பொறை தாங்குவது சான்றவர் துணையாக வருதலான், அதுவும் அது தாங்கலாற்றாதென் றுரைப்பாரு முளர். இவை மூன்று பாட்டானும் அவற்றான்நிறைந்தவரது சிறப்புக்கூறப்பட்டது. (௧0)

* புறநானூறு - ௩௩0.

## அதி. ௯௦௦—பண்புடைமை

[அஃதாவது, பெருமை சான்றாண்மைகளில் தாம்வழுவாது நின்றே எல்லார் இயல்புகளும் அறிந் தொத்தொழுகுதல்; "பண் பெனப்படுவது பாடறிந் தொழுகல்"* என்றார் பிறரும். அதி கார முறைமையும் இதனானே விளங்கும்.]

௯௯௧. எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

(இ - ள்.) யார் மாட்டும் எண் பதத்தால் - யாவர்மாட்டும் எளிய செவ்வியராதலால், பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப - அரிதாய பண்புடைமையென்னும் நன்னெறியினை யெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர்.

குணங்களா னிறைந்து செவ்வி யெளியருமாயக்காற் பண் புடைமை தானே உளதாமாகலின், 'எண்பதத்தா லெய்த'லெளி தென்றும், அஃதுலகத்தையெல்லாம் வசீகரித்தற் பயத்ததாகலின் அதனைத் தொல்லோர் சென்ற நன்னெறியாக்கியும், அதனை யெளிதினெய்துதற்கு இது நூலோரோதிய வுபாய மென்பார் அவர்மேல் வைத்துங் கூறினார். (க)

௯௯௨. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

(இ - ள்.) அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல்- இவ்விரண் டும்-பிறர்மே லன்புடையனாதலும் உலகத்தோடமைந்தகுடியின்கட் பிறத்தலுமாகிய இவ்விரண்டும்; பண்புடைமை என்னும் வழக்கு- ஒருவனுக்குப் பண்புடைமை யென்று உலகத்தார் சொல்லும் நன்னெறி.

அமைதல் - ஒத்து வருதல். 'குடிப்பிறத்த' லென்பது பிறந்தார்செயலை. தனித்தவழி ஆகாது இரண்டுங் கூடியவழியே ஆவதென்பது தோன்ற, முற்றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக வுபசரிக்கப்பட்டன. இவை இரண்டு பாட்டானும் பண்புடையராதற் காரணங் கூறப்பட்டது. (உ)

௯௯௩. உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு.

(இ - ள்) உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று-செறியத் தகாத உடம்பா லொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோ டொப்பா

*கலித்தொகை - ௧௩௩.

காமையின் அது பொருந்துவதன்று; ஒப்பதாம் ஒப்பு வெறுத்தக்க பண்பு ஒத்தல்-இனிப் பொருந்துவதாய ஒப்பாவது செறியத்தக்க பண்பாலொத்தல்.

வடநூலார் அங்கமென்றமையின், 'உறுப்'பென்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படும் ஒப்பாவது உயிரின்வேறாய்நிலையுதலில்லா உடம்பொத்தலன்று. வேறன்றி நிலையுதலுடைய பண்பொத்தலாகலான், அப்பெற்றித்தாய அவர் பண்பினையுடையனாக வென்பதாம். (௩)

௬௬௪. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு.

(இ - ள்.) நயனொடு நன்றி புரிந்த பயன் உடையார் பண்பு-நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந் தமக்கும் பயன்படுதலுடையாரது பண்பினை; உலகு பாராட்டும் - உலகத்தார் கொண்டாடா நிற்பர்.

'புரிந்த' என்னும் பெயரெச்சம் ஈண்டுக் காரணப்பொருட்டு. நயனொடு நன்றிபுரிதலும் பயனுடைமையும் பண்பு காரணமாக வந்தமையின், அதனைப் 'பாராட்டு' மென்றார். (௪)

௬௬௫. நகையுள்ளும் இன்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(இ - ள்.) இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது-தன்னை இகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது; பாடு அறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்பு உள - ஆகலாற் பிறர்பாடறிந்தொழுகுவார்மாட்டுப் பகைமையுள் வழியும் அஃதுளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன.

'பாடறிவா' ரெனவே, அவ்வின்னாமை யறிதலும் பெற்றாம். அதனை அறிந்தவர் பின் அது செய்யார், இனியவே செய்வாரென்பது கருத்து. இதற்குப்பிறரெல்லாம் இரண்டு தொடரும் தம்முள் இயையாம லுரைப்பாரும், 'இன்னா' தென்னுஞ் சொற்குப் பிறவாதென் றுரைப்பாரு மாயினார். (௫)

௬௬௬. பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

(இ - ள்.) பண்பு உடையார்ப் பட்டு உலகம் உண்டு-பண்பு உடையார்கண்ணே படுதலால் உலகியல் எஞ்ஞான்றும் உண்டாய்

வாராநின்றது; இன்றேல் அது மண்புக்கு மாய்வது-ஆண்டுப் படுதலில்லையாயின், அது மண்ணின்கட் புக்கு மாய்ந்து போவதாம்.

படவென்பது திரிந்துநின்றது. 'உலகு' ஆகுபெயர். மற்றைப் பண்பில்லார் சார்பன்மையின் ஓர் சார்புமின்றி மண்ணின்கட்புக்கு மாயுமது வேண்டாவாயிற்றென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. இவை நான்கு பாட்டானும் அதனைஉடையார துயர்ச்சி கூறப்பட்டது. (௬)

௯௯௭. அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

(இ - ள்.) மக்கட் பண்பு இல்லாதவர்-நன்மக்கட்கே உரிய பண்பில்லாதவர்; அரம்போலும் கூர்மையரேனும் - அரத்தின் கூர்மை போலும் கூர்மையையுடையரே யாயினும்; மரம்போல்வர்-ஓரறிவிற்றாய மரத்தினை யொப்பர்.

'அரம்' ஆகுபெயர். ஓரறிவு ஊற்றினை யறிதல். உவமையிரண்டனுள், முன்னது தான் மடிவின்றித் தன்னையுற்றபொருள்களை மடிவித்தலாகிய தொழில்பற்றி வந்தது; ஏனையது விசேட அறிவின்மையாகிய பண்புபற்றி வந்தது. அவ் விசேடவறிவிற்குப் பயனாய மக்கட்பண்பின்மையின், அதுதானும் இல்லையென்பதாயிற்று. (௭)

௯௯௮. நண்பாற்றார் ஆகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றார் ஆதல் கடை.

(இ - ள்.) நண்பு ஆற்றாராகி நயம் இல செய்வார்க்கும் - தம்மொடு நட்பினைச் செய்யாது பகைமையைச் செய்தொழுகுவார் மாட்டும்; பண்பு ஆற்றாராதல் கடை - தாம் பண்புடையராய் ஒழுகாமை அறிவுடையார்க் கிழுக்காம்.

'நயம்'-ஈரம். சிறப்பும்மை அவர் பண்பாற்றாமைக் கிடனாதல் தோன்றநின்றது. அதனைச் செய்யின் தாமும் அவர் தன்மையராவரென்பார் 'கடை' யென்றார். (௮)

௯௯௯. நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(இ - ள்.) நகல் வல்லர் அல்லார்க்கு - பண்பின்மையான் ஒருவரோடுங் கலந்து உண்மகிழ்தல் மாட்டாதார்க்கு; மாயிரு ஞாலம் பகலும் இருட்பாற் பட்டன்று - மிகவும் பெரிய ஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட் கிடந்ததாம்.

எல்லாரோடும் கலந்தறியப்பெறுமையிற் பண்பில்லார்க்கு உலகியல் தெரியாதென்பார், உலகம் இருளின்கட் பட்டதென்றார். பாழ்பட்டன் றிருளென்று பாடமோதி, இருணீங்கிற்றன்றென் றுரைப்பாருமுளர். (௯)

௧௦௦௦. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று.

(இ-ள்.) பண்பு இலான் பெற்ற பெரும்செல்வம்-பண்பில்லாதவன் முன்னை நல்வினையான் எய்திய பெரிய செல்வம் அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்; நன்பால் கலம் தீமையால் திரிந்தற்று-நல்ல ஆன்பால் ஏற்ற கலத்தின் குற்றத்தால் இன்சுவைத்தாகாது கெட்டாற்போலும்.

கலத்தீமையென்பது மெலிந்து நின்றது. தொழிலுவமமாகலின் பொருளின்கண் ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும் ஆற்ற லிலனாதல் தோன்றப் 'பெற்ற'வென்றும், எல்லாப் பயனுங் கோடற்கேற்ற இடனுடைமை தோன்றப் 'பெருஞ்செல்வ' மென்றுங் கூறினர்: அச்செல்வமும் பயன்படாதென்ற இதனான் வருகின்ற அதிகாரப் பொருண்மையுந் தோற்றுவாய் செய்யப் பட்டது. இவை நான்கு பாட்டானும் அஃதில்லார திழிவு கூறப் பட்டது. (௧0)

## அதி. ௧0௧—நன்றியில்செல்வம்

[அஃதாவது, ஈட்டியாற்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தின தியல்பு. உடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகாரமுறைமை மேல் தோற்றுவாய் செய்த வதனாற் பெற்றும்.]

௧00௧. வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்
செத்தான் செயக்கிடந்த தில். [ணான்

(இ-ள்.) வாய் சான்ற பெரும்பொருள்வைத்தான் அஃது உண்ணான் - தன் மனையகமெல்லாம் நிறைதற் கேதுவாய பெரும் பொருளை யீட்டிவைத்து உலோபத்தால் அதனை யுண்ணாதவன்; செத்தான் செயக் கிடந்தது இல் - உளனாயினுஞ் செத்தானும் அதன்கண் அவனாற்செயக் கிடந்ததோர் உரிமை யின்மையான்.

'வைத்தா'னென்பது முற்றெச்சம். உண்ணுதல்: அதனான் ஐம்புலன்களையும் நுகர்தல். "வாய்சான்ற பெரும்பொரு"ளை வைத்தா னொருவன் அதனை உண்ணாது செத்தவழி அதன்கண்

அவனாற் செய்யக்கிடந்ததோர் உரிமையில்லையாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்கவென் றுரைப்பினு மமையும். இதற்குச் 'செத்தா'னென்பது எச்சம். இதனால் ஈட்டியானுக்குப் பயன் படலின்மை கூறப்பட்டது. (க)

க002. பொருளானும் எல்லாமென் றீயா திவறும்
மருளானும் மாணாப் பிறப்பு.

(இ-ள்.) பொருளான் எல்லாம் ஆம்என்று-பொருளொன்று முண்டாக அதனால்எல்லாம் உண்டாமென்றறிந்து அதனையீட்டி; ஈயாது இவறும் மருளான் - பின் பிறர்க்கீயாது பற்றுள்ளஞ் செய்யும் மயக்கத்தாலே; மாணாப்பிறப்பு ஆம் - ஒருவனுக்கு நிறைதலில் லாத பேய்ப்பிறப்புண்டாம்.

இருமையினும் எய்தும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லா' மென்றும், ஈட்டுதற்கு முன்னுண்டாய அறிவு பின் மயங்குதலின் 'மரு'ளென்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர் பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுகளுளவாயிருக்கப் பசித்துவருந்தும் 'பிறப் புள'தாமென்றுங் கூறினார். (உ)

கOOங. ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

(இ-ள்.) ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் தோற்றம்- யாம் பிறரின்மிக ஈட்டுதுமென்று பொருளினதீட்டன் மாத்திரத் தையே விரும்பி அதன் பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு; நிலக்குப் பொறை-நிலத்திற்குப் பாரமாமத்துணையே.

'இசை' இருமைக்கும் உறுதியாய அறமாகலின் ஈகையான்* அதனையே வேண்டல்செய்யாது ஈட்டல் துன்பத்தையும் காத்தல் துன்பத்தையும் வேண்டிய அறிவின்மைபற்றி, 'நிலக்குப் பொறை' யென்றார். பிறப்பென்பது அதற்குரிய உடம்பினை. (ங)

கOOச. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.

(இ-ள்.) ஒருவரானும் நச்சப்படாஅதவன் - ஒரு பொருளும் ஈந்தறியாமையின் ஒருவராலும் நச்சப்படுதலில்லாதவன்; எச்ச மென்று என் எண்ணுங்கொல் - தானிறந்தவழி ஈண் டொழிந்து நிற்பதாக யாதனைக் கருதுமோ?

ஈண் டொழிந்து நிற்கும் புகழ்† ஈவான்மேலன்றி நில்லாமை யின் அவனுக்கதனோடியாது மியைபில்லையென்பார், 'என்னெண்

* குறள் - உங்க. †குறள் - உஙஉ.

னுங் கொல்லோ' என்றார். 'ஓகாரம்' அசை. இவை மூன்று பாட்டானும் பிறர்க்குப் பயன்படலின்மை கூறப்பட்டது (௪)

௧௦௦௫. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினும் இல்.

(இ - ள்.) கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு-பிறர்க்கு ஈவதும் தாம் நுகர்வதுமாய இரண்டு செய்கையுமுடையார் அல்லாதார்க்கு; அடுக்கிய கோடி உண்டாயினும் இல்-பலவாக அடுக்கிய கோடி பொருளுண்டாயினும் ஒன்றுமில்லை.

இன்பத்தினும் அறஞ் சிறந்தமையின், கொடுத்தல் தொழில் முற்கூறப்பட்டது. 'அடுக்கிய கோடி'யென்றது எண்ணெண்ணப் படும் பொருள்மேல்நின்றது. ஒன்றுமில்லார் போலப் பயனிரண்டு மிழத்தலின், 'இல்'லென்றார். (௫)

௧௦௦௬. ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்
கீத லியல்பிலா தான். [கொள்

(இ - ள்.) தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல் பிலாதான் - தானுகரானாய் அதன்மேலுந் தகுதியுடையார்க்கு அவர் வேண்டியதொன்றினை ஈதலியற்கை யிலனாயினான்; பெருஞ் செல்வம் ஏதம் - இரண்டுஞ் செய்தற் கிடனுடைத்தாய செல்வத் திற்கு ஒரு நோய்.

தகுதி: தானங்கோடற் கேற்புடைமை. 'ஏதம்' ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரியதனை அன்றாக்கி னமையின், 'நோ'யென்றார். 'ஈதலியல்பிலாதா' னது பெருஞ் செல்வம் அவனுக்கு ஈட்டல் காத்தல் முதலியவற்றால் துன்பமே* யாமென்றுரைப்பாரு முளர். இவை இரண்டு பாட்டானும் அவ் விருமையும் உடன் கூறப்பட்டன. (௬)

௧௦௦௭. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

(இ - ள்.) அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் - ஒரு பொருளும் இலராயினார்க்கு அவர் வேண்டிய தொன்றனைக் கொடாதானது செல்வம் கொன்னே கழிதல்; மிகநலம் பெற்றாள் தமியள் மூத்தற்று - பெண்டிரின் மிக்க நலத்தினைப் பெற்றா ளொருத்தி கொடுப்பார்இன்மையிற் கொழுநனின்றித் தமியளாய் மூத்த தன்மைத்து.

* நாலடியார் - ௨௮௦.

'நலம்' வடிவினன்மையும் குணத்தினன்மையும். இரண்டும் ஒருங்குபெறுத லரிதாகலின், 'பெற்று' ளென்றார். கொடுப்பாருங் கொழுநனுமேயன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோ டுவமை கூறினமையின், தானு மேற்பானுமே யன்றிச் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாயிற்று. (எ)

௧௦௦௮. நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.*

(இ - ள்.) நச்சப்படாதவன் செல்வம் - வறியார்க் கணியனு யிருந்தும் ஒன்றுங் கொடாமையின் அவரா னச்சப்படாதவன் செல்வ மெய்துதல்; ஊர் நடுவுள் நச்சுமரம் பழுத்தற்று - ஊரிடை நிற்பதோர் நச்சுமரம் பழுத்தாற் போலும்.

'நடுவூ' ரென்பது பின்முன்னாகத் தொக்கஆரும்வேற்றுமைத் தொகை. அண்மையுடைமைகளாற் பயனில்லை யென்பதாம். (அ)

௧௦௦௯. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

(இ - ள்.) அன்புஒரீஇ-ஒருவன் கொடாமைப் பொருட்டுச் சுற்றத்தார் நட்டார்கண் அன்பு செய்தலையொழிந்து; தற்செற்று- வேண்டுவன நுகராது தன்னைச் செறுத்து; அறம் நோக்காது- வறியார்க்கு ஈதல் முதலிய வறத்தை நினைப்பதுஞ்செய்யாது; ஈட்டிய ஒண்பொருள் கொள்வார் பிறர்-ஈட்டிய ஒள்ளிய பொருளைக் கொண்டுபோய்ப் பயன்பெறுவார் பிறர்.

பயனுய அறனும் இன்பமும் செய்துகொள்ளாதானுக்குப் பொருளாலுள்ள ஈட்டல் துன்பமே என்பது தோன்ற 'ஈட்டிய' வென்றும், அவன் வழியிலுள்ளார்க்கும் உதவாதென்பது தோன் றப் 'பிற'ரென்றுங் கூறினர். (௯)

௧௦௧௦. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(இ - ள்.) சீர் உடைச் செல்வர் சிறுதுனி - புகழுடைத்தாய செல்வத்தினையுடையவரது நிற்குங்காலஞ் சிறிதாய வறுமை; மாரி வறங்கூர்ந் தனையது உடைத்து - உலகத்தை யெல்லாம் நிலைநிறுத் தும் மேகம் வறுமை மிக்காற்போல்வதோர் இயல்பினை யுடைத்து.

* நாலடியார் - ௨௬௬.

'துனி' வெறுப்பு; அதனைச் செய்தலால் துனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் அதனான் வறியராயவழியும் அவ்வறுமை கடிதில் நீங்குதலிற் பின்புஞ் செல்வராய்ப் பயன்படுவரென்பது உவமையாற் பெறப்பட்டது; படவே, நன்றியில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாதென்பதாயிற்று. இதற்குச் சீருடைச் செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில் வெறுப்பு மாறி வறங்கூர்ந்தனைய தன்மையை உடைத்தெனவ அதிகாரத்தோடு பொருந்தாமை மேலும், ஒரு பொருள் தொடர்பு படாமல் உரைப்பாருமுளர்.* இவை நான்கு பாட்டானும் அச் செல்வத்தது குற்றங் கூறப்பட்டது. (௧௦)

---

## அதி. ௧௦௨—நாணுடைமை

[அஃதாவது, மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுத லுடையராந்தன்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.]

௧௦௧௧. **கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற.**

(இ - ள்.) நாணுக்கருமத்தால்நாணுதல்-நன்மக்கள்நாணுவது இழிந்த கருமங் காரணமாக நாணுதல்; பிறதிருநுதல் நல்லவர் நாணு - அஃதன்றி மன மொழி மெய்கள தொடுக்கத்தான் வருவனவோவெனின், அவை அவரளவல்ல, அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாண்கள்.

'பிற குலமகளிர் நாணென்றதனான் ஏனையது நன்மக்களுணென்பதும், 'நாணுத'லென்றதனாற் கருமத்ததிழிவும் பெற்றாம். 'திருநுதனல்லவ' ரென்பது புகழ்ச்சிக்குறிப்பு. ஏதுப்பன்மை பற்றிப் 'பிற'வென்றார். இனி அற்றமறைத்தல் முதலியன பொது மகளிர் நாணொடொக்குமென் றுரைப்பாருமுளர். அவர்க்கு நாண் கேடுபயக்குமென விலக்கப்பட்டமையானும், அவர்பெயராற் கூறப்படாமையானும் அஃதுரையன்மையறிக. இதனான் நாணினதிலக்கணங் கூறப்பட்டது. (௧)

௧௦௧௨. **ஊனுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல**
**நாணுடைமை மாந்தர் சிறப்பு.**

(இ - ள்.) ஊண் உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறு அல்ல - ஊணும் உடையும் அவை ஒழிந்தனவும் மக்களுயிர்க்

---

* மணக்குடவர்.

கெல்லாம் பொது; மாந்தர் சிறப்பு நாணுடைமை - நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே, அவையல்ல.

ஒழிந்தன உறக்கமும் அச்சமுங் காமமும். 'சிறப்பு': அவ்வுயிர்களின் வேறுபாடு. அச்சமென்று பாடமோதுவாருமுளர். (உ)

௧௦௧௩. ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு.

(இ - ள்.) உயிரெல்லாம் ஊனைக் குறித்த - எல்லா உயிர்களும் உடம்பினைத் தமக்குநிலைக்களனாகக்கொண்டுஅதனை விடா; சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது - அதுபோலச் சால்பு நாண் என்னும் நன்மைக்குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது.

உடம்பென்பது சாதி யொருமை. 'நன்மை' ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனெய்தாதவாறுபோலச் சால்பு நாணோடு கூடியல்லது பயனெய்தா தென்பதாம். 'ஊணைக் குறித்த' என்று பாடமோதுவாருமுளர்.* (௩)

௧௦௧௪. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

(இ - ள்.) சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றோ-சான்றோர்க்கு நாணுடைமை ஆபரணமாம்; அஃது இன்றேல் பீடு நடை பிணியன்றோ-அவ்வாபரணம் இல்லையாயின் அவர் பெருமிதத்தையுடைய நடை கண்டார்க்குப் பிணியாம்.

அழகு செய்தலின் 'அணி' என்றும், பொறுத்தற்கருமையிற் 'பிணி'யென்றுங் கூறினர். 'ஓ' காரவிடைச் சொற்கள் எதிர்மறைக் கண் வந்தன. இவை மூன்று பாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது. (௪)

௧௦௧௫. பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி என்னும் உலகு.

(இ - ள்.) பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் - பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் ஒப்ப மதித்து நாணுவாரை; உலகு நாணுக்கு உறைபதி என்னும்-உலகத்தார் நாணுக் குறைவிட மென்று சொல்லுவர்.

ஒப்பமதித்தல்: அதுவுந் தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்துடையார்பெரியராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும்

* மணக்குடவர்.

புகழ்வரென்பதாம். இதனல் அதனை உடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (௫)

௧0௧௬. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

(இ - ள்.) மேலாயவர்-உயர்ந்தவர்; வேலிநாண் கொள்ளாது-தமக் கேமமாக நாணினைக் கொள்வதன்றி; வியன் ஞாலம் பேணலர் - அகன்ற ஞாலத்தைக் கொள்ள விரும்பார்.

பழிபாவங்கள் புகுதாமற் காத்தலின், 'வேலி' யென்றார். நாணும் ஞாலமும் தம்முள் மாருயவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவை புகுது நெறியாய ஞாலத்தினைக் கொள்ள விரும்பாரென்பதாம்; 'மன்னும் 'ஓ'வும் அசை. நாணுகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பாரென் றுரைப்பாரு முளர். (௬)

௧0௧௭. நாணல் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணுள் பவர்.

(இ - ள்.) நாண் ஆள்பவர்-நாணினது சிறப்பறிந்து அதனை விடாதொழுகுவார்; நாணல் உயிரைத் துறப்பர்-அந்நாணுமுயிருந் தம்முள் மாருயவழி நாண் சிதையாமற்பொருட்டு உயிரை நீப்பர்; உயிர்ப்பொருட்டு நாண் துறவார் - உயிர் சிதையாமற்பொருட்டு நாணினை நீக்கார்.

உயிரினும் நாண் சிறந்ததென்பதாம். இவை இரண்டுபாட்டானும் அவர் செயல் கூறப்பட்டது. (௭)

௧0௧அ. பிறர்நாணத் தக்கது தானுண ணுயின்
அறநாணத் தக்க துடைத்து.

(இ - ள்.) பிறர் நாணத்தக்கது தான் நாணுனயின்-கேட்டாருங் கண்டாரும் நாணத்தக்க பழியை ஒருவன் தாணுணுது செய்யுமாயின்; அறம் நாணத்தக்கது உடைத்து - அந்நாணுமை அவனை அறம்விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை உடைத்து.

தானெனச் செய்வானைப் பிரிக்கின்று ராகலின், 'பிற'ரென்ருர். நாணுே டியையபில்லாதானை அறஞ்சாரா தென்பதாம். (அ)

௧0௧௯. குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை.

(இ - ள்.) கொள்கை பிழைப்பின் குலஞ் சுடும்-ஒருவனுக் கொழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு அவன் குடிப்பிறப்

பொன்றலையுங் கெடுக்கும்; நாணின்மை நின்றக் கடை நலம் சுடும்-ஒருவன்மாட்டு நாணின்மை நின்றவழி அந்நிலை அவனலம் யாவற்றையுங் கெடுக்கும்.

நிற்றல்: ஒருபொழுதும் நீங்காமை. 'நலம்' சாதி யொருமையாகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனமென் றிவற்றான் வந்தனவெல்லாம் கொள்ளப்படும். ஒழுக்கவழிவினும் நாணழிவு இறப்பத் தீதென்பதாம். (க)

க0உ0. நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர் மருட்டி யற்று.

(இ-ள்.) அகத்து நாண் இல்லார் இயக்கம்-தம் மனத்தின்கண் நாணில்லாத மக்கள் உயிருடையார்போன் றியங்குகின்ற இயக்கம்; மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று-மரத்தாற் செய்த பாவை இயந்திரக் கயிற்றினானாய தன்னியக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற் போலும்.

கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய பாவைஇயக்கம்போல்வதல்லது உயிரியக்க மன்றென்பதாம். இவை மூன்று பாட்டானும் நாணில்லார திழிவு கூறப்பட்டது. (க0)

---

## அதி. க0௩—குடிசெயல்வகை

[அஃதாவது, ஒருவன் தான் பிறந்த குடியை உயரச்செய்தலின் திறம். இது தாழ்வின்கண் நாணுதலுடையார்க்குளதாவதாகலின் நாணுடைமையின் பின் வைக்கப்பட்டது.]

க0உக. கருமம் செயவொருவன் கைதூவேன் என்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

(இ-ள்.) கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையின் - தன் குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமம் முடியாமையின் எண்ணிய கருமஞ் செய்தற் கியான் கையொழியேனென்னும் ஆள்வினைப் பெருமைபோல; ஒருவன் பீடு உடையது இல் - ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறிதில்லை.

குடிசெய்தற்கென்பது அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமச்செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின், 'பீடுடைய தில்' லென்றார். குடிசெய்தற் கருமமே நடத்தலால், தன் கருமஞ் செய்யவென்றும் பிறர் கருமஞ்செய்யவென்றும் உரைப்பாரு முளர்; தன் கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல்செய்தல், தலைமையன்மையானும் அவை உரையன்மையறிக.

௧0௨௨. ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனவிரண்டின்
நீள்வினையான் நீளும் குடி.

(இ - ள்.) ஆள் வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள் வினையான் - முயற்சியும் நிறைந்த அறிவு மென்று சொல்லப் பட்ட இரண்டினையுமுடைய இடையறாத கருமச்செயலால்; குடி நீளும் - ஒருவன் குடி உயரும்.

நிறைதல்: இயற்கையறிவு செயற்கையறிவோடு கூடி நிரம்புதல். 'ஆள்வினை' மடிபுகுதாமற்பொருட்டு. 'ஆன்றவறிவு' உயர்தற்கேற்ற செயல்களும் அவை முடிக்குந் திறமும் பிழையாமல் எண்ணுதற் பொருட்டு. இவை இரண்டு பாட்டானும் அச் செயற்குக் காரணங் கூறப்பட்டது. (௨)

௧0௨௩. குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

(இ - ள்.) குடிசெய்வல் என்னும் ஒருவற்கு - என் குடியினை உயரச்செய்யக்கடவேனென்றுகொண்டுஅதற்கேற்றகருமங்களின் முயலும் ஒருவனுக்கு; தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்-தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும்.

முயற்சியை அதன் காரணத்தாற் கூறினார். தற்றுதல்-இறுக உடுத்தல். முன்னடப்பார்செயல் நியதிமேல் ஏற்றப்பட்டது. (௩)

௧0௨௪. சூழாமல் தானே முடிவெய்தும் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு*

(இ - ள்) தங் குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு-தங்குடிக்காம் வினையை விரைந்து முயல்வார்க்கு; சூழாமல் தானே முடி வெய்தும்-அவ்வினை முடிக்குந்திறம் அவர் சூழவேண்டாமல் தானே முடிவெய்தும்.

'குடி' ஆகுபெயர். தெய்வம் முந்துறுதலாற் பயன் கூறியவாறு. இவை இரண்டு பாட்டானும் அதற்குத் தெய்வந் துணையாதல் கூறப்பட்டது. (௪)

௧0௨௫. குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு.

* குறள் - ௬௨0.

(இ - ள்.) குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானை-குற்றமாயின செய்யாது தன் குடியை உயரச்செய்தொழுகுவானை; சுற்றமாச் சுற்றும் உலகு-அவனுக்குச் சுற்றமாக வேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார்.

குற்றமாயின அறநீதிகட்கு மறுதலையாய செயல்கள். தாமும் பயனெய்தனோக்கி யாவருஞ் சென்று சார்வ ரென்பதாம். (ரு)

௧௦௨௬. நல்லாண்மை என்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்.

(இ - ள்.) ஒருவற்கு நல்லாண்மை என்பது - ஒருவனுக்கு நல்லஆண்மையென்று உயர்த்துச் சொல்லப்படுவது; தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக் கொளல் - தான் பிறந்த குடியினை யாளுந் தன்மையைத் தனக்குள தாக்கிக்கோடல்.

போர்த்தொழிலின் நீக்குதற்கு 'நல்லாண்மை'யென விசேடித்தார். குடியினையாளுந் தன்மை குடியினுள்ளாரை உயரச்செய்து தன்வழிப்படுத்தல். அதனைச்செய்துகோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டாற் பெறப்படும். (சு)

௧௦௨௭. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.

(இ - ள்.) அமரகத்து வன்கண்ணர் போல - களத்தின் கட் சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர்மேல தானாற் போல; தமரகத்தும் பொறை ஆற்றுவார் மேற்றே - குடியின்கண் பிறந்தார் பலராயினும் அதன் பாரம் பொறுத்தல் அது வல்லார் மேலதாம்.

பொருட்கொக்க வேண்டுஞ் சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. நன்கு மதிக்கப்படுவார் அவரே யென்பதாம். இவை மூன்று பாட்டானும் அது செய்வா ரெய்துஞ் சிறப்புக் கூறப்பட்டது. (எ)

௧௦௨௮. குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(இ - ள்.) மடி செய்து மானம் கருதக் கெடும் - தங் குடியினை உயரச்செய்வார் அச் செயலையே நோக்காது காலத்தை நோக்கி மடியினைச் செய்துகொண்டு, மானத்தையுங் கருதுவராயின் குடி கெடும்; குடி செய்வார்க்குப் பருவம் இல்லை - ஆகலான் அவர்க்குக் காலநியதி இல்லை.

காலத்தை நோக்கி மடிசெய்தல்; வெயில் மழை பனி யென்பன உடைமைநோக்கிப் பின்னர்ச்செய்துமென் றொழிந்திருத்தல். மானங் கருதுதல்: இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யானோ வென்று உட்கோடல். மேல், "இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும்பொழு" தென்ற தூட் கொண்டு இவர்க்கும் வேண்டுமோ என்று கருதினும் அது கருதற்க வென்று மறுத்தவாறு. (௮)

**௧0௨௯. இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்ற மறைப்பான் உடம்பு.**

(இ-ள்.) குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு - மூவகைத் துன்பமும் உறற்பாலதாய தன் குடியை அவை உறாமற் காக்க முயல்வானது உடம்பு; இடும்பைக்கே கொள்கலங் கொல்-அம் முயற்சித் துன்பத்திற்கே கொள்கலமா மத்துணையோ, அஃதொழிந்து இன்பத்திற்காத லில்லையோ?

"உறைப்புழியோலை போல, மறைக்குவன் பெருமநிற்குறித்து வரு வேலே"† என்புழியும் மறைத்தல் இப் பொருட்டாயிற்று. 'என் குடிமுழுது மின்புற் றுயரவே நா னிருமையு மெய்துதலான் இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நன்'றென்று முயலு மறிவுடையான் அஃதொருஞான்று மொழியாமை நோக்கி, 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' வென்றார். இது குறிப்புமொழி. இவை இரண்டு பாட்டானும் அவர் அது செய்யுமியல்பு கூறப்பட்டது. (௯)

**௧0௩0. இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்**
**நல்லாள் இலாத குடி.**

(இ-ள்.) இடுக்கண் கால் கொன்றிட வீழும் - துன்பமாகிய நவியம் புகுந்து தன் முதலைவெட்டிச் சாய்க்க ஒரு பற்றின்றி வீழாநிற்கும்; அடுத்து ஊன்றும் நல்லாள் இலாத குடி - அக்காலத்துப் பற்றுவன கொடுத்துத் தாங்கவல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய மரம்.

முதல்: அதன்வழிக் குரியார். வளர்ப்பாரைப்பெற்றுழி வளர்ந்து பயன்படுதலும் அல்லாவழிக் கெடுதலு முடைமையின், மரமாக்கினார்; "தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளன்ன, வோங்குகுல நையவத னுட்பிறந்த வீரர் தாங்கல் கடன்"‡ என்றார் பிறரும். இது குறிப்புருவகம். இதனான் அவரில்லாத குடிக்குளதாங் குற்றங் கூறப்பட்டது. (௧0)

* குறள் - ௪௮௧. † புறநானூறு-௨௯0.
‡ சீவகசிந்தாமணி, காந்தருவத்தையாரிலம்பகம், ௯.

## அதி. ௧0௪—உழவு

[அஃதாவது, சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாய உழுதற்றொழில்; செய்விக்குங்கால் ஏனையோர்க்கும் உரித்து. இது, மேற் குடியுயர்தற்கேது வென்ற ஆள்வினைவகையாகலின், குடிசெயல்வகையின் பின் வைக்கப்பட்டது.

௧0௩௧. **சுழன்றுமேர்ப் பின்ன துலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை.**

(இ-ள்.) சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்-உழுதலான் வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொழில்களைச்செய்து திரிந்தும் முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம்; அதனால் உழந்தும் தலை உழவே-ஆதலான் எல்லா வருத்தமுற்றும், தலையாய தொழில் உழவே.

'ஏர்' ஆகுபெயர். பிறதொழில்களாற் பொருளெய்திய வழியும் உணவின்பொருட்டு உழுவார்கண் செல்ல வேண்டுதலிற் 'சுழன்றும் ஏர்ப்பின்ன துலக'மென்றும், வருத்தமிலவேனும் பிறதொழில்கள் கடையென்பது போதர 'உழந்தும் உழவே தலை' யென்றுங் கூறினார். இதனால் உழவினது சிறப்புக் கூறப்பட்டது. (௧)

௧0௩௨. **உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்ரு**
**தெழுவாரை எல்லாம் பொறுத்து.**

(இ-ள்.) அஃது ஆற்ருது எழுவாரை யெல்லாம் பொறுத்து-அவ்வுழுதலைச் செய்யமாட்டாது பிற தொழில்கள்மேற் செல்வார் யாவரையுந் தாங்குதலால்; உழுவார் உலகத்தார்க்கு ஆணி - அது வல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணி யாவர்.

"காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்"* டென்றாற்போல உழுவாரென்றது உழுவிப்பார் மேலுஞ் செல்லும். 'உலகத்தா' ரென்றது ஈண்டிவரை யொழிந்தாரை. கலங்காமல் நிறுத்தற்கண் ஆணி போறலின், 'ஆணி' யென்றார். பொறுத்தலா னென்பது திரிந்து நின்றது. ஏகதேச உருவகம். அஃதாற்றார் தொழுவாரே யெல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அது மாட்டாதார் புரப்பார் செய்யும் பரிபவமெல்லாம் பொறுத்து அவரைத் தொழுவாரே யாவரென் றுரைப்பாருமுளர்.†

* பட்டினப்பாலை, அடி—௨௮௩, ௨௮௪. † மணக்குடவர்.

௧0௩௩. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.

(இ-ள்.) உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார் - யாவரும் உண்ணும் வகை உழுதலைச்செய்து அதனால் தாமு முண்டு வாழ் கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர்; மற்றெல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர் - மற்றையா ரெல்லாம் பிறரைத் தொழுது அதனால் தாமுண்டு அவரைப் பின்செல்கின்றவர்.

'மற்'றென்பது வழக்குப்பற்றி வந்தது. தாமும் மக்கட் பிறப் பினராய் வைத்துப் பிறரைத் தொழுது அவர் சில கொடுப்பத் தம் முயிரோம்பி அவர்பின் செல்வார் தமக்குரியரல்ல ரென்பது கருத்து. (௩)

௧0௩௪. பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

(இ-ள்.) அலகு உடை நீழலவர் - உழுதல் தொழிலான நெல்லினை யுடையராய தண்ணளியுடையோர்; பல குடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர் - பல வேந்தர் குடை நிழலதாய மண் முழுதினையுந் தம்மரசன் குடைக்கீழே காண்பர்.

'அலகு'-கதிர்; அஃதீண்டாகுபெயராய் நெல்மேலதாயிற்று. உடையவென்பது குறைந்து நின்றது. நீழல்போறலின் 'நீழ' லெனப் பட்டது. 'நீழலவ' ரென்றது, இரப்போர்க்கெல்லாம் ஈத னோக்கி. ஒற்றுமைபற்றித் தங் குடை யென்றார். 'குடைநீழ' லென்பதூஉம் ஆகுபெயர். "ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே"* என்றதனால் தம்மரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண் முழுதும் அவனதாகக் கண்டிருப்ப ரென்பதாம்; "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்"† என்றார் பிறரும். (௪)

௧0௩௫. இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(இ-ள்.) கை செய்து ஊண் மாலையவர் இரவார் - தங் கையால் உழுதுண்டலை இயல்பாகவுடையார் பிறரைத் தாமிரவார்; இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர் - தம்மை இரப்பார்க்கு அவர் வேண்டிய தொன்றனைக் கரவாது கொடுப்பர்.

'செய்' தென்பதற்கு உழுதலையென வருவிக்க. 'கைசெய்தூண் மாலையவ' ரென்பது ஒருஞான்றும் அழிவில்லாத செல்வ முடைய ரென்னும் ஏதுவை உட்கொண்டு நின்றது. (௫)

* புறநானூறு-௩௫. † சிலப்பதிகாரம், நாடுகாண்காதை-௧௪௪.

௧௦௩௬. உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

(இ-ள்.) உழவினார் கை மடங்கின்-உழுதலையுடையார் கை அதனைச் செய்யாது முடங்குமாயின்; விழைவதூஉம்விட்டேம் என்பார்க்கும் நிலை இல்லை-யாவரும் விழையும் உணவும் யாந்துறந்தோமென்பார்க்கு அவ்வறத்தின்கணிற்றலு முளவாகா.

உம்மை இறுதிக்கண்ணும் வந்தியைந்தது உணவின்மையால் தாமுண்டலும்இல்லறஞ்செய்தலும் யாவர்க்குமில்லையாயின. அவர் உறுப்புமாத்திரமாய கைவாளாவிருப்பின்உலகத்துஇம்மைமறுமை வீடென்னும் பயன்கள் நிகழாவென்பதாம். ஒன்றனை மனத்தால் விழைதலும்ஒழிந்தேமென்பார்க்கென உரைப்பாருமுளர்.* இவை ஐந்து பாட்டானும் அதனைச் செய்வாரது சிறப்புக் கூறப்பட்டது.

௧௦௩௭. தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

(இ-ள்.) தொடிப்புழுதி கஃசா உணக்கின்-ஒரு நிலத்தினை உழுதவன் ஒருபலப்புழுதி கஃசாம்வண்ணம் அதனைக் காயவிடுவானாயின்; பிடித்து எருவும் வேண்டாது சாலப்படும்- அதன்கட் செய்த பயிர் ஒரு பிடியின்கண் அடங்கிய எருவுமிட வேண்டாமற் பணைத்து விளையும்.

'பிடித்து': பிடியின்கண்ணது. பிடித்த என்பதன் விகாரமென்பாருமுளர்†. வேண்டாமல், சான்று என்பன திரிந்து நின்றன. (௭)

௧௦௩௮ ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு.

(இ-ள்.) ஏரினும் எரு இடுதல் நன்று - அப்பயிர்க்கு அவ்வுழுதலினும் எருப்பெய்தல் நன்று;கட்டபின் அதன் காப்புநீரினும் நன்று - இவ்விரண்டுஞ் செய்து களைகட்டால் அதனைக் காத்தல் அதற்கு நீர்கால் யாத்தலினும் நன்று.

'ஏர்' ஆகுபெயர். காத்தல்: பட்டி முதலியவற்றான் அழிவெய்தாமற் காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால் யாத்தல், காத்தலென் றிம்முறையவாய இவ்வைந்தும் வேண்டுமென்பதாம். (௮)

௧௦௩௯. செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்
தில்லாளின் ஊடி விடும்.

* மணக்குடவர். † மணக்குடவர்.

(இ-ள்.) கிழவன் செல்லான் இருப்பின் - அந்நிலத்திற்குரியவன் அதன்கண் நாடோறுஞ் சென்று பார்த்து அடுத்தன செய்யாது மடிந்திருக்குமாயின்; நிலம் இல்லாளிற் புலந்து ஊடிவிடும்- அஃது அவனில்லாள்போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின்னவனோ டூடிவிடும்.

செல்லுதல் ஆகுபெயர். பிறரை யேவியிராது தானே சேறல் வேண்டுமென்பது போதரக் 'கிழவ' னென்றார். தன்கட் சென்று வேண்டுவன செய்யாது வேறிடத் திருந்தவழி மனையாள் ஊடுமாறு போல என்றது அவன் போகமிழத்தல் நோக்கி. இவை மூன்று பாட்டானும் அது செய்யுமாறு கூறப்பட்டது. (௯)

௧௦௪௦. **இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலமென்னும் நல்லாள் நகும்.**

(இ-ள்.) இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின்- யாம் வறியேமென்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால்; நிலம் என்னும் நல்லாள் நகும்-நிலமகளென்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற நல்லாள் தன்னுள்ளே நகாநிற்கும்.

உழுதல் முதலிய செய்வார் யாவர்க்குஞ் செல்வம் கொடுத்து வருகின்றவாறு பற்றி 'நல்லா' ளென்றும், அது கண்டுவைத்தும் அது செய்யாது வறுமையுறுகின்றபேதைமைபற்றி 'நகு' மென்றுங் கூறினார். இரப்பாரை யென்று பாடமோதுவாருமுளர்.* இதனான் அது செய்யாதவழிப் படுமிழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற அதிகார முறைமைக்குக் காரணமும் இது. (௧௦)

---

## அதி. ௧௦௫—நல்குரவு

[அஃதாவது, நுகரப்படுவன யாவும் இல்லாமை.]

௧௦௪௧. **இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்**
**இன்மையே இன்னா தது.**

(இ-ள்.) இன்மையின் இன்னாதது யாது எனின் - ஒருவனுக்கு வறுமைபோல இன்னாதது யாதென்று வினவின்; இன்மையின் இன்னாதது இன்மையே - வறுமைபோல இன்னாதது வறுமையே பிறிதில்லை.

'இன்னாதது'-துன்பஞ்செய்வது. ஒப்பதில்லை யெனவே மிக்கதின்மை சொல்லவேண்டா வாயிற்று. (௧)

---

*மணக்குடவர்.

௧0௪௨. இன்மை எனவொரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்.

(இ - ள்.) இன்மை என ஒருபாவி - வறுமையென்று சொல்லப்படுவதொரு பாவி; மறுமையும் இம்மையும் இன்றி வரும் - ஒருவனுழை வருங்கால் அவனுக்கு மறுமை இன்பமும் இம்மை இன்பமும் இல்லையாக வரும்,

இன்மை என ஒருபாவி என்பதற்கு மேல் "அழுக்காறென வொரு பாவி"* யென்புழி உரைத்தாங்குரைக்க. மறுமை, இம்மை யென்பன ஆகுபெயர். ஈயாமையானும் துவ்வாமையானும் அவை இலவாயின. இன்றி விடுமென்று பாடமோதிப் பாவியாலெனவிரித்துரைப்பாரு முளர்.† (௨)

௧0௪௩. தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குர வென்னும் நசை.‡

(இ - ள்.) நல்குரவு என்னும் நசை - நல்குரவென்று சொல்லப்படும் ஆசை; தொல் வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும். தன்னாற் பற்றப்பட்டாருடைய பழைய குடிவரவினையும் அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும்.

நசை இல்வழி நல்குரவும் இல்லையாகலின் நல்குரவையே நசையாக்கி, அஃது அக்குடியில் தொல்லோர்க் கில்லாத இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையும் உளவாக்கலான் அவ்விரண்டனையும் ஒருங்கு 'கெடுக்கு'மென்றார். 'குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்"§என்றார் பிறரும். தோலாவது "இழுமென்மொழியால் விழுமியது நுவறல்"$ என்றார் தொல்காப்பியனாரும். இதற்கு உடம்பென் றுரைப்பாரு முளர்.¶ அஃததற்குப் பெயராயினும் உடம்பு கெடுக்கும் என்றற்கொரு பொருட்சிறப்பில்லாமை யறிக.

௧0௪௪. இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும்.

(இ - ள்.) இற்பிறந்தார் கண்ணேயும் - இளிவந்த சொற் பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும்; இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு இன்மை தரும் - அது பிறத்தற்கேதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும்.

*குறள் - ௧௬௮. †மணக்குடவர். ‡முதுமொழிக்காஞ்சி.
§மணிமேகலை, பாத்திரம் பெற்ற காதை, அடி-எ௬.
$ தொல். பொருள். செய்-௨௩௯. ¶ மணக்குடவர்.

சிறப்புமை அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றது. 'இளி வந்த சொல்': இளிவருதற் கேதுவாகிய சொல்; அஃதாவது எமக் கீயவேண்டுமென்றல். 'சோர்வு' தாமுறுகின்ற துன்பமிகுதி பற்றி ஒரோவழித் தம் பிறப்பினை மறந்து அது சொல்லுவதாக நினைத்தல். (௪)

௧0௪௫. நல்குர வென்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

(இ - ள்.) நல்குரவு என்னும் இடும்பையுள் - நல்குரவென்று சொல்லப்படும் துன்ப மொன்றனுள்ளே; பல் துன்பங்கள் சென்று படும் - பல துன்பங்களும் வந்து விளையும்.

'குரை': இசைநிறை. செலவு விரைவின்கண் வந்தது. துன்பமும் தானுமுடனே நிகழ்தலின் நல்குரவைத் துன்பமாக்கியும், அத்துன்ப மடியாகச் செல்வர் கடைநோக்கிச் சேறல் துன்பமும், அவரைக் காண்டல் துன்பமும், கண்டான் மறுத்துழிநிகழும் துன்பமும், மரு வழியும் அவர் கொடுத்தது வாங்கல் துன்பமும், அது கொடு வந்து நுகர்வன கூட்டல் துன்பமும் முதலாயின நாடோறும் வேறுவேருக வருதலின் எல்லாத் துன்பங்களும் உளவாமென்றுங் கூறினர். இவை ஐந்து பாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப்பட்டது. (௫)

௧0௪௬. நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

(இ - ள்.) நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் - மெய்ந்நூற்பொருளைத் தெளிய அறிந்து சொன்னாராயினும்; நல்கூர்ந்தார் சொற் பொருள் சோர்வுபடும் - நல்கூர்ந்தார் சொல்லுஞ் சொற்பொருளின்மையைத் தலைப்படும்.

பொருளின்மையைத் தலைப்படுதலாவது யாமிவர்சொல்லியன விரும்பிக் கேட்குமாயிற் கண்ணோடி இவருறுகின்ற குறைமுடிக்க வேண்டுமென் றஞ்சி யாவரும் கேளாமையிற் பயனில் சொல்லாய் முடிதல். கல்வியும் பயன்படா தென்பதாம். (௬)

௧0௪௭. அறஞ்சாரா நல்குர வின்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(இ - ள்.) அறம் சாரா நல்குரவு - அறத்தோ டியைபில்லாத நல்குரவுடையான்; ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும் - தன்னை ஈன்ற தாயானும் பிறனைக் கருதுமாறுபோலக் கருதி நோக்கப்படும்.

அறத்தோடு கூடாமை, காரண காரியங்களுள் ஒன்ருய் இயையாமை. 'நல்குரவு' ஆகுபெயர். சிறப்பும்மை அவளதியற்கையன் புடைமை விளக்கிநின்றது. கொள்வதின்ருதலேயன்றிக் கொடுப்பதுண்டாதலு முடைமையின், அதுநோக்கிச் சுற்றத்தார் யாவருந் துறப்ப ரென்பதாம். (எ)

௧0௪௮. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு.

(இ - ள்.) நெருநலும் கொன்றதுபோலும் நிரப்பு - நெருநற்றுங் கொன்றது போன்று எனக்கின்னுதவற்றைச் செய்த நல்குரவு; இன்றும் வருவதுகொல் - இன்றும் என்பால் வரக்கடவதோ; வந்தால் இனி யாது செய்வேன்?

அவ்வின்னுதனவாவன: மேற்சொல்லிய துன்பங்கள். *நெருநல் மிக வருந்தித் தன் வயிறு நிறைத்தானொருவன் கூற்று. (அ)

௧0௪௯. நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பா டரிது.

(இ - ள்.) நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் - மந்திர மருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்துறங்கலுமாம்; நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது - நிரப்பு வந்துழி யாதொன்றானும் உறக்கமில்லை.

நெருப்பினும் நிரப்புக் கொடி தென்றவாருயிற்று. இதுவும் அவன் கூற்று. இவை நான்கு பாட்டானும் நல்கூர்ந்தார்க் குள தாங் குற்றங் கூறப்பட்டது. (௯)

௧0௫0. துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.

(இ - ள்.) துப்புரவு இல்லார் துவரத் துறவாமை - நுகரப்படும் பொருள்களில்லாதார் தம்மாற் செயற்பாலது முற்றத் துறத்தலேயாகவும் அது செய்வாதொழிதல்; உப்பிற்கும் காடிக்கும் கூற்று - பிறர் இல்லின் உளவாய உப்பிற்கும் காடிக்குங் கூற்ரும்.

மான மழியாமையிற் செயற்பாலது அதுவேயாயிற்று. முற்றத் துறத்தல் சுற்றந் தானே விட்டமையின் ஒருவாற்ருல் துறந்தாராயினர் நின்ற தம் முடம்பினையுந் துறத்தல், அது செய்யாது கொண்டிருத்தல் இரண்டனையும் மாளப்பண்ணுதலின், அதனை

---

* குறள் - ௧0௪௫.

அவற்றிற்குக் 'கூற்' றென்ருர். இனி முற்றத் துறத்தலாவது துப்புரவில்லாமையின் ஒருவாற்ருல் துறந்தாராயினுர் பின்னவற்றை மனத்தால் துறவாமை யென்றுரைப்பாரு முளர்.* இதனுன் அஃதுள தாய வழிச் செய்வது கூறப்பட்டது. (௧0)

## அதி. ௧0௬—இரவு

[இனி, மானந்தீரா இரவு இரவாமையோடொத்தலின், அதனுனும் வீடெய்தற் பயத்ததாய உடம்போம்பப்படுமென்னும் அறநூல் வழக்குப்பற்றி மேலெய்திய துவரத்துறத்தல் விலக்குதற் பொருட்டு இரவு கூறுகின்ருர். அதிகார முறைமையும் இதனுனே விளங்கும்.]

௧0௫௧. **இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்**
**அவர்பழி தம்பழி அன்று.**

**(இ - ள்.)** இரத்தக்கார்க் காணின் இரக்க - நல்கூர்ந்தார் இரத்தற்கேற்புடையாரைக் காணில், அவர்மாட் டிரக்க; கரப்பின் அவர்பழி தம் பழி அன்று - இரந்தால் அவர் கரந்தாராயின் அவர்க்குப் பழியாவதல்லது தமக்குப் பழியாகாமையான்.

இரவென்னு முதனிலைத் தொழிற்பெயர திறுதிக்கண் நான்கனுருபு விகாரத்தால் தொக்கது. இரத்தற் கேற்புடைய ராவார் உரையாமை முன்னுணரும் ஒண்மையுடையராய் மாற்ருதீவார்.† அவர் உலகத்தரியராகலிற் 'காணி' னென்றும், அவர்மாட் டிரந்தார்க்கு இரவான்வரும் இழிவின்மையின் 'இரக்க'வென்றும், அவர் ஈதலிற் குறைகாட்டாமையிற் 'கரப்பி' னென்றும், காட்டுவராயின் அப்பழி தூவெள்ளறுவைக்கண் மாசுபோல அவர்கண் கடிதுசேறலின் 'அவர் பழி' யென்றும், எற்பிலார்மாட்டிரவன்மையின் 'தம் பழியன்' றென்றுங் கூறினுர். (௧)

௧0௫௨. **இன்பம் ஒருவற் கிரத்தல் இரந்தவை**
**துன்பம் உருஅ வரின்.**

**(இ - ள்.)** ஒருவற்கு இரத்தல் இன்பம் - ஒருவற்கு இரத்தல் தானும் இன்பத்திற்கேதுவாம்; இரந்தவை துன்பம்உருஅ வரின் - இரந்த பொருள்கள் ஈவார துணர்வுடைமையால் தான் துன்புருமல் வருமாயின்.

* மணக்குடவர். † குறள் - ௨௨௫.

'இன்பம்' ஆகுபெயர். உளுமல் என்பது கடைக்குறைந்து நின்றது. 'துன்பம்' சாதியொருமைப்பெயர். அவையாவன ஈவார் கண் காலமும் இடனு மறிந்து சேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத் தம்வயத்தாராக்கலும், அவர் மனநெகிழ்வன நாடிச் சொல்லலும் முதலியவற்ளுன் வருவனவும், மறுத்துழி வருவனவு மாம். அவை உளுமல் வருதலாவது அவர் முன்னுணர்ந் தீயக் கோடல். இரந்தவர் துன்பமுளுவரினென்று பாடமோதி இரக்கப் பட்டவர் பொருளின்மை முதலியவற்ளுல் துன்புளுது எதிர்வந் தீவராயின் என்றுரைப்பாரு முளர்.* இவை இரண்டு பாட்டானும் நல்குரவானுயிர் நீங்கும் எல்லைக்கண் இளிவில்லா இரவு விலக்கப் படாதென்பது கூறப்பட்டது. (௨)

௧0௫௩. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
　　　　　றிரப்புமோர் ஏஎர் உடைத்து.

(இ - ள்.) கரப்பிலா நெஞ்சிற் கடன் அறிவார் முன் நின்று இரப்பும் - கரத்தலில்லா நெஞ்சினையுடைய மானமறிவார் முன்னர் நின்று அவர்மாட்டொன் றிரத்தலும்; ஓர் எஎர் உடைத்து - நல் கூர்ந்தார்க்கு ஓரழ குடைத்து.

"சிறிய சுருக்கத்து வேண்டு முயர்"† வென்றதனுல், அவர்க்கு அது கடனெனப்பட்டது. அதனையறிதல்: சொல்லுதலுற் றுரைக்க‡லாகாமைக் கேதுவாய அதனியல்பினை யறிதல். அவ் வறிவுடையார்க்கு முன்னிற்றல் மாத்திரமே யமைதலின் 'முன் னின்'றென்றும், சொல்லுதலான் வருஞ் சிறுமை யெய்தாமையின் 'ஓரேஎ ருடைத்' தென்றுங் கூறினுர். உம்மை அதனிழிபு விளக்கிநின்றது. (௩)

௧0௫௪. இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
　　　　　கனவிலும் தேற்ருதார் மாட்டு.

(இ - ள்.) கரத்தல் கனவிலும் தேற்ருதார்மாட்டு இரத் தலும் - தமக்குள்ளது கரத்தலைக் கனவின் கண்ணும் அறியாதார் மாட்டுச் சென்றொன் றினை இரத்தலும்; ஈதலே போலும் - வறியார்க் கீதலே போலும்!

உம்மை ஈண்டும் அவ்வாறு நின்றது. தான் புகழ்பயவாதாயி னும் முன்னுளதாய புகழ்கெட வாராமையின், "ஈதலே போலு" மென்ருர். ஏகாரம் - ஈற்றசை. (௪)

* மணக்குடவர்.　　† குறள் - ௯௬௯.　　‡ கலித் - ௬௧.

௧0௫௫. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
நிரப்பவர் மேற்கொள் வது.

(இ - ள்.) கண்ணின்று இரப்பவர் மேற்கொள்வது-சொல்லு தன்மாட்டாது முன்னின்றன் மாத்திரந்தான் இரப்பார் உயிரோம் பற்பொருட்டு அதனை மேற்கொண்டு போதுகின்றது; கரப்பிலார் வையகத்து உண்மையான் - அவர்க்கு உள்ளது கரவாது கொடுப் பார் சிலர் உலகத்துளராய தன்மையானே, பிறி தொன்றானன்று.

அவரில்லையாயின், மானநீக்க மாட்டாமையின் உயிர் நீப்ப ரென்பதாம். (௫)

௧0௫௬. கரப்பிடும்பை யில்லாரைக் காணின் நிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

(இ - ள்.) கரப்பிடும்பை இல்லாரைக் காணின் - உள்ளது கரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால்; நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும் - மானம் விடா திரப்பார்க்கு நிரப்பான் வருந் துன் பங்களெல்லாஞ் சேரக் கெடும்.

கரத்தல் ஒருவற்கு வேண்டுவ தொன்றன்மையின் அதனை நோயென்றும், அஃதில்லாத இரக்கத்தக்காரைக் கண்டபொழுதே அவர் கழியுவகையராவ ராகலின் 'எல்லா மொருங்கு கெடு'மென் றுங் கூறினர். 'இடும்பை' ஆகுபெயர். முழுதுங்கெடு மென்று பாடமோதி, எஞ்சாமற் கெடுமென் றுரைப்பாரு முளர்.* (௬)

௧0௫௭. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்ப துடைத்து.

(இ - ள்.) இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின்-தம்மை யவமதித் திழிபு சொல்லாது பொருள் கொடுப்பாரைக் கண்டால்; உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து-அவ்விரப்பாரது உள்ளம் மகிழ்ந்து உள்ளுள்ளே யுவக்குந் தன்மையுடைத்து:

'இகழ்ந்தெள்ளா' தெனவே, நன்கு மதித்தலும் இனியவை கூறலும் பெறுதும். நிரப்பிடும்பை கெடுதலளவேயன்றி ஐம்புலன்க ளானும் பேரின்ப மெய்தினராகக் கருதலான், "உள்ளு ளுவப்ப துடைத்" தென்றார். இவை ஐந்து பாட்டானும் அவ்விரக்கத் தக்கார தியல்பு கூறப்பட்டது. (௭)

௧0௫௮. இரப்பாரை யில்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.

* மணக்குடவர்.

(இ - ள்.) இரப்பார் இல்லாயின் - வறுமையுற் றிரப்பார் இல்லையாயின்; ஈர்ங்கண் மா ஞாலம் - குளிர்ந்த இடத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார் செலவு வரவுகள்; மரப்பாவை சென்று வந்தற்று - உயிரில்லாத மரப்பாவை இயந்திரக் கயிற்றாற் சென்று வந்தாற்போலும்.

ஐகாரம் அசைநிலை. ஞாலமென்னும் ஆகுபெயர்ப்பொருட்கு உவமையோ டொத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத் துள்ளா ரென்றது அவரை யொழிந்தாரை. அவர்க் கீதலைச் செய்து புகழும்புண்ணியமு மெய்தாமையின், உயிருடையரல்ல ரென்பதாம். "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ் வாரே வன்க ணவர்" என்றார் பிறரும். இத் தொடையின்ப நோக்காது இரப்பவர் இல்லாயி னென்று பாடமோதுவாரு முளர்.*
(அ)

௧௦௫௯. ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை.

(இ - ள்.) இரந்துகோள் மேவார் இலாக்கடை - அவர்பாற் சென்று ஒன்றனை இரந்துகோடலை விரும்புவாரில்வழி; ஈவார்கண் தோற்றம் என் உண்டாம் - கொடுப்பார்மாட்டு என்ன புகழுண்டாம்? யாதுமில்லை.

'தோற்றம்' ஆகுபெயர். மேவுவா ரென்பது விகாரமாயிற்று. கொடுத்தல்வன்மை வெளிப்படாமையின், அதனாற் புகழெய்தா ரென்பதாம். இவை இரண்டு பாட்டானும் உலகிற் கிரப்பார் வேண்டு மென்பது கூறப்பட்டது.
(௯)

௧௦௬௦. இரப்பான் வெகுளாமை வேண்டும்† நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி.

(இ - ள்.) இரப்பான் வெகுளாமை வேண்டும் - ஈவானுக்குப் பொருளுதவாவழி இவனெனக் கீகின்றிலனென்று அவனை யிரப் பான் வெகுளாதொழிதல்வேண்டும்; நிரப்பிடும்பை தானேயும் கரி சாலும் - அது வேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறு சான்று வேண்டா, இரப்பாகிய தன்னிடும்பை தானேயுஞ் சான்றாத லமையும்.

யாவர்க்கும் தேடவேண்டுதலும் நிலையின்மையும் முதலிய பிற சான்று முண்டென்பதுபட நின்றமையின், உம்மை எச்சவும்மை. தனக்கேயன்றி மற்றை இரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள்

* மணக்குடவர்.    † இனியவை நாற்பது - ௪௦.

கடைக்கூட்டற்கு அவனுறுந் துன்பத்தைத் தனக்கேயாக வைத்துத் தானுறுந் துன்பந் தானறிந்து வெகுளற்க என்பதாம். இதனால் அவர்க் கின்றியமையாததோர் இயல்பு கூறப்பட்டது. ()

---

## அதி. —௱௭௰—இரவச்சம்

[அஃதாவது, மானந் தீர வரும் இரவிற் கஞ்சுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

**௲௬௧. கரவா துவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்.***

(இ-ள்.) கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை - தனக்குள்ளது கரவாது இவர் வரப்பெற்றேமென்று உள்மகிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்தார்மாட்டும்இரவாதே ஒருவன் வறுமை கூர்தல்; கோடி உறும் - இரந்து செல்வமெய்த லிற் கோடி மடங்கு நன்று.

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாதென்பது பட நின்றமையின் உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. அவ் விரவான் மானந் தீராதென்னுந் துணையல்லது அதற்கு மிகுதி கூடாமையின், வல்லதொரு முயற்சியான் உயிரோம்பலே நல்ல தென்பது கருத்து. (௧)

**௲௬௨. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.**

(இ-ள்.) உலகு இயற்றியான் இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் - இவ்வுலகத்தைப் படைத்தவன் இதன்கண் வாழ் வார்க்கு முயன் றுயிர்வாழ்தலை யன்றி இரந்தும் உயிர்வாழ்தலை வேண்டி விதித்தானாயின்; பரந்து கெடுக - அக் கொடியோன் தானும் அவரைப்போன்று எங்கும் அலமந்து கெடுவானாக.

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாய உண்டியும் அதற்கேதுவாய செய்தொழிலும் பழவினை வயத்தாற் கருவொடு கலந்தவன்றே அவன் கற்பிக்குமன்றே? அவற்றுட் சில உயிர்க்கு இரத்தலையும் ஒரு செய்தொழிலாகக் கற்பித்தானாயின் அத் தீவினையால் தானும் அத்துன்பமுறல் வேண்டுமென்பதாம். இவை இரண்டு பாட்டானும் அவ்விரவின் கொடுமை கூறப் பட்டது. (௨)

---

* நாலடியார் - ௩௦௫.

௧0௬௩. இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

(இ-ள்.) இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையின் - வறுமையான் வருந் துன்பத்தை முயன்று நீக்கக் கடவேமென்று கருதாது இரந்து நீக்கக்கடவேமென்று கருதும் வன்மைபோல; வன்பாட்டது இல் - வலிமைப்பாடுடையது பிறிதில்லை.

நெறியாய முயற்சி நிற்க, நெறியல்லாத இரவால் தீர்க்கக் கருதுதலின், வன்மையாயிற்று. வன்பாடு: முருட்டுத்தன்மை. அஃதாவது ஓராது செய்துநிற்றல். இதனான் வறுமை தீர்தற்கு நெறி இரவன் றென்பது கூறப்பட்டது. (௩)

௧0௬௪. இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு.

(இ-ள்.) இடம் இல்லாக்காலும் இரவு ஒல்லாச்சால்பு-நுகர வேண்டுவனவின்றி நல்கூர்ந்த வழியும் பிறர்பாற்சென் றிரத்தலை உடம்படாத அமைதி; இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே - எல்லா உலகும் ஒருங் கியைந்தாலும் கொள்ளாத பெருமை உடைத்து.

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவொல்லாமை அதன்மேலேற்றப்பட்டது. இதனான் அந் நெறியல்லதனைச் சால் புடையார் செய்யா ரென்பது கூறப்பட்டது. (௪)

௧0௬௫. தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்த
துண்ணலின் ஊங்கினிய தில்.

(இ-ள்.) தாள் தந்தது தெண்ணீர் அடுபுற்கையாயினும் - நெறியாய முயற்சி கொடுவந்து தந்தது தெளிந்த நீர் போலும் அடுபுற்கையேயாயினும்; உண்ணலின் ஊங்கு இனியது இல் - அதனை உண்டற்கு மேல் இனியதில்லை.

தாள்தந்த கூழ் செறிவின்றித் தெண்ணீர் போன்றதாயினும், இழிவாய இரவான் வந்ததன்றித் தம்முடைமையாகலின், அமிழ் தத்தோ டொக்கு மென்பதாம். இதனால் நெறியினான் ஆயது சிறிதேனும் அது செய்யும் இன்பம் பெரிதென்பது கூறப்பட்டது. (௫)

௧0௬௬. ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
கிரவின் இளிவந்த தில்.

(இ-ள்.) ஆவிற்கு நீரென்று இரப்பினும்-தண்ணீர்பெறாது இறக்கும் நிலைமைத்தாயதோர் ஆவினைக் கண்டு அறநோக்கி

இதற்குத் தண்ணீர் தரல்வேண்டுமென் றிரந்து சொல்லுங்காலும் இரவின் நாவிற்கு இளி வந்தது இல்-அவ்விரவுபோல ஒருவனுவிற் கிளிவந்தது பிறிதில்லை.

ஆ காத்தோம்பல் பேரறமாகலின் 'ஆவிற்' கென்றும், பொருள் கொடுத்துக் கொள்ள வேண்டாத எண்மைத்தாகலின் 'நீ' ரென்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச் சொல்லளவே யாக லின் 'நாவிற்' கென்றும், அதுதான் எல்லா இளிவினும் மேற் படுதலின் 'இளிவந்த தில்' லென்றுங் கூறினர். இதனான் அறனும் முயன்று செய்வதல்லது இரந்து செய்யற்க என்பது கூறப் பட்டது. (௬)

௧0௬௭. இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பிற்
கரப்பார் இரவன்மின் என்று.

(இ-ள்.) இரப்பாரை எல்லாம் இரப்பன் - இரப்பாரை யெல்லாம் யான் இரவாநின்றேன்; இரப்பிற்கரப்பார் இரவன்மின் என்று-யாது சொல்லி யெனின், நுமக்கிரக்க வேண்டுமாயின் தமக்குள்ளது கரப்பாரை இரவாதொழிமின் என்று சொல்லி.

இரண்டாவது விகாரத்தால் தொக்கது. இவ் விளிவந்த செயலான் ஊட்டியவழியும் உடம்பு நில்லாதாகலின் இதுவேண்டா வென்பது தோன்ற, 'இரப்ப' னென்றார். இதனான் மானந்தீர வரும் இரவு விலக்கப்பட்டது. (௭)

௧0௬௮. இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

(இ-ள்.) இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி - இவ் வறுமை யென்னுங் கடலை இதனாற் கடத்துமென்று கருதிஒருவன் எறிய இரவென்னுஞ் சேமமற்ற தோணி; கரவு என்னும் பார் தாக்கப் பக்கு விடும் - அதன்க ணேறுங்காற் கரத்தலென்னும் வன்னிலத்தோடு தாக்குமாயிற் பிளந்துபோம்.

முயற்சியாற் கடப்பதனை இரவாற் கடக்கலுற்றான் அதன் கரை காணாமையின், 'ஏமாப்பில் தோணி' யென்றார். ஏமாப் பின்மை தோணிமேல் ஏற்றப்பட்டது. அது கடத்தற்கேற்ற தன்மையானும், நிலமறியாது செலுத்திய வழி உடைதலானும், அதன்கண் ஏறற்க வென்பதாம்; இஃது ஏகதேச உருவகம். (அ)

௧0௬௯. இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்.

(இ-ள்.) இரவு உள்ளம் உருகும் - உடையார் முன் இல்லார் சென்றிரந்து நிற்றலின் கொடுமையை நினைத்தால் எம்

முள்ளம் கரைந்துருகாநிற்கும்; கரவு உள்ள உள்ளதூஉம் இன்றிக் கெடும் - இனி அந்நிலையைக் கண்டுவைத்தவர் இல்லையென்றலின் கொடுமையை நினைந்தால் அவ்வுருகும் அளவுதானும் இன்றிப் பொன்றிவிடும்.

"இரவினை, உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ, கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு"* என்ருர் பிறரும். இரவினுங் கரவு கொடிதென்பதாம். இதற்குப் பிறர்†ரெல்லாம் இரக்கின்றவர் உள்ளம் உருகுமென் றுரைத்தார். (௯)

௧0௭0. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்.

(இ - ள்.) சொல்லாட இரப்பவர் உயிர் போம் - கரப்பார் இல்லை யென்று சொல்லாடிய துணையானே இரப்பார்க்கு உயிர் போகாநின்றது; கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்குங்கொல் - இனிச் சொல்லாடுகின்ற அவர்தமக்கு உயிர் பின்னு நிற்றலான் அப் பொழுது எப்புரையுட் புக்கொளித்து நிற்கும்!

உயிர் போகலாவது இனியாமென்செய்துமென்றேங்கிச் செய லற்று நிற்றல். "அந்நிலையே, மாயாதோ மாற்றி விடின்"‡ என்ருர் பிறரும். கேட்டாரைக் கொல்லவற்ருய சொற் சொல்வாரைக் கோறல் சொல்லவேண்டாவாயினும், அது காண்கின்றிலம்; இஃ தென்னோ வென்பதாம். வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படு வாராய கேளிர்கட்கும் அதனைச் சொல்லாட உயிர்போம்; ஆனபின் மறைக்கப்படுவாராய பிறர்க்குச் சொல்லாடியக்காற் போகா தெங்கே யொளித்துநிற்கும்; இரண்டானும் போமேயன்றோவென இரவஞ்சினன் ஒருவன் கூற்ருக்கி உரைப்பாருமுளர்.§ இவை மூன்று பாட்டானும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன. (௧0)

---

## அதி. ௧0அ—கயமை

[அஃதாவது, மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளுஞ் சிறப்பு வகையாற் கூறப்பட்ட குணங்களுள் எற்புடையன குறிப் பினுல் யாவர்க்கும் எய்தவைத்தமையின், ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும் ஈண்டொழிபியலுள் வெளிப்படக் கூறியனவு

---

* நாலடியார்-௩0௫. † மணக்குடவர். ‡ நாலடியார்-௩0அ
§ மணக்குடவர்.

மாய குணங்கள் யாவுமிலராய இழிவாரது தன்மை. அதனால் இஃதெல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.]

௧௦எ௧. மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்.

(இ-ள்.) மக்களே போல்வர் கயவர் - வடிவான் முழுதும் மக்களை யொப்பர் கயவர்; அவர் அன்ன ஒப்பாரி யாம் கண்டது இல்-அவர் மக்களை யொத்தாற்போன்றவொப்பு வேறிரண்டுசாதிக் கண் யாங் கண்டதில்லை.

முழுது மொத்தல் தேற்றேகாரத்தாற் பெற்றும். அவரென்றது, அவர்மாட் டுளதாய ஒப்புமையை. மக்கட்சாதிக்குங் கயச்சாதிக்கும் வடிவொத்தலிற் குணங்களது உண்மை யின்மைகளான் அல்லது வேற்றுமை அறியப்படாதென்பதாம். இதனாற் கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது. (௧)

௧௦எ௨. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலர்.

(இ-ள்.) நன்று அறிவாரிற் கயவர் திரு உடையர் - தமக்குறுதியாவன அறிவாரின் அவை யறியாத கீழ்மக்கள் நன்மையுடையர்: நெஞ்சத்து அவலம் இலர் - அவர் போல அவை காரணமாகத் தங் நெஞ்சத்தின்கண் கவலையிலராகலான்.

'நன்'றென்பது சாதியொருமை. உறுதிகளாவன: இம்மை மறுமை வீடுகட்குரியவாய புகழற ஞானங்கள். இவற்றை அறிவார் இவை செய்யாநின்றேமிகச் செயப்பெறுகின்றிலேமென்றும், செய்கின்ற இவைதமக்கு இடையூறு வருங்கொலென்றும், இவற்றின் மறுதலையாய பழி பாவ மறியாமை யென்பனவற்றுள் யாது விளையுமோவென்றும், இவ்வாற்றாற் கவலையெய்துவர்; கயவர் அப்புகழ் முதலியவொழித்துப் பழி முதலிய செய்யாநின்றும் யாதுங் கவலையுடையரல்லராகலான் திருவுடையரெனக் குறிப்பால் இகழ்ந்தவாறு. இதனாற் பழி முதலியவற்றிற் கஞ்சாரென்பது கூறப்பட்டது. (௨)

௧௦எ௩. தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.

(இ-ள்.) தேவர் அனையர் கயவர் - தேவருங் கயவரும் ஒரு தன்மையர்; அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான் - அஃதியாதனானெனின், தேவரைப் போன்று தம்மை நியமிப்பாரின்றிக் கயவருந் தாம் விரும்புவனவற்றைச் செய்தொழுகலான்.

உயர்ச்சியும் இழிவுமாகிய* தங் காரண வேறுபாடு குறிப்பால் தோன்றநின்றமையின், இது புகழ்வார் போன்று பழித்தவாருயிற்று. இதனால் விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வ ரென்பது கூறப்பட்டது.
(௩)

௧0௭௪. அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.

(இ - ள்.) கீழ்-கீழாயினான்; அகப்பட்டி ஆவாரைக் காணின்-தன்னிற் சுருங்கிய பட்டியாய் ஒழுகுவாரைக் கண்டானாயின்; அவரின் மிகப்பட்டு செம்மாக்கும் - அவ்வொழுக்கத்தின்கண் அவரின் தான் மேம்பட்டு அதனான் தன் மிகுதிகாட்டி இறுமாக்கும்.

அகப்பட்டி: அகமாகிய பட்டி; பட்டிபோன்று வேண்டிய வாறே யொழுகலின், 'பட்டி'யென்றார். "நோதக்க செய்யுஞ் சிறு பட்டி"† என்றார் பிறரும். இதனால் அவர் மேம்படுமாறு கூறப் பட்டது.
(௪)

௧0௭௫. அச்சமே கீழ்கள தாசாரம் எச்சம்
அவாவுண்டேல் உண்டாம் சிறிது.

(இ - ள்.) கீழ்களது ஆசாரம் அச்சமே - கயவரதாய ஆசாரங் கண்டதுண்டாயின் அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வருமென் றஞ்சும் அச்சமே; எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம்-அஃ தொழிந்தால், தம்மால் அவாவப்படும் பொருள் அதனால் உண்டா மாயிற் சிறிதுண்டாம்.

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசார'மென்றும், அவாவப்படு வதனை 'அவா' வென்றுங் கூறினார். எச்சத்தின்கண் என்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. பெரும்பான்மை அச்சம் சிறுபான்மை பொருட்பேறு, இவ்விரண்டானுமன்றி இயல்பாக உண்டாகா தென்பதாம். வேண்டிய செய்தலே இயல்பு; ஆசாரஞ் செய்தல் இயல்பன்றென்பது இதனாற் கூறப்பட்டது.
(௫)

௧0௭௬. அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(இ - ள்.) தாம் கேட்ட மறை உய்த்துப் பிறர்க்கு உரைக்கலான் - தாங் கேட்ட மறைகளை இடந்தோறும் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான்: கயவர் அறை பறை அன்னர்-கயவர் அறையப்படும் பறையினை ஒப்பர்.

---

* 'தாழ்ச்சியுமாகிய' என்பதும் பாடம். † கலித்தொகை-௫௧.

மறை: வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர்: அம்மறைத்தற்குரியார். 'உய்த்' தென்றார் அவர்க்கது பெரும்பாரமாதல் நோக்கி. பறை ஒருவன் கையால் தன்னை அறிவித்தபொழுது இடந்தோறும் கொண்டு சென்று யாவரையும் அறிவிக்குமாகலான், இது தொழிலுவமம். இதனால் அவரது செறிவின்மை கூறப்பட்டது. (௬)

௧0௭௭. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கையர் அல்லா தவர்க்கு.*

(இ - ள்.) கயவர் கொடிறு உடைக்கும் கூன்கையர் அல்லாதவர்க்கு-கயவர் தங் கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினையுடையரல்லாதார்க்கு; ஈர்ங்கை விதிரார் - தா முண்டு பூசிய கையைத் தெறித்தல் வேண்டுமென்றிரந்தாலும் தெறியார்.

வளைந்த கை: முறுக்கிய கை. மெலியார்க்கு யாதுங் கொடார்; வலிவார்க்கு எல்லாங் கொடுப்பரென்பதாம். (௭)

௧0௭அ. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.

(இ - ள்.) சொல்லப் பயன்படுவர் சான்றோர்-மெலியார் சென்று தங் குறையைச் சொல்லிய துணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினார்; கீழ் கரும்புபோல் கொல்லப் பயன்படும் - மற்றைக் கீழாயினார் கரும்புபோல வலியார் நைய நெருக்கியவழிப் பயன்படுவர்.

பயன்படுதல்: உள்ளது கொடுத்தல். கீழாயினாரை இழிவு தோன்ற மேலாயினாரையும் உடன்கூறினார். இவை இரண்டு பாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது. (அ)

௧0௭௯. உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ்.

(இ - ள்.) உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின் - பிறர் செல்வத்தாற் பட்டுந் துகிலும் உடுத்தலையும் பாலோடடிசி லுண்டலையும் கீழாயினான் காணுமாயின்; பிறர்மேல் வடுக் காண வற்றாகும் - அவற்றைப் பொறாது அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்க வல்லனாம்.

* நாலடியார் - ௨௩௫.

உடுப்பது உண்பதென்பன ஈண்டவ்வத்தொழில்மேல் நின்றன;* அவற்றாற் பூண்டல் ஊர்தல் முதலிய பிற தொழில்களுங் கொள்ளப்படும். அவற்றைக் கண்ட துணையானே பொறாமை யெய்தலிற் 'காணி'னென்றும், கேட்டார் இது கூடுமென்றியையப் படைத்தல் அரிதாகலின் 'வற்றாகு'மென்றுங் கூறினார். இதனாற் பிறர் செல்வம் பொறாமை கூறப்பட்டது. (௯)

௧0௮0. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

(இ - ள்.) கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர்-கயவர் தம்மை யாதானுமொரு துன்பமுற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற் குரியர்; எற்றிற்கு உரியர் - அதுவன்றி வேறெத்தொழிற் குரியர்?

உணவின்மையாகப் பிறிதாக ஒன்று வந்துற்ற துணையானென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கா'லென்றும், கொள்கின்றார் தங்கயமை யறிந்து வேண்டா வென்றற்கு முன்னே விற்று நிற்றலின் 'விரைந்' தென்றுங் கூறினார். ஒரு தொழிற்கும் உரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனால் தாம் பிறர்க் கடிமையாய் நிற்பரென்பது கூறப்பட்டது. (௧0)

ஒழிபியல் முற்றிற்று.

பொருட்பால் முற்றிற்று.

---

* ௫௨௫-ஆம் குறளுரை.

# ௩. காமத்துப்பால்

## ௧. களவியல்

இனி, அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய இன்பங்கூறுவான் எடுத்துக்கொண்டார். ஈண்டு இன்பமென்றது ஒருகாலத்தொரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை; இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனும் 'சுவைபல வென்று கூறுவார் கூறுக; யாங்கூறுவதின்பச்சுவை யொன்றனையுமே'யென, இதனையே மிகுத்துக் கூறினான். இது புணர்ச்சி பிரிவென இருவகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோ எனின், இவர் பொருட் பாகுபாட்டினை அறம் பொருள் இன்பமென வடநூல் வழக்குப்பற்றி ஓதுதலான் அவ்வாறே அவற்றைப் பிரிவின்கண் அடக்கினாரென்க. இனி, அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலக நடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார். அக் கைகோள் இரண்டனுள்ளும் களவாவது பிணி மூப் பிறப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மையராய் உருவுந்திருவும் பருவமுங் குலனுங் குணனு மன்பு முதலியவற்றால் தம்மு ளொப்புமை யுடையராய தலைமகனுந் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமன்றிப் பால்வகையால் தாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை யேழதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற் கண் தகையணங்குறுத்தல் கூறுகின்றார்.

---

### அதி. ௧0௯—தகையணங்குறுத்தல்

[அஃதாவது, பொழில் விளையாட்டு விருப்பான் ஆயநீங்க, அதன்கண் தமியளாய் நின்றாளை வேட்டவிருப்பான் இளையார் நீங்கத் தமியனாய் வந்து கண்ணுற்ற தலைமகன், அவள் வனப்புத் தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லுதல். இது, கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கண் கூறப்பட்டது.]

௧0௮௧. **அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.**

[தலைமகள் உருவு முதலியன முன்கண்டறிவனவன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைமகன் ஐயுற்றது.]

(இ - ள்.) கனங் குழை - இக்கனவிய குழையையுடையாள் அணங்குகொல்-இப்பொழிற்கண் உறைவாளொருதெய்வமகளோ; ஆய் மயில்கொல் - அன்றி ஒரு மயில் விசேடமோ; மாதர்கொல் - அன்றி ஒரு மானுடமாதரோ?, என்நெஞ்சு மாலும் - இன்னளென்று துணியமாட்டாது என் நெஞ்சு மயங்காநின்றது.

'ஓ' அசை. 'ஆய் மயில்' படைத்தோன் விசேடமாக ஆய்ந்து படைத்த மயில்; மயிற்சாதியுள் தெரிந்தெடுத்த மயிலென்றுமாம். 'கனங்குழை' ஆகுபெயர். 'கணங்குழை'யென்று பாடமோதிப் பல வாய்த் திரண்ட குழையென் றுரைப்பாரு முளர். எழுதலாகா உருவும் தன் வருத்தமும் பற்றி 'அணங்குகொ' லென்றும், சாயலும் பொழில்வயின் நிற்றலும்பற்றி 'ஆய்மயில்கொ' லென்றும், தன் நெஞ்சஞ் சென்றமையும் அவள் எதிர்நோக்கியவாறும் பற்றி 'மாதர்கொ' லென்றும் கூறினான். (க)

௧0அ௨. **நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு தானைக்கொண் டன்ன துடைத்து.**

[மானுடமாதராதல் தெளிந்த தலைமகன் அவள்நோக்கினானாய வருத்தங் கூறியது.]

(இ - ள்.) நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் - இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என்னோக்கிற் கெதிர்நோக்குதல்; தாக்கு அணங்கு தானைக்கொண்டன்னது உடைத்து - தானே தாக்கி வருத்தவதோர் அணங்கு தாக்குதற்குத் தானையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையை யுடைத்து.

மேலும் "அணங்குகொ லாய்மயில்கொ" லென்றமையான், இகரச் சுட்டு வருவிக்கப்பட்டது. எதிர் நோக்குதலென்றமையின் அது குறிப்புநோக் காயிற்று. வனப்பால் வருந்துதல்மேலுங் குறிப்பு நோக்கால் வருந்துதல் கூறியவாறு. 'நோக்கினாள்' என்பதற்கு என்னால் நோக்கப்பட்டாளென் றுரைப்பாரு முளர். (உ)

௧0அ௩. **பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன் பெண்டகையால் பேரமர்க் கட்டு.**

[இதுவு மது.]

(இ - ள்.) கூற்று என்பதனைப் பண்டு அறியேன் - கூற்றென்று நூலோர் சொல்வதனைப் பண்டு கேட்டறிவதல்லது கண்

டறியேன்: இனி அறிந்தேன் - இப்பொழுது கண்டறிந்தேன்; பெண்டகையால்பேர் அமர்க் கட்டு - அது பெண்டகையுடனே பெரியவாய் அமர்த்த கண்களை உடைத்து.

பெண்டகை: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங் குணங்கள். அவை அவ்வக்குறிகளான் அறியப்பட்டன. அமர்த்தல் அமர்செய்தல்; பெயரடியாய வினை. பெண்டகையால், இன்பம் பயத்தலும் உண்டேனும் துன்பம்பயத்தல் மிகுதிபற்றிக் கூற்றுக் கிக் கூறினான். (௩)

௧௦௮௪. கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) பெண்டகைப் பேதைக்குக் கண் - பெண்டகையை யுடைய இப்பேதைக்கு உளவாய கண்கள்; கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் அமர்த்தன - தம்மைக் கண்டார் உயிருண்ணுந் தோற்றத்துடனே கூடி அமர்த்திருந்தன.

அமர்த்தல்: மாறுபடுதல்; குணங்கட்கும் பேதைமைக்கும் ஏலாது கொடியவா யிருந்தன வென்பதாம். (௪)

௧௦௮௫. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்றும் உடைத்து.

[இதுவு மது]

(இ - ள்.) கூற்றமோ - என்னை வருத்துதல் உடைமையாற் கூற்றமோ; கண்ணோ - என்மே லோடுதலுடைமையாற் கண்ணோ; பிணையோ - இயல்பாக வெருவுத லுடைமையாற் பிணையோ? அறி கின்றிலேன்; மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து - இம் மடவரல் கண்களின் நோக்கம் இம்மூன்றன் தன்மையையும் உடைத்தாயிரா நின்றது.

இன்பமுந் துன்பமும் ஒருங்கு செய்யாநின்ற தென்பதாம். தொழில்பற்றி வந்த ஐயநிலை உவமம். (௫)

௧௦௮௬. கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

[இதுவு மது]

(இ - ள்.) கொடும் புருவம் கோடா மறைப்பின் - பிரியா நட்பாய கொடும்புருவங்கள் தாம் செப்பமுடையவாய் விலக்கின

வாயின்; இவள் கண் நடுங்கு அஞர் செய்யல - அவற்றைக் கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்குந் துயரைச் செய்யமாட்டா.

நட்டாரைக் கழறுவார்க்குத் தாம் செம்மையுடையராதல் வேண்டலிற் 'கோடா'வென்றும், செய்கின்ற அவற்றுக்கும் உறு கின்ற தனக்கும் இடைநின்று விலக்குங்காலும் சிறிதிடைபெறின் அதுவழியாக வந்து அஞர் செய்யுமாகலின், "மறைப்பி'னென்றுங் கூறினான். 'நடுங்கஞர்': நடுங்கற் கேதுவாய அஞர். தாமியல்பாகக் கோடுதலுடைமையான் அவற்றை மிகுதிக்கண் மேற்சென்றிடிக்க* மாட்டாவாயின என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. (சு)

கoஅஎ. கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்.

[அவள் முலைகளினைய வருத்தங் கூறியது.]

(இ - ள்.) மாதர் படாஅ முலைமேல் துகில்- இம்மாதர் படா முலைகளின்மேல் இட்ட துகில்; கடாஅக் களிற்றின்மேற் கட்படாம்-அவை கொல்லாமற் காத்தலின் கொல்வதாய மதக்களிற் றின்மேல் இட்ட முகபடாத்தினை யொக்கும்.

கண்ணை மறைத்தல்பற்றிக் 'கட்படா' மென்றான். துகிலான் மறைத்தல் நாணுடை மகளிர்க் கியல்பாகலின், அத்துகிலூடே அவற்றின் வெம்மையும் பெருமையுங்கண்டு இத்துணையாற்றலுடைய இனி யென்ஞான்றுஞ் சாய்விலவெனக் கருதிப் 'படாஅமுலை' யென்றான். உவமை, சிறிது மறையாவழி உவை கொல்லு மென்பது தோன்றநின்றது. (எ)

கoஅஅ. ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு.†

[நுதலினைய வருத்தங் கூறியது.]

(இ - ள்.) ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு-போர்க்களத்து வந்து நேராத பகைவரும் நேர்ந்தார்வாய்க்கேட் டஞ்சுதற் கேதுவாய என்வலி; ஒண்ணுதற்கு உடைந்ததே - இம் மாதரதொள்ளிய நுதலொன்றற்குமே அழிந்துவிட்டது.

மாதரென்பது அதிகாரத்தான் வந்தது. 'ஞாட்பினு'ளென்ற தனாற் பகைவராதல் பெற்றாம். 'பீ' டென்றபொதுமையான்

* குறள் - எஅச. † திருக்கோவையார் - உக.

மனவலியும் காயவலியும் கொள்க. 'ஓ'வென்னும் வியப்பின்கட் குறிப்பு அவ்வலிகளது பெருமையும், நுதலது சிறுமையுந் தோன்ற நின்றது. கழிந்ததற் கிரங்கலின் தற்புகழ்தல் அன்றாயிற்று. (அ)

௧௦௮௯. பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்
கணியெவனோ ஏதில தந்து.

[அணிநலத்தானாய வருத்தங் கூறியது.]

(இ - ள்.) பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு - புறத்து மான்பிணையொத்த மடநோக்கினையும் அகத்து நாணினையு முடையளாய இவட்கு; ஏதில தந்து அணி எவன் - ஒற்றுமை யுடைய இவ்வணிகளே அமைந்திருக்க வேற்றுமையுடைய அணிக ளைப் படைத்தணிதல் என்ன பயனுடைத்து?

'மடநோக்கு': வெருவுதலுடைய நோக்கு. இவட்குப் பார மாதலும் எனக் கணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறி விலரென்பதாம். (௯)

௧௦௯௦. உண்டார்க ணல்ல தடுநறக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று.

[தலைமகள் குறிப்பறிதலுற்றான் சொல்லியது.]

(இ - ள்.) அடுநறா - அடப்படு நறா; உண்டார்கண் அல்லது - தன்னை உண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது; காமம்போல் கண்டார் மகிழ் செய்தல் இன்று - காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்த லுடைத்தன்று.

'அடு நறா' வெளிப்படை. 'காம'மென்றது ஈண்டு அது நுகர் தற்கிடனாகியாரை கண்டார்கணென்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. மகிழ்செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததேயெனி னும் இவள் குறிப் பாராய்ந் தறியாமையின் யானது பெற்றிலே னெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க; "அரிமயிர்த் திரண் முன்கை"* என்னும் புறப்பாட்டிற் குறிப்புப்போல. (௧௦)

---

## அதி. ௧௧௦—குறிப்பறிதல்.

[அஃதாவது, தலைமகன் தலைமகள் குறிப்பினை அறிதலும், தோழி குறிப்பினை அறிதலும், அவள்தான் அவ்விருவர் குறிப்பினையும் அறிதலுமாம். தகையணங்குற்ற தலைமகன் தலைமகளைக்

---

*புறநானூறு - ௧௧.

கூடுங்கால் இது வேண்டுமாகலின், தகையணங்குறுத்தலின் பின் வைக்கப்பட்டது.]

சஂசகக. இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.*

[தலைமகன் தலைமகள் உளப்பாட்டுக் குறிப்பினை அவள் நோக்கினான் அறிந்தது.]

(இ - ள்.) இவள் உண்கண் உள்ளது இரு நோக்கு - இவளுடைய உண்கணகத்ததாய நோக்கு இதுபொழுது என்மேல் இரண்டு நோக்காயிற்று; ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று அந் நோய் மருந்து - அவற்றுள் ஒரு நோக்கு என்கணேய்செய்யும் நோக்கு, ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு.

'உண்கண்': மையுண்ட கண். நோய்செய்யும் நோக்கு அவள் மனத்தினைய காமக் குறிப்பினை வெளிப்படுக்கின்ற நோக்கு; மருந்தாய நோக்குத் தன்கணிகழ்கின்ற அற்புநோக்கு; நோய் செய்யும் நோக்கினைப் பொதுநோக் கென்பாரு முளர். அது நோய் செயிற்கைக்கிளையாவ தல்லது அகமாகாமை யறிக. இவ்வருத்தந் தீரும் வாயிலும் உண்டாயிற் றென்பதாம். (க)

சஂசகஉ. கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது.

[இதுவு மது.]

(இ - ள்.) கண் களவு கொள்ளும் சிறு நோக்கம் - இவள் கண்கள் யான் காணாமல் என்மேல் நோக்குகின்ற அருகியநோக்கம்; காமத்தில் செம்பாகம் அன்று பெரிது - மெய்யுறுபுணர்ச்சியின் ஒத்த பாதியளவன்று, அதனினும் மிகும்.

தானோக்கியவழி நாணி இறைஞ்சியும், நோக்காவழி உற்று நோக்கியும் வருதலாற் 'களவுகொள்ளு' மென்றும், அஃதுளதாங் காலஞ் சிறிதாகலின் 'சிறுநோக்க'மென்றும், அஃது உளப்பாடுள் வழி நிகழ்வதாகலின் இனிப்புணர்தல் ஒருதலையென்பான் 'செம்பாகமன்று பெரி'தென்றும் கூறினான். (உ)

சஂசகங. நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்.

[நோக்கினானும் நாணினானும் அறிந்தது.]

(இ - ள்.) நோக்கினாள் - யானோக்காவளவில் தானென்னை அன்போடு நோக்கினாள்; நோக்கி இறைஞ்சினாள் - நோக்கிஎன் றனை

* திருக்கோவையார் - ருெ.

உட்கொண்டு நாணி இறைஞ்சினள் ; அஃது யாப்பினுள் அவள் அட்டிய நீர்-அக்குறிப்பு இருவேமிடையுந் தோன்றிய அற்புப்பயிர் வளர அதன்கணவள் வார்த்த நீராயிற்று.

'அஃ' தென்னுஞ் சுட்டுப்பெயர் அச்செய்கைக் கேதுவாய குறிப்பின்மேல் நின்றது. யாப்பினன் ஆயதனை 'யாப்' பென்றார். ஏகதேச உருவகம். (௩)

௧௦௯௪. யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.

[நாணினலும் மகிழ்ச்சியினலும் அறிந்தது.]

(இ-ள்.) யான் நோக்குங்காலை நிலன் நோக்கும் - யான் தன்னை நோக்குங்கால் தானெதிர் நோக்காது இறைஞ்சி நிலத்தை நோக்காநிற்கும் ; நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும் - அஃதறிந் தியா னோக்காக்கால் தானென்னைநோக்கித் தன் னுள்ளே மகிழா நிற்கும்.

'மெல்ல': வெளிப்படாமல். மகிழ்ச்சியாற் புணர்தற்குறிப் பினிது விளங்கும். 'மெல்ல நகு' மென்பதற்கு முறுவலிக்கு மென் றுரைப்பாரு முளர். (௪)

௧௦௯௫. குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

[இதுவு மது.]

(இ-ள்.) குறிக்கொண்டு நோக்காமை அல்லால் - நேரே குறிக்கொண்டுநோக்காத் துணையல்லது; ஒருகண்சிறக்கணித்தாள் போல நகும் - ஒரு கண்ணைச் சிறக்கணித்தாள் போல என்னை நோக்கிப் பின் தன்னுள்ளே மகிழாநிற்கும்.

'சிறக்கணித்தா' ளென்பது செய்யுள் விகாரம். சிறங் கணித்தல்: சுருங்குதல். அதுதானும் வெளிப்பட நிகழாமையிற் 'போல' வென்றான். நோக்கி யென்பது சொல்லெச்சம். இனி இவளை எய்துதல் ஒருதலை யென்பது குறிப்பெச்சம். (௫)

௧௦௯௬. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும்.

[தோழி சேட்படுத்தவழி அவள் குறிப்பறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது]

(இ-ள்.) உறாஅதவர் போல் சொலினும்-புறத்து நொது மலர்போலக் கடுஞ்சொற் சொன்னாராயினும்; செறாஅர் சொல்

ஒல்லை உணரப்படும் - அகத்துச் செறுதலிலாதார் சொற் பிற் பயத்தல் குறையுற்றாராற் கடிதி னறியப்படும்.

கடுஞ்சொல்லென்பது: இவ்விடங் காவல் மிகுதி யுடைத்து, வரற்பாலி ரல்லீரென்றல் முதலாயின. 'செறா' ரெனவே, அருளுடைமை பெறப்பட்டது. தன் குறை முடிக்கக் கருதியே சேட்படுக்கின்றமை குறிப்பா னறிந்து, உலகியல்மேலிட்டுக்கூறிய வாறு. இது வருகின்ற பாட்டிற்கும் ஒக்கும். (௬)

௧0௯௭. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

[இதுவு மது]

(இ - ள்.) செறாஅச் சிறு சொல்லும் - பின்னினிதாய் முன் இன்னாதாய சொல்லும்; செற்றார்போல்நோக்கும்- அகத்துச் செறு திருந்தே புறத்துச செற்றார்போன்ற வெகுளிநோக்கும்; உறாஅர் போன்று உற்றார் குறிப்பு - நொதுமலர் போன்று நட்பாயினார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன.

'குறிப்பு' ஆகுபெயர். இவை உள்ளே ஒரு பயன் குறித்துச செய்கின்றன; இயல்பல்லவாகலான், இவற்றிற் கஞ்சவேண்டா வென்பதாம். (௭)

௧0௯௮. அசையியற் குண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்.

[தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு
தலைமகன் கூறியது.]

(இ - ள்.) யான் நோக்கப் பசையினள் பைய நகும் - என்னை பகற்றுகின்ற சொற்காற்றா தியானிரந்துநோக்கியவழி அதற்கு நெகிழ்ந்து உள்ளே மெலல நகாநின்றாள்; அசை இயற்கு ஆண்டு ஓர் ஏர் உண்டு- அதனால் நுடங்கிய இயல்பினை யுடையாட்கு அந் நகையின் கண்ணே தோன்றுகின்றதொரு நன்மைக் குறிப்புண்டு.

'ஏர்' ஆகுபெயர். அக்குறிப்பு இனிப் பழுதாகாதென்பதாம். (அ)

௧0௯௯. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள.

[தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) ஏதிலார்போலப் பொதுநோக்கு நோக்குதல்-முன் அறியாதார்போல ஒருவரை ஒருவர் பொதுநோக்கத்தால் நோக்கு

* இணைமொழியைம்பது-கு.

தல்; காதலார் கண்ணே உள - இக்காதலை உடையார்கண்ணே உளவாகின்றன.

'பொதுநோக்கு' யாவர்மாட்டும் ஒருதன்மைத்தாய நோக்கு. நோக்குதல் தொழில் ஒன்றேயாயினும் இருவர்கண்ணும் நிகழ்தலானும், ஒருவர்கண் தானுங் குறிப்புவேறுபாட்டாற் பலவாமாகலானும், 'உள'வெனப் பன்மையாற் கூறப்பட்டது. இருவரும் "மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சிபோல, உள்ளத்துள்ளே மகிழ்" தலின் அதுபற்றிக் 'காதலா' ரென்றும், அது புறத்து வெளிப்படாமையின் 'ஏதிலார் போல' வென்றுங் கூறினர்.　　(கூ)

கக00. கண்ணொடு கண்இணை நோக்கொக்கின் வாய்ச்
　　என்ன பயனும் இல.　　[சொற்கள்

[இதுவுமது]

(இ - ள்.) கண்ணொடு கண்இணை நோக்கு ஒக்கின் - காமத்திற்குரிய இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள்நோக்கா லொக்குமாயின்; வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல - அவர் வாய்மை தோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒரு பயனும் உடையவல்ல.

நோக்கா லொத்தல் காதல் நோக்கின வாதல். 'வாய்ச்சொற்கள்': மனத்தின்கணின்றி வாயளவில் தோன்றுகின்ற சொற்கள். இருவர் சொல்லுங் கேட்டு உலகியல்மேல் வைத்துக் கூறியவாறு. இருவர் சொல்லுமாவன: அவள் புனங்காவல்மேலும் அவன்வேட்டத்தின்மேலுஞ் சொல்லுவன.† பயனில் சொற்களாகலின், இவை கொள்ளப்படாவென்பதாம். இவை புணர்தல்நிமித்தம்.(க0)

---

## அதி. கக௧—புணர்ச்சிமகிழ்தல்

[அஃதாவது, அங்ஙனங் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.]

கக0க. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
　　ஒண்டொடி கண்ணே உள.

* "ஏனல் காவ லிவளு மல்லள்" என்ற பாட்டு; இதனை இறையனாரகப்பொருள், அஆம் சூத்திரத்துரையிலும், தொல். பொருள். களவு, உக ஆம் சூத்திரத்துரையிலுங் காண்க.

---

† திருக்கோவையார் - கூகூ.

[இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது.]

(இ - ள்.) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் - கண்ணாற்கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும் மூக்கான்மோந்தும் மெய்யாற்றீண்டியும் அனுபவிக்கப்படும் ஐம் புலனும்; ஒண்டொடி கண்ணே உள - இவ் வொள்ளிய தொடியை உடையாள்கண்ணே உளவாயின.

உம்மை முற்றும்மை. தேற்றேகாரம். வேறிடத்தின்மை விளக்கி நின்றது. வேறு வேறு காலங்களில் வேறு வேறு பொருள்களா னனுபவிக்கப்படுவன ஒரு காலத்து இவள்கண்ணே அனுபவிக்கப்பட்டன என்பதாம். வடநூலார் இடக்கர்ப் பொருளவாகச் சொல்லிய புணர்ச்சித்தொழில்களும் ஈண்டடக்கிக் கூறப்பட்டன. (௧)

௧௧௦௨. பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

[இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது.]

(இ - ள்.) பிணிக்கு மருந்து பிற - வாத முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானம்*மாயினவன்றி மாறாய இயல்பினை யுடையனவாம்; அணி இழை தன் நோய்க்கு மருந்து தானே - அவ்வாறன்றி இவ்வணியிழையினையுடையாள் தன்னினாய பிணிக்கு மருந்துந் தானேயாயினாள்.

இயற்கைப் புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினான் ஆகலின் 'தன்னோ' யென்றும், அவ்வருத்தந் தமியாளை இடத்தெதிர்ப் பட்டுத் தீர்ந்தானாகலின் 'தானே மருந்' தென்றுங் கூறினான் இப் பிணியும் எளியவாயவற்றால் தீரப்பெற்றிலம் என்பதுபட நின் றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. (௨)

௧௧௦௩. தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.

[பிரதிசயவின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற் கின்னையாதல் தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.]

(இ - ள்.) தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிது கொல் - ஐம்புலன்களையும் நுகர்வார்க்குத் தாம் விரும்பும் மகளிர் மெல்லிய தோளின்கண் துயிலுந் துயில்போல வருந்தாமல் எய்தலாமோ; தாமரைக்கண்ணான் உலகு அவற்றைத் துறந்த தவயோகிகள் எய்துஞ் செங்கண்மா லுலகம்?

---

* ௧௩௪௮-ஆம் குறளுரை.

ஐம்புலன்களையும் நுகர்வா ரென்னும் பெயர் அவாய்நிலையான் வந்தது. இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்த வேண்டுதலின், எம்மனோர்க்காகா தென்னும் கருத்தால் 'இனிதுகொ' லென்றான். இந்திரனுலகென் றுரைப்பாரு முளர்.* 'தாமரைக் கண்ணா' னென்பது அவனுக்குப் பெயரன்மையின், அஃதுரையன்மை யறிக. (௩)

௧௧0௪. நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்.

[பாங்கற்கூட்டத் திறுதிக்கண் சொல்லியது.]

(இ - ள்.) நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ-தன்னை அகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிராநிற்கும், இப்பெற்றித்தாய தீயை; இவள் யாண்டுப் பெற்றாள்-என்கண் தருதற்கு இவள் எவ்வுலகத்துப் பெற்றாள்?

கூடாமுன் துன்புறுதலின் 'நீங்கின்தெறூஉ'மென்றும், கூடியபின் இன்புறுதலிற் 'குறுகுங்கால் தண்ணென்னு' மென்றும், இப்பெற்றியதொரு தீ உலகத் தில்லையா மாகலின் 'யாண்டுப்பெற்றா' ளென்றுங் கூறினான். தன் காமத்தீத் தன்னையே அவள் தந்தாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின். (௪)

௧௧0௫. வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்.†

[தோழியிற்கூட்டத் திறுதிக்கண் சொல்லியது.]

(இ - ள்.) வேட்ட பொழுதின் அவையவை போலுமே-மிக இனியவாய பொருள்களைப் பெறாது அவற்றின்மேல் விருப்பங் கூர்ந்தபொழுதின்கண் அவையவை தாமேவந் தின்பஞ்செய்யுமாறு போல் இன்பஞ் செய்யும்; தோட்டார் கதுப்பினாள் தோள் - எப்பொழுதும் பெற்றுப் புணரினும், பூவினை அணிந்த தழைந்த கூந்தலினையுடையாள் தோள்கள்.

'தோடு' ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு-பாங்கற்கூட்டத்துக்கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ் வாராமைபற்றி இவ்வாறு கூறினான். தொழிலுவமம். (௫)

* மணக்குடவர். † திருக்கோவையார் - ௧.

௧௧0௬. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள்.

[இதுவு மது.]

(இ-ள்.) உயிர் உறுதோறு தளிர்ப்பத் தீண்டலால்-தன்னைப் பெருது வாடிய என்னுயிர் பெற்றுறுந்தோறும் தளிர்க்கும் வகை தீண்டுதலான்; பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன - இப் பேதைக்குத் தோள்கள் தீண்டப்படுவதோர் அமிழ்தினுற் செய்யப் பட்டன.

ஏதுவாகலான் தீண்டல் அமிழ்திற்கும் எய்திற்று. வாடிய உயிரைத் தளிர்ப்பித்தல் பற்றி, அவை 'அமிழ்தி னியன்றன' வென்ருன். தளிர்த்தல்: இன்பத்தால் தழைத்தல். (௬)

௧௧0௭. தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு.

[இவளை நீ வரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து தமது பாத்துண்ணும் இல்லறத்தோடு படல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ-ள்.) அம் மா அரிவை முயக்கு-அழகிய மாமைநிறத்தை யுடைய அரிவையது முயக்கம்; தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்று-இன்பம் பயத்தற்கண் தமக்குரிய இல்லின்கணிருந்து உலகோர் தந் தாளான் வந்த பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்கட்குப் பகுத்துத்* தங்கூற்றையுண்டாற்போலும்.

தொழிலுவமம். இல்லறஞ் செய்தா ரெய்துந் துறக்கத்தின்பம் எனக் கிப் புணர்ச்சியே தருமென வரைவுடன்படான் கூறியவா ருயிற்று. (எ)

௧௧0௮. வீழும் இருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

[ஒத்த அன்புடைய நமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியதென வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.]

(இ-ள்.) (நீ சொல்லுகின்ற தொக்கும்;) வளி இடை போழப்படா முயக்கு-ஒருபொழுது நெகிழாமையிற் காற்ருலிடை யறுக்கப் படாத முயக்கம்; வீழும் இருவர்க்கு இனிதே - ஒருவரை யொருவர் விழைவார் இருவர்க்கும் இனிதே.

* ௪௩ - ஆம் குறள் உரை.

முற்றும்மை விகாரத்தால் தொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது: ஈண்டு இருவரில்லை; இன்மையான் இஃது தொவ்வாதென்பது கருத்து. களவிற் புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன்படான் கூறியவாறு. (அ)

கக0கூ. ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்.

[கரத்தல்வேண்டாமையின் இடையறவில்லாத கூட்டமே இன்பப் பயனுடைத்தென வரைவு கடாவியாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) ஊடல் உணர்தல் புணர்தல் இவை-புணர்ச்சி இனிதாதற்பொருட்டு வேண்டுவதாய ஊடலும், அதனை அளவறிந்து நீக்குதலும், அதன்பின் நிகழ்வதாய அப்புணர்ச்சிதானுமென இவையன்றே; காமம் கூடியார் பெற்ற பயன் - வரைந்து கொண்டு காமத்தை இடைவிடா தெய்தியவர் பெற்ற பயன்கள்.

ஆடவர்க்குப் பிரிவென்பதொன் றுளதாதல் மேலும், அது தான் பரத்தையர்மாட் டாதலும் அதனை யறிந்து மகளிர் ஊடி நிற்றலும் அவ்வூடலைத் தவறுசெய்தவர் தாமே தந் தவறின்மை கூடி நீக்கலும் பின்னு மவ் விருவரும் ஒத்த அன்பினராய்க் கூடலு மன்றே முன்வரைந்தெய்தினார் பெற்றபயன்; அப்பயன், இருதலைப் புள்ளின் ஓருயி ராய உழுவலன்புடைய எமக்கு வேண்டாவென அவ்வரைந் தெய்தலை இகழ்ந்து கூறியவாறு. (கூ)

கககம். அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.

[புணர்ந்துடன் போகின்றான் தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) அறிதோறு அறியாமை கண்டற்று-நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை அறிய அறிய முன்னை அறியாமை கண்டாற்போலக் காணப்படாநின்றது; சேயிழை மாட்டுச் செறி தோறும் காமம் - சிவந்த இழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவள் மாட்டுக் காதல்.

களவொழுக்கத்திற் பல இடையீடுகளான் எய்தப்பெறாது அவாவுற்றான் இதுபொழுது நிரந்தரமாக எய்தப் பெற்றமையின், 'செறிதோறு' மென்றான். அறிவிற் கெல்லையின்மையான் மேன்மேல் அறிய அறிய முன்னை யறிவு அறியாமையாய் முடியுமாறு போலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச் செறிய முன்னைச் செறிவு செறியாமையாய் முடியாநின்றதெனத் தன்

ருமை கூறியவாறு. இப் புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கும் உண்டேனும் அவள்மாட்டுக் குறிப்பான் நிகழ்வதல்லது கூற்றால் நிகழாமை யறிக. (௧0)

---

## அதி. ௧௧௨—நலம்புனைந்துரைத்தல்

[அஃதாவது, தலைமகன் தலைமகள்நலத்தைப் புனைந்து சொல்லியது. இது புணர்ச்சிமகிழ்ந்தவழி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தலின்பின் வைக்கப்பட்டது.]

௧௧௧௧. நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்.

[இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது.]

(இ - ள்.) அனிச்சமே வாழி நன்னீரை - அனிச்சப்பூவே, வாழ்வாயாக! மென்மையால் நீ யெல்லாப்பூவினும் நல்ல இயற்கையையுடையை; யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள்-அங்ஙனமாயினும், எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினு மெல்லிய இயற்கையையுடையள்.

'அனிச்சம்' ஆகுபெயர். 'வாழி'யென்பது உடன்பாட்டுக்குறிப்பு. இனி யானே மெல்லியனென்னுந் தருக்கினை யொழிவாயாக வென்பதாம். அதுபொழுது துற்றறிந்தானாகலின், ஊற்றினினிமையையே பாராட்டினான். இன்னீரளென்று பாடமோதுவாருமுளர்.

௧௧௧௨. மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று.

[இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது.]

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே!; இவள் கண் பலர் காணும் பூ ஒக்கும் என்று - யானே காணப்பெற்ற இவள் கண்களைப் பலராலுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதி; மலர்காணின் மையாத்தி - தாமரை, குவளை, நீலம் முதலிய மலர்களைக் கண்டால் மயங்காநின்றாய்; நின்னறிவிருந்தவாறென்!

மையாத்தல் ஈண்டு ஒவ்வாதவற்றை ஒக்குமெனக் கோடல். இறுமாத்தல், செம்மாத்த லென்பனபோல ஒருசொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கம் முதலாகத் தலைமகள் கண்களைக் காணப்பெறாமையின் அவற்றோடொருபுடையொக்கு மலர்களைக் கண்டுழியெல்லாம் அவற்றின்கண் காதல்செய்துபோந்தான், இதுபொழுது

அக்கண்களின் நலமுழுதுந் தானே தமியானை இடத்தெதிர்ப்பட்டனுபவித்தானாகலின், அம்மலர்கள் ஒவ்வாமை கண்டு ஒப்புமை கருதிய நெஞ்சை இகழ்ந்து கூறியவாறு. (உ)

௧௱௰௩. முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

[கூட்டுதலுற்ற பாங்கற்குத் தலைமகன் தலைமகளதியல்பு கூறியது.]

(இ - ள்.) வேய்த்தோ ளவட்கு - வேய்போலுந் தோளினையுடையவட்கு; மேனி முறி - நிறந் தளிர்நிறமாயிருக்கும்; முறுவல் முத்தம் - பல்லு முத்தமாயிருக்கும்; நாற்றம் வெறி - இயல்பாய நாற்றம் நறுநாற்றமாயிருக்கும்; உண்கண் வேல் - உண்கண்கள் வேலாயிருக்கும்.

பெயரடையானும் ஓரியல்பு கூறப்பட்டது. 'முறி' 'முறுவ' லென்பன ஆகுபெயர். உருவகவகையாற் கூறினமையின், புனைந்துரையாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளை அறியேனென்று சேட்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம். (௩)

௧௱௰௪. காணின் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம் என்று.

[பாங்கற்கூட்டத்துச் சென்று சார்தலுறுவான் சொல்லியது.]

(இ - ள்.) குவளை - குவளைப்பூக்கள் தாமும்; காணின்-காண்டற்றொழிலை யுடையவாயின்; மாண் இழை கண் ஒவ்வேம் என்று கவிழ்ந்து நிலன் நோக்கும்-மாண்ட இழையினையுடையாள் கண்களை யாமொவ்வேமென்று கருதி அந்நாணினால் இறைஞ்சி நிலத்தினை நோக்கும்.

பண்பானேயன்றித் தொழிலானும் ஒவ்வாதென்பான் 'காணி' னென்றும் கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தாமென்பது தோன்றக் 'கவிழ்ந்' தென்றுங் கூறினான். காட்சியும் நாணு மின்மையிற் செம்மாந்து வானைநோக்கின வென்பதாம். (௪)

௧௱௰௫. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

[பகற்குறிக்கண் பூவணி கண்டு சொல்லியது.]

(இ - ள்.) அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள்- இவள் தன் மென்மை கருதாது அனிச்சப்பூவை முகிழ் களையாது சூடினாள்; நுசுப்பிற்கு நல்ல பறை படா - இனி இவளிடைக்கு நல்ல பறைகள் ஒலியா.

அம் முகிழ்ப்பாரம் பொறாமையின் இடை முரியும்; முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மே லேற்றப்பட்டன. (ரு)

ககககூ. **மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியின் கலங்கிய மீன்.**

[இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது.]

**(இ - ள்.)** மீன் - வானத்து மீன்கள்; மதியும் மடந்தை முகனும் அறியா - வேறுபாடு பெரிதாகவும் தம் மதியினையும் எம் மடந்தை முகத்தினையும் இது மதி இது முகமென்றறியமாட்டாது; பதியின் கலங்கிய - தந்நிலையினின்றுங் கலங்கித் திரியாநின்றன.

ஓரிடத்து நில்லாது எப்பொழுதும் இயங்குதல்பற்றிப் 'பதியிற் கலங்கிய' என்றான். வேறுபாடு வருகின்ற பாட்டாற் பெறப்படும். இனி இரண்டனையும் பதியிற் கலங்காதமீன்க ளறியுமல்லது கலங்கின மீன்கள் அறியாவென் றுரைப்பினு மமையும். (சு)

கககஎ. **அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
**மறுவுண்டோ மாதர் முகத்து.**

[இதுவு மது]

**(இ - ள்.)** (அம்மீன்கள் அங்ஙனங் கலங்குதற்குக் காரணம் யாது?) அறுவாய்நிறைந்த அவிர் மதிக்குப்போல - முன் குறைந்த விடம்வந்து நிரம்பியே விளங்கு மதிக்கட்போல; மாதர் முகத்து மறுஉண்டோ-இம் மாதர் முகத்து மறுவுண்டோ?

இடம்-கலை. 'மதிக்' கென்பது வேற்றுமை மயக்கம். தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையும் இன்மைபற்றி வேறுபாடறியலா யிருக்க அறிந்தில வென இகழ்ந்து கூறியவாறு. (எ)

கககஅ. **மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்**
**காதலை வாழி மதி.**

[இதுவு மது.]

**(இ - ள்.)** மதி வாழி - மதியே, வாழ்வாயாக; மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல் காதலை-இம்மாதர் முகம்போல யான் மகிழும் வகை ஒளிவீச வல்லையாயின், நீயும் என் காதலையுடையையாதி.

மறுவுடைமையின் அது மாட்டாய்; மாட்டாமையின் என்னாற் காதலிக்கவும்படா யென்பதாம். 'வாழி' யென்பது இகழ்ச்சிக் குறிப்பு. (அ)

கககக௯. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி.

[இதுவு மது.]

(இ-ள்.) மதி - மதியே; மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின் - இம்மலர்போலுங் கண்ணிணையுடையாள் முகத்தை நீ யொக்க வேண்டுதியாயின்; பலர் காணத் தோன்றல்-இதுபோல யான் காணத் தோன்று; பலர் காணத் தோன்றாதொழி.

தானே முகத்தின் நலமுழுதும் கண்டனுபவித்தானாகலின் ஈண்டுப் பலர் காணத் தோன்றலை இழித்துக் கூறினான். தோன்றின் நினக் கவ்வொப் புண்டாகா தென்பதாம். (௯)

ககஉ௦. அனிச்சமும் அன்னத்தின் தூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

[உடன்போக் குரைத்த தோழிக்கு அதனதருமைகூறி மறுத்தது.]

(இ-ள்.) அனிச்சமும் அன்னத்தின் தூவியும் - உலகத்தாரான் மென்மைக் கெடுக்கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப் புள்ளின் சிறகுமாகிய இரண்டும்; மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம்- மாதரடிக்கு நெருஞ்சிப்பழம்போல வருத்தஞ் செய்யும்.

முள் வலிதாகலுடைமையிற் 'பழ' மென்றான். இத்தன்மைத்தாய வடி "பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கற்" களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற் பெறப் பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப்புப்பொருளும் அடிநல னழியாமையாகலின், இதுவும் இவ்வதிகாரத்ததாயிற்று. (க௦)

---

## அதி. ககந.* காதற்சிறப்புரைத்தல்

[அஃதாவது, தலைமகன் தன் காதல்மிகுதிகூறலும், தலைமகள் தன் காதல்மிகுதி கூறலுமாம். இது புணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தல் நலம்புனைந்துரைத்தல் களின் பின் வைக்கப்பட்டது.]

---

* அகநானூறு, களிற்றியானை நிரை - ரு.

௧௧௨௧. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

[இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன் தன்னையப்புணர்த்தியது.]

(இ - ள்.) பணிமொழி வால் எயிறு ஊறிய நீர் - இம்மெல்லிய மொழியினையுடையாளது வாலிய எயிறூறிய நீர்; பாலொடு தேன் கலந் தற்று - பாலுடனே தேனைக் கலந்த கலவை போலும்.

கலந்ததற்றென்பது விகாரமாயிற்று. கலக்கப்பட்டதென்றவாறு. 'பாலொடு தே' னென்றவதனால் அதன் சுவை போலுஞ் சுவையினை யுடைத்தென்பதாயிற்று. 'எயிறூறிய' வென இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. வேறு வேறறியப்பட்ட சுவையாய பாலுந்தேனுங் கலந்துழி அக்கலவை இன்னதென்றறியலாகாத இன்சுவைத்தாமாகலின், அது பொருளாகிய நீர்க்கும் எய்துவிக்க. (௧)

௧௧௨௨. உடம்பொ டுயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

[பிரிவச்சங் கூறியது.]

(இ - ள்.) உடம்பொடு உயிரிடை என்ன அன்ன - உடம்போடுயிரிடையுளவாயநட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய; மடந்தையொடு எம்மிடை நட்பு - இம்மடந்தையொடு எம்மிடை உளவாய நட்புக்கள்.

என்னவெனப் பன்மையாற் கூறியது, இரண்டுந் தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்து வருதல், இன்பத் துன்பங்களொக்கவனுபவித்தல் இன்றியமையாமையென் றிவற்றைநோக்கி. தெய்வப்புணர்ச்சியாகலான் அதுபொழுது உணர்ச்சியிலளாகியாள் பின்னுடையளாமன்றே; ஆயவழி, இவன் யாவன்கொலெனவும், என்கண் அன்புடையன் கொலெனவும், இன்னும் இவனைத் தலைப்பெய்தல் கூடுங்கொலெனவும், அவள் மனத்தின்கண் நிகழும்; அந்நிகழ்வனவற்றைக் குறிப்பானறிந்து அவை தீரக் கூறியவாறு. என்னை யென்று பாடமோதுவாரு முளர். (௨)

௧௧௨௩. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் கில்லை யிடம்.

[இடந்தலைப்பாட்டின் கண் தலைமகள் நீக்கத்துச் சொல்லியது.]

(இ - ள்.) கருமணியிற் பாவாய் நீ போதாய் - என் கண்ணிற் கருமணியின்கண் உறையும் பாவாய், நீ அங்கு நின்றும் போதரு

வாயாக; யாம் வீழும் திருநுதற்கு இடம்இல்லை - போதரா திருத்தி யாயின், எம்மால் விரும்பப்பட்ட திருநுதலையுடையாட்கு இருக்க இடமில்லையாம்.

யான் காணுதமையாமையின், இவள் புறத்துப்போகற்பாலன் அன்றி என் கண்ணுள் இருக்கற்பாலள்; இருக்குங்கால் நின்னே டொருங்கிருக்க இடம்போதாமையின் நின்னினுஞ் சிறந்தஇவட்கு அவ்விடத்தைக் கொடுத்து நீ போதுவாயாக என்பதாம். (௩)

௧௧௨௪. வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கும் இடத்து.

[பகற்குறிக்கண் புணர்ந்து நீங்குவான் சொல்லியது.]

(இ - ள்.) ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள்-தெரிந்த இழையினையுடையாள் எனக்குப் புணருமிடத்து உயிர்க்குடம்போடு கூடிவாழ்தல் போலும்; நீங்குமிடத்து அதற்குச் சாதல் அன்னள் - பிரியுமிடத்து அதற்கு அதனினீங்கிப் போதல் போலும்.

எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய்நிலையான் வந்தன. வாழுங்காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலானும், சாங்காலத்து வருத்தஞ் செய்தலானும், அவற்றை அவள் புணர்வு பிரிவுகட்குவமை யாக்கினன். (௪)

௧௧௨௫. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.

[ஒருவழித்தணந்துவந்த தலைமகன் நீயிர் தணந்தஞான்று எம்மை உள்ளியும் அறிதிரோ என்ற தோழிக்குச் சொல்லியது]

(இ - ள்.) ஒள்ளமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளுவன் - ஒள்ளியவாய் அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறந்தேனாயின், நினைப்பேன்; மறப்புஅறியேன்- ஒருபொழுதும் மறத்தலையறியேன்; ஆகலான் நினைத்தலையு மறியேன்.

'மன்' ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள்: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன் கூற்று; மேல் தலைமகள் கூற்று. (௫)

௧௧௨௬. கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர்.

[ஒருவழித்தணப்பின்கண் தலைமகனைத் தோழி இயற்பழிக்கு மென்றஞ்சி அவள் கேட்பத் தன்னுள்ளே சொல்லியது:]

(இ - ள்.) (தாங் காணாமைபற்றிச் சேய்மைக்கண் போயினா ரென்று கருதுவார் கருதுக) எம் காதலவர் கண்ணுள்ளிற் போகார்-

எம்முடைய காதலர் எங்கண்ணகத்து நின்றும்போகார்; இமைப்பிற் பருவரார்-யாமறியா திமைத்தேமாயின் அதனால் வருந்துவதுஞ் செய்யார்; நுண்ணியர் - ஆதலாற் காணப்படார் நுண்ணியர்.

இடைவிடாத நினைவின் முதிர்ச்சியான், எப்பொழுதும் முன்னே தோன்றலிற் 'கண்ணுள்ளிற் போகா' ரென்றும், இமைத் துழியும் அது நிற்றலான் 'இமைப்பிற் பருவரா' ரென்றுங் கூறினாள். (சு)

கக உஎ. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து.

[இதுவு மது.]

(இ-ள்.) காதலவர் கண் உள்ளாராகக் கண்ணும் எழுதேம்- காதலர் எப்பொழுதும் எம் கண்ணி னுள்ளாராகலாற் கண்ணினை அஞ்சனத்தால் எழுதுவதும் செய்யேம்; கரப்பாக்கு அறிந்து- அத்துணைக்காலமும் அவர் மறைதலை யறிந்து.

இழிவு சிறப்பும்மை மாற்றப்பட்டது. 'கரப்பாக்' கென்பது வினைப்பெயர்: வருகின்ற 'வேபாக்' கென்பதும் அது. யானிடையீ டின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமா றென்னை யென்பது குறிப்பெச்சம். (எ)

கக உஅ. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.

[இதுவு மது.]

(இ-ள்.) காதலவர் நெஞ்சத்தா ராக வெய்து உண்டல் அஞ்சுதும்-காதலர் எந்நெஞ்சினுள்ளாராகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலை அஞ்சாநின்றேம்; வேபாக்கு அறிந்து-அவர் அதனான் வெய்துறலை யறிந்து.

எப்பொழுதும் எந்நெஞ்சின்கண் இருக்கின்றவரைப் பிரிந்தா ரென்று கருதுமா றென்னையென்பது குறிப்பெச்சம். (அ)

கக உசு. இமைப்பிற் கரப்பாக் கறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னுமிவ் வூர்.

[வரைவிடைவைத்துப் பிரிவின்கண் தலைமகள் ஆற்றுதற் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவழி அவள் இயற்பட மொழிந்தது.]

(இ-ள்.) இமைப்பிற் கரப்பாக்கு அறிவல் - என் கண் இமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலையறிந்து

இமையேன்; அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர் - அவ்வளவிற்கு அவரைத் துயிலாநோய்செய்தார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர்.

தன் கருத்தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூ' ரென்றாள். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்கற்பாலையல்லையென்பதாம்.

கக௩0. **உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்**
**ஏதிலர் என்னுமிவ் வூர்.**

[இதுவு மது.]

(இ - ள்.) என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர் - காதலர் எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளே உவந்துறையாநிற்பர்; இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ்வூர் - அதனை அறியாது அவரைப் பிரிந்துறையாநின்றார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர்.

'உவந்துறைவ' ரென்றதனால் அன்புடைமை கூறினாள். பிரியாமையும் அன்பு முடையாரை இலரெனப் பழிக்கற்பாலையல்லையென்பதாம். (க0)

---

## அ௩. கக௪—நாணுத்துறவுரைத்தல்

[அஃதாவது, சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் தோழிக்குத் தன் நாண்துறவுரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன் நாண்துறவுரைத்தலுமாம். இது, காதல் மிக்குழி நிகழ்வதாகலின், காதற்சிறப்புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.]

கக௩க. **காமம் உழந்து வருந்ினார்க் கேம**
**மடலல்ல தில்லை வலி.**

[சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் சொல்லியது.]

**(இ - ள்.)** காமம் உழந்து வருந்தினார்க்கு, அரியராய மகளிரோடு காமத்தை அனுபவித்துப் பின் அதுபெறாது துன்புற்ற ஆடவர்க்கு; ஏம மடல் அல்லது வலி இல்லை - பண்டும் ஏமமாய் வருகின்ற மடலல்லது இனி எனக்கு வலியாவதில்லை.

ஏமமாதல் அத்துன்பம் நீங்கும் வகை அவ்வனுபவத்தினைக் கொடுத்தல். 'வலி' ஆகுபெயர். பண்டும் ஆடவராயினார் இன்ப மெய்தி வருகின்றவாறு நிற்க, நின்னை அதற்குத் துணையென்று

கருதிக் கொன்னே முயன்ற யான் இதுபொழுது அல்லாமையை யறிந்தேனுகலான், இனி யானு மவ்வாற்ருன் அதனை யெய்துவ லென்பது கருத்து. (க)

கக௩௨. நோனு உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து.

[நாணுடைய நுமக்கு அது முடியாதென மடல்விலக்க லுற்ருட்குச் சொல்லியது.]

(இ - ள்.) நோனு உடம்பும் உயிரும் மடல் ஏறும் - அவ் வருத்தத்தினைப் பொருத உடம்பு முயிரும் அதற்கேமமாய மடல் மாவினை ஊரக் கருதாநின்றன; நாணினை நீக்கிநிறுத்து - அதனை விளக்குவதாய நாணினை யகற்றி.

"வருந்தினர்க்"கென மேல்வந்தமையிற் செயப்படுபொருள் ஈண்டுக் கூருராயினர். 'மடல்' ஆகுபெயர். 'நீக்கிநிறுத்'தென்பது ஒரு சொன்னீர்மைத்து. அறிவு நிறை யோர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும் நாணீங்காது நின்றது; அதுவும் இது பொழுது நீங்கிற்றென்பான்,'உடம்புமுயிரு'மென்ருன். அவை தாந் தம்முள் நீங்காமற் பொருட்டு மடலேறுமென்றது அவள் தன் ஆற்ருமையறிந்து கடிதிற் குறைநேர்தனேக்கி. (உ)

கக௩௩. நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடை
காமுற்ருர் ஏறும் மடல். [யேன்

[நாணேயன்றி நல்லாண்மையு முடைமையின் முடியாதென்ருட்குச் சொல்லியது.]

(இ - ள்.) நாணொடு நல்லாண்மை பண்டுஉடையேன்-நாணும் மிக்க ஆண்தகைமையும் யான் பண்டுடையேன்; காமுற்ருர் ஏறும் மடல் இன்றுஉடையேன்-அவை காமத்தா னீங்குதலான், அக்காம மிக்கார் ஏறும் மடலினை இன்றுடையேன்.

நாண்: இழிவாயின செய்தற்கண் விலக்குவது. ஆண்மை: ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன; இன்றுள்ளது இதுவேயாகலிற் கடிதின் முடியுமென்பதாம். (௩)

கக௩௪. காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை.

[நாணும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனுல் அவை நீங்குவனவல்ல என்ருட்குச் சொல்லியது.]

(இ - ள்.) நாணொடு நல்லாண்மை என்னும் புணை - யான் தன்னைக் கடத்தற்குக்கொண்ட நாணும் நல்லாண்மையுமாகிய

புணைகளை; காமக் கடும்புனல் உய்க்குமே - என்னிற் பிரித்துக் காம மாகிய கடிய புனல் கொண்டுபோகா நின்றது.

அது செய்யமாட்டாத ஏனைப்புனலின் நீக்குதற்குக் 'கடும்புன' லென்றான். இப் புனற்கு அவை புணையாகா; அதனான் அவை நீங்கு மென்பதாம். (ச)

ககஙரு. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர்.

[இவ்வாற்றாமையும் மடலும் நுமக் கெவ்வாறு வந்தன என்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) மாலை உழக்கும் துயர் மடலொடு - மாலைப்பொழு தின்கண் அனுபவிக்குந் துயரினையும் அதற்கு மருந்தாய மடலினை யும் முன்னறியேன்; தொடலைக் குறுந்தொடி தந்தாள் - இது பொழுது எனக்கு மாலைபோலத் தொடர்ந்த சிறுவளையினை யுடை யாள் தந்தாள்.

காமம் ஏனைப்பொழுதுகளினும் உளதேனும் மாலைக்கண் மலர்தலுடைமையின்* 'மாலையுழக்குந் துய'ரென்றும், மடலும்அது பற்றி வந்ததாகலின் அவ்விழியும் அவளால் தரப்பட்டதென்றும், அவள்தான் நீ கூறியதே கூறும் இளமையளென்பது தோன்றத் தொடலைக் குறுந்தொடி யென்றுங் கூறினான். அப்பெயர் உவமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. இவை அவள் தந் தனவாகலின் நின்னால் நீங்கு மென்பது கருத்து. (ரு)

ககஙசு. மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

[மடலூரும்பொழுது இற்றைக்கும் கழிந்ததென்றாட்குச் சொல்லியது]

(இ - ள்.) பேதைக்கு என் கண்படல் ஒல்லா - நின் பேதை காரணமாக என் கண்கள் ஒருகாலுந் துயிறலைப் பொருந்தா; யாமத் தும் மன்ற மடலூர்தல் உள்ளுவேன் - அதனால் எல்லாருந் துயிலும் இடை யாமத்தும் யானிருந்து மடலூர்தலையே கருதா நிற்பேன்.

'பேதை'யென்றது பருவம்பற்றியன்று, மடமைபற்றி. இனிக் குறைமுடிப்பது நாளையென வேண்டா என்பதாம். (சு)

ககஙஎ. கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

---

* குறள் - கஉஉஎ.

[பேதைக் கென்கண் படலொல்லா என்பதுபற்றி அறிவிலராய மகளிரினும் அஃதுடையராய ஆடவரன்றே ஆற்றற்பாலர் என்ருட்குச் சொல்லியது.]

(இ - ள்.) கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏருப் பெண்ணின் - கடல்போலக் கரையற்ற காமநோயினை அனுபவித்தும் மடலூர்தலைச் செய்யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புப்போல; பெருந்தக்கது இல்-மிக்க தகுதியினையுடைய பிறப்பு உலகத்தில்லை.

பிறப்புவிசேடத்தால் அவ்வடக்கம் எனக்கில்லையாகா நின்றது; நீ அஃதறிகின்றிலை யென்பதாம். இத்துணையுந் தலைமகன் கூற்று; மேல் தலைமகள் கூற்று. (எ)

சகசுஅ. நிறையரியர் மன்னளியர் என்னுது காமம்
மறையிறந்து மன்று படும்.

[காப்புச் சிறைமிக்குக் காமம் பெருகியவழிச் சொல்லியது.]

(இ - ள்.) நிறை அரியர் (என்னுது)-இவர் நிறையால் நாமீதார் தற் கரியரென் றஞ்சுதல் செய்யாது; மன் அளியர் என்னுது-மிகவும் அளிக்கத்தக்காரென் றிரங்குதல் செய்யாது; காமம் மறை இறந்து மன்றுபடும் - மகளிர் காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின் கண்ணே வெளிப்படுவதாயிருந்தது.

'என்னு'ரென்பது முன்னுங் கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. 'மன்'றென்பது தந்தை தன்னையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார் காமத்தியல்பு கூறுவாள்போன்று, தன் காமம் பெருகியவாறும், இனி அறத்தொடு நிற்றல்வேண்டு மென்பதுங் குறிப்பாற் கூறியவாருயிற்று. (அ)

சகசுகூ. அறிகிலார் எல்லாரும் என்றேயென் காமம்
மறுகின் மறுகும் மருண்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) எல்லாரும் அறிகிலார் என்று - யான் முன்னடங்கி நிற்றலான் எல்லாரும் என்னை அறிதலிலர், இனி அவ்வாறு நில்லாது யானே வெளிப்பட்டறிவிப்பலென்று கருதி; என் காமம் மறுகில் மருண்டு மறுகும் - என் காமம் இவ்வூர் மறுகின்கண்ணே மயங்கிச் சுழலாநின்றது.

மயங்குதல்: அம்பலாதல்; மறுகுதல்: அலராதல். அம்பலும் அலருமாயிற்று, இனி அறத்தொடுநிற்றல்வேண்டும் என்பதாம். அறிவிலாரென்பதூஉம் பாடம். (கூ)

ககசo. யாம்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா ஆறு.

[செவிலிக் கறத்தொடு நின்றுவைத்து யானிற்குமாறென்னை யென்று நகையாடிய தோழியொடு புலந்து தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) யாம் கண்ணிற் காண அறிவில்லார் நகுப - யாம் கேட்குமாறு மன்றிக் கண்ணாற் காணுமாறு எம்மை அறிவிலார் நகா நின்றார்; யாம் பட்ட தாம் படா ஆறு - அவரங்ஙனஞ் செய்கின்றது யாமுற்ற நோய்கள் தாமுறாமையான்.

'கண்ணி' னென்றது முன் கண்டறியாமை உணராநின்றது. அறத்தொடுநின்றமை அறியாது வரைவு மாட்சிமைப்படுகின்றிலள் எனப் புலக்கின்றாளாகலின், ஏதிலாளாக்கிக் கூறினாள். இது, நகாநின்று சேட்படுக்குந் தோழிக்குத் தலைமகன் கூறியதாங்கால், அதிகாரத்திற் கேலாமை யறிக. (கo)

---

## அதி. ககரு—அலரறிவுறுத்தல்

[அஃதாவது, களவொழுக்கம் வேண்டிய தலைமகள் பிறர் கூறுகின்ற அலர் தனக்காகின்றவாற்றைத் தோழிக்கறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைமகளும் தோழியும் அவ்வலரை அவன்றனக் கறிவுறுத்தலுமாம். இது நாணும் துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.]

ககசக. அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

[அல்ல குறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி அலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.]

(இ - ள்.) அலர் எழ ஆருயிர் நிற்கும் - மடந்தையொடெம்மிடை நட்பு* ஊரின்கண் அலரா யெழுதலான் அவளைப் பெறாது வருந்துமென் அரிய வுயிர் பெற்றதுபோன்று நிலைபெறும்; அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார் - அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் யானே அறிவதல்லது கூறுகின்ற பலரும் அறியார்.

அல்ல குறிப்பட்டுத் தலைமகளை எய்தப்பெறாத வருத்தமெல்லாந் தோன்ற அரிய உயிரென்றும், அங்ஙனம் அரியாளை எளிய

---

* குறள் - ககஉஉ.

ளாக்கி யெடுக்கின்றமையின், அஃதவ்வாருயிர்க்குப் பற்றுக் கோடாக நின்றதென்பான் 'அலரெழ வாருயிர் நிற்கு' மென்றும்; பற்றுக்கோடாதலே அவ்வேதிலாரறியிற் றூற்று தொழிவர்; ஒழி யவே ஆருயிர் போமாகலான் அவரறியாதொழிகின்றது தெய்வத்தா னென்றுங் கூறினான். முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. (க)

ககசரு. மலரன்ன கண்ணாள் அருமை அறியா

தலரெமக் கீந்ததிவ் வூர்.

[இதுவு மது.]

(இ - ள்.) மலர் அன்ன கண்ணாள் அருமைஅறியாது-மலர் போலுங் கண்ணையுடையாளது எய்தற்கருமை யறியாது; இவ்வூர் அலர் எமக்கு ஈந்தது - இவ்வூர் அவளை யெளியளாக்கி அவளோ டலர் கூறலை எமக்குபகரித்தது.

'அருமை' அல்லகுறிப்பாட்டானும் இடையீடுகளானும் ஆயது. 'ஈந்த' தென்றான், தனக்குப் பற்றுக்கோடாகலின்: அலர் கூறு வாரை அவர் செய்த உதவிபற்றி 'இவ்வூ' ரென்றான். (உ)

ககசரு. உறுஅதோ வூரறிந்த கௌவை அதனைப்

பெறுஅது பெற்றன்ன நீர்த்து.

[இதுவு மது.]

(இ - ள்.) ஊர் அறிந்த கௌவை உறுஅதோ - எங்கட்குக் கூட்டமுண்மை இவ்வூரறிதலான் விளைந்த அலர் எனக்குறுவ தொன்றன்றோ; அதனைப் பெறுஅது பெற்றன்ன நீர்த்து - அது கேட்ட என்மனம் அக்கூட்டத்தைப் பெறாதிருந்தே பெற்றாற் போலும் நீர்மையை யுடைத்தாகலான்.

பெற்றன்ன நீர்மை; பெற்றவழி உளதாம் இன்பம்போலும் இன்பமுடைமை. 'நீர்த்'தென்பதற்கேற்ற மனமென்னும் வினை முதல் வருவிக்கப்பட்டது. (ங)

ககசச. கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேல்

தவ்வென்னும் தன்மை இழந்து.

[இதுவு மது.]

(இ - ள்.) காமம் கவ்வையால் கவ்விது - என் காமம் இவ் வூரெடுக்கின்ற அலரானே அலர்தலை உடைத்தாயிற்று; அது இன்றேல் தன்மை இழந்து தவ்வென்னும்- அவ்வலரில்லையாயின், தன் இயல்பிழந்து சுருங்கும்.

அலர்தல்: மேல்மேல் மிகுதல், செவ்வையுடையதனைச் செவ்வி தென்றாற்போலக் கவ்வையுடையதனைக் 'கவ்வி'தென்றார். இயல்பு: இன்பம் பயத்தல். 'தவ்வென்னு'மென்பது குறிப்புமொழி; "நூல் கால் யாத்த மாலை வெண்குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப"* என்புழியுமது.

(ச)

ககசரு. களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது.

[இதுவு மது.]

(இ - ள்.) களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று - கள்ளுண்பார்க்குக் களிக்குந் தோறுங் கள்ளுண்டல் இனிதாமாறு போல; காமம் வெளிப்படுந்தோறும் இனிது - எனக்குக் காமம் அலராந்தோறும் இனிதாகாநின்றது.

வேட்கப்பட்டற்றாலென்பது 'வேட்டற்றா'லென நின்றது. வேட்கைமிகுதியால் அலரும் இன்பஞ்செய்யாநின்றதென்பதாம்.

ககசசு. கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று.

[இடையீடுகளானும் அல்லகுறியானுந் தலைமகனை எய்தப் பெறாத தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.]

(இ - ள்) கண்டது ஒருநாள் - யான் காதலரைக் கண்ணுறப் பெற்றது ஒருஞான்றே; அலர் திங்களைப் பாம்பு கொண்டற்று - அதனினாய அலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப் பாம்பு கொண்ட அலர்போன்று உலகெங்கும் பரந்தது.

காரியத்தைக் காரணமாக உபசரித்துப் 'பாம்புகொண்டற்' றென்றாள். இருவழியும் 'மன்னும்' 'உம்'மையும் அசைநிலை. காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது, வரைந்துகோடல் வேண்டுமென்பதாம்.

(சு)

ககசஎ. ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்.†

[வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானாதலறிந்த தோழி ஊரவரலரும் அன்னைசொல்லு நோக்கி ஆற்றல்வேண்டுமெனச் சொல்லெடுப்பியவழி அவள் சொல்லியது.]

* நெடுநல்வாடை, அடி-கஅச, கஅரு.
† ரு-ஆம் திருவாய்மொழி, மாசறுசோதி-சு.

(இ - ள்.) இந்நோய் - இக்காமநோயாகிய பயிர்; ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல் நீராக நீளும் - இவ்வூரின் மகளி ரெடுக்கின்ற அலர் எருவாக, அது கேட்டு அன்னை வெகுண்டு சொல்லுகின்ற வெஞ்சொல் நீராக, வளராநின்றது.

'ஊரவ'ரென்பது தொழிலான் ஆணொழித்துநின்றது. ஏக தேச வுருவகம். சுருங்குதற் கேதுவான தாமே விரிதற்கேதுவாகா நின்றன வென்பதாம். வரைவானுதல் பயன். (எ)

ககசஅ. நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்.

[இதுவு மது.]

(இ - ள்.) கௌவையால் காமம் நுதுப்பே மெனல்-ஏதிலார் எடுக்கின்ற அலரால் நாம் காமத்தை அவித்துமென்று கருதுதல்; நெய்யால் எரி நுதுப்பே மென்றற்று - நெய்யால் எரியை அவித்து மென்று கருதுதலோ டொக்கும்.

மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன. கிளர்தற்காரணமாய அலரால் அவித்தல் கூடா தென்பதாம். (அ)

ககசகூ. அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

[வரைவிடை வைத்துப் பிரிவின்கண் ஆற்றாளாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தா னாதலறிந்து அலரஞ்சி ஆற்றல் வேண்டு மென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அஞ்சலோம்பு என்றார் பலர் நாண நீத்தக் கடை - தம்மை யெதிர்ப்பட்ட ஞான்று நின்னிற் பிரியேன் அஞ்சலோம் பென்றவர்தாமே இன்று கண்டார் பலரும் நாணும் வகை நம்மைத் துறந்தபின்; அலர் நாண ஒல்வதோ - நாமேதிலார் கூறும் அல ருக்கு நாணக்கூடுமோ? கூடாது.

'நாண' வென்னும் வினையெச்சம் 'ஒல்வ' தென்னுந் தொழிற் பெயருள் ஒல்லுதல் தொழிலோடு முடிந்தது. கண்டார் நாணும் நிலைமையமாய யாம் நாணுதல் யாண்டைய தென்பதாம். (கூ)

ககரு0. தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்குமிவ் வூர்.

[தலைமகன் சிறைப்புறத் தானாகத்தோழி தலைமகட்குச் சொல்லுவா ளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.]

(இ - ள்.) யாம் வேண்டும் கௌவை இவ்வூர் எடுக்கும் - உடன்போகற் கேதுவாகனேக்கி யாம் பண்டே விரும்புவதாய அலரை இவ்வூர் தானே யெடாநின்றது; காதலர் தாம் வேண்டின் நல்குவர் - இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால் அதனை யினிதின் நேர்வர், அதனுல் இவ்வலர் நமக்கு நன்முய் வந்தது.

எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. நங்கண் காதலுடைமை யின் மறுவென்பது தோன்றக் 'காதல; ரென்முள். இவ்விருபது பாட்டும் புணர்தல் நிமித்தம்.

(கO)

களவியல் முற்றிற்று.

## உ. கற்பியல்

இனிக் கற்புப்பதினெட்டதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி முதற்கண் பிரிவாற்ருமை கூறுகின்ருர்.

### அதி. ககசு—பிரிவாற்ருமை

[அஃதாவது, வரைந்தெய்தியபின் தலைமகன் அறம்பொருளின்பங் களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் தலைமக ளைப் பிரிந்து செல்லும்; செல்லுஞான்று அப் பிரிவினை அவ ளார்ருளாந் தன்மை. அஃது ஈண்டுப் பிரிவுணர்த்திய தலை மகற்குத் தோழி கூறலும், அவள் தனக்குத் தலைமகள் தானே அவன் குறிப்பானுணர்ந்து கூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்குந்தோழிக்குத் தலை மகள் மறுத்துக் கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.]

கக௫க. **செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க் குரை.**

[பிரிந்து கடிதின் வருவலென்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.]

(இ - ள்.) செல்லாமை உண்டேல் எனக்கு உரை - நீ எம் மைப் பிரியாமை உண்டாயின் அதனை எனக்குச் சொல்; மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை-அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்துவருதல் சொல்வையாயின் அதனை அப்பொழுது உயிர் வாழ்வார்க்குச் சொல்.

தலைமகளை யொழித்து 'எனக்'கென்ருள், தானவளென்னும் வேற்றுமையின்மையின். அக்காலமெல்லாம் ஆற்றியிருந்து அவ் வரவு காணவல்ல ளல்லள், பிரிந்தபொழுதே இறந்துபடு மென்ப தாம். அழுங்குவித்தல் பயன். இதனைத் தலைமகள் கூற்ருக்கி உரைப்பாருமுளர்.* (க)

கக௫உ. **இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்**
**புன்கண் உடைத்தால் புணர்வு.**

[பிரிவு தலைமகன் குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அவர் பார்வல் இன்கண் உடைத்து - தழையுங் கண்ணியுங் கொண்டு பின்னின்றஞான்று அவர் நோக்கு மாத்திர

* மணக்குடவர்.

மும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கின்ப முடைத்தாயிருக்கும்; புணர்வு பிரிவஞ்சும் புன்கண் உடைத்து - இன்று அப் புணர்ச்சி தான் நிகழாநிற்கவும் அது பிரிவரென் றஞ்சும் அச்சத்தினை உடைத்தாயிற்று, அவரன்பினிலைமை யிது.

'பார்வ' லென்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. 'புன்க'ணென்னுங் காரணப்பெயர் காரியத்தின் மேலாயிற்று. அவ்வச்சத்தினை உடைத்தாதலாவது, "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ்செய்யு மென வுரைத்து மமையாரென், னொள்ளிழை திருத்தும்"* பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை. அழுங்குவித்தல் பயன். (உ)

கக௫௩. அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

[இதுவு மது.]

(இ - ள்.) அறிவு உடையார் கண்ணும்-பிரியேனென்ற தஞ் சொல்லும் நம்பிரிவாற்றுமையும் அறிதலுடையராய காதலர் கண்ணும்; ஓரிடத்துப் பிரிவு உண்மையான்-ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான்; தேற்றம் அரிது - அவர் சொல்லும், தலையளியும் பற்றி நம்மாட் டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது.

'அரோ' அசைநிலை. உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. (௩)

கக௫௪. அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு.

[இதுவு மது.]

(இ - ள்.) அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின்-எதிர்ப்பட்ட ஞான்றே தலையளிசெய்து நின்னிற் பிரியேன் அஞ்சலென்றவர் தாமே பின்பிரிவராயின்; தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு உண்டோ - அவர்க்கன்றி அவர்தெளிவித்தசொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ?

'தேறியா' ரென்பது தன்னைப் பிறர்போற் கூறல். சொல்லுஞ் செயலும் ஒவ்வாமைக்குற்றம் அவர்க்கெய்தும், அஃதெய்தா வகை அழுங்குவியென்பது கருத்து. (௪

* கலித்தொகை - ௩.

ககருரு. ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு.

[இதுவு மது.]

(இ - ள்.) ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல்-என்னுயிரைச் செல்லாமற் காத்தியாயின், அதனை ஆளுதற் கமைந்தாருடைய செலவினை அழுங்குவிப்பாயாக; மற்றுஅவர் நீங்கின் புணர்வு அரிது - அழுங்குவிப்பாரின்றி அவர் செல்வாராயின் அவரா லாளப்பட்ட உயிருஞ் செல்லும், சென்றாற் பின்னவரைக் கூடுதல் எனக் கரிதாம்.

ஆளுதற்கமைதல்; இறைவராதற்குத் தெய்வத்தால் ஏற் புடையராதல். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. (ரு)

ககருசு. பிரிவுரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதவர்
நல்குவர் என்னும் நசை.

[தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணராயின்-நங்கவ வுக்கடுமையறிந்த தலைவர்தாமே நம்முன்னின்று தம்பிரிவினை உணர்த்தும் வன்கண்மை உடையராயின்; நல்குவர் என்னும் நசை அரிது-அத்தன்மையார் பின்பு நம் ஆற்றாமை யறிந்துவந்து தலையளி செய்வரென்றிருக்கும் ஆசை விடப்படும்.

அருமை: பயன்படுதலில்லாமை கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவெண்ணுதலும் உணர்த்தலும் வல்லராயினர், பிரிந்துபோய் அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நல்குதல் யாண்டைய தென்பதாம். அழுங்குவித்தல் பயன். (சு)

ககருஎ. துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை.

[இதுவு மது.]

(இ - ள்.) துறைவன் துறந்தமை - துறைவன் என்னைப் பிரியலுற்றமையை; முன்கை இறை இறவாநின்ற வளை தூற்றா கொல் - அவனுணர்த்தாமல் தாமே உணர்ந்து என் முன்கையின் இறையினின்றுங் கழலாநின்ற வளைகள் எனக்கறிவியாவோ, அவ னுணர்த்த உணர்ந்துவந்து நீ அறிவித்தல் வேண்டுமோ?

முன்னே நிகழ்ந்தமையின் 'துறந்தமை' யென்றும், கேட்ட துணையான் மெலிந்து ஆற்றுமையின் 'இறவாநின்ற' என்றுங் கூறினாள். அழுங்குவித்து வந்து கூறற்பாலை அல்லையாய் நீயும் இவ்வளைகள்செய்தனவே செய்தாயெனப் புலந்து கூறியவாறு. (எ)

ககந௮. இன்னு தினன்இல்லூர் வாழ்தல் அதனினும்
இன்னு தினியார்ப் பிரிவு.

(இ - ள்.) இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது-மகளிர்க்குத் தம்குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்தல் இன்னாது; இனியார்ப்பிரிவு அதனினும் இன்னாது - அதன் மேலுந் தம் காதலரைப் பிரிதல் அதனினும் இன்னாது.

தலைவன் செலவினை அழுங்குவித்து வாராது உடன்பட்டு வந்தமைபற்றிப் புலக்கின்றாளாகலின், 'இனனில்லூ' ரென்றாள். உலகியல் கூறுவாள் போன்று தனக்கவ்விரண்டு முண்மை கூறியவாறு (அ)

ககநகூ. தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ.*

[காமம் தீயேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான் நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) தீத்தொடிற் சுடிற் சுடலல்லது - தீத் தன்னைத் தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது; காமநோய்போலவிடிற் சுடல் ஆற்றுமோ - காமமாகிய நோய்போலத் தன்னை அகன்றால் தப்பாது சுடுதலை வற்றோ? மாட்டாது.

சுடுமாயினென்பது மந்திர மருந்துகளால் தம்பிக்கப்படாதாயினென்றவாறு. காமத்திற் கதுவுமில்லை யென்பாள் வாளா 'சுட' லென்றாள். அகறல்: நுகராமை. சுடலென்பது முன்னுங்கூட்டப்பட்டது. தீயினுங்கொடியதனை யானாற்றுமா றென்னை யென்பதாம். (கூ)

ககக௦. அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர்.

[தலைவியர் பலரும் பிரிவாற்றியிருப்பர், அது நீ செய்கின்றிலை என்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) (நீ சொல்லுகின்றதொக்கும்), அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கி - பிரிவுணர்த்தியவழி அதற்குடம்பட்டுப் பிரியுங்

* நாலடியார் - கூ௦.

கால் நிகழும் அல்லல் நோயினையும் நீக்கி; பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர் - பிரிந்தால் அப்பிரிவு தன்னையும் ஆற்றிப் பின்னு மிருந்து உயிர்வாழும் மகளிர் உலகத்துப் பலர்.

பண்டையிற் சிறப்பத் தலையளிபெற் றின்புறுகின்ற எல்லைக் கண்ணே அஃதிழந்து துன்புறுதற் குடம்படுதல் அரியதொன்ருக லின் அரியதனைச் செய்தென்றும், செல்லுந் தேயத்து அவர்க் கியாது நிகழுமென்றும், வருந்துணையும் யாமாற்றியிருக்குமா றென் னென்றும், அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்தெய்து மென்றும், இவ்வாற்ருல் நிகழுங் கவலை மனத்து நீங்காதாகலான் 'அல்லனோய் நீக்கி'யென்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழும் காம வேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்ற லென்றிவை முதலாக வந்து இதனை வளர்ப்பனவும் ஆற்றலரியவாகலிற் 'பிரிவாற்றி' யென்றும், தங்காதலரை யின்றியமையா மகளிருள் இவை யெல்லாம் பொறுத்துப் பின்னுமிருந்து உயிர்வாழ்வார் ஒருவரு மில்லை யென்பது குறிப்பால் தோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பல' ரென்றுங் கூறினுள். 'அரி'தென்பது வினைக்குறிப்புப்பெயர். பிரிவின்க ணிகழ்வனவற்றைப் 'பிரி' வென்ருள். செய்து, நீக்கி, ஆற்றி யென்பன ஓசைவகையான் அவ்வவற்ற தருமையுணரநின் றன. சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. யானும் இறந்துபடுவ லென்பது கருத்து. (௧௦)

---

## அதி. ௧௧௭—படர்மெலிந்திரங்கல்

(அது படரான் மெலிந்திரங்கலென விரியும். அஃதாவது பிரி வாற்ருளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப் பொழுதும் நினைத்தலின், அந்நினைவான் மெலிந்திரங்குதல். அதிகார முறைமையும் இதனுனே விளங்கும்.)

௧௧௬௧. **மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்** **கூற்றுநீர் போல மிகும்.**

[காம நோயை வெளிப்படுத்தல் நின்நாணுக் கேலாதென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) நோயை யான் மறைப்பேன் - இந்நோயைப் பிறர் அறிதனுணி யான் மறையாநின்றேன்; இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர்போல் மிகும் - நிற்பவும், இஃது அந்நாண்வரை நில்லாது நீர் வேண்டுமென் றிறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுமாறுபோல் மிகா நின்றது.

அம்மறைத்தலாற் பயனென்னென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. இஃதோ செல்வர்க் கொத்தனென் பான்'' என்புழிப்போல ஈண்டுச் சுட்டுப்பெயரீறு திரிந்துநின்றது. இஃதோர் நோயையென்று பாடமோதுவாரு முளர்; அது பாட மன்மையறிக. இனி அதற்கடுத்தது நீ செயல்வேண்டு மென்பதாம்.

ககசுஉ. கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலும் நாணுத் தரும்.

[ஈண்டையா ரறியாமல் மறைத்தல், ஆண்டையா ரறியத் தூது விடுதலென்னு மிரண்டனுள் ஒன்று செயல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) இந்நோயைக் கரத்தலும் ஆற்றேன் - இந்நோயை ஈண்டையாரறியாமல் மறைத்தலும் வல்லே னுகின்றிலேன்; நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுத் தரும் - ஆகாக்கால், நோய் செய்தவர்க் குரைக்கவெனின், அதுவும் எனக்கு நாணினைத் தாராநின்றது; இனி யென்செய்கோ.

ஒருகாலைக் கொருகால் மிகுதலிற் 'கரத்தலுமாற்றே' னென் றும், சேயிடைச் சென்றவர்க்கு இதுசொல்லித் தூதுவிட்டால் இன்னுமிருந்தேனென்பது பயக்குமென்னுங் கருத்தால் 'நாணுத் தரு' மென்றுங் கூறினுள். (உ)

ககசுங. காமமும் நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனு உடம்பின் அகத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) காமமும் நாணும் - காம நோயும் அதனைச் செய்த வர்க்கு உரைக்கலொல்லாத நாணும்; நோனு என் உடம்பின் அகத்து - தம்மைப் பொறுத என்னுடம்பின்கண்ணே; உயிர் காவாத் தூங்கும் - உயிர் காத்தண்டாக அதன்இரு தலையினுந் தூங்கா நின்றன.

பொறுமை மெலிவானுயது. தூங்குமென்பது, ஒன்றினென்று மிகாது இரண்டும் ஒத்தசீரவென்பது தோன்ற நின்றது. தூது விடவும் ஒழியவும் பண்ணுவனவாய காம நாண்கள் தம்முளொத்து உயிரினை இறுவியாநின்றன; யான் அவற்றுள் ஒன்றின்கண் நிற்க மாட்டாமையின் இஃதிற்றேவிடு மென்பதாம். (ங)

ககசுச. காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்.

[தலைவியர் காமக்கடற் படார், படினும், அதனை ஏற்ற புணையான் நீந்திக் கடப்பரென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) உண்டு காமக் கடலே - யாவர்க்கும் உளவாய் வருகின்ற இவ்விரண்டினுள்ளும் எனக்குண்டாகின்றது காமக் கடலே; அது நீந்தும் ஏமப் புணை இல் - அதனை நீந்தும் அரணாகிய புணை இல்லை.

இருவழியும் 'மன்'னும் 'உம்'மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணையாகற்பாலையாய நீயும் ஆயிற்றிலையென்பது கருத்து.

ககசுரு. துப்பின் எவனாவர் மன்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்.

[தூதுவிடாமை நோக்கித் தோழியொடு புலந்து சொல்லியது.]

(இ - ள்.) நட்பினுள் துயர்வரவு ஆற்றுபவர் - இன்பஞ்செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்ப வரவினைச் செய்யவல்லவர்; துப்பின் எவனாவர்கொல் - துன்பஞ்செய்தற்குரிய பகைமைக்கண் என் செய்வர்கொல்லோ?

துப்புப் பகையுமாதல் "துப்பெதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன், நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை அண்மையன்*" என்பதனானு மறிக. அப்பகைமை ஈண்டுக் காணாமையின் அவர் செய்வதும் அறியப்பெற்றிலே மென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. துயர் வருதலை விலக்கலாயிருக்க அது செய்கின்றிலையெனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக்கியும் பிறளாக்கியுங் கூறினாள். (ரு)

ககசுசு. இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது.

[காமத்தான் இன்பமுற்றார்க்கு அதனினும் துன்பம் வருமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) காமம் இன்பம் கடல் - காமம் புணர்வால் இன்பஞ் செய்யுங்கால், அவ்வின்பங் கடல்போலப் பெரிதாம்; மற்றஃது அடுங்கால் துன்பம் அதனிற் பெரிது - இனி அதுதானே பிரிவால் துன்பஞ் செய்யுங்கால், அத்துன்பம் அக்கடலினும் பெரிதாம்.

* புறநானூறு - ருஅ0.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. 'அடுங்கா'லென வந்தமையின், மறுதலையெச்சம் வருவிக்கப்பட்டது. பெற்ற இன்பத்தோடொத்துவரின் ஆற்றலாம்; இஃததன தளவன்றென்பது கருத்து.

௧௧௬௭. **காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்**
**யாமத்தும் யானே உளேன்.**

[காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படு மென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) காமக் கடும்புனல் நீந்திக் கரை காணேன் - காமமாகிய கடலை நீந்தாதேனல்லேன், நீந்தியும் அதற்குக் கரை காண்கின்றிலேன்; யாமத்தும் யானே உளேன் - அக்காணாமைக் காலந்தான் எல்லாருந் துயிலும் அரை யிருளாயிற்று; அவ்வரை யிருட்கண்ணும் அதற்கொரு துணையின்றி யானேயாயினேன்; ஆயும் இறந்துபட்டுய்ந்துபோகாதுளேனுகாநின்றேன்; ஈதொரு தீவினைப் பயன் இருந்தவாறென்!

கடுமை ஈண்டு மிகுதிக்கணின்றது. உம்மை முன்னும் கூட்டப்பட்டது. யானே ஆயினே னென்பது நீ துணையாயிற்றிலை யென்னும் குறிப்பிற்று. (எ)

௧௧௬௮. **மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா**
**என்னல்ல தில்லை துணை.**

[இரவின் கொடுமை சொல்லி இரங்கியது.]

(இ - ள்.) இரா அளித்து - இவ்விரா அளித்தா யிருந்தது; மன் உயிர் எல்லாம் துயிற்றி என்னல்லது துணை இல்லை - உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாந் தானே துயிலப்பண்ணுதலான் என்னை யல்லது வேறு துணையுடைத்தாயிற்றில்லை.

'துயிற்றி' யெனத் திரிந்துநின்ற வினையெச்சம் அவாய்நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது, துணையோடொன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு இறந்துபடும் எல்லையேனாய என்னையே துணையாகக்கோடலின் அறிவின்றென்பதுபற்றி 'அளித்'தென்றாள்; இகழ்ச்சிக்குறிப்பு. (அ)

௧௧௬௯. **கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்**
**நெடிய கழியும் இரா.**

[இதுவுமது.]

(இ - ள்.) இந்நாள் நெடிய கழியும் இரா - காதலரோடு கூடியின்புற்ற முன்னாள்களில் குறியவாய் அவர் பிரிவாற்றே

மாகின்ற இந்நாட்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள்; கொடியார் கொடுமையின் தாம் கொடிய - அக்கொடியாரது கொடுமைக்கு மேலே தாங்கொடுமை செய்யாநின்றன.

தன்னுற்றுமை கருதாது பிரிதலின், 'கொடியா' ரென்றாள். கொடுமை: கடிதின்வாராது நீட்டித்தல். அவர் பிரிவானும் நீட்டிப்பானு முளதாய ஆற்றுமைக்குக் கண்ணுடையாளை மேலும் பண்டையினெடியவாய்க் கொடியவாகாநின்றன வென்பதாம். (௧)

௧௧௭௦. **உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்**
**நீந்தல மன்னுேவென் கண்.**

[நின் கண்கள் பேரழகழிகின்றனவாகலின் அழற்பாலை யல்லை யென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் - மனம் போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற் செல்லவல்லனவாயின்; என் கண் வெள்ளநீர் நீந்தல - என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந்நீரை நீந்தா.

அது மாட்டாமையான், இனி அவற்றிற்கு நீந்துதலே உள்ளதென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. மனத்திற்குச்செலவாவது நினைவேயாகலின் 'உள்ளம்போன்'றென்றும், மெய்க்கு நடந்துசெல்ல வேண்டுதலிற் கண்கள் அதனொடுசென்று காதலரைக் காண்டல் கூடாதென்னுங் கருத்தாற் 'செல்கிற்பி' னென்றுங் கூறினாள். இதனான் வருகின்ற அதிகாரமுந் தோற்றுவாய் செய்யப்பட்டது. (௧௦)

---

## அதி. ௧௧௮—கண்விதுப்பழிதல்

[அஃதாவது கண்கள் தங் காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சி விதுப்புத் தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது படரான் மெலிந்தவழி நிகழ்வதாகலின், படர்மெலிந்திரங்கலின் பின் வைக்கப்பட்டது.]

௧௧௭௧. **கண்டாம் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்**
**தாங்காட்ட யாங்கண் டது.**

[நின் கண்கள் கலுழ்ந்து தம் அழகிழவா நின்றன; நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

(இ - ள்.) தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட - இத் தணியா நோயை யாமறிந்தது தாமெமக்குக் காதலரைக் காட்

டலானன்றே; கண் தாம் கலுழ்வது எவன்கொல் - அன்று அத்தொழிலவாய கண்கள் இன்று எம்மைக் காட்டச் சொல்லி அழுகின்றது என் கருதி?

'காட்ட'வென்பதற்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்னுந் தாமே காட்டுதலல்லது யாங் காட்டுதல் யாண்டையதென்பதாம். (௧)

௧௧௭௨. தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்ப தெவன்.

[இதுவு மது.]

(இ-ள்.) தெரிந்து உணரா நோக்கிய உண்கண் - மேல் விளைவதனை ஆராய்ந்தறியாது அன்று காதலரை நோக்கி நின்ற உண்கண்கள்; பரிந்து உணராப் பைதல் உழப்பது எவன்-இன்று இது நம்மால் வந்ததாகலிற் பொறுத்தல் வேண்டுமெனக் கூறுபடுத்துணராது துன்பமுழப்பது என்கருதி?

விளைவது: பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்கரியராய் வருத்துதல். முன்னே வருவதறிந்து அது காவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்தலன்றேயுள்ளது; அதுவுஞ் செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கை யென்பதாம். (௨)

௧௧௭௩. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.

[இதுவு மது.]

(இ-ள்.) தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது-இக்கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றும் தாமே விரைந்தழுகின்ற இது; நகத்தக்கது உடைத்து - நம்மாற் சிரிக்கத்தக்க இயல்பினை யுடைத்து.

கண்களென்பது அதிகாரத்தான் வந்தது. இதுவென்றது மேற்கூறிய கழிமடச்செய்கையை. அது வருமுன்னர்க் காப்பார்க்கு நகை விளைக்குமாகலின், 'நகத்தக்க துடைத்'தென்றாள். (௩)

௧௧௭௪. பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்வில்நோய் என்கண் நிறுத்து.

[இதுவு மது.]

(இ-ள்.) உண்கண்-உண்கண்கள்; உயலாற்றா உய்வு இல் நோய் என்கண் நிறுத்து-அன்று யானுய்யமாட்டாமைக் கேது

வாய ஒழிவில்லாத நோயை என்கண்ணே நிறுத்தி; பெயலாற்றாநீர் உலந்த-தாமு மழுதலை மாட்டாவண்ணம் நீர் வற்றிவிட்டன.

நிறுத்தல்: பிரிதலும் பின்கூடாமையு முடையாரைக் காட்டி அதனால் நிலைபெறச் செய்தல். முன்னெனக்கின்னாதன செய்தலாற் பின் தமக்கின்னாதன தாமே வந்தன*வென்பதாம். (௪)

௧௧௭௫. படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) கடல் ஆற்றாக் காமநோய் செய்த என்கண்-எனக்குக் கடலுஞ் சிறிதாம்வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என் கண்கள்; படல் ஆற்றா பைதல் உழக்கும் - அத்தீவினையால் தாமுந் துயில்கிலவாய்த் துன்பத்தையு முழவாநின்றன.

காமநோய் காட்சியான் வந்ததாகலின், அதனைக் கண்களே செய்ததாக்கிக் கூறினாள். துன்பம் அழுதலா னாயது. (௫)

௧௧௭௬. ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற் பட்டது.

[இதுவு மது.]

(இ - ள்.) எமக்குஇந்நோய் செய்தகண்தாஅம்இதற்பட்டது- எமக்கிக்காமநோயினைச் செய்தகண்கள் தாமும் இத்துயிலா தழுதற்கண்ணே பட்டது;ஓஒஇனிதே-மிகவும் இனிதாயிற்று.

'ஓ'வென்பது மிகுதிப்பொருட்கண் வந்த குறிப்புச் சொல். தம்மால் வருத்தமுற்ற எமக்கு அதுதீர்ந்தாற்போன்றதென்பதாம்.

௧௧௭௭. உழந்துழந் துள்நீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி அவர்க்கண்ட கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) விழைந்து இழைந்து வேண்டி அவர்க்கண்ட கண்- விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள்; உழந்துழந்து உள்நீர் அறுக-இன்று இத்துயிலாதழுங்கலாய துன்பத்தினை உழந்துழந்து தம்மகத்துள்ள நீர் அற்றே போக!

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகியஇடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. (௭)

* குறள் - ௩௧௧.

௧௧௭௮. பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்.

[காதலர் பிரிந்துபோயினாரல்லர்; அவர் ஈண்டுளர்; அவரைக்காணு மளவும் நீ யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) பேணாதுபெட்டார் உளர்-நெஞ்சால் விழையாது வைத்துச் சொல் மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தேயுளர்: மற்று அவர்க் கண் காணாது அமைவில - அவ்வுண்மையாற் பயன் யாது? அவரைக் கண்கள் காணாதமைகின்றன இல்லையாயின.

செயலாற் பிரிந்தமையிற் 'பேணா'தென்றும், முன்நலம் பாராட்டிப் பிரிவச்சமும் வன்புறையுங் கூறினாராகலிற் 'பெட்டா' ரென்றுங் கூறினாள். 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. 'மற்று' வினை மாற்றின்கண் வந்தது. ஓகாரம் அசைநிலை. யானாற்றவுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன என்பதாம். இனிக்கொண் கனையென்று பாடமாயின், என் கண்கள் தம்மைக் காணாதமை கின்ற கொண்கனைத் தாங்காணாதமைகின்றன வில்லை; இவ்வாறே தம்மையொருவர் விழையாதிருக்கத் தாமவரைவிழைந்தார் உலகத் துளரோ வென்றுரைக்க. இதற்கு 'மன்' அசைநிலை. (௮)

௧௧௭௯. வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்.

[நீயுமாற்றி நின் கண்களுந் துயில்வனவாதல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) வாராக்கால் துஞ்சா - காதலர் வாராத ஞான்று அவர் வரவுபார்த்துத் துயிலா; வரின் துஞ்சா - வந்த ஞான்று அவர் பிரிவஞ்சித் துயிலா; ஆயிடைக் கண் ஆரஞர் உற்றன - ஆகலான் அவ் விருவழியும் என் கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய.

'ஆயிடை' யெனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒரு ஞான்று மில்லை யென்பதாம். (௯)

௧௧௮௦. மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து.

[காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர் கொடுமையை மறைக்க வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறை பெறல் - எம்மைப்போலும் அறைபறையாகிய கண்ணினையுடை

யார் தந்நெஞ்சின்க ணடக்கிய மறையை யறிதல்: ஊரார்க்கு அரி தன்று-இவ்வூரின்க ணுள்ளார்க்கு எளிது.

'மறை'யென்றது ஈண்டு மறைக்கப்படுவதனை. அகத்து நிகழ் வதனைப் புறத்துள்ளார்க் கறிவித்தலாகிய தொழிலான் ஒற்றுமை யுண்மையின், அறைபறை*யாகிய கண்ணெனன்றாள். இங்ஙனஞ் செய்யுள் விகாரமாக்காது, அறைபறைக் கண்ணாரென்று பாட மோதுவாரு முளர். யான் மறைக்கவும் இவை வெளிப்படுத்தா நின்றன வென்பதாம். (௰)

---

## அதி. ௧௧௯—பசப்புறுபருவரல்

[அது பசப்புற்ற பருவரலென விரியும்; அஃதாவது, பசப்புறுதலா னுய வருத்தம். இதனைப் "பசந்தெறிந்த வயர்"† என்பது போலக்கொள்க. பசப்பாவது பிரிவாற்றாமையான்வருவதோர் நிறவேறுபாடு. இது தலைமகனைக் காணப்பெறாதவழி நிகழ்வ தாகலின், கண்விதுப்பழிதலின் பின்வைக்கப்பட்டது.]

௧௧அ௧. **நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்**
**பண்பியார்க் குரைக்கோ பிற.**

[முன் பிரிவுடம்பட்ட தலைமகள் அஃதாற்றாது பசந்தவழித் தன்னுள்ளே சொல்லியது.]

**(இ-ள்.)** நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் - என்னை நயந்தவர்க்கு அதுபொழுது பிரிவையுடம்பட்ட நான்; பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ-அதனை யாற்றாது இதுபொழுதுபசந்த வென்னியல்பினை யார்க்குச் சொல்வேன்?

'பிற'வென்பது அசைநிலை. உடம்படாவழி ஒழிதல்குறித்துப் பிரிவுணர்த்தின ராகலின் அவரன்புடைய ரென்னுங் கருத்தான் 'நயந்தவ'ரென்றும், இதுவே உடம்பாடாகமேலும் பிரிவு நிகழுமாக லின் இனி அவரைக் கூடுதலரிதென்னுங் கருத்தான் 'நல்காமை' யென்றும், முன்னருடம்படுதலும் பின்னராற்றாதுபசத்தலும் பிறர் செய்தன அல்லவென்பாள் 'பசந்தவென் பண்' பென்றும்' யான் செய்துகொண்ட துன்பத்தினை இனி ஒருவர்க்குச் சொல்லலும் பழியாமென்னுங் கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றுங் கூறினாள்

---

* ௧௰எகூ - ஆங் குறளுரை. † கலித்தொகை-௫௰.

ககஅஉ. அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு.

[ஆற்ருளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.]

(இ-ள்.) (யானாற்றியுளேனாகவும்) பசப்பு-இப்பசப்புத்தான்; தந்தார் அவர் என்னும் தகையால் - என்னை உண்டாக்கினார் அவரென்னும் பெருமிதத்தான்; என் மேனிமேல் இவர்தந்து ஊரும்-என் மேனியை மேல்கொண்டு செலுத்தாநின்றது.

"குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தல்மா இவர்ந்து செல்ல"* என்புழியும் 'இவர்தல்' இப்பொருட்டாதலறிக. இஃது உரிமைபற்றி ஊர்கின்றது. இதற்கு நீ கவலல்வேண்டா என்பதாம். (உ)

ககஅங. சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையும் தந்து.

[அழகும் நாணும் அழியாமல் நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ-ள்.) கைம்மாறு நோயும் பசலையும் தந்து - பிரிகின்றஞான்றே அவ்விரண்டற்குந் தலைமாருக இக் காம நோயினையும் பசலையையும் எனக்குத் தந்து; சாயலும் நாணும் அவர் கொண்டார்-என் மேனி யழகினையும் நாணினையும் அவர் கொண்டுபோயினார்.

எதிர்நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலைமாருயிற்று. இனி அவர் தந்தாலல்லது அவையுளவாகலும் இவை இலவாகலுங் கூடா வென்பதாம். (ங)

ககஅச. உள்ளுவன் மன்யான் உரைப்ப தவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு.

[பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்றிறங்களையும் அறிதியாகலின் நீட்டியாது வருவரென்றவழிச் சொல்லியது.]

(இ-ள்.) யான் உள்ளுவன் - அவர் சொற்களை யான் மனத்தால் நினையாநிற்பேன்; உரைப்பது அவர் திறம்-வாக்காலுரைப்பதும் அவர் நற்றிறங்களையே; பசப்புக் கள்ளம் - அங்ஙனஞ் செய்யாநிற்கவும், பசப்பு வந்துநின்றது, இது வஞ்சனையாயிருந்தது.

* சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம் - க.

'பிற'வும் 'ஓ'வும் அசைநிலை. மெய் மற்றை மன வாக்குக் களின் வழித்தாகலின் அதன்கண்ணும் வரற்பாற் றன்றாயிருக்க வந்தமையின், இதன் செயல் கள்ளமா யிருந்ததெனத் தானாற்று கின்றமை கூறியவாறாயிற்று. (௪)

௧௧௮௫. உவக்காணெம் காதலர் செல்வார் இவக்காணென்
மேனி பசப்பூர் வது.

[காதலர் பிரிந்தணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை யென்ற தோழிக்கு முன்னிகழ்ந்தது கூறியது.]

(இ - ள்.) எங் காதலர் உவக்காண் செல்வார் - பண்டும் நங் காதலர் உங்கே செல்வாராக; என் மேனி பசப்பூர்வது இவக்காண் - என் மேனி பசப்பூர்வ திங்கேயன்றோ? அப்பெற்றியது இன்று பிறிதொன்றாமோ?

'உவக்காண்' 'இவக்கா' ணென்பன ஒட்டிநின்ற இடைச் சொற்கள். தேயவண்மையாற் காலவண்மை கருதப்பட்டது. அவர் செலவும் பசப்பினது வரவும் பக லிரவுகளின் செலவும் வரவும் போல்வ தறிந்தவைத்து அறியாதாய் போல நீ சொல்லுகின்ற தென்னை யென்பதாம். (௫)

௧௧௮௬. விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

[இதுவு மது.]

(இ - ள்.) விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல்-விளக் கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இருளேபோல; கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு - கொண்கன் முயக்கினது மெலிவு பார்த்து நெருங்கிவரும் இப்பசப்பு.

'பார்க்கு' மென்பன இலக்கணைச்சொல். முன் பிரியாதிருக்க வுந் தனக்கவகாசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவுபெற்றால் என் செய்பாதென்பதாம். (௬)

௧௧௮௭. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு.

[இதுவு மது.]

(இ - ள்.) புல்லிக் கிடந்தேன் புடை பெயர்ந்தேன் - முன் னொரு ஞான்று காதலரைப் புல்லிக்கிடந்த யான் அறியாது புடை பெயர்ந்தேன், அவ்வளவில் பசப்பு அள்ளிக்கொள்வற்று - அப்

புடைபெயர்ந்த அளவிலே பசப்பு அள்ளிக்கொள்வதுபோல வந்து செறிந்தது.

கொள்வதென்பது குறைந்துநின்றது. 'அள்ளிக்கொள்வது' அள்ளிக்கொள்ளப்படும் பொருள். அப்புடைபெயர்ச்சி மாத்திரத்துக்கு அவ்வாருயது இப்பிரிவின்கணுமாறு சொல்லவேண்டுமோ என்பதாம். (எ)

ககஅஅ. பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவரென்பார் இல்.

[நீ இங்ஙனம் பசக்கற்பாலையல்லை யென்ற தோழியோடு புலந்து சொல்லியது.]

(இ- ள்.) இவள் பசந்தாள் என்பது அல்லால்-இவள் ஆற்றியிராது பசந்தா ளென்று என்னைப் பழிகூறுவ தல்லது; இவளை அவர் துறந்தார் என்பார் இல்-இவளை அவர் துறந்து போயினரென்று அவரைக் கூறுவா ரொருவரு மில்லை.

'என்பா' ரென வேறுபடுத்துக் கூறினள், தன்னையே நெருங்குதல்பற்றிப் புலக்கின்றமையின். (அ)

ககஅகூ. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின்.

[இதுவு மது]

(இ - ள்.) நயப்பித்தார் நன்னிலையராவர் எனின்-இப்பிரிவை யானே உடம்படும் வகை சொல்லியவர் இன்று நின் கருத்தான் நல்ல நிலையின ராவராயின்; என் மேனி பட்டாங்கு பசக்க - என் மேனி பட்டதுபடப் பசப்பதாக.

நன்னிலையராதல்: நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல் பட்டாங்காக வென ஆக்கம் விரித்துரைக்க. முன் இப்பிரிவின் கொடுமை யறியாத என்னை இதற்குடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவே வேண்டுவது, என்மேனியும் பசப்பும் யாது செய்யினென் என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக் கண் வந்தது. (கூ)

ககசூ0. பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்ருர் எனின்.

[தலைமகளாற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்த வழி அவள் இயற்பட மொழிந்தது.]

(இ - ள்.) நயப்பித்தார் நல்காமை தூற்ருரெனின் -அன்று தாம் குறைநயப்பித்துக் கூடினவர்க்கு இன்று நல்காமையை

நட்டோர் தூற்றாராயின்; பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே- பசப்புற்றாளென வேற்றுமையானன்றிப் பசப்புத்தானாயினாளென ஒற்றுமையால் தாஞ் சொல்ல அப்பெயரைப் பெறுதல் எனக்கு நன்று.

நட்டாரென்பது அவாய்நிலையான் வந்தது. இயற்பழித்தல் பொறாது புலக்கின்றாளாகலின், இகழ்ச்சிக் குறிப்பாற் கூறினாள். அவரை அருளிலரென்றாது இன்னும் பசந்தாள் இவளென்கையே யான் ஆற்றும் நெறியாவ தென்பதாம். (கo)

## அதி. கஉo—தனிப்படர்மிகுதி

[அது தனியாகிய படர்மிகுதியென விரியும். அஃதாவது, படர் மிகுதி தலைவன்கண் இன்றித் தன்கண்ணதேயாதல் கூறுதல். அறமும் பொருளும் நோக்கிப் பிரிதலின் அவன் கண் இல்லை யாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட் குரியதாகலின், பசப்புறுபருவரலின் பின் வைக்கப்பட்டது]

ககசுக. **தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே**
**காமத்துக் காழில் கனி.**

[காதலரும் நின்னினும் ஆற்றாராய்க் கடிதின் வருவர்; நீ அவரோடு பேரின்பம் நுகர்தியென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர் - தம்மாற் காதலிக்கப்படுங் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர்; பெற்றாரே காமத்துக் காழ்இல் கனி-பெற்றாரன்றே காம நுகர்ச்சி யென்னும் பரலில்லாத கனியை.

காமம் ஆகுபெயர். 'அத்து' அல்வழிக்கண் வந்தது. முன்னை நல்வினை இல்வழிப் பெறப்படாமையிற் 'பெற்றா' ரென்றும், அவரால் தடையின்றி நுகரப்படுதலிற் 'காழில் கனி' யென்றுங் கூறினாள். நம் காதலர் பிரிதலேயன்றிப் பின் வாராமையு முடைமையின், அக் கனி யாம் பெற்றிலே மென்பதாயிற்று. (க)

ககசுஉ. **வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு**
**வீழ்வார் அளிக்கும் அளி.**

[இதுவு மது.]

(இ - ள்.) வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி - அறமும் பொருளும் நோக்கிப்பிரிந்தால் தம்மை இன்றியமையா மகளிர்க்கு அவரை யின்றியமையாக் கணவர் அளவறிந்து வந்து செய்யுந்

தலையளி; வாழ்வார்க்கு வானம் பயந்தற்று - தன்னையே நோக்கி உயிர் வாழ்வார்க்கு வானம் அளவறிந்து பெய்தாற்போலும்.

நம் காதலர் நம்மை விழையாமையின் அத்தலையளி இல்லையாகலான், மழை வறந்துழி அதனான் வாழ்வார்போல இறந்துபடுதலே நமக்குள்ள தென்பதாம். (உ)

கககங. விழுநர் விழப் படுவார்க் கமையுமே
வாழுநம் என்னும் செருக்கு.

[இதுவு மது.]

(இ - ள்.) வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே-தாம் விழையும் கணவரான் விழையப்படும் மகளிர்க்கு ஏற்புடைத்து; வாழுநம் என்னும் செருக்கு - காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின் வருவர், வந்தால் நாமின்புற்று வாழ்துமென் றிருக்குந் தருக்கு.

நாம் அவரான் வீழப்படாமையின், நமக் கமைவது இறந்து பாடென்பதாம். (ங)

கககச. விழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
விழப் படாஅர் எனின்.

[காதலரை இயற்பழித்தலை யஞ்சி அவரருளின்மை மறைத்த நீ கடவுட்கற்பினையாகலிற் கற்புடைமகளிரால் நன்கு மதிக்கப்படுதி யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) வீழப்படுவார்-கற்புடை மகளிரால் நன்குமதிக்கப் படுவாரும்; தாம் வீழ்வார் வீழப்படாரெனின் கெழீஇயிலர் - தாம் விரும்புங் கணவரான் விரும்பப்படாராயின் தீவினை யாட்டியர்.

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. கெழீஇயின்மை நல்வினையின்மை; அஃது அருத்தாபத்தியால் தீவினையுடைமையாயிற்று. தீவினையுடையேற்கு அந்நன்கு மதிப்பாற் பயனில்லை யென்பதாம்.

கககரு. நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை.

[அவர்மேற் காதலுடைமையின் அவர் கருத்தறிந்தாற்றினை யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) நாம் காதல்கொண்டார் நமக்கு எவன் செய்ப-நம் மாற் காதல் செய்யப்பட்டவர் நமக்கென்ன இன்பத்தைச் செய்வர்;

தாம் காதல் கொள்ளாக்கடை-அவ்வாறே தாமும் நங்கட் காதல் செய்யாவழி.

எச்சவும்மை விகாரத்தால்தொக்கது. அக்காதலுடைமையால் நாம் பெற்றது துன்பமேயென்பதாம். (ரு)

கககூசு. ஒருதலையான் இன்னாது காமங்காப் போல
இருதலை யானும் இனிது.

[இதுவு மது]

(இ - ள்.) காமம் ஒருதலையான் இன்னாது - மகளிர் ஆடவரென்னும் இருதலையினும் வேட்கை ஒருதலைக் கண்ணேயாயின் அஃதின்னாது; காப்போல இருதலையானும் இனிது - காவினது பாரம்போல இருதலைக்கண்ணும் ஒப்பின், அஃதினிது.

மூன்றனுருபுகள் ஏழன் பொருண்மைக்கண்வந்தன. 'கா' ஆகுபெயர். என்மாட்டுண்டாய வேட்கை அவர்மாட்டும் உண்டாயின், யானிவ்வாறு துன்ப முழத்தல் கூடுமோ என்பதாம். (சு)

கககூஎ. பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்.

[இதுவு மது]

(இ - ள்.) ஒருவர்கண் நின்று ஒழுகுவான் காமன் - காம நுகர்தற்குரிய இருவரிடத்தும்ஒப்பநிற்றலொழிந்து ஒருவரிடத்தே நின்று பொருகின்ற காமக்கடவுள்; பருவரலும் பைதலும் காணான் கொல்-அவ்விடத்துப் பசப்பானாய பருவரலும் படர்மிகுதியும் அறியான் கொலோ?

விழைவும் வெறுப்புமின்றி எல்லார்கண்ணும் நிகழ்ந்தன அறிதற்குரிய கடவுளும்* என்கண் வேறுபட்டான், இனி யானுய்யுமாறென்னை யென்பதாம். (எ)

கககூஅ. வீழ்வாரின் இன்சொல் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

[தலைமகன் தூதுவரக் காணாது சொல்லியது.]

(இ - ள்.) வீழ்வாரின் இன்சொல் பெறாது வாழ்வாரின்- தம்மால் விரும்பப்படுங் காதலர் திறத்துநின்றும் ஓர் இன்சொல்லள

* குறள் - ச.

வும் பெறாதே பிரிவாற்றி உயிர்வாழ்கின்ற மகளிர்போல; வன்கணார் உலகத்து இல் - வன்கண்மையுடையார் இவ்வுலகத்தில்லை.

காதலர் திறத்துச் சொல் யாதானும் எனக்கினி தென்னுங் கருத்தால், 'இன்சொ' லென்றாள். இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. யான் வன்கண்ணேனாகலின், அதுவும் பெறாது உயிர் வாழாநின்றேனென்பதாம். (அ)

கககூகூ. நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்

டிசையும் இனிய செவிக்கு.

[இதுவு மது]

(இ - ள்.) நசைஇயார் நல்கார் எனினும் - என்னால் நச்சப்பட்ட காதலர் என்மாட்டன்பிலரே யாயினும்; அவர்மாட்டு இசையும் செவிக்கு இனிய-அவர் திறத் தியாதானு மொரு சொல்லும் என் செவிக்கினியவாம்.

இழிவுசிறப்பும்மை, அவர் வாரலரென்னுஞ் சொல்லாயினும் அமையு மென்பதுபடநின்றது. அதுவும்பெற்றிலே னென்பதாம்.

க௨00. உறாஅர்க் குறுநோய் உரைப்பாய் கடலைச்

செறாஅஅய் வாழிய நெஞ்சு.

[தலைமகன் தூது வரப்பெறாது தான் தூதுவிடக் கருதியாள் நெஞ்சொடு சொல்லியது.]

(இ - ள்.) உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் நெஞ்சு - நின்னை யுறாதார்க்கு நின்னுறு நோயை உரைக்கலுற்ற நெஞ்சே!, கடலைச் செறாஅஅய்-நீ ஆற்றாயாயினும் அரிதாய அதனை ஒழிந்து நினக்குத் துயரஞ் செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக. அஃதெளிது.

உரைக்கலுற்றது அளவிறந்த நோயாகலானும் கேட்பார் உறவிலராகலானும் அதுமுடிவதொன்றன்று, முடிந்தாலும் பயனில்லை யென்பது கருதாது, முயலாநின்றா யென்னும் குறிப்பான் 'வாழிய'வென்றாள். (க0)

---

## அகி. க௨க— நினைந்தவர் புலம்பல்

[அஃதாவது, முன்கூடிய வொன்றை இன்பத்தினை நினைந்து தலைமகள் தனிமையெய்தலும், பாசறைக்கண் தலைமகன் தனிமையெய்தலுமாம். இவ்வாறு இருவர்க்கும் பொதுவாதல் பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. இது படர்மிகுதி தன்கண்ண

தாக நினைந்த தலைமகட்கும் உரித்தாகலின், அவ்வியைபு பற்றித் தனிப்படர்மிகுதியின் பின் வைக்கப்பட்டது.]

௧௨௦௧. உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது.

[தூதாய்ச் சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது]

(இ - ள்.) உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால் - முன் கூடிய ஞான்றை இன்பத்தினைப் பிரிந்துழி நினைந்தாலும், அது பொழுது பெற்றாற்போல நீங்காத மிக்க மகிழ்ச்சியைத் தருதலால் கள்ளினும் காமம் இனிது - உண்டுழி யல்லது மகிழ்ச்சி செய்யாத கள்ளினுங் காமம் இன்பம் பயத்தலுடைத்து.

தன் தனிமையுந் தலைமகளை மறவாமையுங் கூறியவாறு. (௧)

௧௨௦௨. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

[இதுவு மது.]

(இ - ள்.) தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்று இல் - தம் மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கணினைத்தால் அந்நினைவார்க்கு அப்பிரிவான் வருவதொரு துன்பமில்லையாம்; காமம் எனைத்து இனிது ஒன்றேகாண் - அதனாற் காமம் எத்துணையேனும் இனி தொன்றே காண்.

புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்ப இனிதென்பான், எனைத் தும் இனிதென்றான். சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தானுற்றியவகை கூறியவாறு. (௨)

௧௨௦௩. நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்.

[தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) தும்மல் சினைப்பது போன்று கெடும் - எனக்குத் தும்மல் எழுவது போன்று தோன்றிக் கெடாநின்றது: நினைப்ப வர் போன்று நினையார்கொல் - அதனாற் காதலர் என்னை நினைப் பார் போன்று நினையாராகல் வேண்டும்.

சினைத்தல் - அரும்புதல். சேய்மைக்கண்ணராய கேளிர் நினைந் துழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றுமென்னும்

உலகியல்பற்றித் தலைமகன் எடுத்துக்கொண்ட வினை முடிவது போன்று முடியாமை உணர்ந்தாள் சொல்லியதாயிற்று. (௩)

கஉ0௪. யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ உளரே அவர்.

[இதுவு மது.]

(இ - ள்.) எம் நெஞ்சத்து அவர் ஓஒ உளரே - எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுதும் உளரேயாயிராநின்றார்; அவர் நெஞ்சத்து யாமும் உளேங்கொல் - அவ்வகையே அவருடைய நெஞ்சத்தும் யாமும் உளமாதுமோ, ஆகேமோ?

ஓகார இடைச்சொல் ஈண்டிடைவிடாமைஉணர்த்தி நின்றது. உளமாயும் வினைமுடியாமையின் வாராராயினாரோ, அது முடிந்தும் இலமாகலின் வாராராயினாரோ என்பது கருத்து. (௪)

கஉ0௫. தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எம்நெஞ்சத் தோவா வரல்.

[இதுவு மது.]

(இ - ள்.) தம் நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் - தம்முடைய நெஞ்சின்கண்ணே யாம் செல்லாமல் எம்மைக் காவல் கொண்ட காதலர்; எம்நெஞ்சத்து ஓவா வரல் நாணார்கொல் - தாம் எம்முடைய நெஞ்சின்கண் ஒழியாது வருதலை நாணார் கொல்லோ?

ஒருவரைத் தங்கண் வருவதற்கு ஒருகாலும் உடம்படாது தாமவர்கண் பலகாலும் சேறல் நாணுடையார் செயலன்மையின் 'நாணார்கொ' லென்றாள். (௫)

கஉ0௬. மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடியான்
உற்றநாள் உள்ள உளேன்.

[அவரொடு புணர்ந்த ஞான்றை இன்பத்தை நினைந்து இறந்துபாடெய்தாநின்றாய் அதுமறத்தல்வேண்டுமென்றாட்குச்சொல்லியது.]

(இ - ள்.) யான் அவரொடு உற்ற நாள் உள்ள உளேன் - யான் அவரொடு புணர்ந்தஞான்றை இன்பத்தை நினைதலான் இத் துன்ப வெள்ளத்தும் உயிர் வாழ்கின்றேன்; மற்று யான் என்னுளேன் - அது இன்றாயின், வேறெத்தால் உயிர்வாழ்வேன்?

'நாள்' ஆகுபெயர். உயிர்வாழ்வதற்கு வேறுமுள, அவை பெற்றிலேன் என்பதுபட நின்றமையின். 'மன்' ஒழியிசைக்கண்

வந்தது. அவை அவன் தூது வருதல், தன்தூது சேறல் முதலாயின. அவை யாவும் இன்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடில்லையென்பது கருத்து. (சு)

**கஉ0எ. மறப்பின் எவனுவன் மற்கொல் மறப்பறியேன்**
**உள்ளினும் உள்ளம் சுடும்.**

[இதுவு மது.]

**(இ-ள்.)** மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும்-அவ்வின்பத்தை மறத்தலறியேனாய் இன்றுள்ளா நிற்கவும், பிரிவு என்னுள்ளத்தைச் சுடாநின்றது; மறப்பின் எவனுவன்-அங்ஙனம் பிரிவாற்றாத யான் மறந்தால் இறந்துபடாது உளேனாவது எத்தால்?

மறக்கப்படுவது அதிகாரத்தான் வந்தது. 'மன்' ஈண்டும் அதுபடநின்று ஒழியிசையாயிற்று. 'கொல்' அசைநிலை. (எ)

**கஉ0அ. எனைத்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ**
**காதலர் செய்யும் சிறப்பு.**

[இத்துன்ப மறிந்துவந்து காதலர் நினக்கின்பஞ்
செய்வரென்றாட்குச் சொல்லியது.]

**(இ-ள்.)** எனைத்து நினைப்பினும் காயார்-தம்மை யானெத்துணையும்மிக நினைந்தாலும் அதற்கு வெகுளார்; காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ-காதலர் எனக்குச் செய்யும் இன்பமாவது அவ்வளவன்றோ?

வெகுளாமை அதற்குடன்பட்டு நெஞ்சின்க ணிற்றல் தனக்கு அவ்வின்பத்திற் சிறந்த தின்மையின், அதனைச் 'சிறப்' பென்றாள். காதலர் நம்மாட்டருளென்றும், செய்யுங் குணமென்றும் பாடமோதுவாரு முளர். தோழி கூறியவதனைக் குறிப்பான் இகழ்ந்து கூறியவாறு. (அ)

**கஉ0கூ. விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்**
**அளியின்மை ஆற்ற நினைந்து.**

[தலைமகன் தூதுவரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்துந்
தோழிக்குச் சொல்லியது.]

**(இ-ள்.)** வேறு அல்லம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து-முன்பெல்லாம் நாமிருவரும் வேறல்லமென்று சொல்லு

வார தளியின்மையை மிகவும் நினைந்து; என் இன்னுயிர் விளியும்-என தினியவுயிர் கழியா நின்றது.

'அளியின்மை' பின் வருவராகலுமாய்ப் பிரிதலும், பிரிந்து வாராணமையும், ஆண்டு நின்றுழித் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவாற்றல் வேண்டுமென வற்புறுத்தாட்கு, என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று அவரன்பின்மைக் கென எதிரழிந்து கூறிய வாறு. (கூ)

கஉகO. விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி.

[வன்புறை யெதிரழிந்தாள் காமமிக்க கழிபடராற் சொல்லியது.]

(இ - ள்.) மதி-மதியே!; விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப் படாஅதி-என்னெஞ்சின் இடைவிடாதிருந்தே விட்டுப் போயினாரை :யானென் கண்ணளவா னாயினும் எதிர்ப்படும் வகை நீ படாதொழிவாயாக.

கண்ணளவான் எதிர்ப்படுதலாவது மதி இருவராலும் நோக்கப்படுதலின் இருவர் கண்ணும் அதன்கண்ணே சேர்தல் முதலொடு சினைக்கொற்றுமை உண்மையிற் சென்றாரைக் காண வென்றும், குறையுறுகின்றா ளாகலின் 'வாழி'யென்றுங்கூறினாள். இனிப் படாதென்பது பாடமாயின் கனவிடைக் கண்ணினாற் காணுமாறு மதிபடுகின்றதில்லையென அதனால் துயில்பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு 'வாழி' யென்பது அசைநிலை. (கO)

---

## அதி. கஉஉ—கனவுநிலையுரைத்தல்

[அஃதாவது, தலைமகள் தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல், அக்கனவு நனவின் கண் நினைவு மிகுதியாற் கண்டதாகலின் இது நினைந்தவர் புலம்பலின் பின் வைக்கப்பட்டது.]

கஉகக. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

[தலைமகன் தூதுவரக் கண்டாள் சொல்லியது.]

(இ-ள்.) காதலர் தூதொடு வந்த கனவினுக்கு-யான் வருந்துகின்றதறிந்து அது தீரக் காதலர் விடுத்த தூதினை

கொண்டு என் மாட்டு வந்த கனவினுக்கு; விருந்து யாது செய் வேன் - யான் விருந்தாக யாதனைச் செய்வேன்?

'விருந்'தென்றது விருந்திற்குச் செய்யும் உபகாரத்தினை. அது கனவிற்கொன்று காணாமையின், 'யாது செய்வே'னென்றாள். (க)

௧௨௧௨. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சின் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

[தூதுவிடக் கருதியாள் சொல்லியது.]

(இ - ள்.) கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின் - துஞ் சாது வருந்துகின்ற என் கயல்போலும் உண்கண்கள் யானிரந் தால் துஞ்சுமாயின்; கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன் - கனவிடைக் காதலரைக் காண்பேன், கண்டால் அவர்க்கியானாற்றி யுளேனாய தன்மையை யானே விரியச் சொல்வேன்.

'கயலுண்க'ணென்றாள், கழிந்த நலத்திற்கிரங்கி. 'உயல்'காம நோய்க்குத் தப்புதல். தூதர்க்குச் சொல்லாது யாமடக்குவனவும் சொல்லுவனவற்றுள்ளுஞ் சுருக்குவனவற்றின் பரப்புந்தோன்றச் சொல்வேனென்னுங் கருத்தாற் 'சாற்றுவே'னென்றாள். இனி அவையுந் துஞ்சா, சாற்றலுங்கூடா தென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. முன்னுங் கண்டாள் கூற்றாகலின், கனவுநிலை உரைத்தலாயிற்று. (உ)

௧௨௧௩. நனவினான் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்.

[ஆற்றாளெனக் கவன்றாட்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.]

(இ - ள்.) நனவினான் நல்காதவரை - நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை; கனவினாற் காண்டலின் என் உயிர் உண்டு-யான் கனவின்கண் கண்ட காட்சியானே என்னுயிர் உண்டாகாநின்றது.

மூன்றன் உருபுகள் ஏழன் பொருண்மைக்கண் வந்தன. அக் காட்சியானே யானாற்றியுளேன் ஆகின்றேன். நீ கவலல் வேண்டா என்பதாம். (௩)

௧௨௧௪. கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு.

[இதுவு மது]

(இ - ள்.) நனவினான் நல்காரை நாடித்தரற்கு- நனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை அவர் சென்றுழி நாடிக்கொண்டு

வந்து கனவு தருதலான்; கனவினான் காமம் உண்டாகும் - அக் கனவின்கண்ணே எனக் கின்ப முண்டாகாநின்றது.

'காமம்' ஆகு பெயர். நான்காவது மூன்றன்பொருண்மைக் கண் வந்தது. இயல்பான் நல்காதவரை அவர் சென்றதேயமறிந்து சென்று கொண்டுவந்து தந்து நல்குவித்த கனவால் யானுற்றுவ லென்பதாம். (ச)

கஉகரு. நனவினாற் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது.

[இதுவு மது.]

(இ - ள்.) நனவிற் கண்டதூஉம் (இனிது) ஆங்கே - முன் நனவின்கண் அவரைக் கண்டு நுகர்ந்த இன்பந்தானும் இனிதா யிற்று அப்பொழுதே; கனவுந்தான் கண்டபொழுதே இனிது - இன்று கனவின்கண் கண்டு நுகர்ந்த இன்பமும் அக்கண்ட பொழுதே இனிதாயிற்று, அதனான் எனக் கிரண்டும் ஒத்தன.

'இனி'தென்பது முன்னுங் கூட்டப்பட்டது. 'கனவு' ஆகு பெயர். முன்னும் யான் பெற்றதிவ்வளவே, இன்னும் அது கொண்டாற்றுவ லென்பதாம். (ரு)

கஉகசு. நனவென ஒன்றில்லை ஆயின் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.

[இதுவு மது.]

(இ - ள்.) நனவென ஒன்று இல்லையாயின் - நனவென்று சொல்லப்படுகின்ற ஒரு பாவி யில்லையாயின்; கனவினால் காதலர் நீங்கலர் - கனவின்கண் வந்து கூடிய காதலர் என்னைப் பிரியார்.

'ஒன்'றென்பது அதன் கொடுமை விளக்கிநின்றது. அஃது இடையே புகுந்து கனவைப் போக்கி அவரைப் பிரிவித்ததென் பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. கனவிற் பெற்றாற்றுகின்றமை கூறியவாறு. (சு)

கஉகஎ. நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது.

[விழித்துழிக் காணாளாயினாள் கனவிற்கூட்ட நினைந்து ஆற்றாளாய்ச் சொல்லியது.]

(இ - ள்.) நனவினான் நல்காக் கொடியார் - ஒருஞான்றும் நனவின்கண் வந்து தலையளி செய்யாத கொடியவர்; கனவினான்

எம்மைப் பீழிப்பது என்-நாடோறுங் கனவின்கண் வந்து நம்மை வருத்துவது எவ்வியைபுபற்றி?

பிரிதலும் பின்னினைந்து வாராமையும் நோக்கிக் 'கொடியா' ரென்றும், கனவில் தோள்மேலராய் விழித்துழிக் கரத்தலின் அதனானுந் துன்பமாகாநின்றதென்பாள் 'பீழிப்ப'தென்றுங் கூறினாள். நனவி னில்லது கனவினு மில்லை யென்பர், அது கண்டில மென்பதாம். (எ)

௧௨௧௮. துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.

[தானாற்றுதற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்தாட்கு இயற்பட மொழிந்தது.]

(இ-ள்.) துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி - என்னெஞ்சு விடாதுறைகின்ற காதலர் யான் துஞ்சும்பொழுது வந்து என் தோள்மேலராய்; விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்த ராவர் - பின் விழிக்கும்பொழுது விரைந்து பழைய நெஞ்சின்கண்ணராவர்.

கலவி விட்டு மறையுங் கடுமைபற்றி 'விரைந்' தென்றாள். ஒருகாலும் என்னி னீங்கி அறியாதாரை நீ நோவற்பாலையல்லை யென்பதாம். (அ)

௧௨௧௯. நனவினுன் நல்காரை நோவர் கனவினுன்
காதலர்க் காணா தவர்.

[இதுவு மது.]

(இ-ள்.) கனவினான் காதலர்க் காணாதவர் - தமக்கொரு காதலரின்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர்; நனவினான் நல்காரை நோவர் - தாமறிய நனவின்கண் வந்து நல்காத நங்காதலரை அன்பிலரென நோவாநிற்பர்.

இயற்பழித்தது பொறாது புலக்கின்றாளாகலின், அயன்மை தோன்றக் கூறினாள். தமக்குங் காதலருளராய் அவரைக் கனவிற் கண்டறிவாராயின் நங் காதலர் கனவின்க ணாற்றி நல்குதலறிந்து நோவா ரென்பதாம். (கூ)

௧௨௨௦. நனவினுன் நம்நீத்தார் என்பர் கனவினுன்
காணார்கொல் இவ்வூ ரவர்.

[இதுவு மது.]

(இ-ள்.) இவ்வூரவர் நனவினான் நம்நீத்தார் என்பர் - இவ் வூரின்மகளிர் நனவின்கண் நம்மை நீத்தாரென்று நங்காதலரைக்

கொடுமைகூறுகிற்பர்; கனவினன் காணார்கொல் - அவர் கனவின் கண் நீங்காது வருதல் கண்டறியாரோ?

எவ்ரேனோடு தன்னிடை வேற்றுமையின்றாயின் யான் கண்டது தானுங் கண்டமையும், அது காணாது அவரைக் கொடுமை கூறு கின்றமையின் அயலாளே யாமென்னுங் கருத்தால், 'இவ்வூரவ' ரென்றாள். (கo)

---

## அதி. கஉரு—பொழுதுகண்டிரங்கல்

[அஃதாவது, மாலைப்பொழுது வந்துழி அதனைக் கண்டு தலைமகள் இரங்குதல், 'கனா முந்துறாத வினையில்லை'* யென்பதுபற்றிப் பகற்பொழுதாற்றியிருந்தாட்கு உரியதாகலின், இது கனவு நிலையுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.]

கஉஉக. **மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்**
**வேலைநீ வாழி பொழுது.**

[பொழுதொடு புலந்து சொல்லியது.]

(இ - ள்.) பொழுது - பொழுதே; நீ மாலையோ அல்லை - நீ முன்னாள்களின் வந்த மாலையோவெனின். அல்லை; மணந்தார் உயிர் உண்ணும் வேலை-இருந்த வாற்றான் அந்நாட் காதலரை மணந்த மகளிருயிரையுண்ணும் இறுதிக்காலமா யிருந்தாய்.

முன்னாள்: கூடியிருந்த நாள். அந்நாள் மணந்தாரெனவே, பின் பிரிந்தா ராதல்பெறுதும் 'வாழி' யென்பது குறிப்புச் சொல் "வாலிழை மகளி ருயிர்பொதி யவிழ்க்குங் காலை" †என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. 'வேலை' யென்பது ஆகு பெயர்; வேலை யென்பதற்கு வேலாயிருந்தாயென்பாருமுளர். ‡(க)

கஉஉஉ. **புன்கண்ணை வாழி மருள்மாலை எங்கேள்போல்**
**வன்கண்ண தோநின் துணை.**

[தன்னுட் கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.]

(இ - ள்.) மருள் மாலை - மயங்கிய மாலாய்; புன் கண்ணை - நீயுமெம்போல புன்கண்ணுடையையா யிருந்தாய்; நின் துணை எங் கேள்போல் வன்கண்ணதோ - நின் துணையும் எம் துணைபோல வன்கண்மை யுடையதோ? கூறுவாயாக.

மயங்குதல்: பகலும் இரவும் தம்முள்ளே விரவுதல்; கலங்கு தலுந் தோன்றநின்றது. புன்கண் ஒளியிழத்தல்; அதுபற்றித்

---

* பழமொழி-உ. † கலித்தொகை-நகக. ‡ மணக்குடவர்.

துணையு முண்டாக்கிக் கூறினள். எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. எமக்குத் துன்பஞ் செய்தாய், நீயும் இன்பமுற்றிலை யென்னுங் குறிப்பால் 'வாழி' யென்றாள். (௨)

**௧௨௨௩. பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்**
**துன்பம் வளர வரும்.**

[ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) பனி அரும்பிப் பைதல்கொள் மாலை-காதலர் கூடிய நாளெல்லாம் என்முன் நடுக்கமெய்திப் பசந்துவந்த மாலை; துனி அரும்பித் துன்பம் வளர வரும்-இந்நாள் எனக்கிறந்து பாடு வந்து தோன்றி அதற்குளதாந் துன்பம் ஒருகாலைக் கொருகால் மிக வாராநின்றது.

குளிர்ச்சிதோன்றமயங்கிவருமாலை யென்னுஞ்செம் பொருள் இக்குறிப்புணர நின்றது. துனி: உயிர்வாழ்வதற்கண் வெறுப்பு. அதனால் யானாற்றுமா றென்னையென்பது குறிப்பெச்சம். (௩)

**௧௨௨௪. காதலர் இல்வழி மாலை கொலைக்களத்**
**தேதிலர் போல வரும்.**

[இதுவு மது.]

(இ - ள்.) மாலை-காதலருள்ள பொழுதெல்லாம் என்னுயிர் தளிர்ப்ப வந்த மாலை; காதலர் இல்வழி-அவரில்லாத இப்பொழுது கொலைக்களத்து எதிலர்போல வரும்-அஃதொழிந்து நிற்றலே யன்றிக் கொல்லுங் களரியிற் கொலைஞர் வருமாறுபோல அவ்வுயிரைக் கோடற்கு வாராநின்றது.

எதிலர் ; அருள் யாது மில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்துவந்த பொழுதும் இன்று என்மேற்பகையாய்த் துன்பம் செய்துவாராநின்றது. இனி யானாற்றுமா றென்னை யென்பதாம். (௪)

**௧௨௨௫. காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்**
**மாலைக்குச் செய்த பகை.**

[இதுவு மது.]

(இ - ள்.) (காலையும், மாலையும், அவர் கூடியஞான்று போலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாராநின்றன; அவற்றுள்,) யான் காலைக்குச் செய்த நன்று என்-யான் காலைக்குச் செய்த உபகாரம் யாது? மாலைக்குச் செய்த பகை எவன் - மாலைக்குச் செய்த அபகாரம் யாது?

கூடியஞான்று பிரிவரென் றஞ்சப்பண்ணிய காலை அஃ தொழிந்து இஞ்ஞான்று கங்குல்வெள்ளத்திற்குக் கரையாய் வாரா நின்றதென்னுங் கருத்தால் 'நன்றென்கொ' லென்றும் கூடிய ஞான்று இன்பஞ் செய்துவந்த மாலை அஃதொழிந்து இஞ்ஞான்று அளவில் துன்பஞ் செய்யாநின்றதென்னுங் கருத்தாற் 'பகை யெவன்கொ' லென்றுங் கூறினாள். பகை: ஆகுபெயர். தன்னோ டெதிர்த்த காலை போலாது மாலை தன் கொடுமையால் துன்பஞ் செய்யாநின்ற தென்பதாம். (ரு)

கஉஉசு. மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்த திலேன்.

[இன்று இன்னையாகின்ற நீ அன்று அவர் பிரிவிற்குடம்பட்ட தென்னை யென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) மாலை நோய் செய்தல்-முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்து போந்த மாலை இன்று பகையாய்த் துன்பஞ் செய்தலை; மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன்-காதலர் பிரிதற்கு முன்னே அறியப்பெற்றிலேன்.

இங்ஙனம் வேறுபடுத லறிந்திலேன், அறிந்தேனாயின் அவர் பிரிவிற் குடம்படேனென்பதாம். (சு)

கஉஉஎ. காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

[மாலைப்பொழுதின்கண் இனையையாதற்குக் காரண மென்னை யென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) இந்நோய்-இக் காமநோயாகிய பூ; காலை அரும்பி-காலைப்பொழுதின்க ணரும்பி; பகல் எல்லாம் போது ஆகி-பகற் பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து; மாலை மலரும்-மாலைப் பொழுதின்கண் மலராநிற்கும்.

துயிலெழுந்த பொழுதாகலிற் கனவின்கண் கூட்ட நினைந் தாற்றுதல்பற்றிக் 'காலையரும்பி' யென்றும், பின் பொழுது செலச்செல அது மறந்து பிரிவுள்ளி ஆற்றாளாதல்பற்றிப் 'பகலெல் லாம் போதாகி' யென்றும், தத்தந் துணையையுள்ளி வந்து சேருமு விலங்குகளையும் மக்களையுங் கண்டு தான் அக்காலத்தில் நுகர்ந்த இன்ப நினைந் தாற்றாமை மிகுதிபற்றி 'மாலை மலரு' மென்றுங் கூறினாள். பூப்போல இந்நோய் காலவயத்ததாகாநின்ற தென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. ஏகதேச உருவகம். (எ)

கஉஉ௮. அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை.

[இதுவு மது.]

(இ-ள்.) ஆயன் குழல் - முன்னெல்லாம் இனியதாய்ப் போந்த ஆயன் குழல்; அழல்போலும் மாலைக்குத் தூதாகி-இது பொழுது அழல்போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய், கொல்லும் படை-அது வந்தென்னைக் கொல்வுழிக் கொல்லும் படையுமாயிற்று.

பின்னின்ற 'போலு' மென்பது உரையசை. முன்னரே வரவுணர்த்தலின் தூதாயிற்று; கோறற்கருவியாகலின் படையாயிற்று. தானே சுடவல்ல மாலை இத்துணையும் பெற்றால் என் செய்யாதென்பதாம். (௮)

கஉஉ௯. பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

[இதுவு மது.]

(இ-ள்.) (இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயுழந்தேன்) மதி மருண்டு மாலைபடர் தரும்போழ்து-இனிக் கண்டாரும் மதிமருளும் வகை மாலை வரும்பொழுது; பதி மருண்டு பைதல் உழக்கும்-இப்பதியெல்லாம் மயங்கி நோயுழக்கும்.

மதிமருள வென்பது 'மதிமருண்' டெனத் திரிந்து நின்றது. கூற்றமாகக் கருதிக் கூறினாளாகலின் 'மாலை படர்தரும் போழ்' தென்றாள். யானிறந்துபடுவ லென்பதாம். மாலை மயங்கிவரும். போழ்து என் பதி நிலைகலங்கி நோயுழக்குமென் றுரைப்பாருமுளர். (௯)

கஉ௩௦. பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயுமென் மாயா உயிர்.

[இதுவு மது.]

(இ-ள்.) மாயா என் உயிர்-காதலர் பிரிவைப் பொறுத்து இறந்துபடாதிருந்த என்னுயிர்; பொருள் மாலையாளரை உள்ளி மருள் மாலை மாயும்-இன்று பொருளியல்பே தமக்கியல்பாக உடையவரை நினைந்து, இம் மயங்கும் மாலைக்கண்ணே இறந்துபடாநின்றது.

குறித்த பருவங் கழியவும் பொருள்முடிவு நோக்கி வாராமையிற் சொல் வேறுபடாமையாகிய தம்மியல் பொழிந்தவர் அப்

பொருளியல்பே தம்மியல்பாயினர். காலமிது வாயிற்று, இனி நீ சொல்லுகின்றவாற்ருற் பயனில்லை என்பதாம். (௧0)

---

## அதி. ௧௨௪—உறுப்புநலனழிதல்

[அஃதாவது, தலைமகள் தன் கண்ணும், தோளும், நுதலும் முதலாய அவயவங்கள் தம்மழகழிதல். இஃது இரக்கமிக்குழி நிகழ்வதாகலின், பொழுதுகண்டிரங்கலின் பின் வைக்கப் பட்டது.]

௧௨௩௧. **சிறுமை நமக்கொழியச் சேட்சென்ருர் உள்ளி**
**நறுமலர் நாணின கண்.**

[ஆற்ருமை மிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

(இ - ள்.) சிறுமை நமக்கு ஒழியச் சேட்சென்ருர் உள்ளி- இவ்வாற்ருமை நங்கண்ணே நிற்பத் தாம் சேணிடைச் சென்ற காதலரை நீ நினைந்தழுதலால்; கண் நறுமலர் நாணின-நின் கண்கள் ஒளியிழந்து முன் தமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன.

'நமக்'கென்பது வேற்றுமை மயக்கம். உள்ளவென்பது 'உள்ளி' யெனத் திரிந்து நின்றது. உள்ளுதலென்பது காரணப் பெயர் காரியத்திற்காய ஆகுபெயர். இவை கண்டார் அவரைக் கொடுமை கூறுவர். நீ ஆற்றல் வேண்டுமென்பது கருத்து. (௧)

௧௨௩௨. **நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்**
**பசந்து பனிவாரும் கண்.**

(இ - ள்.) பசந்து பனிவாரும் கண்-பசப்பெய்தல் மேல் நீர் வார்கின்ற நின் கண்கள்; நயந்தவர் நல்காமை சொல்லுவபோலும்- நம்மால் நயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவ போலாநின்றன, இனி நீ யாற்றல் வேண்டும்.

சொல்லுவபோறல் அதனை அவருணர்தற் கனுமானமாதல் நயந்தவர்க்கென்று பாடமோதுவாரு முளர். (௨)

௧௨௩௩. **தணந்தமை சால அறிவிப்ப போலும்**
**மணந்தநாள் வீங்கிய தோள்.**

[இதுவு மது.]

(இ - ள்.) மணந்த நாள் வீங்கிய தோள்-காதலர் மணந்த ஞான்று இன்பமிகுதியாற் பூரித்த நின் தோள்கள்; தணந்தமை சால அறிவிப்ப போலும்-இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவது போல மெலியாநின்றன, இது தகாது.

அன்றும் அவ்வாறு பூரித்து இன்றும் இவ்வாறு மெலிந்தால் இரண்டுங் கண்டவர் கடிதினறிந்து அவரைத் தகவின்மை கூறுவ ரென்பதாம். (ங)

கஉநச. பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

[இதுவு மது.]

(இ - ள்.) துணை நீங்கித் தொல் கவின் வாடிய தோள்-அன்றுந் தம் துணைவர் நீங்குதலால் அவராற் பெற்ற செயற்கைஅழகே யன்றிப் பழைய இயற்கை யழகும் இழந்த இத்தோள்கள்; பணை நீங்கிப் பைந்தொடி சோரும்-இன்றதற்கு மேலே தம் பெருமை இழந்து வளை கழலாநின்றன, இவை இங்ஙனம் செயற்பாலவல்ல.

பெருமையிழத்தல்; மெலிதல். பைந்தொடி; பசிய பொன்னாற் செய்த தொடி. 'சோரு'மென்னும் வளைத்தொழில் தோள்மேல் நின்றது. அன்றும் பிரிந்தாரென்று அவரன்பின்மை உணர்த்தி இன்றுங் குறித்த பருவத்து வந்திலரென்று அவர் பொய்ம்மை உணர்த்தாநின்றன: இனி அவற்றைக் கூறுகின்றார்மேற் குறை யுண்டோவென்பதாம். (ச)

கஉநரு. கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

[இதுவு மது.]

(இ - ள்.) கொடியார் கொடுமை உரைக்கும்-கவக்கை நெகிழினும் ஆற்றாதாட்கு இக்காலநீட்டத்து என்னுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லாநின்றன; தொடியொடு தொல்கவின் வாடிய தோள்-வளைகளுங் கழன்று பழைய இயற்கை யழகும் இழந்த இத் தோள்கள்; இனி யதனை யாம் மறைக்குமா றென்னை?

'உரைக்கு' மென்பது அப் பொருண்மை தோன்ற நின்ற குறிப்புச்சொல். 'ஒடு' வேறு வினைக்கண் வந்தது. அவரொடு

கலந்த தோள்களே சொல்லுவனவானல் அயலார் சொல்லுதல் சொல்லவேண்டுமோ வென்பதாம். (௫)

கஉ௫௬. தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து.

[தானாற்றுதற்பொருட் டியற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது].

(இ - ள்.) தொடியொடு தோள் நெகிழ-யானாற்றவும் என் வயத்தவன்றித் தொடிகள் கழலுறுமாறு தோள்கள் மெலிய; அவரைக் கொடியர் எனக் கூறல் நொந்து நோவல்-அவற்றைக் கண்டு நீ அவரைக் கொடியரெனக் கூறுதலைப் பொறாது யானென்னுள்ளே நோவாநின்றேன்.

'ஒடு' மேல்வந்த பொருண்மைத்து. யானாற்றே னாகின்றது அவர் வாராததற்கன்று நீ கூறுகின்றதற் கென்பதாம். (௬)

கஉ௫எ. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூசல் உரைத்து.

[அவ்வியற்பழிப்புப் பொறாது தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

(இ - ள்.) நெஞ்சே-நெஞ்சே!, கொடியார்க்கு என் வாடு தோள் பூசல் உரைத்து-இவள் கொடியா ரென்கின்றவர்க்கு நீ சென்று என் மெலிகின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி; பாடு பெறுதியோ-ஒரு மேம்பா டெய்த வல்லையோ? வல்லையாயின் அதனை ஒப்பதில்லை.

'கொடியார்க்' கென்பது கொடியரல்லரென்பது தோன்ற நின்ற குறிப்புச்சொல். 'வாடுதோ' ளென்பதும் அவை தாமே வாடாநின்றனவென்பது தோன்ற நின்றது. 'பூசல்' ஆகுபெயர்; அஃது அவள் தோள்நோக்கி இயற்பழித்தல் மேலும் அதனால் தனக்காற்றாமை மிகல் மேலும் நின்றது. நின்னுரை கேட்டலும் அவர் வருவர், வந்தால் இவையெல்லாம் நீங்கும், நீங்க அஃதெனக்குக் காலத்தினாற் செய்த நன்றியாமாகலின், அதன் பயனெல்லா மெய்துதியென்னுங் கருத்தாற் 'பாடு பெறுதியோ' என்றாள். (எ)

கஉ௫அ. முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

[வினைமுடித்து மீட்டலுற்ற தலைமகன் முன்நிகழ்ந்தது நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) முயங்கிய கைகளை ஊக்க-தன்னை இறுக முயங்கிய கைகளை இவட்கு நோமென்று கருதி ஒருஞான்றியானெகிழ்த்தேனாக; பைங்தொடிப் பேதை நுதல் பசந்தது-அத்துணையும் பொறாது பைங்தொடிகளை அணிந்த பேதையது நுதல் பசந்தது; அப் பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற் கியாது செய்யுமோ!

இனிக் கடிதிற் செல்லவேண்டுமென்பது கருத்து. (அ)

**௧௨௩௯. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற**
**பேதை பெருமழைக் கண்.**

[இதுவு மது.]

(இ - ள்) முயக்கிடைத் தண் வளி போழ-அங்ஙனம் கைகளை ஊக்குதலான் அம் முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக; பேதை பெருமழைக்கண் பசப்புற்ற-அத்துணை இடையீடும் பொறாது, பேதையுடைய பெரிய மழைக்கண்கள் பசப்புற்றன. அத் தன்மையவான கண்கள் மலைகளும், காடும் நாடுமாய இவ் விடையீடுகளை யெல்லாம் யாங்ஙனம் பொறுத்தன!

தண்மை ஈண்டு மென்மைமேல் நின்றது. 'போழ'வென்றது உடம்பிரண்டும் ஒன்றுனது தோன்ற நின்றது. 'மழை' குளிர்ச்சி. (௯)

**௧௨௪0. கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே**
**ஒண்ணுதல் செய்தது கண்டு.**

(இ - ள்.) கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்று-தண் வளி போழவந்த கண்ணின் பசப்புத் துன்பமுற்றது; ஒள் நுதல் செய்தது கண்டு-தனக்கயலாய ஒண்ணுதல் விளைத்த பசப்பைக் கண்டு.

அது கைகளை ஊக்க அவ்வளவிற் பசந்தது, யான் கைகளையும் ஊக்கி மெய்களும் நீங்கிச் சிறுகாற்று ஊடறுக்குந் துணையும் பசந்திலனெனத் தன் வன்மையும் அதன் மென்மையுங் கருதி வெள்கிற்றென்பதாம். ஆகவே, அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழியும், யாங் கடிதிற் சேறுமென்பது கருத்தாயிற்று. (௧0)

---

## அதி. கஉரு—நெஞ்சொடுகிளத்தல்

[அஃதாவது, ஆற்றாமை மீதூரத் தனக்கொரு பற்றுக்கோடு காணாத தலைமகள் தன்னெஞ்சொடு செய்திற னறியாது சொல்லுதல். இஃது, உறுப்புக்கள் தம் நலனழிந்தவழி நிகழ்வதாகலின், உறுப்பு நலனழிதலின் பின் வைக்கப் பட்டது.]

கஉசக. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்
எவ்வநோய் தீர்க்கு மருந்து. [தொன்றும்

[தன்னாற்றாமை தீருந்திறன் நாடியது.]

(இ - ள்.) நெஞ்சே-நெஞ்சே!, எவ்வநோய் தீர்க்கும்மருந்து ஒன்று-இவ் வெவ்வநோயினைத் தீர்க்கும் மருந்தாவ தொன்றனை; எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாய்-(யானறியுமாற்றலிலன்) எத்தன்மைய தியாதொன்றாயினும் நீ அறிந்தெனக்குச் சொல்.

எவ்வம், ஒன்றானுந் தீராமை. உயிரினுஞ் சிறந்த நாணினை விட்டுச்செய்வ தியாதொன்றாயினு மென்பாள், 'எனைத்தொன்று' மென்றாள். (க)

கஉசஉ. காத லவரிலர் ஆகநீ நோவது
பேதைமை வாழியென் நெஞ்சு.

[தலைமகனைக் காண்டற்கண் வேட்கை மிகுதியாற் சொல்லியது.]

(இ - ள்.) என் நெஞ்சு வாழி-என்னெஞ்சே, வாழ்வாயாக; அவர் காதல் இலராக நீ நோவது-அவர் நங்கட் காதலிலராகவும் நீ அவர் வரவு நோக்கி வருந்துதற்கேது; பேதைமை-நின் பேதைமையே, பிறிதில்லை.

நம்மை நினையாமையின் நங்கட் காத லிலரென்ப தறியலாம், அஃதறியாமை மேலும் அவர்பால் செல்லக் கருதாது அவர் வரவு பார்த்து வருந்தாநின்றாய், இது நீ செய்துகொள்கின்ற தென்னுங் கருத்தாற் 'பேதைமை' யென்றாள். 'வாழி' இகழ்ச்சிக் குறிப்பு. யாமவர்பாற் சேறலே அறிவாவ தென்பதாம். (உ)

கஉசந. இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல்.

[இதுவு மது.]

(இ - ள்.) நெஞ்சே இருந்து உள்ளிப் பரிதல் என்-நெஞ்சே, அவர்பாற் செல்வதுஞ் செய்யாது ஈண்டிருந்துபடுவதுஞ் செய்யா

திருந்து அவர் வரவு நினைந்து நீ வருந்துகின்றதென்னை?, பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல்-இப் பையுளை நோய் செய்தார்மாட்டு நமக்கிரங்கிவரக் கருதுதல் உண்டாகாது.

நம்மாட் டருளுடைய ரன்மையின் தாமாக வாரார், நாம் சேறலே இனித் தகுவ தென்பதாம். (௩)

கஉசச. **கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்**
**தின்னும் அவர்க்காணல் உற்று.**

[இதுவு மது.]

(இ - ள்.) நெஞ்சே கண்ணும் கொளச் சேறி-நெஞ்சே, நீ அவர்பாற் சேறலுற்றாயாயின் இக் கண்களையும் உடன்கொண்டு செல்வாயாக; இவை அவர்க் காணல் உற்று என்னைத் தின்னும்-அன்றி நீ சேறியாயின், இவைதாங் காட்சி விதுப்பினால் அவரைக் காண்டல் வேண்டி நீ காட்டென்று என்னைத் தின்பனபோன்று நலியாநிற்கும்.

கொண்டென்பது 'கொள' வெனத் திரிந்துநின்றது. 'தின்னு' மென்பது இலக்கணைக்குறிப்பு. அந்நலிவு தீர்க்கவேண்டுமென்பதாம்; என்றது தான் சேறல் குறித்து. (௪)

கஉசரு. **செற்றார் எனக்கை விடலுண்டோ நெஞ்சேயாம்**
**உற்றால் உறாஅ தவர்.**

[இதுவு மது.]

(இ - ள்.) நெஞ்சே-நெஞ்சே!, யாம் உற்றால் உறா அதவர்-யாம் தம்மையுறத் தாமுறாத நம் காதலரை; செற்றாரெனக்கைவிடல் உண்டோ-வெறுத்தாரென்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலி நமக்குண்டோ? இல்லை.

உறுதல்: அன்புபடுதல். அவ் வலியின்மையின் அவர்பாற் செல்வதே நமக்குத் தகுவ தென்பதாம். (௫)

கஉசசு. **கலந்துணர்த்தும் காதலர்க் கண்டாற் புலந்துணராய்**
**பொய்க்காய்வு காய்தியென் நெஞ்சு.**

[தலைமகன் கொடுமை நினைந்து செலவுடன் படாத நெஞ்சினைக் கழறியது.]

(இ - ள்.) என் நெஞ்சு-என் நெஞ்சே!, கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டாற் புலந்து உணராய்-யான் தம்மொடு புலந்தால்

அப் புலவியைக் கலவி தன்ஞனே நீக்கவல்ல காதலரைக் கண்டாற் பொய்யேயாயினும் ஒருகாற் புலந்து பின் னதனை நீங்கமாட்டாய்; பொய்க் காய்வு காய்தி - அதுவுமாட்டாத நீ இப்பொழுது அவர் கொடியரெனப் பொய்க்காய்வு காயாநின்ருய்; இனி இதனை யொழிந்து அவர்பாற் செல்லத் துணிவாயாக.

கலத்தலானென்னும் பொருட்டாய கலக்க என்பது திரிந்து நின்றது. அதஞன் உணர்த்தலாவது கலவியின்பத்தைக் காட்டி அதஞன் மயக்கிப் புலவிக்குறிப்பினை ஒழித்தல். 'பொய்க்காய்வு': நிலையில் வெறுப்பு. கண்டால் மாட்டாத நீ காணுதவழி வெறுக் கின்றதனுற் பயனில்லை யென்பதாம். (சு)

கஉசஎ. காமம் விடுவொன்ருே நாண்விடு நன்னெஞ்சே
யானே பொறேனிவ் விரண்டு.



[நாண் தடுத்தலின் அச் செலவொழிவாள் சொல்லியது]

**(இ - ள்.)** நன்னெஞ்சே - நல்ல நெஞ்சே!, ஒன்று காமம் விடு - ஒன்றின் நாண்விடமாட்டாயாயிற் காமவேட்கையை விடு; (ஒன்று) நாண் விடு - ஒன்றின் அது விடமாட்டாயாயின் நாணினை விடு; இவ்விரண்டும் யானே பொறேன் - அன்றியே இரண்டும் விடாமை நின் கருத்தாயின் ஒன்றற்கொன்று மறுதலையாய இவ் விரண்டனையும் உடன் தாங்கும் மதுகை யானிலன்.

'யானே' என்னும் பிரிநிலை நீ பொறுப்பினும் என்பது பட நின்றது. 'நன்னெஞ்சே' யென்றது, இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத்தலின், நல்லையென்னுங் குறிப்பிற்று. அது நன்றேயெனினும் என்னுயிருண்டாதல் சாலாமையின், அதற் காகின்றிலே னென்பதாம். முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

கஉசஅ. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் நெஞ்சு.

[இதுவு மது.]

**(இ - ள்.)** என் நெஞ்சு-என்னெஞ்சே!, அவர் பரிந்து நல்கா ரென்று-அவர் இவ் வாற்ருமையை அறியாமையின் நொந்துவந்து தலையளி செய்யாராயினுர் என்று கருதி; பிரிந்தவர்பின் ஏங்கிச் செல்வாய் பேதை - அஃதறிவித்தற்பொருட்டு நம்மைப் பிரிந்து போயவர்பின் ஏங்கிச் செலலுற்ற நீ யாது மறியாய்.

ஆற்றாமை கண்டுவைத்தும் நல்காது போயினாரைக் காணாத வழிச் சென்றறிவித்த துணையானே நல்க வருவரென்று கருதி னமையிற் 'பேதை' யென்றாள். (அ)

கஉசகூ. உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

[இதுவு மது.]

(இ-ள்.) என் நெஞ்சு-என்னெஞ்சே; காதலவர் உள்ளத்தா ராக - காதலர் நின்னகத்தா ராக; நீ உள்ளியாருழைச் சேறி-முன் பெல்லாங் கண்டுவைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச் செல் கின்றது யாரிடத்து?

உள்ளமென்புழி அம்: பகுதிப்பொருள் விகுதி. நின்னகத் திருக்கின்றவரை அஃதறியாது புறத்துத் தேடிச்சேறல் நகை யுடைத்து, அதனை யொழி யென்பதாம். (கூ)

கஉருo. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னும் இழத்தும் கவின்.

[அவரை மறந்தாற்றல்வேண்டு மென்பதுபடச் சொல்லியது.]

(இ-ள்.) துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா- நம்மைக் கூடாவண்ணம் துறந்துபோயினாரை நாம் நம்மகத் துடை யேமாக; இன்னும் கவின் இழத்தும் - முன்னிழந்த புறக்கவினே யன்றி நின்ற அகக்கவினும் இழப்பேம்.

"குன்றின் நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்"* என் புழிப்போல 'நெஞ்'சென்பதுஈண்டும் அகப்பொருட்டாய்நின்றது. அவர் நம்மைத் துன்னாமல் துறந்தாராகவும், நாமவரை மறத்தல் மாட்டேமாகவும், போன மெய்க்கவினேயன்றி நின்ற நிறையும் இழப்பே மென்பதாம். (கo)

---

## அசு. கஉசு—நிறையழிதல்

[அஃதாவது, தலைமகள் மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியான் அடக்கமாட்டாது வாய் விடுதல். "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை"† என்றார் பிறரும். அஃதழிதற் காரணம் நெஞ்சொடு கிளத்தமையின், இது நெஞ்சொடு கிளத்தலின்பின் வைக்கப்பட்டது.]

---

*குறுந்தொகை, கடவுள் வாழ்த்து. † கலித்தொகை-கஉரு.

௧௨௫௧. காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

[நாணு நிறையும் அழியாமை நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

(இ-ள்.) நாணுத் தாழ் வீழ்த்த நிறையென்னுங் கதவு - நாணாகிய தாழினைக் கோத்த நிறையென்னுங் கதவினை; காமக் கணிச்சி உடைக்கும் - காமவேட்கையாகிய கணிச்சி முறியா நின்றது; இனி அவை நிற்றலுமில்லை, யானாற்றலு மில்லை.

'கணிச்சி': கூந்தாலி. நாணுள்ள துணையும் நிறையழியாதாகலின் அதனைத் தாழாக்கியும், அகத்துக் கிடந்தன பிறர் கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலின் தன் காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினாள். (௧)

௧௨௫௨. காமம் எனவொன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும் தொழில்.

[நெஞ்சின்கண் தோன்றிய காமம் நெஞ்சால் அடக்கப்படும் என்றாட்குச் சொல்லியது.]

(இ-ள்.) யாமத்தும் என் நெஞ்சத்தைத் தொழில் ஆளும் - எல்லாருந் தொழிலொழியும் இடையாமத்தும் என்னெஞ்சத்தை ஒறுத்துத் தொழில்கொள்ளாநின்றது; காமமென ஒன்று கண் இன்று - ஆகலாற் காமமென்று சொல்லப்பட்ட ஒன்று கண்ணோட்டமின்றா யிருந்தது.

'ஓ' வென்பது இரக்கக்குறிப்பு. தொழிலின்கண்ணே யாடல் தலைமகன் பாற் செலவிடுத்தல். தாயைப் பணிகோடல் உலகியலன்மையிற் 'காமமென வொன்' றென்றும், அது தன்னைக்கொள்கின்றது அளவறியாது கோடலிற் 'கண்ணின்' றென்றுங் கூறினாள். அடக்கப்படாமை கூறியவாறு. (௨)

௧௨௫௩. மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்.

[மகளிர் காமம் மறைக்கப்படுமென்றாட்குச் சொல்லியது.]

(இ-ள்.) காமத்தை யான் மறைப்பேன் - இக்காமத்தை யானென்னுள்ளே மறைக்கக் கருதுவேன்; குறிப்பு இன்றித் தும்மல் போல் தோன்றிவிடும் - அதனாலென், இஃதென் கருத்தின் வாராது தும்மல்போல வெளிப்பட்டே விடாநின்றது.

'மன்' ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் இரங்கற்கண் வந்தது. தும்மலடங்காதாற்போல அடங்குகின்ற தில்லை யென்பதாம். (௩)

கஉருச. **நிறையுடையேன் என்பேன்மன் யானுவென் காமம்**
**மறையிறந்து மன்று படும்.**

[இதுவு மது.]

(இ-ள்.) யான் நிறையுடையேன் என்பேன் - இன்றினுங் செல்லாம் யானென்னை நிறையுடையேனென்று கருதியிருந்தேன்; என் காமம் மறை இறந்து மன்று படும் - அதனுலென்! இன்றென் காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கண் வெளிப்படாநின்றது.

'மன்'னும் 'ஓ'வும் மேலவற்றின்கண் வந்தன. மன்றுபடுதல்: பலரு மறிதல். இனி என்வரைத் தன் றென்பதாம். (ச)

கஉருரு. **செற்ருர்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்**
**உற்ருர் அறிவதொன் றன்று.**

[நம்மை மறந்தாரை நாமும் மறக்கற்பால மென்ருட்குச் சொல்லியது.]

(இ-ள்.) செற்ருர்பின் செல்லாப் பெருந்தகைமை-தம்மை யகன்று சென்ருர் பின்செல்லாது தாமும் அகன்றுநிற்கு நிறை யுடைமை; காமநோய் உற்ருர் அறிவது ஒன்று அன்று - காம நோயினை உருதார் அறிவதொன்றன்றி உற்ருர் அறிவதொன் றன்று.

இன்பத்தோடு கழியுங் காலத்தைத் துன்பத்தோடு கழியுமாறு செய்தலிற் 'செற்ரு' ரென்ருள். பின்சேறல் மனத்தால் இடை விடாது நினைத்தல். 'பெருந்தகைமை' ஈண்டாகுபெயர். காமநோய் உருதார் மானமுடையார். நன்றென உணரார்மாட்டுஞ் சென்றே நிற்கும் *யானறிவதொன் றன்றென்பதாம். (ரு)

கஉருசு. **செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ**
**எற்றென்னை உற்ற துயர்.**

[இதுவு மது.]

(இ-ள்.) செற்றவர்பின் சேறல் வேண்டி-என்னை அகன்று சென்ருர் பின்னே யான் சேறலை வேண்டுதலான்; என்னை உற்ற துயர் எற்று அளித்து-என்னை யுற்ற துயர் எத்தன்மையது? சால நன்று.

'செற்றவ' ரென்றது ஈண்டும் அப்பொருட்டு. † வேண்ட வென்பது 'வேண்டி' யெனத் திரிந்துநின்றது. 'அளித்'தென்

---

* குறுந்தொகை, எஅ. † கஉருரு ஆம் குறளுரை.

பது இகழ்ச்சிக் குறிப்பு. இக் காமநோய் யான் சொல்லவுங் கேட்கவுமாவ தொன்றன்று, சாலக்கொடி தென்பதாம். (சு)

கஉருஎ. நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின்.

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனோடு நிறையழிவாற் கூடிய தலைமகள் நீ புலவாமைக்குக் காரணம் யாதென்ற
தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) பேணியார் காமத்தால் பெட்ப செயின் - நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்யுமளவின்; நாண் என ஒன்றோ அறியலம் - நாணென்றொன்றையும் அறியமாட்டேமா யிருந்தேம்.

'பேணியா' ரெனச் செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது. விரும்பியன: வேட்கை மிகவினாற் கருதியிருந்த கலவிகள். 'நாண்': பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். 'ஒன்' றென்பது ஈண்டுச் சிறிதென்னும் பொருட்டு. இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நிறையழிவான் அறியாது கூடிய தன் குற்றநோக்கி, அவளையு முளப்படுத்தாள். (எ)

கஉருஅ. பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை.

[இதுவு மது.]

(இ - ள்.) நம் பெண்மை உடைக்கும் படை - நம் நிறையாகிய அரணையழிக்குந் தானை; பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோ - பல பொய்களைவல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ? ஆனபின் அது நிற்குமா றென்னை?

'பெண்மை' ஈண்டுத் தலைமைபற்றி நிறைமேல் நின்றது. வந்தாற் புலக்கக்கடவேமென்றும், புலந்தால் அவன் சொற்களானும் செயல்களானும் நீங்கேமென்றும், இவை முதலாக எண்ணிக் கொண்டிருந்தன யாவுங் காணாது கலவிக்கண் தன்னினு முற்படும் வகை வந்து தோன்றினனென்பாள், 'பன்மாயக்கள்வ' னென்றாள். 'பணிமொழி': நம்மினுந் தானன்பு மிகுதியுடையனாகச் சொல்லுஞ் சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்கள் அவையாக, நம் நிறையழியாதொழியுமோ வென்பதாம். (அ)

கஉருகூ. புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) புலப்பல் எனச்சென்றேன் - அவர்வந்தபொழுது புலக்கக்கடவேனென்று கருதி முன்னில்லாது பிறிதோரிடத்துப் போயினேன்; நெஞ்சம் கலத்தலுறுவது கண்டு புல்லினேன் - போயும், என்னெஞ்சம் நிறையினில்லாது அறைபோய்* அவரோடு கலத்தல் தொடங்குதலை யறிந்து, இனி அது வாயாதென்று புல்லினேன்.

வாயாமை: புலத்தற்கருவியாய நெஞ்சு தானே கலத்தற் கருவியாய் நிற்றலின் அது முடியாமை. (கூ)

கஉகூ0. நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல்.

[இதுவு மது.]

(இ - ள்.) நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு - நிணத்தைத் தீயின்கண்ணே இட்டால் அஃதுருகுமாறு போலத் தம் காதலரைக் கண்டால் நிறையழிந்துருகும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு; புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ - அவர் புணர யாமூடிப் பின்பு உணராது அந்நிலையே நிற்கக்கடவேமென்று கருதலுண்டாகுமோ? ஆகாது.

புணர்தல் ஈண்டு மிக நணுகுதல்; எதிர்ப்படலுமாம். புணர வென்பது 'புணர்ந்'தெனத் திரிந்துநின்றது. யானத்தன்மையேனாகலின் எனக்கஃ தில்லையாயிற் றென்பதாம். (க0)

---

## அதி. கஉஎ—அவர்வயின்விதும்பல்

[அஃதாவது, சேயிடைப் பிரிவின்கண் தலைமகனும் தலைமகளும் வேட்கை மிகவினான் ஒருவரையொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகளாற்றாமையும் அதிகாரப்பட்டு வருகின்றமையின், இருவரையுஞ் சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலாற் கூறினார். பிற†ரெல்லாம் இதனைத் தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புற லென்றார். சுட்டுப்பெயர் சொல்லுவான் குறிப்பொடு கூடியபொருளுணர்த்துவதல்லது தானென்றற்குப் பெயராகாமையானும், கவிகூற்றாய

* கலித்தொகை - கூஎ. † மணக்குடவர்.

அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற்பண்மையாற் கூறப்படா மையானும் அஃதுரையன்மையறிக. இதனுள் தலைமகள் கூற்று நிறையழிவா னிகழ்ந்ததாகலின், அவ்வியைபுபற்றி நிறையழிதலின் பின் வைக்கப்பட்டது.]

கஉசு௧. வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.*

[தலைமகள் காண்டல் விதுப்பினாற் சொல்லியது.]

(இ-ள்.) அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த - அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்கள் சுவரின்க ணிழைத்தவற்றைத் தொட்டு எண்ணுதலான் என் விரல்கள் தேய்ந்தன; கண்ணும் வாள் அற்றுப் புற்கென்ற - அதுவேயன்றி, அவர் வரும் வழி பார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின; இவ்வாறும் அவர் வரவுண்டாயிற்றில்லை.

'நாள்' ஆகுபெயர். புல்லியவாதல்: நுண்ணிய காணமாட் டாமை. ஒற்றவென்பது 'ஒற்றி'யெனத் திரிந்து நின்றது. இனி யான் காணுமா றென்னை யென்பதாம் நாளெண்ணலும் வழி பார்த்தலும் ஒருகாற்செய்தொழியாது இடையின்றிச் செய்தலான், விதுப்பாயிற்று. (௧)

கஉசுஉ. இலங்கிழாய் இன்று மறப்பினென் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து.

[ஆற்றுமை மிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை சிறிது மறக்கல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ-ள்.) இலங்கு இழாய் - விளங்காநின்ற இழையினை யுடையாய்!, இன்று மறப்பின் - காதலரை இன்று யான் மறப்பே னாயின்; மேல் காரிகை நீத்து என்றோள் கலம் கழியும் - மேலும் காரிகை யென்னை நீப்ப, என்தோள்கள் வளை கழல்வனவாம்

'இலங்கிழா'யென்பது இதற்கு நீ யாதும் பரியலை யென்னும் குறிப்பிற்று. 'இன்று': யானிறந்துபடுகின்ற இன்று. மேலும் மறுபிறப்பினும். எச்சவும்மை விகாரத்தால் தொக்காது. நீப்ப வென்பது 'நீத்'தெனத் திரிந்துநின்றது. கழியுமென்னும் இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. இவ்வெல் லைக்கண் நினைந்தால் மறுமைக்கண் அவரை யெய்தி யின்புறலாம்; அதனால் மறக்கற்பாலே னல்லே†னென்பதாம். (உ)

* திருக்கோவை - ௩சரு. † திருக்கோவை - உ0௫.

௧௨௬௫. உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன்.

[இதுவு மது.]

(இ - ள்.) உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார் - இன்பம் நுகர்தலை நச்சாது வேறலை நச்சி நாம் துணையாதலை இகழ்ந்து தம் ஊக்கந் துணையாகப் போயினார்; வரல்நசைஇ இன்னும் உளேன் - அவற்றை இகழ்ந்து ஈண்டுவருதலை நச்சுதலான், யானிவ்வெல்லையினும் உளேனாயினேன்.

'உர'னென்பது ஆகுபெயர். அந் நசையான் உயிர்வாழாநின்றேன், அஃதில்லையாயின் இறந்துபடுவ லென்பதாம். (௫)

௧௨௬௬. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் நெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) பிரிந்தார் கூடிய காமம் வரவு உள்ளி - நீங்கிய காமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் மேற்கூடிய காமத்துடனே நங்கண் வருதலை நினைந்து; என்நெஞ்சு கோடு கொடுஏறும் - என் நெஞ்சு வருத்தமொழிந்து மேன்மேற் பணைத்தெழாநின்றது.

வினைவயிற் பிரிவுழிக் காமவின்ப நோக்காமையும் அது முடிந்துழி அதுவே நோக்கலும் தலைமகற்கியல்பாகலின், 'கூடிய காமமொ' டென்றாள். ஒடு உருபு விகாரத்தால்:தொக்கது. கோடு கொண்டேறலாகிய மரத்தது தொழில் நெஞ்சின்மேலேற்றப் பட்டது, கொண்டென்பது குறைந்துநின்றது. அஃதுள்ளிற்றிலேனாயின் இறந்துபடுவ லென்பதாம். (௬)

௧௨௬௭. காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்தோள் பசப்பு.

[தலைமகன் வரவு கூறி ஆற்றாயாய்ப் பசக்கற்பாலை யல்லை யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) கண்ஆரக் கொண்கனைக் காண்க - என் கண்களாரும் வகை என் கொண்கனை யான் காண்பேனாக; கண்டபின் என் மென்தோள் பசப்பு நீங்கும் - அங்ஙனம் கண்டபின் என் மெல்லிய தோளின்கண் பசப்புத் தானே நீங்கும்.

'காண்க' என்பது ஈண்டுவேண்டிக்கோடற் பொருட்டு. அது வேண்டுமென்பதுபட நின்றமையின் 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. கேட்டதுணையான் நீங்காதென்பதாம். (௭)

கஉருசு. வருகமன் கொண்கன் ஒருநாட் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட.

[இதுவு மது.]

(இ - ள்.) கொண்கன் ஒருநாள் வருக - இத்துணைநாளும் வாராக்கொண்கன் ஒருநாள் என்கண் வருவானாக; பைதல் நோயெல்லாம் கெடப் பருகுவன் - வந்தாற் பையுளைச் செய்கின்ற இந்நோயெல்லாங் கெட அவ் வமிழ்தத்தை வாயில்கள் ஐந்தானும் பருகக் கடவேன்.

'வருக' என்பதற்கும், 'மன்' என்பதற்கும் மேலுரைத்தவாறே கொள்க. அக் குறிப்பு அவ் வொருநாளைக்குள்ளே இனி வரக் கடவ நோய்களுங் கெடுப்ப லென்பதாம். (சு)

கஉருஎ. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

[இதுவு மது.]

(இ - ள்.) கண் அன்ன கேளிர் வரின் - கண்போற் சிறந்த கேளிர் வருவராயின்; புலப்பேன்கொல் - அவர் வரவு நீட்டித்தமை நோக்கி யான் புலக்கக்கடவேனோ; புல்லுவேன் கொல் - அன்றி என்னாற்றாமை நோக்கிப் புல்லக்கடவேனோ; கலப்பேன் கொல் - அவ்விரண்டும் வேண்டுதலான் அவ்விரு செயல்களையும் விரவக்கடவேனோ, யாதுசெய்யக்கடவேன்?

புலவியும் புல்லலும் ஒரு பொழுதின்கண் விரவாமையிற் 'கலப்பேன்கொ' லென்றாள். மூன்றனையுஞ் செய்தல் கருத்தாக லின், விதுப்பாயிற்று. இனிக் கலப்பேன்கொ லென்பதற்கு ஒரு புதுமை செய்யாது பிரியாத நாட்போலக் கலந்தொழுகுவேனோ வென்றுரைப்பாரு முளர். (எ)

கஉருஅ. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து.

[வேந்தற் குற்றுழிப் பிரிந்த தலைமகன் வினைமுடிவு நீட்டித்துழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) வேந்தன் வினை கலந்து வென்றீக - வேந்தன் வினை செய்தலைப் புரிந்து வெல்வானாக; மனைகலந்து மாலை விருந்து அயர்கம் - யாமும் மனைவியைச் சென்று கூடி ஆண்டை மாலைப் பொழுதிற்கு விருந்தயர்வேமாக.

'மனை' யென்பது ஈண்டாகுபெயர், "மங்கல மென்ப மனை மாட்சி"* என்புழிப்போல. வினைசெய்தற்கண் வந்த மாலைப் பொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தல் முதலிய இன்மையின், 'மனை கலந்து மாலைக்கு விருந்தயர்கம்' என்றான். நான்கனுருபு விகாரத்தால் தொக்கது. இது வினைமுடியாமுன் கூறலான் விதுப்பாயிற்று. பிற†ரெல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி உரைத்தார். தலைமகனைக் கூறாது வேந்தன் வெல்க வென்றும், மனை கலந்தென்றும், மாலைப்பொழுதின்கண் விருந்தயர்க மென்றும் வந்த அவ்வுரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று. (அ)

கஉசுசு. **ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேண் சென்றார்**
**வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.**

[இதுவு மது.]

(இ - ள்.) சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு - சேணிடைச் சென்ற தம் காதலர் மீண்டு வரக் குறித்த நாளை உட்கொண்டு அது வருந்துணையும் உயிர்தாங்கி வருந்தும் மகளிர்க்கு; ஒருநாள் எழுநாள்போல் செல்லும் - ஒரு நாள் பலநாள்போல நெடிதாகக் காட்டும்.

எழென்பது அதற்கு மேலாய மிக்க பன்மைகுறித்துநின்றது "ஒருவர் கூறை எழுவர் உடுத்து" என்றாற்போல. தலைமகள் வருத்தம் பிறர் மேலிட்டுக் கூறியவாறு. இதனால் இதுவும் தலைமகள் கூற்றாகாமை யறிக. இருநாளென்று பாடமோதுவாரு முளர். (கூ)

கஉஎ0. **பெறினென்னும் பெற்றக்கால் என்னும் உறினென்னும்**
**உள்ளம் உடைந்துக்கக் கால்.**

[இதுவு மது.]

(இ - ள்.) உள்ளம் உடைந்து உக்கக்கால் - காதலி நம் பிரிவினை ஆற்றாது உள்ளமுடைந் திறந்துபட்டவழி; பெறின் என் - நம்மைப் பெறக்கடவ ளானாலென்? பெற்றக்கால் என் - அதுவன்றியே பெற்றாலென்?, உறின் என் - அதுவன்றியே மெய்யுறக் கலந்தால்தானென்?, இவை ஒன்றானும் பயனில்லை.

இம் மூன்றும் உடம்பொடு புணர்த்திக் கூறப்பட்டன, அதன் மேலும் முன்னை வழக்குண்மையின். அதற்கு முன்னே யான் செல்லவேண்டுமென்பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. இது தலைமகள் கூற்றாயவழி‡இயங்கலாவதல்லது விதுப்பாகாமையறிக.

* [illegible] † மணக்குடவர். ‡ மணக்குடவர்.

## அதி. ௧உ௮—குறிப்பறிவுறுத்தல்

[அஃதாவது, தலைமகன், தலைமகள், தோழியென் றிவர் ஒருவர் குறிப்பினை ஒருவர்க் கறிவுறுத்தல். இது, பிரிந்துபோய தலைமகன் வந்து கூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின் விதும்பலின் பின் வைக்கப்பட்டது.]

௧உ௭௧. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன் றுண்டு.

[பிரிந்துகூடிய தலைமகன் வேட்கை மிகவினாற் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள் இதுவொன் றுடைத் தென அஞ்சியவழி அதனை அவள் குறிப்பா னறிந்து அவன் அவட்குச் சொல்லியது.]

(இ - ள்.) கரப்பினும் - நீ சொல்லாது மறைத்தாயாயினும்; ஒல்லா கையிகந்து - அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து; நின் உண் கண் உரைக்கல் உறுவது ஒன்று உண்டு - நின் உண் கண்களே எமக்குச் சொல்லல் உறுவதொரு காரிய முண்டாயிரா நின்றது; இனி யதனை நீயே தெளியச் சொல்வாயாக.

கரத்தல்: நாணான் அடக்குதல். தன்கண் பிரிதற்குறிப்புள தாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன்பிரியாமைக் குறிப்பறிவுறுத்தவாறு. (௧)

௧உ௭உ. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.

[நாணால் அவள் அது சொல்லாளாயவழி அவன் தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோட் பேதைக்கு - என் கண்ணிறைந்த அழகினையும் வேயை ஒத்த தோளினையுமுடைய நின் பேதைக்கு; பெண் நிறைந்த நீர்மை பெரிது - பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது.

இலதாய பிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான், இவ்வாறு கூறினான். (உ)

௧உ௭௩. மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு.

[இதுவுமது.]

(இ - ள்.) மணியில் திகழ்தரும் நூல்போல் - கோக்கப்பட்ட பளிக்குமணி யகத்துக்கிடந்து புறத்துப் டலனு நூல்போல;

மடந்தை அணியில் திகழ்வது ஒன்று உண்டு - இம்மடந்தைய தணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாகின்றதொரு குறிப்புண்டு.

'அணி': புணர்ச்சியானாயவழகு. அதனகத்துக் கிடத்தலாவது அதனோடு உடனிகழ்தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். அதனை யானறிகின்றிலேன்; நீ யறிந்து கூறல் வேண்டுமென்பது கருத்து.

கஉஎச. முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல்-முகை யது முகிழ்ப்பின் உளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல; பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு - நின் பேதை என்னொடு நகக் கருதும் நகையது முகிழ்ப்பின் உளதாய்ப்புறத்துப் புலனாகாததொரு குறிப்புண்டு.

முகிழ்ப்பு: முதிர்ச்சியாற் புடைபடுதல். 'நகை' புணர்ச்சி இன்பத்தா னிகழ்வது. (ச)

கஉஎரு. செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன் றுடைத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) செறிதொடி செய்து இறந்த கள்ளம் - நெருங்கிய வளைகளை யுடையாள் என்கண் இல்லாத தொன்றனை உட் கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு; உறு துயர் தீர்க்கு மருந்து ஒன்று உடைத்து-என் மிக்க துயரைத் தீர்க்கும் மருந்தாவ தொன்றனை யுடைத்து.

உட்கொண்டது பிரிவு. 'கள்ளம்': ஆகுபெயர். மறைத்தற் குறிப்புத் தானு முடன்போக் குட்கொண்டது. 'உறுதுயர்' நன்று செய்யத் தீங்கு விளைதலானும் அதுதான் தீர்திறம் பெருமை யானும் உளதாயது. 'மருந்து': அப்பிரிவின்மை தோழியால் தெளி வித்தல். நீ அது செய்தல் வேண்டுமென்பதாம். (ரு)

கஉஎசு. பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து.

[தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச் சென்ற தோழிக் கறிவுறுத்தது.]

(இ - ள்.) பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல்-காதலர் வந்து தம் பிரிவினுணய துன்பத்தினை மிகவு மாற்றி நாமகிழும் வண்ணங் கலக்கின்ற கலவி; அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து-இருந்தவாற்ருன் மேலு மத் துன்பத்தினை அரிதாக ஆற்றியிருந்து அவரன்பின்மையை நினையுந் தன்மை யுடைத்து.

பிரிதற்குறிப்பினுற் செய்கின்றதாகலான், முடிவில் இன்னு தாகாநின்ற தென்பதாம். (சு)

கஉஎஎ. தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை.

[இதுவு மது.]

(இ - ள்.) தண்ணம் துறைவன் தணந்தமை - குளிர்ந்த துறையை யுடையவன் நம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை; நம்மினும் வளை முன்னம் உணர்ந்த - அவன்-குறிப்பானறிதற்குரிய நம்மினும் இவ்வளைகள் முன்னே யறிந்தன.

கருத்து நிகழ்ந்ததாகலின் 'தணந்தமை' யென்றும், யான் தெளிய உணர்தற்கு முன்னே தோள்கள் மெலிந்தன என்பாள் அதனை வளைமேலேற்றி அது தன்னை உணர்வுடைத்தாக்கியுங் கூறினுள். (எ)

கஉஎஅ. நெருநற்றுச் சென்ருரெம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து.

[இதுவு மது.]

(இ - ள்.) எம் காதலர் சென்ருர் நெருநற்று - எம் காதலர் பிரிந்து போயினர் நெருநற்றே; யாமும் மேனிபசந்து எழுநாளேம். அப்பிரிவிற்கு யாமும் மேனி பசந்து எழுநாளுடைய மாயினேம்.

நெருநற்றுச் செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்ட தென்பாள் 'நெருநற்றுச் சென்ரு' ரென்றும், அதனை ஐயுற்றுச் செல்கின்றது எழுநாளுண்டாகலின் அன்றே மேனி பசந்த தென்பாள் 'மேனி பசந்தெழுநாளே' மென் றுங் கூறினுள். இவ் வாற்ருல் தலைமகனது பிரிதற்குறிப்பினை உணர்த்தினின்றது. (அ)

கஉஎகூ. தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது.

[தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற் கறிவித்தது.]

(இ - ள்.) (யானது தெளிவித்தவழித் தெளியாது) தொடி நோக்கி - அவர் பிரிய யான் ஈண்டிருப்பின் இவை நில்லாவெனத்

தன்தொடியை நோக்கி; மென்தோளும் நோக்கி-அதற்கேதுவாக இவை மெலியுமெனத் தன் மென்தோள்களையும் நோக்கி; அடி நோக்கி-பின்னிவ் விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல்வேண்டு மெனத் தன் அடியையும்நோக்கி; ஆண்டு அவள் செய்தது அஃது-அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்காயிருந்தது.

செய்தகுறிப்புச்செய்தற்கேதுவாய குறிப்பு. 'அஃ'தென்றாள் "செறிதொடி செய்திறந்த கள்ள"* மென்றாளாகலின் பிரிதற் குறிப்புண்டாயின் அஃதழுங்குதல் பயன். (௯)

கஉ௮௦. பெண்ணிற் பெண்மை உடைத்தென்ப கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு.

[தலைமகன் பிரியாமைக் குறிப்பினைத் தோழிக் கறிவுறுத்தது.]

(இ-ள்.) காமநோய் கண்ணினால் சொல்லி இரவு-மகளிர் தம் காமநோயினைத் தோழியர்க்கும் வாயாற் சொல்லாது கண்ணி னாற் சொல்லி, அது தீர்க்க வேண்டுமென்று அவரை இரவாது உடன்போதல் குறித்துத் தம்மடியினை இரத்தல்; பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப - தமக்கியல்பாகிய பெண்மை மேலும் ஒரு பெண்மை உடைத்தென்று சொல்லுவர் அறிந்தோர்.

தலைமகள துடன்போதல் துணிபு தோழியால் தெளிந்தானாக லின், தன் பிரிவின்மைக் குறிப்பினை அறிவுறுப்பான், அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து கூறியவாறு. (௧௦)

---

## அதி. கஉ௯—புணர்ச்சிவிதும்பல்

[அஃதாவது, தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற் புணர்ச்சிமிகுதிபற்றித் தலைமகன் பிரிதற் குறிப் பறிவுறுத்த தலைமகள் அவள்மாட்டே நிகழாது வேட்கைமிக வினாற் பின்னுந் தன்கண்ணே நிகழ்தலான், இது குறிப்பறி வுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.]

கஉ௮௧. உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

[பிரிதற்குறிப்பி னாகியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாதென நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

---

* குறள் - ௧௨௭௭.

(இ - ள்.) உள்ளக் களித்தலும் - நினைந்த துணையானே களிப்பெய்தலும்; காண மகிழ்தலும் - கண்ட துணையானே மகிழ்வெய்தலும்; கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு - கள்ளுண்டார்க்கில்லை, காமமுடையார்க் குண்டு.

களித்தல்: உணர்வழியாதது. மகிழ்தல்: அஃதழிந்தது. இவ்விரண்டும் உண்டுழியல்ல தின்மையிற் 'கள்ளுக்கில்' லென்றாள். 'உண்'டென்பது இறுதி விளக்கு. அப்பெற்றித்தாய காமமுடையயான் புலத்தல் யாண்டைய தென்பதாம். (க)

கஉஅஉ. தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்
காமம் நிறைய வரின். [துணையும்

[இதுவு மது.]

(இ - ள்.) காமம் பனைத் துணையும் நிறைய வரின் - மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிக உண்டாமாயின்; தினைத்துணையும் ஊடாமை வேண்டும் - அவரால், தம் காதலரோடு தினையளவும் ஊடுதல் செய்யாமை வேண்டப்படும்.

'பனைத்துணையு' மென்புழி ஐந்தனுருபு விகாரத்தால் தொக்கது ஊடின் வருத்த மிகு மெனப் பிறர்க்குறுதி கூறுவாள் போன்று தன் விதுப்புக் கூறியவாறு. (உ)

கஉஅங. பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணா தமையல கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) பேணாது பெட்பவே செய்யினும் - நம்மை அவமதித்துத் தான் வேண்டினவே செய்யுமாயினும்; கொண்கனைக் கண் காணாது அமையல - கொண்கனை என் கண்கள் காணாதமைகின்றன வில்லை.

தன் விதுப்புக் கண்கள்மே லேற்றப்பட்டது. அத்தன்மையேன் அவனோடு புலக்குமா றென்னை யென்பதாம். (ங)

கஉஅச. ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதென் னெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) தோழி-தோழி!, ஊடற்கண் சென்றேன் - காதலரைக் காணுமுன் அவர் செய்த தவற்றைத் தன்னோடு நினைந்து யானவரோ டூடுதற்கண்ணே சென்றேன்; என் நெஞ்சு அது மறந்து

கூடற்கண் சென்றது - கண்டபின் என்னெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது.

சேறனிகழ்தல் நினைத்த நெஞ்சிற்கு மொத்தலின், 'அது மறந்' தென்றாள். அச்செலவாற் பயனென்னென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறை போகலான், அது முடிந்ததில்லை யென்பதாம். (ச)

கஉஅரு. எழுதுங்கால் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன் பழிகாணேன் கண்ட இடத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) எழுதுங்கால் கோல் காணுக் கண்ணேபோல்-முன்னெல்லாங் கண்டிருந்தும் எழுதுங் காலத்து அஞ்சனக் கோலி னியல்பு காணமாட்டாத கண்ணேபோல; கொண்கன் பழி கண்ட இடத்துக் காணேன் - கொண்கனது தவறு காணுத இடத்தெல்லாங் கண்டிருந்து அவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேன்.

'கோல்' ஆகுபெயர். இயல்பு, கருமை: என்னியல் பிதுவாகலின் மேலும் அது முடியாதென்பதாம். (ரு)

கஉஅசு. காணுங்கால் காணேன் தவருய காணுக்கால் காணேன் தவறல் லவை.

[இதுவு மது.]

(இ - ள்.) காணுங்கால் தவருய காணேன் - கொண்கனை யான் காணும்பொழுது அவன் தவருயவற்றைக்காண்கின்றிலேன்; காணுக்கால் தவறல்லவை காணேன் - காணுதபொழுது அவையே யல்லது பிறவற்றைக் காண்கின்றிலேன்.

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. முன்பு நான் நின்னெடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணுமையிற் புலந்திலே னென்பதாம். (சு)

கஉஅஎ. உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல் பொய்த்தல் அறிந்தென் புலந்து.

[இதுவு மது.]

(இ-ள்.) உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரேபோல் தம்மை யீர்த்துக்கொண்டு போத லறிந்துவைத்து ஒழுகுகின்ற புனலுட் பாய்வார் செயல்போல, பொய்த்தல் அறிந்து புலந்து என் - புலவி முடிவு போகாமை யறிந்துவைத்துக் கொண்கனேடு புலந்து பெறுவதென்?

'பாய்பவ' ரென்பது ஆகுபெயர். 'பொய்த்தல்', புரைபடுதல். புலந்தாலும் பயனில்லை யென்பதாம். பொய்த்தலறிந்தேனென்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடுநீருட் பாய்வார்போல முடிவறியப் பண்டொருகாற் புலந்து முடியாமையறிந்தேன்; இனி அது செயற்பாற்றன்றெனஉரைக்க. (எ)

கஉஅஅ. இளித்தக்க இன்னு செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

[தலைமகள் புணர்ச்சிவிதுப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.]

(இ - ள்.) கள்வ-வஞ்சகா!, களித்தார்க்கு இளித்தக்க இன்னு செயினும் கள்ளற்றே - தன்னை உண்டு களித்தார்க்கு இளிவரத் தக்க இன்னாதவற்றைச் செய்யினும், அவரால் மேன்மேல் விரும்பப் படுவதாய கள்ளுப்போலும்; நின் மார்பு - எங்கட்கு நின் மார்பு.

அவ்வின்னாதன நாணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மை யென் றிவை முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேன்மேல் விரும்பப் படாநின்றதென்பதாம். 'கள்வ' வென்றதும் அது நோக்கி. (அ)

கஉஅகூ. மலரினும் மெல்லிது காமம் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

[உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது.]

(இ - ள்.) காமம் மலரினும் மெல்லிது - காம வின்பம் மலரினு மெல்லியதாயிருக்கும்; அதன் செவ்வி தலைப்படுவார் சிலர்- அங்ஙனம் மெல்லிதாதலை அறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர்.

தொட்டதுணையானே மணச்செவ்வி அழிவதாய மலர் எல்லாவற்றினும் மெல்லிதென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண் வந்தது. குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒரு காலத்தின்கண்ணே ஒத்து நுகர்தற்குரியார் இருவர் அதற்கேற்ற இடனும் காலமும் உபகரணங்களும் பெற்றுக் கூடி நுகரவேண்டுதலின் 'அதன் செவ்வி தலைப்படுவார்' சிலரென்றும், அவற்றுள் யாதானு மொன்றனுற் சிறிது வேறுபடினும் வாடுதலின், 'மலரினு மெல்லி' தென்றுங் கூறினன். குறிப்பொவ்வாமையின் யானது பெறுகின்றிலே னென்பதாம். தலைமகள் ஊடல் தீர்வது பயன்.

௧௨௯0. கண்ணின் துனித்தே கலங்கினள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) கண்ணின் துனித்தே-காதலி முன்னொரு ஞான்று புல்லல் விதுப்பினாற் சென்ற என்னொடு தன் கண்மாத்திரத்தானூடி; புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்றுக் கலங்கினாள் - புல்லுதலை என்னினும் தான் விதும்பலான் அது தன்னையும் அப்பொழுதே மறந்து கூடிவிட்டாள்; அதனால் யான் இத்தன்மையேனாகவும் விதுப்பின்றி ஊடிநிற்கின்ற இவள் அவளல்லள்.

கண்மாத்திரத்தான் ஊடல்,சொல்நிகழ்ச்சியின்றி அது சிவந்த துணையேயாதல். அவளாயின் இங்ஙனம் ஊடற்கண் நீடாளென்பது பயன். (௯0)

## அதி. ௧௩0—நெஞ்சொடுபுலத்தல்

[அஃதாவது, காரணமுண்டாயவழியும் புலக்கக்கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும் தலைமகன் புலத்தலுமாம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

௧௨௯௧. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீயெமக் காகா தது.

[தலைமகன்கண் தவறுண்டாயவழியும் புலவி கருதாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.]

(இ - ள்.) நெஞ்சே-நெஞ்சே!, அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் - அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய் நிற்றல் கண்டுவைத்தும்; நீ எமக்கு ஆகாதது எவன்-நீ யெமக்காய் நில்லாது அவரை நினைத்தற்காரணம் யாது ?

அவர்க்காதல் : அவர் கருதியதற் குடம்படுதல். எமக்காகாததென்றது புலவிக் குடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாக அறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினுஞ் செய்வர்; நீ அதுவுஞ் செய்கின்றிலை யென்பதாம். (௧)

௧௨௯௨. உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறியென் நெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) என்னெஞ்சு-என்னெஞ்சே!, உறாஅ தவர்க் கண்ட கண்ணும் - மேலும் நம்மாட் டன்புடைய ராகாதவரை உள்ளவா றறிந்த விடத்தும்; செறாஅரென அவரைச் சேறி - நாம் சென்றால் வெகுளா ரென்பதுபற்றி நீ அவர்மாட்டுச் செல்லா நின்றாய், இப் பெற்றியது மேலும் ஓர் அறியாமையுண்டோ !

'அவரை' யென்பது வேற்றுமை மயக்கம். பழங்கண்ணோட் டம்பற்றி வெகுளாரென்பது கந்தாகச் சென்றாய், நீ கருதியது முடியுமோ என்பதாம். (உ)

௧௨௯௩. கெட்டார்க்கு நட்டாரில் என்பதோ*நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

[இதுவு மது.]

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே!, நீ பெட்டாங்கு அவர்பின் செலல் - என்மாட்டு நில்லாது நீ விரும்பியவாறே அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம்; கெட்டார்க்கு நட்டார் இல்லென்பதோ-கெட்டார்க்கு நட்டார் உலகத்தில்லை யென்னு நினைவோ நின் னியல்போ கூறுவாயாக.

என்னைவிட்டு அவர்மாட்டுச் சேறல் நீ பண்டே பயின்றதென் பாள் 'பெட்டாங்'கென்றும், தான்இது பொழுதுமானமிலளாகலிற் 'கெட்டார்க்' கென்றுங் கூறினாள். 'பின்' என்பது ஈண்டிடப் பொருட்டு. 'செல'லென்பது ஆகுபெயர். "ஒல்கிடத் துலப்பிலா உணர்விலார் தொடர்"† பாயிற்று நின்தொடர் பென்பதாம். (௩)

௧௨௯௪. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே!, துனி செய்து மற்றுத் துவ்வாய் - நீ அவரைக் கண்டபொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர் தவறு நோக்கி முன் புலவியை உண்டாக்கி அதனை அள வறிந்து பின்னுகரக் கருதாய்; இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார்-ஆகலான் இனி அப்பெற்றிப்பட்டவற்றை நின்னோ டெண்ணு வார் யார்? யானது செய்யேன்.

அப்பெற்றிப்பட்டன புலக்குந் திறங்கள். 'கா'ணென்பது உரையசை. 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. முன்னெல்லாம்

* பழமொழி - ௧௨௪. † கலித்தொகை - ௨௫.

புலப்பதாக எண்ணியிருந்து பின் புணர்ச்சி விதும்பலின், இவ்வாறு கூறினாள். (௪)

௧௨௬௫. பெறாஅமை அஞ்சும் பெறின்பிரி வஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு.

[வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது.]

(இ - ள்.) பெறாஅமை அஞ்சும்-காதலரைப் பெறாத ஞான்று அப்பெறாமைக் கஞ்சாநின்றது; பெறின் பிரிவு அஞ்சும் - பெற்றக் கால் வரக்கடவ பிரிவினை உட்கொண்டு அதற் கஞ்சாநின்றது; என் நெஞ்சு அறாஅ இடும்பைத்து - ஆகலான், என்னெஞ்சம் எஞ் ஞான்றும் நீங்காத இடும்பையை யுடைத்தாயிற்று.

காதலரைப் பெற்றுவைத்துக் கலவியிழத்தல் உறுதியன் றென்னுங் கருத்தான் வாயினேர்கின்றா ளாகலிற் 'பெறாஅமை யஞ்சு' மென்றும், கலவியாராமையின் இன்னுமிவர் பிரிவராயின் யாது செய்து மென்பது நிகழ்தலிற் 'பெறிற் பிரிவஞ்சு' மென்றும் இவ்விரண்டு மல்லது பிறிதின்மையின் எஞ்ஞான்று 'மறாஅ விடும் பைத்' தென்றுங் கூறினாள். (௫)

௧௨௬௬. தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததென் நெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) என்நெஞ்சு இருந்தது - என்னெஞ்சு ஈண்டிருந் தது; தனியே இருந்து நினைத்தக்கால் - காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான் தன்னோடு நினைத்தக்கால்; என்னைத் தினிய - அவ்வளவறிந்து என்னைத் தின்பதுபோன்று துன்பஞ் செய்தற்கே.

எம்மாட்டிருந்தது, அன்று அவர் கொடுமைகளை உட்கொண்டு எனக்காற்றாமை செய்தற்கே; இன்று அவை நோக்கி அவரோடு புலத்தற்கன் றென்பதாம். (௬)

௧௨௬௭. நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சினுட்டு - தன்னை மறந்த காதலரைத் தான் மறக்க மாட்டாத என்மாட்சிமை யில்லாத மட நெஞ்சுடனே கூடி; நாணும் மறந்தேன் - என்பயிற்சி னுஞ் சிறந்த நாண் தன்னையும்* மறந்துவிட்டேன்.

* ௧௦௧௭ ஆம் குறளுரை.

மாணாமை : ஒருநிலையில் நில்லாமை. மடமை கண்டவழி நினைந்து காணாதவழி மறக்கும் தவற்றைக், காணாத வழி நினைந்து கண்டவழி மறத்தல். நாண் : எஞ்ஞான்றுங் கூடியொழுகினும் அஞ்ஞான்று கண்டார்போன் றொடுங்குதல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையும் 'மறந்தே' னென்றாள். (எ)

கஉசுஅ. எள்ளின் இளிவாமென் றெண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) உயிர்க் காதல் நெஞ்சு-உயிர்மேற் காதலையுடைய என்னெஞ்சு; எள்ளின் இளிவு ஆம் என்று எண்ணி - நம்மை யெள்ளிச் சென்றாரென்று நாமும் எள்ளுவேமாயிற் பின் நமக் கிளிவாமென்று கருதி; அவர் திறம் உள்ளும்- அவர் திறத்தினையே நினையாநின்றது.

எள்ளுதல் : வாயில் மறுத்தல். இளிவு : வழிபடாமையானும், பிரிவாற்றாமையானும், நாணும் நிறையும் முதலிய இழத்தலானும் உளதாவது. திறம் : வாயில் நேர்தலும், வருதலும் கூடலும் முதலாயின. இளிவிற் கஞ்சுதலானும் இறந்துபட மாட்டாமையானும் கூடக் கருதாநின்றதென்பதாம். (அ)

கஉசுசு. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

[உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது.]

(இ - ள்.) துன்பத்திற்கு - ஒருவருக்குத் துன்பம் வந்துழி அது நீக்குதற்கு; தாம் உடைய நெஞ்சம் துணையல்வழி - தாமுரித் தாகப் பெற்ற தம்முடைய நெஞ்சந் துணையாகாவழி; துணையாவார் யாரே - வேறு துணையாவார் ஒருவரு மில்லை.

ஈண்டுத் 'துன்ப' மாவது ஊடலுணர்ப்புவயின் வாராமை. அதற்கு 'நெஞ்சந் துணை'யாகாமையாவது, அவளை அன்பிலளென் றொழியாது கூடற்கண்ணே 'விதும்பல்' ஒரு துணையும் இன்மையின் இஃதுற்றுவிடுதலே உள்ள தென்பதாம். (கூ)

கநூ00. தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி.

[இதுவு மது.]

(இ - ள்.) தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி - தாமுரித் தாக உடைய நெஞ்சம் ஒருவர்க்குத் தமரல்லாவழி; எதிலார் தமர் அல்லர் தஞ்சம் - அயலார் தமரல்லராதல் சொல்லவேண்டுமோ ?

பிறள் ஒருத்தியைக் காதலியென்று கருதி என்னெஞ்சே, என்னை வருத்தாநின்றபின் அப் பிறள் புலக்கின்ற தெளிதென்ப தாம். (௧0)

---

## அதி. ௧௩௧—புலவி

[அஃதாவது, இருவர் நெஞ்சம் புணர்ச்சி விதும்பாது புலக்கக் கருதியவழி ஒருவரோடொருவர் புலத்தல். அதிகாரமுறைமையும் இதனனே விளங்கும்.]

௧௩0௧. புல்லா திராஅப் புலத்தை அவருறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது.

[வாயிலாகச் சென்ற தோழி தலைமகள் வாயில் நேர்தற்பொருட்டு அவளோடு நகையாடிச் சொல்லியது.]

(இ - ள்.) அவர் உறும் அல்லல்நோய் சிறிது காண்கம்-அங்ஙனம் புலந்தாற் காதலரெய்தும் அல்லனோயினை யாஞ்சிறிது காணக் கடவேம்; புல்லாது இராஅப் புலத்தை - நீ அவரை விரைந்து சென்று புல்லாதே இத்தொழிலை மேவிட்டுக் கொண்டிருந்து புலப்பாயாக.

'அல்லனோய்': துன்பத்தைச் செய்யுங் காமநோய். 'சிறி'தென்றாள், புலவியை நீளவிடலாகாதென்பதுபற்றி. 'புலத்தை'யென்புழி ஐகாரம் "கடம்பூண்டொருகால் நீவந்தை"* என்புழிப்போல முன்னிலைவினை விகுதி. புலத்தியென்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக் கண்டு அவள் வழியளாய் நின்று நாமுற்ற வருத்தம் அவருஞ் சிறிதுற்றறிதல் வேண்டுமென நகையாடி நேர்வித்தவாறு. (௧)

௧௩0௨. உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.

[புலவியொழிந்து வாயில் நேரும்வகை அவள் சொல்லியது.]

(இ - ள்.) புலவி உப்பு அமைந்தற்று - புலவி கலவி இன்பம் செயற்கு வேண்டுமளவிற்றாதல், உப்புத் துய்ப்பனவற்றை இன்

* கலித்தொகை - ௭௩.

சுவையவாக்கற்கு வேண்டுமளவிற்றாதல்போலும்; சிறிது நீளவிடல் அது மிக்கற்று - இனி, அதனை அவ்வளவிற் சிறிது மிக விடுதல் அவ்வுப்பு அளவின் மிக்காற்போலும்.

'நீளவிடல்' : அளவறிந்துணராது கலவிமே லெழுந்த குறிப் பழுங்குமளவுஞ் செய்தல் 'சிறிது நீளவிட'லாகாதென்றாள், நேர் விக்கின்றாளாகலின். உப்புமிக்கவழித் துய்ப்பது சுவையின்றானாற் போலப் புலவி மிக்கவழிக் கலவி இன்பமின்று மென்றமையின், இது பண்புவமை. (உ)

கடுOகூ. அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

[பரத்தையரிடத்துநின்றும் வந்த தலைமகனொடு
தலைமகள் புலந்து சொல்லியது.]

(இ - ள்.) தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் - தம்மைப் பெறாது புலந்த மகளிரைப் புலவிநீக்கிக் கலவாது ஆடவர் சேறல்; அலந்தாரை அல்லல்நோய் செய்தற்று - பண்டே துன்ப முற்றழிந் தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும்.

பிறர்பாற்சேறலின் நும்மைப் பெறாது புலந்தாடி இருக்கின்ற பரத்தையரைப் போய்ப் புலவி நீக்கிப் புல்லீராயின் அவராற்றா ரென்பதாம். (கூ)

கடுOச. ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) ஊடியவரை உணராமை - நும்மோடூடிய பரத்தை யரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல்; வாடிய வள்ளி முதல் அரிந்தற்று - பண்டே நீர் பெறாது வாடிய கொடியை அடியிலே அறுத்தாற்போலும்.

நீர் பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வரைக் கண்டாற்றி யிருக்கற்பாலமாய யாம், நும்மோ டூடுதற் குரியமல்லம்; அன்மை யின் எம்மை உணர்த்தல் வேண்டா; உரியரா யூடிய பரத்தை யரையே உணர்த்தல் வேண்டுவது; அதனால், ஆண்டுச் சென்மி னென்பதாம். (ச)

கடுOரு. நலத்தகை நல்லவர்க் கேளர் புலந்தகை
பூவன்ன கண்ணார் அகத்து.

[தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் - நற்குணங்களால் தகுதியுடையராய தலைவர்க்கும் அழகாவது; பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை-தம் பூவன்ன கண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவி மிகுதியன்றே.

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான், 'நலத்தகை நல்லவர்க்கு' மென்றான். அழகு இன்பப் பயனைத் தலைப்படுதல். தானுகர்ந்த துன்பத்திற் கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு. (௫)

௧௩௦௬. துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) துனியும் புலவியும் இல்லாயின் - முதிர்ந்த கலாமாகிய துனியும், இளைய கலாமாகிய புலவியும் இல்லையாயின்; காமம் கனியும் கருக்காயும் அற்று-காமம் செவ்வி முதிர்ந்த பழமும் இளங்காயும் போலும்.

மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவும் இனிமைசெய்யாதாதலின் துனியில்லையாயின் 'கனியற்'றென்றும், கட்டிளைமைத்தாய காய் நுகருஞ் செவ்வித்தன்றாகலின் புலவியில்லையாயிற் 'கருக்காயற்'றென்றுங் கூறினான். இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு. (௬)

௧௩௦௭. ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொல் என்று.

[இதுவு மது.]

(இ - ள்.) புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று-இனிப் புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ வென்று கருதலான்; ஊடலின் ஓர் துன்பம் உண்டு - துன்பத்திற் கின்றியமையாத ஊடலின் கண்ணேயும் ஒரு துன்பம் நிகழும்.

'என்'றென்னும் எச்சத்திற்குக் கருதலானென்பது வருவிக்கப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'கொல்' லென்பதனை நீடுவதென்பதனுடனுங் கூட்டுக. ஆங்கென்பது அசைநிலை. ஊடல் கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு. (எ)

கஉ0அ. நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதலர் இல்லா வழி.

[உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தலைமகளோடு புலந்து சொல்லியது.]

(இ - ள்.) நொந்தாரென்று அஃது அறியும் காதலர் இல்லா வழி - இவர் நம்பொருட்டாக நொந்தாரென்று அந் நோவினை யறியும் அன்புடையாரைப் பெறுவழி; நோதல் மற்று எவன் - ஒருவர் நோகின்றதனாற் பயனென்?

அறிதல்: ஈண் டுடலையினிதுணர்தல். 'மற்று' வினைமாற்றின் கண் வந்தது. இவள் நம் காதலியல்லள்; அன்மையின் இந்நோ வறியாள்; அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயனில்லை யெனத் தன்னாற்றாமை உணர்த்தியவாறு. (அ)

கஉ0கூ. நீரும் நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது.

[இதுவு மது.]

(இ - ள்.) நீரும் நிழலதே இனிது - உயிர்க் கின்றியமையாத நீரும் நிழலின்கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது, புலவியும் வீழுநர்கண்ணே இனிது - அதுபோலக் கலவிக் கின்றியமையாத புலவியும் அன்புடையார்கண்ணே இனிதாவது, ஏனை அன்பிலார்கண் ஆகாது.

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகந் தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர் ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையு முடையராவார். இவள் நம்மாட்டு அவ்விரண்டும் இன்மையின் இப் புலவிதானும் இன்னாதாகாநின்றதென்பதாம். (கூ)

கஉக 0. ஊடல் உணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவேம் என்ப தவா.

[இதுவு மது.]

(இ - ள்.) ஊடல் உணங்க - தானூடற்கண்ணே மெலியா நிற்கவும்; விடுவாரோடு கூடுவேம் என்பது என்னெஞ்சம் அவா - விட்டிருக்கவல்லாரோடு கூடக்கடவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது தன்னவாவே, பிறிதில்லை.

அன்பும் அருளும் இல்லாதாரை உடையரென்றும், அவரோடு யாங் கூடுவமென்றுங் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார் செய

லாகலின், 'கூடுவேமென்பதவா' வென்றான். காரியங் காரணமாக உபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாதென்பதாம். (௧0)

---

## அதி. ௧௩௨—புலவி நுணுக்கம்.

[அது புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது, தலைமகனும் தலைமகளும் ஓரமளிக்கண் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்காரண மில்லையாகவுங் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதொரு காரண முளதாக உட்கொண்டு அதனை அவன்மேலேற்றி அவள் புலத்தல். காரணத்தின் நுணுக்கம் காரியத்தின் மேல்நின்றது. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

௧௩௧௧. பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

[உலாப்போய் வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத் தலைமகள் சொல்லியது.]

(இ-ள்.) பரத்த - பரத்தமையுடையாய்!, பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர் - நின்னைப் பெண்ணியல்பினையுடையார் யாவருந் தம் கண்ணாற் பொதுவாக உண்பர்; நின் மார்பு நண்ணேன் - அதனால் அவர் மிச்சிலாய நின் மார்பினைப் பொருந்தேன்.

கற்பு நாண் முதலிய நற்குணங்க ளின்மையிற் பரத்தையர்க்குள்ளது பெண்ணியற்கை மாத்திரமே யென்னுங் கருத்தாற் 'பெண்ணியலா' ரென்றாள். பொதுவாக உண்டல், தம்சேரிச் செலவின் முறையானன்றி ஒருகாலத் தொருங்கு நோக்குதல்; அதுவுமொரு குற்றம் தாம் நோக்கி இன்புற்றவாறே அவரும் நோக்கி இன்புறுவரென ஆசங்கித்து அவர்பாற் பொருண்மையெய்துதலின், நுணுக்கமாயிற்று. (௧)

௧௩௧௨. ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

[தலைமகன் நீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது.]

(இ-ள்.) ஊடிஇருந்தேமாத் தும்மினார் - யாம் தம்மோடூடி உரையாடா திருந்தேமாகக் காதலர் தும்மினார்; யாம் தம்மை நீடுவாழ்கென்பாக்கு அறிந்து - அது நீங்கித் தம்மை நீடுவாழ்கென் றுரையாடுவேமாகக் கருதி.

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற் றென்பதாம். இயல்பானிகழ்ந்த தும்மலைக் குறிப்பால் நிகழ்ந்ததாகக் கோடலின் நுணுக்கமாயிற்று. (௨)

௧௩௧௩. கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
• காட்டிய சூடினீர் என்று.

[தலைமகள் புலவிக்குறிப்பினைக் கண்டு. நீவிர் கூடியொழுகா நிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.]

(இ - ள்.) கோட்டுப்பூச் சூடினும்-யான் கோடுதலைச் செய்யும் மாலையைச் சூடினேனாயினும்; ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும் - நும்மாற் காதலிக்கப்பட்டாள் ஒருத்திக்கு இப் பூவணி காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளாநிற்கும்; இத் தன்மையாட்கு ஒரு காரணம் வேண்டுமோ?

கோடென்பது முதனிலைத் தொழிற்பெயர்; பூ: ஆகுபெயர்; வளையமாகச் சூடினுமென்பதாம். "கோட்டங் கண்ணியுங் கொடுந் திரை யாடையும்"* என்றார் பிறரும். இனி அம்மருத நிலத்துப் பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப்பூவைச் சூடினேனாயினும் ஆண்டையாள் பிற ளொருத்திக்கு அவ்வேற்றுப்பூவணி காட்டல் வேண்டிச் சூடினீரென்று வெகுளுமெனினும் அமையும். (௩)

௧௩௧௪. யாரினுங் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று.

[இதுவு மது.]

(இ - ள்.) யாரினும் காதலம் என்றேனா-காம நுகர்தற்குரிய இருவராயினார் யாவரினும் யாம் மிக்க காதலையுடையேமென்பது கருதி யாரினுங் காதலமென்றேனாக; யாரினும் யாரினும் என்று ஊடினாள் - நின்தோழி அது கருதாது, என்னாற் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கண் காதலுடையே னென்றேனாகக் கருதி, அம் மகளிர் யாரினும் என்கண் காதலுடையராயினீ ரென்று சொல்லிப் புலந்தாள்.

தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யானன்பு மிகுதியாற் சொல்லியதனைக் கருத்து வேறு படக் கொண்டதல்லது பிறிது காரணமில்லை யென்பதாம். (௪)

௧௩௧௫. இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள்.

[இதுவு மது.]

*புறநானூறு ௨௪௯.

(இ - ள்.) இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனு - காதல் மிகுதியான் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியேமென்று சொன்னேனாக; கண் நிறை நீர்கொண்டனள் - அதனான் எனை மறுமையாகிய பிறப்பின்கண் பிரிவலென்னும் குறிப்பினேனாகக் கருதி, அவள் தன் கண்ணிறைந்த நீரினைக் கொண்டாள்.

வெளிப்படுசொல்லைக் குறிப்புச் சொல்லாகக் கொள்கின்ற தல்லது என்பால் தவறில்லையென்பதாம். (௫)

கங௬௬. உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்
புல்லாள் புலத்தக் கனள். [னைப்

[இதுவு மது.]

(இ - ள்.) உள்ளினேன் என்றேன் - பிரிந்தகாலத்து நின்னை இடையின்றி நினைந்தேன் என்னுங் கருத்தால் யானுள்ளினே னென்றேன்; மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத் தக்கனள்-என, அதனை ஒருகால் மறந்து பின்னினைந்தே னென்ற தாகக் கருதி, என்னை இடையே மறந்தீரென்று சொல்லி முன் புல்லுதற்கமைந்தவள் அஃதொழிந்து புலத்தற்கமைந்தாள்.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. அருத்தாபத்தி வகை யான் மறத்தலை உட்கொண்டு புலந்தாளென்பதாம். (௬)

கங௬எ. வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று.

[இதுவு மது.]

(இ - ள்.) தும்மினேனாக வழுத்தினாள்-கூடியிருக்கின்றவள் யான் தும்மினேனாகத் தன்னியற்கை பற்றி வாழ்த்தினாள்; அழித்து யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள் - அங்ஙனம் வாழ்த்திய தானே மறித்து, நும்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலால் தும்மினீரென்று சொல்லிப் புலந்தழுதாள்.

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின்; 'அழித்' தென் றான். அன்புடையார் நினைத்தவழி அந் நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றுமென்பது மகளிர் வழக்கு. இவ்வழக்கை உள் வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம். (எ)

கங௬அ. தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ என்று.

[இதுவு மது.]

(இ - ள்.) தும்முச் செறுப்ப-எனக்குத் தும்மல் தோன்றிய வழி (யாருள்ளித் தும்மினீ ரென்று புலத்தலை யஞ்சி அதனை யானடக்கினேன்) அங்ஙன மடக்கவும்; நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள்-நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்கலுற்றீரோ என்று சொல்லிப் புலந்தழுதாள்.

'தும்மு' வென்பது முதனிலைத் தொழிற்பெயர். 'செறுப்ப' என்புழி இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. 'எம்மை'யென்பது நும்மோ டியாதும் இயைபில்லாத எம்மை யென்பதுபட நின்ற இசையெச்சம். இதனை வடநூலார் 'காகு' வென்ப. தும்மினுங் குற்றம் ஒழியினும் குற்றமாயக்காற் செயற் பால தியாதென்பதாம். (அ)

௧௩௧௯. தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று.

[இதுவு மது.]

(இ - ள்.) தன்னை உணர்த்தினும் காயும்-இவ்வாற்றான் ஊடிய தன்னை யான் பணிந்துணர்த்துங்காலும் வெகுளாநிற்கும்; பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர் என்று-பிற மகளிர்க்கும் நீர் அவரூடியவழி இவ்வாறே பணிந்துணர்த்து நீர்மையை உடையீராகுதி ரென்று சொல்லி.

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பது பற்றி என்மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன்; பணிய அதுதானும் புலத்தற்கேதுவாய் முடிந்தது; இனி, இவள்மாட்டுச்செய்யத்தகுவ தியாதென்பதாம். (௯)

௧௩௨௦. நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீர் என்று.

[இதுவு மது.]

(இ - ள்.) நினைத்து இருந்து நோக்கினும் காயும்-என் சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றை யொழிந்திருந்து தன்னவயவங்கள தொப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும்; அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று-என் அவயவமனைத்தும் நோக்கினீர் அவற்ற தொப்புமையான் எம் மகளிரை நினைந்தென்று சொல்லி.

யான் எல்லா அவயவங்களானும் ஒருத்தியோ டொத்தல் கூடாமையின் ஒன்றால் ஒருவராகப் பலரையும் நினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யானறியச் சொல்லுமின் என்னுங் கருத்தால், 'அனைத்து நோக்கினீர் யாருள்ளி' யென்றாள். வாளாவிருத்தலும் குற்றமாயிற் றென்பதாம். (௧0)

## அதி. கஙௌ—ஊடலுவகை

[அஃதாவது, அப்பெற்றித்தாய ஊடலால் தமக்குக் கூடலின்பஞ் சிறந்துழி அச் சிறப்பிற்கேதுவாய அவ்வூடலைத் தலைமகள் உவத்தலும் தலைமகன் உவத்தலுமாம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

கஙௌஉக. **இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்**
**வல்ல தவரளிக்கும் ஆறு.**

[தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்ட தோழி அங்ஙனம் நீ புலக்கின்ற தென்னை யென்றாட்கு அவள் சொல்லியது.]

(இ - ள்.) அவர்க்குத் தவறு இல்லையாயினும்-அவர்மாட்டுத் தவறில்லையாயினும்; அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது-நமக்கவர் தலையளி செய்கின்றவாறு அவரோ டூடுதலை விளைக்க வற்றாகின்றது.

'அவர்க்'கென்பது வேற்றுமை மயக்கம். அளவிறந்த இன்பத்தராகலின் யானெய்தற்பாலதாய இத்தலையளிஒழிந்தாரும் எய்துவரெனக் கருதி அது பொறாமையான் ஊடல்நிகழாநின்ற தென்பதாம். (௧)

கஙௌஉஉ. **ஊடலின் தோன்றும் சிறுதுனி நல்லளி**
**வாடினும் பாடு பெறும்.**

[புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க அஃதிழந்து புலவியான் வருந்துவதென்னை யென்றாட்கு அவள் சொல்லியது.]

(இ - ள்.) ஊடலின் தோன்றும் சிறுதுனி-ஊடலேதுவாக நங்கண் தோன்றுகின்ற சிறிய துனிதன்னால்; நல்லளி வாடினும் பாடுபெறும்-காதலர் செய்யும் நல்ல தலையளி வாடுமாயினும், பெருமை யெய்தும்.

தவறின்றி நிகழ்கின்ற ஊடல் கடிதின் நீங்கலின் அத்துன்பம் நில்லாதென்பாள் 'சிறுதுனி'யென்றும் ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்லளி வாடாதென்பாள் 'வாடினு'மென்றும், பின்னே

பேரின்பம் பயக்குமென்பாள் 'பாடுபெறு' மென்றுங் கூறினாள். அது வருத்த மெனப்படா தென்பதாம். (உ)

கஙஉ௩. புலத்தலிற் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னார் அகத்து.

[இதுவு மது.]

(இ-ள்.) நிலத்தொடு நீர் இயைந் தன்னாரகத்துப் புலத்தலின்-நிலத்தொடு நீர் கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர் மாட்டுப் புலத்தல்போல; புத்தேள் நாடு உண்டோ-நமக்கின்பந் தருவதொரு புத்தேளுலகம் உண்டோ? இல்லை.

நீர் தானின்ற நிலத்தியல்பிற்றாமாறு போலக் காதலருந் தாங் கூடிய மகளிர் இயல்பினராகலான் அதுபற்றி அவரோடு புலவி நிகழுமென்பாள் 'நிலத்தொடு நீரியைந் தன்னா ரகத்' தென்றும், அவர் நமக்கும் அன்னராகலின் அப் புலவி பின்னே பேரின்பம் பயவா நின்றதென்பாள் 'புலத்தலிற் புத்தேணா டுண்டோ' என்றுங் கூறினாள். உவமம் பயன்பற்றி வந்தது. (௩)

கஙஉ௪. புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்
உள்ளம் உடைக்கும் படை.

[அப்புலவி இனி யாதான் நீங்குமென்றாட்குச் சொல்லியது.]

(இ-ள்.) புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்-காதலரைப் புல்லிக்கொண்டு பின் விடாமைக் கேதுவாகிய அப்புலவிக கண்ணே உளதாம்; என் உள்ளம் உடைக்கும் படை-அதன் மேற் சென்ற என்னுள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம்.

'புலவியு'ளென்னு மேழாவது வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. என்னுள்ளம் உடைக்கும் படைக்கலமென்றது வணக்கத்தையும் பணி மொழியையும். படைக்கலமென்றாள், அவற்றான் அப்புலவி யுள்ள மழிதலின். புலவி நீங்குந் திறங் கூறியவாறு. (௪)

கஙஉ௫. தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலின் ஆங்கொன் றுடைத்து.

[தலைமகளை ஊடல்நீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது.]

(இ-ள்.) தவறு இலராயினும் தாம் வீழ்வார் மென்றோள் அகறலின்-ஆடவர் தங்கண் தவறிலராயினும் உடையார்போல ஊடப்பட்டுத் தாம் விரும்பும் மகளிருடைய மெல்லிய தோள்களைக்

கூடப்பெறுத எல்லேக்கண்; ஆங்கு ஒன்று உடைத்து-அவர்க்கு அப்பெற்றியதோர் இன்பம் பயத்தல் உடைத்து.

உடையராயக்கால் இறந்த இன்பத்தோடு வரும் இன்பமும் எய்துவராகலின் அது மிக நன்று; மற்றையிலராயக்காலும் வரு மின்பத்தை யிகழ்ந்ததில்லை யென்னும் கருத்தால், 'தவறிலராயி னும்' 'ஆங்கொன்றுடைத்'தென்முன். ஊடலினுய இன்பம் அள விறத்தலிற் கூடற்கரிதென்பான், அப்பெற்றிய தொன்றென்முன். தவறின்றி ஊடியதூஉம் எனக்கின்பமாயிற்றென்பதாம். (ரு)

௧௩௨௬. **உணலினும் உண்ட தறலினிது* காமம்**
**புணர்தலின் ஊடல் இனிது.**

[இதுவு மது.]

(இ- ள்.) உணவினும் உண்டது அறல் இனிது-உயிர்க்கு மேலுண்பதனினும் முன்னுண்ட தறுதல் இன்பம் தரும்; காமம் புணர்தலின் ஊடல் இனிது-அதுபோலக் காமத்திற்கு மேற் புணர்தலினும் முன்னைத் தவறுபற்றி ஊடுதல் இன்பம் தரும்.

காமத்திற் கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத் தால்தொக்கன. பசித்துண்ணும் வழி மிக உண்ணலுமாய் இன் சுவைத்துமாம்; அதுபோல, அகன்று கூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம் பற்றிக் கூறியவாறு. (௬)

௧௩௨௭. **ஊடலின் தோற்றவர் வென்றார் அதுமன்னும்**
**கூடலிற் காணப் படும்.**

[இதுவு மது.]

(இ - ள்.) ஊடலின் தோற்றவர் வென்முர்-காமநுகர்தற் குரிய இருவருள் ஊடலின்கண் தோற்றவர் வென்முராவர்; அது கூடலிற் காணப்படும்-அஃதப்பொழு தறியப்படாதாயினும், பின்னைப் புணர்ச்சியின்கண் அவரால் அறியப்படும்.

'தோற்றவர்' எதிர்தலாற்முது சாய்ந்தவர், அவர் புணர்ச்சிக் கண் பேரின்பம் எய்தலின் 'வென்ரு' ராயினர். மன்னும் உம்மும் அசைநிலை. யானதுபொழுது சாய்தலின் இதுபொழுதுபேரின்பம் பெற்றேனென்பதாம். (எ)

௧௩௨௮. **ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்**
**கூடலில் தோன்றிய உப்பு.**

[இதுவு மது.]

---

*குறள் - ௬௪௨.

(இ - ள்.) நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு-இதுபொழுது இவள் நுதல் வெயர்க்கும் வகை கலவியின்கண் உளதாய இனிமையை; ஊடிப் பெறுகுவங் கொல்லோ-இன்னும் ஒருகால் இவளூடி யாம் பெறவல்லேமோ?

கலவியது விசேடம்பற்றி 'நுதல் வெயர்ப்ப' என்றான். இனிமை கண்டு கேட் டுண் டுயிர்த் துற்றறிதலாகிய இன்பம். இனி அப்பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு. (அ)

௧௩௨௯. ஊடுக மன்னோ ஒளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ இரா.

[இதுவு மது.]

(இ - ள்.) ஒளியிழை ஊடுக மன்-ஒளியிழையினை உடையாள் இன்னும் எம்மோ டூடுவாளாக; யாம் இரப்ப இரா நீடுக மன்-அங்ஙனம் அவளூடி நிற்றற்கும் அதனை உணர்த்துதற் பொருட்டு யாமிரந்து நிற்றற்கும் காலம் பெறும்வகை இவ்விரவு விடியாது நீட்டித்தல் வேண்டும்.

'ஊடுக' 'நீடுக' என்பன வேண்டிக்கோடற் பொருள. 'மன்' இரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலே அமையுமென்பதாம். (௯)

௧௩௩௦. ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

[இதுவு மது.]

(இ - ள்.) காமத்திற்கு இன்பம் ஊடுதல்-காம நுகர்ச்சிக் கின்பமாவது அதனை நுகர்வதற்குரியராவார் ஆராமைபற்றித் தம்முளூடுதல்; அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின்-அவ்வூடுதற் கின்பமாவது, அதனை அளவறிந்து நீங்கித் தம்முட் கூடி முயங்குதல் கூடுமாயின், அம் முயக்கம்.

'கூடுதல்' ஒத்தவளவினராதல். முதிர்ந்த துனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும் இரண்டற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதல் அரிதென்பதுபற்றிக் 'கூடி முயங்கப்பெறி' னென்றான். அவ்விரண்டின்பமும் யான் பெற்றேனென்பதாம். (௧௦)

* குறள் - ௧௧0௧.

ஈண்டுப் பிரிவினை வடநூல்மதம்பற்றிச் செலவு, ஆற்றாமை விதுப்புப் புலவியென நால்வகைத்தாக்கிக் கூறினார். அவற்றுட் செலவு பிரிவாற்றாமை யுள்ளும்; ஆற்றாமை படர்மெலிந்திரங்கல் முதல் நிறையழித லீறாயவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின்விதும்பன் முதற் புணர்ச்சிவிதும்ப லீறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடு புலத்தல்முதல் ஊடலுவகை யீறாயவற்றுள்ளும் கண்டுகொள்க. அஃதேல், வடநூலார் இவற்றுடனே சாபத்தினாய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத்தென்றாராலெனின், அஃது, அறம்பொருளின்ப மென்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவன்மையானும், முனிவராணையான் ஒருகாலத் தொருகுற்றத் தளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண்டொழிக்கப் பட்டதென்க.

## கற்பியல் முற்றிற்று.

## காமத்துப்பால் முற்றிற்று.

## திருவள்ளுவர் பரிமேலழகருரை முற்றுப்பெற்றது.

———

## உரைச் சிறப்புப் பாயிரம்

திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தம்
கருத்தமைதி தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனெனும்
மன்னு முயர்நாமன் வந்து.

பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
தெரித்தவுரை யாமோ தெளி.

---

திருக்குறளின் சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை

---

*அசரீரி*

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—இருக்க
உருத்திர சன்மர் எனவுரைத்து வானில்
ஒருக்கஉ என்றதோர் சொல்.

(பொழிப்புரை.) *அருட்செல்வத்தையும் அதற்குத்தக்க தெய்வத் தன்மையையுமுடைய திருவள்ளுவரோடு, அவரிருத்தற்குத் தனது உருவத்தினாலே தக்க நல்ல சங்கப்பலகையிடத்து உருத்திர சன்மர் ஒருவரே ஒப்பவேறி யிருக்க வென்றுகூறி, விண்ணிலிருந்து அவ்விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம் ஒற்றுமை செய்யும்படி ஒரு வாக்கியம் 'ஓ'வென்று இரைந்தெழுந்தது.* (க)

**நாமகள்**

நாடா முதல்நான் மறைநான் முகன்நாவிற்
பாடா இடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
எள்ளிய வென்றி இலங்கிலைவேல் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(பொ - ரை.) *பகைவரைப் புறங்கொடுக்கச்செய்து இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளங்காநின்ற இலைபோலும் வேற்படையையுடைய பாண்டிய மன்னனே! உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும் வழியை நாடி, படைப்புக்காலத்திலே அயனது நாவிலிருந்து இருக்கு முதலாகிய நான்கு வேதங்களையும் பாடி, நடுவான காலத்திலே பாரதமாகிய வேதத்தைக்கூறினேன், அதற்குப் பிற்பட்ட இக்காலத்திலே என் வாக்குத் திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லிய வள்ளுவன் வாயின்கண்ணதாயிற்று.* (உ)

இறையனார்

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

(பொ - ரை.) புலவர்க்கரசனாகிய வள்ளுவன் வாயிற் பிறந்த திருக்குறளானது, எக்காலத்துந் தன்னழகு கெடாது நெடுங் காலங் கழியினும் நிலைபெற்று மலர்ந்து தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் விளங்குமாதலால், குறைவுபடாத செய்ய தளிர் களையுடைய கற்பகத்தினது கடவுள் தன்மை பொருந்திய உயர் வாகிய மலர்போலும். (௩)

உக்கிரப்பெருவழுதியார்

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்.
[தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த-நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சம்
சிந்திக்க கேட்க செவி.

(பொ - ரை.) நான்முகத்தான் தன்னுரு மறைந்து திருவள் ளுவனாகத் தோன்றி நான்கு வேதங்களின் உண்மைப்பொருளை அறம் பொருள் இன்ப மென்னும் முப்பாற்பொருளாகத் தமிழில் தந்து கூறிய திருக்குறளாய திருமுறையை (என்) தலை வணங்குக வாய் துதிக்க, நல்ல மனம் தியானிக்க, காது கேட்க. (௪)

கபிலர்

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

(பொ - ரை.) மனையில் வளர்க்கப்படுகின்ற பறவைப்பேடு கள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம் பொருந்திய நாட்டையுடைய மன்னனே! திருவள்ளுவரால் அருளப்பட்ட குறள்வெண்பா மிகப் பெரிய பொருளைத் தன்னுட்கொண்டு காட்டு தல், தினையரிசியினளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின் கணுள்ள பனிநீர்உயர்ந்த பனையினளவான அதன் சாயலைத் தன் னுட்கொண்டு காட்டுங் குணம்போலுங் குணத்தை யுடைத்து. (ரு)

**பரணர்**

மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞாலம் முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து.

(பொ - ரை.) *திருமாலுங் குறளாய்ப் பிறந்து வளர்ந்து இரண்டு பெரிய அடிகளால் உலகமனைத்தையும் விரும்பி அளந்தான்; மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும் தம்மினின்றுந் தோன்றி அந்நிலை நிற்கின்ற வெண்பாக்குறளின் இரண்டு சிறிய அடிகளால் அவ்வுலக மனைத்திலும் உள்ளோரால் நினைக்கப்பட்டவற்றையெல்லாம் ஆராய்ந்து அளந்தார்.* (சு)

**நக்கீரர்**

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனா அறமுதலா அந்நான்கும்—ஏனோருக்
கூழி னுரைத்தாற்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்றும் மற்று.

(பொ - ரை.) *தானே அனைத்தையும் அறிந்து, தண்ணிய தமிழின்கண் குறள்வெண்பாக்களால் விட்டு நீங்குதல் கூடாத அறம் முதலாகிய அந்நான்கு பொருள்களையும் அவற்றை யறியாதவர்களுக்கு அவர் எளிதினறிய முறையாற் சொல்லியருளிய திருவள்ளுவருக்கும், ஒள்ளிய நீரைத் தந்த மேகத்துக்கும், இவ்வுலகம் எதிர்நன்றி யாது செய்யும்? (ஒன்றும் இல்லை) அவரும் அதுவும் வாழ்க.* (எ)

**மாமூலனார்**

அறம்பொருள் இன்பம்வீ டென்னும்அந் நான்கின்
திறம்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவன் என்பானோர் பேதை அவன்வாய்ச்சொற்
கொள்ளார் அறிவுடை யார்.

(பொ - ரை.) *அறம் முதலாகச் சொல்லப்பட்ட நான்கனது கூறுபாட்டையும் தெரிந்து உலகத்தார்க்குச் சொல்லிய தேவனை மறந்தாயினும் ஒரு மனிதனாக உட்கொண்டு வள்ளுவனென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின், அவன் அறிவில்லாதவனாவன்; அவனது வாயிற்பிறந்த அச்சொல்லை அறிவுடையார் கொள்ளார்.*

### கல்லாடர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றெனப ஆறு சமயத்தார் — நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

(பொ - ரை.) அறுவகை மதத்தோரும் ஒரு மதத்தார் தமது நூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய பொருள்கள் ஒன்றேயென்று நாட்டுவராயின், மற்றொரு மதத்தார் தம் நூலிலே அதனை மறுத்து அவை வேறு மென்று நாட்டுவர்; அப்படி வேறென்று நாட்டின், பின்னொரு மதத்தார் அதனை அன்றென்று மறுப்பர்; (ஆதலால், மத நூல்களெல்லாம் இவ்வாறு முரண்படுகின்றன;) திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்ட குறளை நன்றென்று கொள்ளுதற்கு எவ்வகைப்பட்ட பகுதியோரும் உடன்படுவர். (கூ)

### சீத்தலைச்சாத்தனார்

மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்
மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும்—மும்மாவும்
தாமுடைய மன்னர் தடமுடிமேல் தாரன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

(பொ - ரை,) பாக்களின் முறைதெரிதற்கிடனாகிய திருவள்ளுவர்தம் திருக்குறளானது, கொல்லிமலை நேரிமலை பொதிய மலை எனப்படுகின்ற மூன்று மலைகளையும், குடநாடு புனனாடு தென்னாடு எனப்படுகின்ற மூன்று நாடுகளையும், பொருநை காவிரி வைகை எனப்படுகின்ற மூன்று ஆறுகளையும், கருவூர் உறையூர் மதுரை எனப்படுகின்ற மூன்று ஊர்களையும், மங்கலமுரசு வெற்றி முரசு கொடை முரசு எனப்படுகின்ற மூன்று முரசுகளையும், இயல் இசை நாடகம் எனப்படுகின்ற மூன்று தமிழ்களையும், விற்கொடி புலிக்கொடி மீனக்கொடி எனப்படுகின்ற மூன்று கொடிகளையும், கனவட்டம் பாடலம் கோரம் எனப்படுகின்ற மூன்று குதிரைகளையும் தாம் முறையேயுடைய சேர சோழ பாண்டியர் எனப்படுகின்ற மூவரசருடைய பெரிய முடிகளின்மேலுங் கொள்ளப்பட்ட மாலையன்றோ? (கoo)

### மருத்துவன் தாமோதரனார்

சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

(பொ - ரை.) தன் பகையென வெகுண்டு மலையைக் குத்து கின்றபெரிய களிறுபோலுள்ள அரசனே, சீந்திநீர்ச் சருக்கரையை யும் சிதைக்கப்பட்ட சுக்கையும் தேனோடு கலந்து மோந்தபின் அதனால் தலைக்குத்துடையோர் யாவர்க்கும் தலைக்குத்து இல்லை யாகும்: திருவள்ளுவர் அருளிய திருக்குறளினாலே சீத்தலைச் சாத்தனார்க்குத் தலைக்குத்து இல்லையாயிற்று. (கக)

## நாகன் தேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று—வாளாதாம்
அப்பால் ஒருபாவை ஆய்பவோ வள்ளுவனார்
முப்பால் மொழிமூழ்கு வார்.

(பொ - ரை.) நாளத்தோடு பொருந்திய தாமரைமலர்களை யுடைய ஒரு குளத்துநீரின்கண்ணே மூழ்குவோர் வேறு தண்ணீரை விரும்பா தொழிதல் வியப்பைச் செய்வதன்று; திருவள்ளுவரது முப்பால்களையுடைய நூலின்கண்ணே தோய்பவர் தாம் வீணாக அப்பால் ஒருநூலை விரும்புவரோ? (விரும்பார்.) ஆதலின் இதுவே, வியப்பைச் செய்வது. (கஉ)

## அரிசில் கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தோறும் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

(பொ - ரை.) வேதத்திலே பலவகையாகப் பரவிக்கிடக்கும் எல்லாப்பொருள்களையும் இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு, வேறாகப் பிரித்து, அது அது தனது தனது வகையோடு சேரும்படி சுருங்கிய சொல்லால் பொருள்விளங்க விரிவாகச் சொல்லுதல் வல்லார் வள்ளுவரல்லது ஒருவருமில்லை. (கங)

## பொன்முடியார்

கானின்ற தொங்கலாய்! காசிபனார் தந்ததுமுன்
கூநின் றளந்த குறளென்ப—நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாநின் றளந்த குறள்.

(பொ - ரை.) மணந்தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டிய மன்னனே! முன் காசிபராலே தரப்பட்ட குறளை, மண்ணின் கண்ணே நின்று உலகத்தை அளந்த குறளென்று சொல்லுவர். தாம் இங்கே எழுந்தருளித் திருவள்ளுவராலே தரப்பட்ட குறள், நூலின் முறையோடுகூடி விண்ணின்கண்ணே நின்றும் மண்ணின் கண்ணே நின்றும் உலகத்தை அளந்தது. (கச)

கோதமனார்

ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்—ஏட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று.

(பொ - ரை.) மறையோர்கள் நான்கு வேதங்களையும் வாய்ப்பாடமாகக் காப்பாற்றி எட்டின்கண் எழுதி வைத்தால் வலியில்லாரும் ஓதுவராகலின் அவற்றின் வலிமை குறையுமென்று எட்டின்கண் எழுதார்; திருவள்ளுவரது திருக்குறளை எட்டின்கணெழுதி வைத்து வலியுடையவரும் வலியில்லாரும் ஓதினாலும் வலிமை குறைதலில்லை. (கரு)

நத்தத்தனார்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

(பொ -ரை.) பாயிர நான்கதிகாரங்களோடு சேர்ந்து தொகையாகிய அரிய ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களையும்ஓதியுணர்ந்த பின்பு, போய் ஒருவரது வாயாலே கேட்டறிதற்கு நூலுளவோ? (இல்லை;) நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியோராகிப் பிறர் தம்மிடத்து வந்துகேட்க வீற்றிருக்கலாம். (கசா)

முகையலூர் சிறுகருந்தும்பியார்

உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்ததனைத்
தெள்ளுதல் அன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வார்
எப்பா வலரினும் இல்.

(பொ - ரை.) திருவள்ளுவரது திருக்குறளின் மேற்பட்ட நூலொன்று உளதென்று சொல்லவல்லவர் எவ்வகைப்பட்ட புலவருள்ளும் இல்லை! (ஆதலால்) நாம் இந்நூலைக் குறித்துச் செயக்கடவன, நாம் இதன் பொருளைச் சிந்தித்துக்கொள்ளுத லும், சிந்தித்துப் பிறருக்கு அதனைச் சொல்லுதலும், பிறராலே சொல்லப்பட்ட அதனைத் தெளிதலும் அல்லவா? (கஎ)

ஆசிரியர் நல்லந்துவனார்

சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி உரைத்த பொருளெல்லாம்—தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலரொப்பார்
எப்பா வலரினும் இல்.

(பொ - ரை.) அறிவுடையோராற் சொல்லப்பட்ட பல நூல் களாலும் தப்பாத அரியவேதத்தினாலும் காப்பாற்றி வைத்திருந்து உலகத்தார்க்குச் சொல்லப்பட்ட பொருள்களெல்லாம் தன்னி டத்தே காட்டும்படி திருக்குறளைச் சொல்லிய திருவள்ளுவரை ஒப்பார், எவ்வகைப்பட்ட பாவலருள்ளும் இல்லை. (கஅ)

கீரந்தையார்

தப்பா முதற்பாவால் தாமாண்ட பாடலினான்
முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்—எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

(பொ - ரை.) எவ்விடத்திலும் கூர்மைவைத்த சிறப்புப் பொருந்தியவேலையுடைய பாண்டியன் மனமகிழச்சொல்லப்பட்ட பொருள் வழுவாமல் முதன்மையுடைய பாவாகிய குறள் வெண் பாக்களாலே தாம் மாட்சிபெற்ற பாடல் தொழிலினாலே மூன்று பால்களிலே அற முதலிய நான்கு பகுதிப்பொருளையும் அருளிய வர் கடவுள் தன்மையுடைய திருவள்ளுவநாயனார் (கக)

சிறுமேதாவியார்

வீடொன்று பாயிரம் நான்கு விளங்கறம்
நாடிய முப்பத்து மூன்றொன்றாழ்—கூடுபொருள்
எள்ளில் எழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

(பொ - ரை.) திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகாரவகை, பாயிரம் நான்கதிகாரத்தையுடைத்து; அறம் முப்பத்துமூன்றதிகாரத்தையுடைத்து; ஊழ் ஓரதிகாரத்தையுடைத்து; பொருள் எழுபததிகாரத்தையுடைத்து; காமம் இருபத்தைந்ததிகாரத்தை யுடைத்து. (உ0)

நல்கூர்வேள்வியார்

உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்
மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

(பொ - ரை.) வடமதுரைக்கு அப்பக்கத்தைக் குறித்துச் சென்றோனாகிய உமாதேவியினது தோளைமணந்த கடவுளை ஆதாரமென்று சொல்லுவர்; நீர்வளத்தையுடைய தென்மதுரைக்கு இப் பக்கம் மாதாநுபங்கி யெனப்படுகின்ற குற்றமற்ற புலமையாகிய தேனைச் சொரிகின்ற செவ்விய நாவாகிய மலரையுடையவரை (வள்ளுவரை) ஆதாரமாகக் கூறுவர்.

உபகேசி நப்பின்னை யென்றும், அவள் தோள் மணந்தான் கண்ணபிரான் என்றும் உத்தரமாமதுரை அவன் அவதரித்த வடமதுரையென்றும், மாதாநுபங்கி செருக்கொழிதலுடையான் என்றும் பொருள் கூறுவர். (உக)

தொடித்தலைவிழுத்தண்டினார்

அறநான் கறிபொருள் ஏழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலும் மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலும் ஒழிந்த பொருள்.

(பொ - ரை.) பாயிரம், இல்லறம், துறவறம், ஊழெனஅறப்பாலின் உட்பிரிவுகள் நான்கும்; அரசு, அமைச்சு, அரண், கூழ், படை, நட்பு, ஒழிபென அறியப்பட்ட பொருட்பாலின் உட்பிரிவுகள் எழும்; ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று, அவ்விருபாற் கூற்றெனக் காமத்துப்பாலின் உட்பிரிவுகள் மூன்றுமாகப் பகுதி செய்து பெறுதற்கரிய அறம் பொருள் இன்பம் வீடு எனப்படுகிற நான்கு பொருளையும் சொல்லிய பெருநாவலரே அவற்றுளடங்காது ஒழிந்த பொருள் உளதாயின் அதனை நன்றாக அறிய வல்லவர் போலும்! (உஉ)

### வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை
இதற்குரியர் அல்லாதார் இல்.

(பொ - ரை.) ஒருவராலே செய்யப்படாத மொழியாகிய வேதத்துக்கும், திருவள்ளுவரால் அருளப்பட்ட தன் வழியி னொழுகுவோர்க்குப் பயன்விளைவிலே பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும் பொருளொன்றே; ஆராயுங்கால் செய்யப்படாத அவ்வேத மோதுதற்குரியவர் அந்தணரே; பொய்படாத இத்திருக் குறளோதுதற்கு உரியவரல்லாதார் உலகத்தி லில்லை. (௨௩)

### மாங்குடி மருதனார்

ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதோ றுள்ளுதோ றுள்ளம் உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

(பொ - ரை.) திருவள்ளுவரது வாயினின்றுந் தோன்றிய திருக்குறளின் மாட்சியைச் சொல்லின், அஃது ஓதப்படுதற்கு எளிய சொற்களை உடையதாகியும், அறியப்படுதற்கு அரிய பொருள் களை உடையதாகியும், வேதமெனப்படுகின்ற பொருளாகியும், அவ் வேதத்தின் மிக விளங்கி, குற்றமற்றோர்கள் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அவர்களுடைய மனத்தைக் கரைக்கும். (௨௪)

### எறிச்சலூர் மலாடனார்

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

(பொ - ரை.) திருவள்ளுவ நாயனார் அவ்வேதத்தின் கருத் துக்களை ஆராய்ந்து, தம்மாலே செய்யப்பட்ட நூலினது திறத் திற்குத் தக்க நன்மையுடைமையால் இவையே உரியவை யென்று தெரிந்து, அறத்துப்பாலைப் பாயிரம் நான்கதிகாரமும், இல்லற

வியல் இருபததிகாரமும், துறவறவியல் பதின்மூன் றதிகாரமும், ஊழ் ஓரதிகாரமுமாக நால்வகையுடைத்தாகக் கூறினர். (உரு)

போக்கியார்

அரசியல் ஐயைந் தமைச்சியல் ஈரைந்
துருவல் அரணிரண்டோன் றேண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றேண்போருள் ஏழாம் இவை.

(பொ - ரை.) எண்ணப்பட்ட பொருட்பால் அரசியல் இருபத்தைந்ததிகாரமும், அமைச்சியல் பத்ததிகாரமும், அரணியல் இரண்டதிகாரமும், பொருளியல் ஓரதிகாரமும், படையியல் இரண்டதிகாரமும், நட்பியல் பதினேழதிகாரமும், ஒழிபியல் பதின்மூன்றதிகாரமுமாகிய இவ்வியல்கள் ஏழுடைத்து. (உசு)

மோசி கீரனர்

ஆண்பால்ஏழ் ஆறிரண்டு பேண்பால் அடுத்தன்பு
பூண்பால் இருபாலோர் ஆருக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்ருகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனர் நன்கு.

(பொ - ரை.) பெயர்பெற்ற திருவள்ளுவர் ஆண்பாற்கூற்று ஏழதிகாரமும், பெண்பாற்கூற்றுப் பன்னிரண்டதிகாரமும், ஒருவரை ஒருவர் அடுத்து அன்பைப் பூணுதற்பகுதியுடைய அவ்விரு பாற்கூற்று ஆறதிகாரமுமாக, மாட்சியான காமத்துப்பாலின் இயல்கள் மூன்ருக நன்கு கூறினர். (உஎ)

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனர்

ஐயாறும் நூறும் அதிகாரம் மூன்றுமா
மேய்யாய வேதப் போருள்விளங்கப்—போய்யாது
தந்தான் உலகிற்குத் தான்வள் ளுவனுகி
அந்தா மரைமேல் அயன்.

(பொ - ரை.) அழகிய தாமரைமலர்மேல் வீற்றிருக்கும் நான்முகக் கடவுள்தான் திருவள்ளுவனுகி, அதிகாரம் நூற்றுமுப்பத்துமூன்ருக, வடமொழியிலிருந்த மெய்யாகிய வேதப்பொருள் பொய்யுருது விளங்கும்பொருட்டு, உலகத்தார்க்குத் தமிழிற் செய்து தந்தான். (உஅ)

### மதுரைத் தமிழ்நாகனார்

எல்லாப் பொருளும் இதன்பா லுளஇதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்—சொல்லால்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

(பொ - ரை.) பலவகை நூல்களாலும் சொல்லப்பட்ட எல்லாப் பொருளும் இந்நூலகத் தடங்கியிருக்கின்றன; இதனிடத்தில்லாத யாதொரு பொருளும் எந்நூலகத்தும் இல்லை; (ஆதலால்) சொல்லளவினாலே விரிந்த நூல்களாற் பயன் யாது? திருவள்ளுவராலே தரப்பட்ட இந்நூலொன்றே மண்ணுலகத்தாருக்குத் துணையாதலமையும். (உக)

### பாரதம் பாடிய பெருந்தேவனார்

எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர் தாம் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

(பொ - ரை.) பாரதம் சீராமகதையையும், மனுமிருதி பழைய வேதத்தையும் ஒப்பனவாகும்; எவ்வகைப்பட்ட பொருள்களையும் எவ்வகையோரும் அவற்றின் தன்மையோடு அறிய அவர்க்குச் சொல்லும்படிக்குத் திருவள்ளுவர் சொல்லால் வந்த திருக்குறளுக்கு உவமானமாகத்தக்கது வேறொன்றுமில்லை. (ஙo)

### உருத்திரசன்மகண்ணர்

மணற்கிளைக்க நீரூறும் மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்கும் தாய்முலை ஒண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்
காய்தோறும் ஊறும் அறிவு.

(பொ - ரை.) மணலைத் தோண்டுந்தோறும் நீர் பெருகும்; புதல்வர்கள் வாய்வைத்து உண்ணுந்தோறும் தாயினது முலைக்கண் நல்ல பால் பெருகும்; அவைபோல, பிணங்குதற்கு ஏதுவில்லாத வாய்மைச் சொல்லையுடைய திருவள்ளுவரது திருக்குறளை ஆராயுந்தோறும் அறிவுடைய புலவர்க்கு அறிவு வளரும். (ஙக)

### பெருஞ்சித்திரனார்

ஏதமில் வள்ளுவர் இன்குறள்வெண் பாவினால்
ஓதிய ஒண்பொருளை எல்லாம்—உரைத்ததனால்
தாதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன.

(பொ - ரை.) பொடியோடு விரிந்த பூமாலையையுடைய பாண்டியனே! குற்றமில்லாத திருவள்ளுவர் இனிய குறள் வெண் பாக்களே நான்கு வேதங்களாலுஞ் சொல்லப்பட்ட ஒள்ளிய பொருள்களையெல்லாங் கூறினமையால், மேம்பாட்டுக்குத்தக்கவை அக்குறள் வெண்பாக்களோ? முதனூலாய் நின்று அவற்றைப் பயந்த வேதங்களோ? நீ சொல்வாயாக. (௩௨)

### நரிவெரூஉத்தலையார்

இன்பம் பொருளறம் வீடென்னும் இந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல்—மன்பதைகட்
குள்ள அரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

(பொ - ரை.) திருவள்ளுவர், இன்ப முதலிய இந் நாற் பொருள் இயல்புகளையும் மக்கட்பரப்புக்கு அக்காலத்தில் அறியும் வண்ணம் சொல்லப்பட்ட பழமொழி வேதமானது ஓதியுணரப் படுதற் கரிதன்று, அவற்றை உலகத்தார் எளிதின் உணரும்படி திருக்குறளைக் கூறினார். (௩௩)

### மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கிருள்மா லைக்கும் பெயர்.

(பொ - ரை.) உலகின்கண்ணே புலவரெனத் திருவள்ளுவரை யன்றி வேறு சிலரையும் புலவரென்று சொல்லுதல், மாலையென் பது நிலவால் விளங்குகின்ற அந்திக்கும் பெயராக மற்றும் சூழ்கின்ற இருளையுடைய அந்திக்கும் பெயராகச் சொல்லுதல் போலும். (௩௪)

### மதுரை யறுவைவாணிகன் இளவேட்டனார்

இன்பமும் துன்பமும் என்னும் இவையிரண்டும்
மன்பதைக் கெல்லாம் மனமகிழ—அன்பொழியா
துள்ளி உணர உரைத்தாரே ஓதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

(பொ - ரை.) *புகழ்படுஞ் சீரையுடைய திருவள்ளுவர், பின் வரக்கடவனவாய சுகமும் துக்கமும் என்னப்பட்ட இவற்றினுடைய இருவகைக் காரணங்களையும் ஆராய்ந்தறியவும், தம்மேலன்பு நீங்காமல் உள்ளங்களிகூரவும் திருக்குறளை மக்கட் பரப்புக்கெல்லாம் வாயுறை வாழ்த்தாகக் கூறினார்.* (ருரு)

### கவிசாகரப் பெருந்தேவனார்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்
ஆவிற் கருமுனியா யானைக்—கமரரும்பல்
தேவில் திருமால் எனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

(பொ - ரை.) *மலர்களுக்குள்ளே தாமரை மலரும், பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன்னும், பசுக்களுக்குள்ளே காமதேனுவும், யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவர்களுக்குள்ளே திருமாலும்போல, நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள் வெண்பாச் சிறந்தது என்று அறிவுடையார் சொல்லுவர்.* (ருசு)

### மதுரைப் பெருமருதனார்

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தால் தெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்
ஓதவழுக் கற்ற துலகு.

(பொ - ரை.) *திருவள்ளுவர் அறத்தின் கூறுபாடு முப்பத்தெட்டதிகாரங்களாலும், பொருட்கூறுபாடு எழுபததிகாரங்களாலும், காமத்தின் கூறுபாடு இருபத்தைந்ததிகாரங்களாலும் தெளியும்பொருட்டு, காரணகாரிய ஒழுங்கால் வேதத்தின் உயர்வாகிய பொருளைக் குறள்வெண்பாக்களாலே ஓதலால், உலகமானது வழுவுதலினின்றும் நீங்கிற்று.* (ருஎ)

### கோவூர்கிழார்

அறமுதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநேர் ஒவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

(பொ - ரை.) அறமுதலிய நான்கு பொருள்களையும் அகன்ற உலகத்துள்ளோரெல்லாம் வகைப்பட ஆராய்ந்து தெளியும் பொருட்டுக் குறள்வெண்பாக்களாலே சொல்லப்பட்ட திருவள்ளுவ நாயனாரின் முப்பால்களையுடைய புத்தகத்தின்கண்ணே முற்காலத்துள்ள பெரியோரின் நூல்களுக்கு நேர்தல் பொருந்தாது. (ருஅ)

### உறையூர் முதுகூற்றனார்

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயிலில்லை சொற்சுவை ஓர்வில்லை மற்றும்
செயலில்லை என்னும் திரு.

(பொ - ரை.) தெய்வத்தன்மையாற் சிறந்த திருவள்ளுவரது குறள்வெண்பாக்களோடு கூடிச் சிறந்து தோன்றுகின்ற முப்பால்களையும் ஓதாரது வாக்கிற்கு இன்சொற் சொல்லிவாழ்தல் உண்டாகாது; மனத்திற்குச் சொற்களின் சுவையை அறிதல் உண்டாகாது; இவையன்றியும் காயத்துக்கு நல்ல செயலுண்டாகாது என்று நினைத்துத் திருமகள் அவரிடத்துச் சேராள். (ருக)

### இழிகட் பெருங்கண்ணனார்

இம்மை மறுமை இரண்டும் எழுமைக்கும்
செம்மை நெறியில் தெளிவுபெற—மும்மையின்
வீடவற்றின் நான்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடினர் இன்குறள்வெண் பா.

(பொ - ரை.) இகபரங்கட்காவன இரண்டையும் வினைப்பயன் தொடர்தற்குரிய எழு பிறப்பிற்குமாகச் செவ்வையான வழியால் யாவரும் தெளிதல் பெறவும், அறம் பொருள் இன்பமென்னும் முப்பால்களுள் அம் முப்பாற் பொருள்களோடு வீடுமாகிய நாற்பொருள்களின் விதிகளும் வழங்கவும், திருவள்ளுவ நாயனார் இனிய குறள்வெண்பாவைப் பாடினர். (சுo)

செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்

ஆவனவும் ஆகா தனவும் அறிவுடையார்
யாவரும் வல்லார் எடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமும் செப்பியவே செய்வார்
பொருவில் ஒழுக்கம்பூண் டார்.

(பொ - ரை.) மக்களுக்கு ஆவனவற்றையும் ஆகாதவற்றையும் அறிவுடையார் யாவரும் இதிலிருந்து எடுத்துச்சொல்லுதற்கு வல்லவராவார்; ஆதலால், தேவராகிய திருவள்ளுவராலே சொல்லப்பட்டவற்றையே ஒப்பில்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டவர் செய்வார். (சுக)

செயலூரர்க் கொடுஞ்செங்கண்ணர்

வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்
ஓதத் தமிழால் உரைசெய்தார்—ஆதலால்
உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் உண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

(பொ - ரை.) வேதத்தின் பொருளை உலகத்தார் ஓதியுணரும் பொருட்டு உபாயத்தால் விரித்துத் தமிழ்மொழியினாலே சொல்லியருளினார்; ஆதலால், நினைப்பவர் நினைக்கும் பொருள்களெல்லாம் திருவள்ளுவர் திருவாயிற் பிறந்த திருக்குறளின் கண்ணே உண்டென்று அறிவுடையோர் சொல்லுவர். (சுஉ)

வண்ணக்கஞ் சாத்தனார்

ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேதம் உடைத்துத் தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து.

(பொ - ரை.) வடமொழி வேதமுடைத்து; தமிழ்மொழி திருவள்ளுவ நாயனார் சொல்லிய குறட்பா உடைத்து; ஆதலால், வடமொழியையுந் தென்மொழியையும் ஆராய்ந்து இதைக்காட்டிலும் இது சிறப்புடைத்தென்று ஒன்றைத் தெரிந்து சொல்லுதல் கூடாது.

(சுஙு)

களத்தூர்கிழார்

ஒருவர் இருகுறளே முப்பாலின் ஓதும்
தருமமுதல்நான்கும் சாலும்—அருமறைகள்
ஐந்தும் சமயநூல் ஆறும்நம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

(பொ - ரை.) இருக்குமுதற் பாரதம் ஈறாகிய அரியவேதங்கள் ஐந்தும் அவ்வேதத்தின் வழிப்பட்ட சமய நூல்கள் ஆறும் நம்முடைய திருவள்ளுவரால் உலகத்தார்க்குப் புத்தியாகச்சொல்லப்பட்ட நூலிலடங்கும்; ஆதலால், ஒருவர் ஒரு விகற்பமும் இரு விகற்பமுமாகிய இருவகைக் குறள்களையுமே முப்பால்களில் மனனஞ்செய்து அறியப்படுகின்ற அறமுதலிய நாற்பொருள்களும் அவருக்குப் போதும். (சஅ)

நச்சுமனார்

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழக்கில் வனப்பணி வண்ணம்—இழுக்கின்றி
என்றெவர் செய்தன எல்லாம் இயம்பின
இன்றிவர் இன்குறள்வெண் பா.

(பொ - ரை.) எழுத்து முதல் வண்ணமீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள் வழுவுதலில்லாமல் எக்காலத்தில் எவரால் எவை செய்யப்பட்டன, அவையெல்லாம் இக்காலத்து இத் திருவள்ளுவராலே செய்யப்பட்ட இவ்வினியகுறள்வெண்பாக்களிற் சொல்லப்பட்டன. (சரு)

அக்காரக்கனி நச்சுமனார்

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணின்
நிலைநிரம்பும் நீர்மைத் தெனினும்—தொலைவிலா
வானோர் மதியம் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூல் நயத்தின் பயன்.

(பொ - ரை.) மதியமும் முப்பால் நூலும் பதினாறு கலைகளாலும், அறுபத்துநாலு கலைகளாலும் நிறைந்து நோக்குவதற்கு, ஆராய்ச்சி செய்வதற்கு இனிதாகி, முகக்கண்ணின் நிலையில், அகக் கண்ணின்நிலையில், நிரம்புகின்ற தன்மையுடைத்தாயினும், குணமுடைத்தாயினும், திருவள்ளுவரது முப்பால் நூலினது நயத்தால் விளைவதாகிய இனிய பயனானது ஒழிவின்றி ஆகாசத்தின் கண்ணே திரிகின்ற மதியினிடத்து உண்டோ? (சகூ)

### நப்பாலத்தனார்

அறந்தகளி ஆன்ற பொருள்திரி இன்பு
சிறந்தநெய் செஞ்சொல்தீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு.

(பொ - ரை.) *தருமம் அகலாகவும், பொருள் திரியாகவும், காமம் நெய்யாகவும், செவ்விய சொல் நெருப்பாகவும், குறட்பாத் தண்டாகவும், திருவள்ளுவ நாயனார் பூமியின்கண் வாழ்வோரது அகத்திருளை ஒழிப்பதாகிய விளக்கு ஏற்றினார்.* (சுஎ)

### குலபதி நாயனார்

உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள
தள்ளற் கரியவிருள் தள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

(பொ - ரை.) *நெஞ்சமாகிய தாமரை மலரை விரித்து, மக்களது அகத்திலுள்ள, பிறிதொன்றனாலே நீக்கப்படாத, அஞ்ஞான இருளை நீக்குதலால், திருவள்ளுவரது குறள்வெண்பாவும், புறத்துத் தாமரை மலரை விரித்துப் புறத்திருளை நீக்குகின்ற சூரியனும், அச்செய்கையைக் கொண்டு ஒக்குமென்று கொள்ளத் தகும்.* (சுஅ)

### தேனிக்குடிக் கீரனார்

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலில்
தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து.

(பொ - ரை.) *கடவுள் தன்மையையுடைய திருவள்ளுவ நாயனார் மூன்று பால்களையுடையதாகக் கூறிய குறள் நூலைக் கேட்டறிதலால் உலகின்கண் வாழ்வாருடைய மனத்துப் பொய்யின் பகுதியிற்பட்டவையெல்லாம் பொய்யேயாய்ப் போயின; பொய்ம்மையல்லாத மெய்யின் பகுதியிற் பட்டவை யெல்லாம் மெய்யேயாய் விளங்கின.* (சுகூ)

### கொடிஞாழன் மாணிபூதனார்

அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம் இன்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தேம்—மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாம் கேட்டு.

(பொ-ரை.) பகைவரை யெறிந்த வாட்படை தங்கிய வீரேந்தும் பாண்டியனே! திருவள்ளுவநாயனாரது வாக்கால் இதற்கு முன் கேட்கப்பட்டில்லாதவை யெல்லாம் இப்போது கேட்டு, அறத்தின் திறத்தை அறிந்தேம்; பொருளின் திறத்தை அறிந்தேம்; இன்பத்தின் திறத்தை அறிந்தேம்; வீட்டின் திறத்தை அறிந்தேம். (௫0)

கவுணியனார்

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள்வெண் பா.

(பொ-ரை.) முற்பட்டதாகிய நல்லவழியை நாமறியும் பொருட்டு நாவால் விளங்குகின்ற புலமையையுடைய திருவள்ளுவநாயனாராற் சொல்லப்பட்ட இனிய குறள் வெண்பாக்கள் நினைத்தால் மனத்திற்கு இன்பஞ்செய்வன; கேட்டாற் காதுக்கு இன்பஞ் செய்வன; ஓதினால் வாய்க்கு இன்பஞ் செய்வன; தொடர்ந்து வருகின்ற இருவினைகளாகிய நோய்களுக்குப் பெரிய மருந்துகளாவன. (௫க)

மதுரைப் பாலாசிரியனார்

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்திங்கள்
பொள்ளென நீக்கும் புறஇருளைத்—தெள்ளிய
வள்ளுவர் இன்குறள் வெண்பா அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கும் ஒளி.

(பொ-ரை.) சுக்கிரன் தேவகுரு சூரியன் சந்திரன் என்பன புறத்திருளை விரைவிலே நீக்கும் ஒளிகளாம்; (அவைபோல) முற்றுணர்ந்த திருவள்ளுவநாயனாரது இனிய குறள்வெண்பா உலகத்தோரது உள்ளிருளை நீக்கும் ஒளியாம். (௫உ)

ஆலங்குடிவங்கனார்

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்கும்
தெள்ளமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால்—தெள்ளமுதம்
உண்டறிவார் தேவர் உலகடைய உண்ணுமால்
வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து.

(பொ - ரை.) திருவள்ளுவரது பாட்டினது தீஞ்சுவையைச் சொல்லுமிடத்து, உண்ணப்படுகின்ற தெள்ளிய அமுதினது தித்திப்பாகிய சுவையும் ஒப்பாகாது; அத்தெள்ளிய அமுதை உண்டு அதன் சுவையை அறிபவர் தேவர்கள்; வளம் பொருந்திய தமிழின் கண்ணதாகிய முப்பாலாகிய அதின் மும்மடி சிறந்த பாலை எவ்வுலகத்தாரும் மகிழ்ந்து உண்டு தீஞ்சுவையறிவார். (௫௩)

இடைக்காடர்

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

(பொ - ரை.) நாயனாரது நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்வெண்பாக்களும், கடுகை அதனடுவே துளைசெய்து எழுகடல் நீரையும் அத்துளையுட் பெய்து, தன்னளவிற் குறுகும் வண்ணம் தறித்துவைத்தால், அதுபோல்வனவாகும்.

ஔவையார்

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

(பொ - ரை.) நாயனாரது, நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்வெண்பாக்களும், கடுகினும் மிக நுண்ணியதாகிய அணுவை அதனடுவே துளைசெய்து, எழு கடல்நீரையும் அத்துளையுட்பெய்து, தன்னளவிற் குறுகும்வண்ணம் தறித்துவைத்தால், அதுபோல்வனவாகும்.

---

ஆசிரியர் திருப்பெயர்கள் - ௯.

திருவள்ளுவர்.
நாயனார்.
தேவர்.
முதற்பாவலர்.
தெய்வப்புலவர்.
நான்முகனார்.
மாதாநுபங்கி.
செந்நாப்போதார்.
பெருநாவலர்.

நூலின் திருப்பெயர்கள் - ௯.

திருக்குறள்.
முப்பானூல்.
உத்தரவேதம்.
தெய்வநூல்.
திருவள்ளுவர்.
பொய்யாமொழி
வாயுறைவாழ்த்து.
தமிழ்மறை.
பொதுமறை.

---

# திருக்குறட் பாயிரக் கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ. எழுதியது]

திருக்குறள் இற்றைக்குச் சுமார் 1900 ஆண்டுகளுக்குமுன்னே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரால் உலகின் கண்ணுள்ள மக்களெல்லாம் உய்யும்பொருட்டு இயற்றப்பட்ட ஓர் அரிய பெரிய தமிழ்நூல். அஃது இரண்டு அடியாலாகிய குறள்வெண்பாவால் ஆக்கப்பட்டதால் திருக்குறள் என்னும் பெயர் பூண்டது.

> "ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
> பாயிர மில்லது பனுவ லன்றே"

என்ற தமிழ் ஆன்றோர் முறைப்படி திருவள்ளுவ நாயனார் இந்நூலுக்குப் பாயிரமாக, க. கடவுள் வாழ்த்து, உ. வான் சிறப்பு, ங. நீத்தார் பெருமை, ச. அறன் வலியுறுத்தல் என்கிற முதல் நான்கு அதிகாரங்களையுஞ் செய்தருளினார். இந்நான்கு அதிகாரங்களும் பாயிரம் என்பதை அவர் தாம் முதலாவது சொல்லப் புகுந்த அறத்துப்பாலின் முதற்பகுதியாகிய இல்லறவியலுக்கு முன்னே அவற்றை வைத்த வைப்பு முறையே இனிது விளக்கும். அன்றியும், சிறப்புப்பாயிரம் சொன்ன சங்கப்புலவர்களில் சிறுமேதாவியார் "வீடொன்று பாயிரம் நான்கு" எனவும், எறிச்சலூர் மலாடனார் "பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே" எனவும், நத்தத்தனார் "ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும் பாயிரத்தினோடு" எனவுந் தாங்கள் பாடிய வெண்பாக்களில் விளங்க உரைத்தருளினார்கள்.

நாயனார் முதல் நான்கு அதிகாரங்களையும் பாயிரமாக யாது கருத்துப்பற்றிச் சொல்லியருளினார் என்பதே ஈண்டு எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியாகும்.

பாயிரத்தைப் பற்றித் தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் உரையிற் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

> 'பருப்பொருட் டாகிய பாயிரங் கேட்டார்க்கு
> நுண்பொருட் டாகிய நூலினிது விளங்கும்' - என்றாராகலின்.

"அப்பாயிரந்தான் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாயிருத்தலின், அது கேளாக்காற், குன்று முட்டிய குரீஇப் போலவுங்

குறிச்சி புக்க மான்போலவும் மாணுக்கன் இடர்ப்படும் என்க. ஆதலால், எந்நூல் உரைப்பினும் பாயிரம் உரைத்து நூல் உரைப் பதே மரபு என்று பண்டைத் தமிழ்நூற் புலவர் கூறியினர்.

மேலே சொல்லிய முறைமைப்படி திருக்குறள் நூலின் நுண் பொருளவாகக் கூறப்பட்டன பருப்பொருளவாக முதல் நான்கு அதிகாரங்களிலும் எவ்வாறு கூறப்பட்டுள்ளன என்பது கருதுவாம்.

நூலிற் கூறப்படும் பொருள்கள், மக்களால் அடைதற்பாலன வாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களாம். திருவள்ளுவ நாயனுர் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பொருள்களையும் நூலில் அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் என மூன்று பால்களாகப் பகுத்து, அவற்றின் இலக்கணங்களை யெல்லாம் விரிவாகவும் வீட்டைப்பற்றிப் பாயிரத் தில் கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்திலும்; அறத்துப்பால் துறவறவியலில் நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களிலும் காரண வகையால் தொகுத்தும் கூறியருளினுர். ஆகவே, சிறப்புப்பாயிரமாகிய திருவள்ளுவமாலை யில் "முப்பாலினுற்பால் மொழிந்தவர்" என்று கீரந்தையார் கூறிய வண்ணம்நாயனுர் முப்பாலினும் நான்குபாலையும்மொழிந்தவராவர்.

மக்கள் நான்கு உறுதிப் பொருள்களையும் அடைவது உலக வாழ்விஞலேயே. இந்த உலக வாழ்வு உண்டாம் பொருட்டும், செவ்விதின் நடைபெறும்பொருட்டும் முதற்கண் வேண்டப்படுவது கடவுள். "தானலா தலகமில்லை" என்று திருநாவுக்கரசு நாயனுர் கூறியருளியபடி கடவுளின்றி உலகம் உளதாகாது; உயிரில் பொருளும் உளதாகாது; உயிர்ப்பொருளும் உளதாகாது. ஆகையி ஞலே, நாயனுர் பாயிரத்தில் முதல் அதிகாரமாகக் கடவுள் வாழ்த் துக் கூறினுர். கடவுள் வாழ்த்து, வாழ்த்து வணக்கம் பொருளியல் புரைத்தல் என மூவகைப்படும். இம்மூன்றனுள் நாயனுர் முதலதி காரத்திற் கூறிய வாழ்த்து பொருளியல்புரைத்தலாகும். நாயனுர் கடவுள் வாழ்த்தைப் பொருளியல்புரைத்தல் என்ற வகையிற் கூறி யது, தாம் நூலில் நுவல எடுத்துக்கொண்ட நுண்பொருள்களைப் பருப்பொருள்களாகக் குறித்து விளக்குதற்பொருட்டென்க.

உயிர்களின் உலகவாழ்வு அதனையியக்கும் ஒரு கடவுளையின்றி நிகழாது என்று சொல்வதோடு அமையாது, நாயனுர்முதல்எட்டுக் குறள்களிலும் கடவுள் இன்ன இன்ன குணம் உடையவர் என்று வகுத்துக்கூறி, ஒன்பதாவது குறளில் அவ்வெட்டுக் குணங்களையுந் தொகுத்துக்கூறி, இத்தகைய பேரறிவும், பேரன்பும், பேராற்றலும் உடைய கடவுளை மக்கள் மனத்தான் நினைந்து, நாவினுல் வாழ்த்தி உடம்பால் வணங்கி வழிபட்டாலன்றி உலக வாழ்வின் பயனுகிய

பிறவிப் பெருங்கடலை நீந்துதல் முடியாது என்று பத்தாவது குறளில் வற்புறுத்தியருளினர். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களுள் உயிர்கள் முடிவில் அடையும் பொருள் வீடு ஒன்றே என்பதையும், அறம் பொருள் இன்பம் என்ற மூன்றும் வீட்டையடைவிக்கக் கருவிகளாயுதவும் இடையிலுள்ள பொருள்களென்பதையும், அறமானது பொருள் இன்பம் போலாது வீட்டினையும் உதவவல்லது என்பதையும், நாயனர் இவ்வதிகாரத்தில் குறிப்பித்தருளினர். இன்னும் அவர் கடவுளை எல்லாக் குறள்களிலும் ஒருமையிற் சொன்னதனாலும், முதலாவது குறளில் கடவுள் தன்வயத்தனாதல் என்ற குணத்தைச சார்ந்த முதன்மையுடையவன் என்றும், எ ஆவது குறளில் கடவுள் தனக்கு ஒப்பாரும் மிக்காரு மில்லாதவன் என்றும் கூறியதனாலும், முழுமுதற் கடவுள் ஒருவனே என்றும், அவன் உயிர்களையெல்லாம் ஆளுந் திறத்தினை யுடையவன் என்றும், உ, ங, ச, ரு, சு, எ, அ, கo குறள்களில் உயிர்களைப் பன்மையிற் கூறியதனாலும் வணங்கும் உயிர்களைக் குறிக்குமிடத்து கூ ஆவது குறளில் வணங்காத்தலை யென்றும், வணங்கப்படும் கடவுளைக் குறிக்குமிடத்து உ, ங, ச, எ, அ, கூ, கo, குறள்களில் தாள் என்றும், அடியென்றும் கூறியதனால் உயிர்கள் பல என்றும், அவர்கள் கடவுளால் ஆளப்படுந்தன்மையை யுடைய அடிமைத்திறம் வாய்ந்தவர்களென்றும், உயிர்களின் தொழிற்பாட்டைக் குறிக்குமிடத்து உ, ச, எ, அ, கo குறள்களில் 'சேர்ந்தார்' 'சேராதார்' என்று கூறியதனால், உயிர்கள் ஒன்றனைச் சார்ந்து நிற்றலும், சார்ந்ததன் வண்ணமாதலுமாகிய இயற்கைக் குணம் உடையவர்களென்றும், அறியாமையினால் உலகத்தைச் சார்ந்து அதன் வண்ணமாய்க் குறைந்த இன்பத்தையும் பெருந் துன்பத்தையும் அடையும் உயிர்கள் பேரின்பப் பயனாகிய கடவுளைச் சார்ந்தாலல்லாமல் பிறவிப் பெருங் கடலைக் கடந்து வீடு அடைய முடியாதென்றும் நாம் உய்த்தறியக் கிடக்கின்றன.

இனி, முதலாவது அதிகாரத்திற் கூறியவாறு உலகில் உயிர்ப்பொருளையும் உயிரில பொருளையும் இயக்கி ஆளவல்லது அக்கினியிற் சூடுபோலக் கடவுளினின்றும் பிரிக்கவொண்ணாத அவனுடைய அருட்சத்தியாகும். இந்த அருட்சத்தி தொழிற்படாது கடவுளிடம் ஒடுங்கியிருக்குங் காலத்து உலகமுந் தொழிற்படாது. அருட்சத்தி வெளிப்பட்டபொழுதுதான் உலகமும் வெளிப்பட்டுத் தொழிற்படும். இந்த அருட்சத்தியின் வெளிப்பாடாகக் கற்றாரும் கல்லாதாரும், அறிவுடையாரும், பேதையரும் உலகில் கண்கூடாகக் காணக்கூடியது மழை. மழையின்றி உலகியல் நடவாது என்பது யாவருக்கும் வெளிப்படை. மழை ஒருகால் உலகிற் பெய்தலும் மற்றொருகால் பெய்யாதிருத்தலும் எத்தகைய ஆற்றலும் அறிவும் உடைய மக்களின் சத்திக்கும் மேற்பட்ட ஒரு சத்தியின் தொழிற்

பாடு என்று யாவரும் அறியலாம். பருவகாலத்திலும் மழைபெய்தா லன்றி உயிர்கள் பசி நோயால் வருந்துவர் என்னும் வெளிப்படை யான செயலானது உயிர்கள் கடவுளின் அருள்வழி உலகில் ஒழு கினாலன்றித் துன்பமடைந்து வருந்துவரென்னும் உண்மையைக் குறிப்பாலுணர்த்துகின்றது. இந்த உண்மையை நாயனார், "தளி யின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்—அளியின்மை வாழும் உயிர்க்கு" என்று அரசன்மீது வைத்துக் கூறினார்.

மேலே கூறிய காரணங்களினால் நாயனார் பாயிரத்தின் இரண் டாவது அதிகாரமாகக் கடவுள் வாழ்த்துக்குப் பின்னர்க் கடவுளின் அருள் வெளிப்பாடாகிய வான்சிறப்பை வைத்தருளினார். வான் என்று சொல்லாது 'வான் சிறப்பு' என்று அவர் அதிகாரத்துக்குப் பெயரீடு தந்தது, மழை உலகம் நடைபெறுதலுக்கு இன்றியமை யாமையைக் குறித்தற்பொருட்டு. மழையானது மாநிலத்து உயிர் களுக்குக் குடிநீராய் உதவுவதுமன்றி உண்ணுவதற்கேற்ற உணவுப் பொருள்களையும் உண்டுபண்ணுகிறதுஎன்றும், மழைபெய்யாவிடில் உழவர் உழவுத்தொழிலைச் செய்து உணவுப் பொருள்களை உண்டு பண்ணமாட்டார்களென்றும், இல்லறவாழ்க்கையிலுள்ள மக்கள் ஏனைய மூன்று ஆச்சிரமத்திலுள்ளவர்களுக்கும் உற்ற துணையா யிருந்து தானம் செய்யமாட்டார்களென்றும், துறவிகள் தாங்கள் செயற்பாலதாகிய தவம் செய்யார்களென்றும், தேவாலயங்களில் நடைபெறவேண்டிய பூசனையும் விழவும் நிகழா என்றும், உயிர்கள் பசி நோயினால் வருந்துவவென்றும் நாயனார் பலவாறாக மழையைச் சிறப்பித்துக் கூறியருளினார். உழவுத்தொழில் நடவாது எனவே, அதன் சார்புபற்றி வரும் வணிகமும் கைத்தொழில் முதலிய ஏனைய தொழில்களும் அரசியலும் நடைபெறா என்பது தானே போதரும். இவ்வாறாக மக்கள் உலக வாழ்வில் அடைதற்பாலதாகிய நெறி கொள் சிற்றின்பத்திற்கும் முடிவில் அடைதற்பாலதாகிய வீட்டினை உறுவிக்கும் அருளை வளர்த்தற்கும் வேண்டிய பொருளை நன்முயற் சியாலீட்ட உதவுங் கருவி மழைதான் என்று நாயனார் இந்த இரண் டாவது அதிகாரத்தில் குறிப்பித்தருளினார்.

இனிக் கடவுளின் அருள் விளக்கம் உலகின்கண் நிகழ்ந்தாலும், ஆணவமலத்தால் மறைப்புண்டு அறியாமையில் உழலும் மக்கள், கடவுளையும் கடவுளி னருளையும்பற்றி அறிந்தாலன்றி உலக வாழ் வின் பயன் அடையார்கள். கடவுளின் அருள் தங்களிடம் பதியப் பெற்ற பெரியோர்களே அவ்வருளை அறிவார்கள். ஆகையால், அத்தகைய பெரியோர்கள் மக்களுக்கு அறிவித்தாலன்றி அவர்கள் அவ்வருளை அறியமாட்டார்கள். ஆகலின், நாயனார் கடவுளின் அருள்விளக்கமாகிய வான்சிறப்பிற்குப்பின் மூன்றும் அதிகாரமாக நீத்தார் பெருமையை வைத்துக் கூறினார். நீத்தாரவர் இறைவனை

பற்றினையும் நீத்த முனிவர்; அவர்கள் தங்களிடத்தில் கடவுளின் அருள் விளங்கப் பெற்றவர்கள். அவர்களை உரையாசிரியராகிய பரிமேலழகரும், "அறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார்" என்று கூறினர். நீத்தார் என்று சொல்லுத லமையாது நீத்தார் பெருமை என்றது, மக்கள் அவர்கள் பெருமையை உணர்ந்தாலன்றி அவர்கள் கூறும் மறைமொழிகளைக் கேட்டு அவற்றின்வழி உலகில் ஒழுகல் இயலாது என்பதைக் குறிக்கின்றது. நாயனர் முதல் இரண்டு குறள்களிலும் நீத்தார் பெருமை எத்தன்மைத் தென்றும்; ௩ ஆவது குறளில் அவர்கள் இம்மை மறுமை வகையினைச் செவ்விதின் உணர்ந்து உலகின்கண் மக்களுக்கு அறத்தை உணர்த்துதலாகிய தொண்டு பூண்டவர்கள் என்றும்; ௪, ௫ குறள்களில் அவர்கள் தங்கள் அறிவின் ஆற்றலால் ஐம்புலனையும் வென்றவர்கள் என்றும்; ௬ ஆவது குறளில் அவர்கள் உலகில் செயற்கரிய செயல் செய்யும் பெரியாரென்றும்; ௭ ஆவது குறளில் அவர்கள் தத்துவங்களை அறிந்து அவையிற்றின் தலைநிற்கும் தத்துவ ஞானிகளென்றும்; ௮ ஆவது குறளில் அவர்கள் மக்கள் அறிந்து உய்யும்படி மறைமொழிகள் சொல்லவல்ல நிறைமொழிமாந்தர் என்றும்; ௯ ஆவது குறளில் அவர்கள் எல்லா நற்குணங்களையு முடையவர்களாதலின், மலைபோன்று யாதொரு துளக்கமு மில்லாத தீரர் என்றும்; ௧௦ ஆவது குறளில் அவர்கள் எல்லா உயிர்களிடத்தும் செந்தண்மை பூண்டொழுகுஞ் செம்மையோர் என்றும் அவர்களுடைய இலக்கணங்களைக் கூறியருளினர்.

அத்தகைய நீத்தாராகிய பெரியார் உலகில் மக்கள் உய்யும் பொருட்டுக் கூறும் மறைமொழி அறமாகும். அறம் என்பது நாயனர் கட்டுரைப்படி மனமொழி மெய்களாற் செயற்பாலனவற்றைச் செய்தலும், விலக்கற்பாலனவற்றைச் செய்யாதொழிதலுமாகும். மக்கள் இவ்வாறு அறத்தின்வழி ஒழுகினலன்றி அவர்கள் உலக வாழ்வின் பயனை அடையார்கள் ஆதலின், நாயனர் பாயிரத்தில் நீத்தார் பெருமைக்குப்பின் நான்காவது அதிகாரமாக அறன்வலியுறுத்தல் என்பதை வைத்துக் கூறினர். அறமானது மக்களுக்கு உலக வாழ்விலடையும், பொருள், இன்பம் என்னும் இரண்டு பொருள்களையும் தருவதுடன் முடிவில் அடையும் வீட்டினையுந் தரவல்லது. அறத்தின் வழி ஒருவன் ஒழுகினல் அவனடையத் தக்க பொருளினையும், அதுபற்றி நெறிகொள் சிற்றின்பத்தையும் அடைந்து, பின் நுகர்ச்சி உணர்வினல் பருவமடைந்தபொழுது அவ்விரண்டு பொருள்களையும் வித்து, வீடுபேறு நாடி முயன்று வீடு அடைதல் திண்ணம். ஆதலின் நாயனர் அறன் வலியுறுத்தல் என்று சிறப்பித்துக் கூறினர். அறன் வலியுறுத்தல் என்று பாயிரத்தில் [illegible] அறம்பற்றிக் காலக்கிரமத்தில் மக்களுக்குத்

திண்ணமாய் உண்டாகும் ஏனைய மூன்று பொருள்களும் பருப் பொருள்களாக அடங்குவனவாகும்.

இதுகாறுங் கூறியவற்றால், உலக வாழ்வு செவ்விதின் நடை பெற்று மக்கள் நான்கு உறுதிப்பொருள்களையும் அடைவதற்குக் கடவுளும், வான்சிறப்பாகிய கடவுளின் அருள் விளக்கமும், அவ் வருள் தங்களிடம் விளங்குந் தன்மையுடைய பெரியோர்களும், அப்பெரியார்கள் கூறிய அறமும் இன்றியமையாது வேண்டப்படு தலால் நாயனர், கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கையும் நான்கு அதிகாரங்களில் பாயிரமாகத் தம் நூலில் நுவல எடுத்துக் கொண்ட நான்கு உறுதிப்பொருள்களின் பருப்பொருள்களாகக் கூறியருளினர் என்பது ஒருவாறு விளக்கப்பட்டது.

———

# சில குறட்பாக்களுக்கு ஏனை உரையாசிரியர் உரையும் விளக்கமும்

## குறள் க. முன்னுரை.

முதலாவது குறளுக்கு முன்னுரை (அவதாரிகை) யாகப் பரிமேலழகர் கூறியது, பின்னர் அவர் கூறிய குறிப்புரைக்கே முரணாகவுள்ளது. அகரத்தை உயிரெழுத்து மெய்யெழுத்துக்களுக்குத் தலைமையாக உவமை கூறியது, அகரத்திற்கே தனிச்சிறப்பாயிருத்தல்போல, முழுமுதற் கடவுளாகிய ஒருவனுக்கே ஈண்டுத் தலைமை கூறப்பட்டது. முழுமுதற் கடவுள் (குறள்-எ) சத்துவ முதலிய முக்குணங்களையும் கடந்தும் மாயகாரிய உலகிற்கு அப்பாற்பட்ட அருட்குணங்களை யுடையவன் (குறள்-கூ) ஆதலின், ஈண்டுச் சத்துவ, இராசச, தமோகுணங்களையுடைய மால், நான்முகன், உருத்திரன் ஆகிய மூவரையும் தலைமையுடையவராகக் கொண்டு அம்மூவர்க்கும் வாழ்த்துப் பொதுப்படக் கூறல் ஆசிரியர் கருத்தன்றென்க. உலகிற்கு முழுமுதற் கடவுள் ஒருவனேயன்றி மூவரல்லர்.

## குறள் உஎ. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் வகைதெரிவான் கட்டே உலகு.

தத்துவங்களைப்பற்றிச் சாங்கியநூலுள் கூறப்பட்டதின் வேறாக வேறு வேறு சமய நூல்களுள் வரையறுக்கப்பட்டுள்ளன.

சைவ நூல்களுள் தத்துவங்கள் முப்பத்தாறு எனக் காணப்படுகின்றன.

அம்முப்பத்தாறு தத்துவங்களும் ஆசிரியர் வள்ளுவனார் கூறும் ஐந்தின் வகையுள் அடங்கும்.

அறஞ்செய்யுமாற்றைக் கூறுமுகத்தால் அறத்தின் இலக்கணத்தை விளக்கியது.

## குறள் கூகூ. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும்வா யெல்லாம் செயல்.

(இ - ள்.) தத்தமக் கியலும் அறவினைகள் எல்லாவற்றையும் இயலும் வகைகளானெல்லாம் இடைவிடாதே அவை எய்துமிடத்தானெல்லாம் எஞ்சாது செய்தல்.

வகைகளாவன: மனமொழி மெய்களும், அறவினைக்கேற்ற துறைகளும். 'ஓவாதே' யெனவே எவ்வளவு காலம் ஒருவர்க்கு

அறவினை செய்ய இயலுமோ அத்துணைக்காலமும் அறவினை செய்தல் வேண்டும் என்பது பெறப்பட்டது செல்லும் வாயெனவே எய்துமிடத்திலுள்ள உயிர்களும் அடங்கின.

குறள் ௩௯. அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழும் இல.

(இ - ள்.) அறத்தொடு பொருந்த வருவதே இன்பமாவது; அதனொடு பொருந்தாது வருவனவெல்லாம் துன்பத்தினிடத்த; அதுவேயுமன்றிப் புகழுமுடையவல்ல. இன்பம்-இம்மை மறுமை இன்பங்களும், வீடுபேறும்.

## ௭ - ஆம் அதிகாரம். புதல்வரைப் பெறுதல்

### முன்னுரை

ஆசிரியர் ஆறாவது அதிகாரம் பத்தாவது குறளில் மக்கட்பேறென்று ஏழாவததிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்திருப்பதினாலும், ஏழாவததிகாரம் ௭, ௮, ௧0 குறள்கள் தவிர ஏனைய ஏழு குறள்களிலும் மக்கள் என்று பொதுப்படக் கூறுதலினாலும், இவ்வதிகார முதற்குறளில் மக்கட்பேறென்ற தோற்றுவாயச் சொற்றொடரையே வழங்கியிருத்தலானும், அவ்வதிகாரம் "புதல்வரைப் பெறுதல்" என்று குறிக்கப்பெறுவது ஆசிரியர் கருத்தன்று என்பது புலனாகும்.

குறள் ௬௯. ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

'கேட்டதாய்' என்னும் சொற்றொடருக்குப் 'பெண்ணியல்பான் தானாக அறியாமையிற் கேட்ட தாய்'யென ஆசிரியர் பரிமேலழகர் விரிவுரை கூறியுள்ளார். அவ்வுரையினால் பெண்கள் கல்வியும் அறிவும் உடையரல்லர் என்றுவது அவையின்மையால் அவர் தாமாக அறியும் ஆற்றலிலர் என்றுவது கொள்வதற்கிடமில்லை. "பெண்ணியல்பு" என்றமையால் ஆசிரியர் பெண்களின் பொதுவான மனநிலைமையையும் சிறப்பாகத் தாய்மார்களின் மனநிலைமையையும் குறித்துள்ளார்.

தாய் தன் மகன்பால் வைத்த பேரன்பால் அவனியல்புகளனைத்தையும் உள்ளவாறு காணுந் திறனுடையளல்லள். ஆகவே, அறிஞர் அவனைச் சான்றோன் எனக் கூறக் கேட்டபோது பேருவகை யடையவள் என்க.

குறள் ௮௨. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

தன்னை நோக்கிவந்த விருந்து தன்னில்லின் புறத்ததாகத் தானேயுண்டல் சாவினையடைந்ததோ டொக்கும். தானுண்பது சாவினைப் போக்கும் அமிர்தமேயெனினும் அதனைத்தானே உண்ண விரும்புதல் முறைமையன்று எனவும் பொருள் கொள்ளலாம்.

குறள் அரு. வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்

விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம் வித்தும் இடல் வேண்டுங் கொல்லோ என்று பொருள் முடிவுசெய்தல் நன்று. மிசைவான் வேண்டும் என்று வினைமுடிவு செய்க. முன்னே விருந்தினரை மிசைவித்துப் பின் மிச்சதனைத் தானுண்பான் விருந்தினரை உண்பிக்கும் கடப்பாட்டினிற்குங்கால், அதற்குவித்தன்றி வேறு பொருளில்லாத நிலைமையில், விருந்தினரை உண்பிக்க விரும்பாமல் தனது விளைபுலத்திற்கு வித்திடுதலை விரும்பான் என்பது பொருள்.

இவ்வுண்மை இளையான் குடிமாறநாயனார் புராணத்தில் விளங்குதல் காண்க: வித்தினை அட்டுண்ணுதல் வேளாளன் விரும்பாததொன்று. விருந்தினரை உண்பிக்குங்கால் அவ்வித்தையும் அட்டு விருந்தினரை ஊட்டும் கடமையில் நிற்பார் விருந்தோம்பும் அறமுடையார்.

குறள் கசுரு. அறனுக்கம் வேண்டாதான் என்பான் பிறனுக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

அறனுக்கம் என்பதை உம்மைத் தொகையாகக் கொள்ளாது அறத்தினாலாகிய ஆக்கம் என மூன்றாம் வேற்றுமைத் தொகைப் பொருள் கொள்ளுதல் பொருத்தமுடைத்து.

அறத்தினாலாகிய ஆக்கம் என்பதில் இம்மை மறுமை வீட்டுச் செல்வங்கள் மூன்றும் அடங்கும்.

"சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்
காக்கம் எவனோ உயிர்க்கு" என்றாராகலின்.

குறள் கசுசு, கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

இதில் சுற்றம் என்பதற்குச் சுற்றமொடு என மூன்றாம் வேற்றுமைத் தொகையாகப் பொருள்கொள்ளல் வேண்டும்.

அழுக்கறுப்பான்: எழுவாய். கெடும்: பயனிலை. சுற்றம் எழுவாயன்று.

குறள் ௨௦௨ தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

தீயவே தீய பயத்தலால் என்று அரசஞ் சண்முகனார் பாடமா கக் கொண்டு,

தனக்கு இன்பம் பயத்தலைக் கருதிச் செய்யும் தீவினைகள் பின் அஃதொழித்துத் துன்பமே பயத்தலால், அத்தன்மையவாய தீவினைகள், சிலகால் நன்மையும் செய்யும் தீயினும் ஒருவனால் அஞ்சப்படும். வேள்விக்கும் அட்டிற்றொழில் செய்தற்கும் தீ உதவி நன்மை செய்யுமாறு காண்க.

குறள் ௨௬௬. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.

(இ - ள்.) தவஞ்செய்வாராவார் தம் கருமத்தை அறநூல்களில் விதித்தாங்குச் செய்பவரே. அவரை யொழித்த ஏனையோர் ஆசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடுசெய்பவராவர்.

இக் குறளின் கருத்து: இல்லறத்தானும் தன் கடமையை அறநூல்களில் விதித்தாங்குச் செய்யின் தவஞ்செய்தவனாவன் என்பதாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருத்துறையூர்ப் பதிகத்தில் "வேண்டிக்கொள்வேன் தவநெறியே" என்று நம்பிரானை வேண்டிக்கொண்ட காலத்துக் குறிக்கப்பட்டுள்ள தவநெறி இல்லறத்திற்குந் துறவறத்திற்கும் பொதுவாதல் காண்க. அரசஞ்சண்முகனார்

குறள் ௨௬௮ தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயிர் எல்லாம் தொழும்.

(இ - ள்.) ஒருவன், தன்னுயிரானது தானென்னும் தன் முனைப்பினின்று நீங்கப் பெற்றவனைப் பெருதனவாகிய மன்னுயிர்களெல்லாம் தொழும்.

குறள் ௩௯௯. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(இ - ள்.) கற்றறிந்தார் தாமின்புறுவது கண்டு உலகின் புறக்காமுறுவர் என உரைநடை செய்து செம்பொருள் கொள்ளுதல் ஆசிரியர் கருத்துக்குப் பொருத்தமாகும்.

நூல்களைக் கற்றறிந்தவர் தாம் கற்றறிந்த கல்வியினாலே நுகரும் இன்பத்தை உலகிலுள்ள ஏனைய மக்களும் நுகரவேண்டு

மென்று விரும்புவர் என்பதே இதற்குச் செம்பொருள். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பது பண்டைத் தமிழர் குறிக்கோளாகும். அதனையே ஆசிரியர் இங்குவிதந்தோதினர் என்க.

குறள் ௪௧0. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

மக்களோடு விலங் கனையர்; இலங்கு நூல் கற்றாரோடு ஏனை யவர் என்று கொண்டுகூட்டிப் பொருள்கொள்ளலும் ஆம்.

குறள் ருஎ0. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

அது - கடுங்கோல்; ஈண்டு ஆகுபெயராய்க் கடுங்கோ லாசனைக் குறிக்கிறது.

குறள் ௬௨0. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

ஊழாவது வலி முற்பிறப்பிற் செய்த முயற்சி வலியான் ஆகியது. அம்முயற்சி வலியினும் இப்பிறப்பிலே செய்கிற முயற்சிவலி மிக்கிருப்பின் ஊழ்வினையைத் தாண்டலாம் என்பது கருத்து.

குறள் ௬௫ரு. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(இ - ள்.) யான் செய்தது எத்தன்மைத்தென்று பின் தானே இரங்கும் வினைகளை ஒருகாலும் செய்யாதொழிக; அன்றி ஒருகால் மயங்கி அவற்றைச் செய்புந் தன்மையனாயினானாயின், பின்னேனும் அத்தகைய காரியங்களைச் செய்யாதிருத்தல் நன்று.

ஒருவினையைச் செய்புமுன் அதனைப் பல்லாற்றானும் சூழ்ந்து, பின் தான் இரங்கும் வினைகளை ஒழித்து நல்வினையைச் செய்தல் வேண்டும். கழிவிரக்கங்கொள்ளும் வினைகளை ஒருகாலும் செய்தல் கூடாது. அத்தகைய வினைகள் தன்கண் நிகழாமல் குறிக்கொண்டு காத்தல்வேண்டுமென்பது கருத்து. யாதாமொரு குற்றஞ்செய்தானொருவனை இனி மீண்டாயினும் செய்யற்க என்று கூறும் உலக முறையை யொட்டி ஆசிரியர் இங்ஙனம் நயம்பெற உரைத்தார்.

குறள் எ௩௯. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(இ - ள்.) நாடென்ப நாடா வளத்தன - பிறநாடுகளிலுள்ள வளத்தை நாடாது தன் நாட்டிற்கு வேண்டும் வளங்களை யெல்

லாம் தன்னகத்தே உடையது நாடாகும்; இவ்வாறன்றி, நாடவளந் தரு நாடு நாடல்ல. பிறநாட்டு வளங்களை நாடி அடைதலால் வளம் படும் நாடு நாடல்ல.

ஒருநாட்டு மக்களுக்கு வேண்டுவனவாகிய பொருள்களெல் லாம் அதனிடத்தில் அமைதல் வேண்டும் என்பது கருத்து.

குறள் ௯௦௩. இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும் நல்லாருள் நாணுத் தரும்.

(இ - ள்.) தாழ்ந்த இயல்பின்மை-தாழ்தற்கு ஏதுவாய ஆணி யல்பு இல்லாமை; அஃதாவது, ஆண்தகையின்மை. ஆண்மக்களுக்கு ஆளுந்தன்மையாகிய ஆண்மை யியல்பாகலின், அதனை ஆசிரியர் இயல்பு என்றார். ஈண்டு உரையாசிரியர் இவ்வாண்மையின்மையை மனையாளிடத்து அச்சம் என்றார்.

குறள் ௯௭௭. இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான் சீரல் லவர்கண் படின்.

(இ - ள்.) சீரல்லவர்கண்-பெருமையுடையரல்லாத சிறியோ ரிடத்து, சிறப்பு படின்-செல்வங் கல்வி முதலிய சிறப்புக்கள் உள வாயின், இறப்பே புரிந்த தொழில்-(அச்சிறப்புக்கள் அவனுக்கு) செருக்கினை விரும்பும்படியாயுள்ள செயல்களைச் செய்விக்கும். தாம், தான்: அசைகள்.

சிறப்பென்பது மக்கள் பலரிடத்தில் இல்லாது சிலரிடத்தில் மட்டும் இருக்கும் செல்வம், கல்வி, அதிகாரம் முதலியன. இறப் பென்பது தன்னளவைக் கடந்திருத்தல்; அஃதாவது செருக்கு.

குறள் ௧௦௭௧. மக்களே போல்வர் கயவர் அவரன்ன ஒப்பாரி யாங்கண்ட தில்.

வடிவால் முழுதும் மக்களே போன்றிருப்பர் கயவர். ஆனல் அவருக்கு ஒப்பானவர் பிறரை யாம் கண்டதில்லை.

இதனல், கயவர் மிகக்கீழானவர் என்றும், அவருக்குக் கீழானவர் பிறரில்லை யென்றும் கூறப்பட்டது.

இவ்வுரை, செர்மானியப் புலவர் சூபனேர் (Sehopenhaur) என்பவரால் தமது சமயம் என்னும் கட்டுரையில் கண்டது.

குறள் ௧௧௦௩. தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணான் உலகு.

தாம் விரும்பும் மகளிர் மெல்லிய தோளின்கண் துயிலும் துயில்போல இனிமை பயப்பதோ செங்கண்மால் உலகம்?

———

# திருக்குறள்

## அருஞ்சொற்பொருள் அகரவரிசை

[எண், குறள் எண்ணைக் குறிக்கும்]

அஃகாமை-சுருங்காமை ௧௭௮
அஃகி-நுண்ணிதாய் ௧௭௫
அகடு-வயிறு ௯௩௬
அகத்து-நடுவண் ௭௨௭
அகப்பட்டி-சுருங்கிய பட்டி; அகமாகிய பட்டி ௧௦௭௪
அகம்-மனம் ௭௦௩
அகலல் நீங்குதல் ௬௯௧
அகலாக்கடை-பெருகாதாயின் ௪௭௮
அகல்-அகன்ற ௨௫
அகறலின்-கூடப்பெறாத எல்லைக்கண் ௧௩௨௫
அகற்றும்-விரிக்கும் ௩௭௨
அகனமர்ந்து-மனமகிழ்ந்து ௮௪
அகன்ற-சென்ற ௧௭௫
அகன்றார்-பெரியராயினார் ௧௭௦
அசாவாமை-தளராமை ௬௧௧
அசையியற்கு-நுடங்கிய இயல்பினையுடையாட்கு ௧௦௯௮
அசைவிலா-தளராத ௫௯௪
அசைவு-மடி ௩௭௧
அஞர்-துயர் ௧௦௮௬
அஞ்சுவது-அஞ்சிக் காப்பது ௩௬௬
அடங்கலாற்றின்-அடக்க வல்லனாயின் ௧௨௬
அடல்-வருத்துதல், கோறல் ௨௦௬, ௮௯௩
அடற்றகை-அடும் தறுகண்மை ௭௬௮
அடியளந்தான்-தன்னடியளவானே எல்லா உலகையும் அளந்த இறைவன் ௬௧௦
அடுக்கிய-தொடர்ந்த ௫௨௫
அடுங்கால்-துன்பஞ்செய்யுங்கால் ௧௧௯௯
அடுத்திருந்து-தொடங்கியிருந்து ௮௯௭
அடுத்து-பற்றாவன கொடுத்து ௧௦௩௦
அடுமுரண்-பகைவெல்லுதற்கேற்ற மாறுபாடு ௫௬௭
அடையாவாம்-சாராவாம் ௯௩௯
அட்டிய-வார்த்த ௧௦௯௩
அணங்கு-தெய்வமகள் ௧௦௮௧
அணியுமாம்-வியந்து புனையா நிற்பர் ௯௭௮
அணுகாது-செறிவதுஞ் செய்யாது ௬௯௧
அண்ணாத்தல்-அங்காத்தல் ௨௫௫
அதர்வினாய்-வழிவினவி ௫௯௪
அதிர-நடுங்க ௪௨௯
அமர்த்தல்-மாறுபடுதல் ௧௦௮௪
அமர்ந்து-பொருந்திய ௭௫
அமர்ந்து-மனமகிழ்ந்து ௮௪
அமிழ்தற்று-அமிழ்தினையொக்கும் ௭௨

அமைகலா ஆறு-வருந்து இன்ற இயல்பு உகக
அமைந்தக் கண்ணும்-தானே வந்தெய்தியவிடத்தும் சுOசு
அமைந்தற்று-ஆளவிற்று கநOஉ
அமைந்தின்று-அமைந்த தில்லை நசுO
அமையல-அமைகின்ற வில்லை கஉஅந
அமையாக்கடை-உடன்படா ராயின் அOந
அமைஆர், வேய்போலும் கOக
அமைவர்-மேவுவர் ருஅO
அமைவில-அமைகின்றன இல்லையாயின ககஎஅ
அமைவிலன்-பொருத்த மிலன் அசுந
அயர்கம்-அயர்வேமாக கஉசுஅ
அரிந்தற்று-அறுத்தாற் போலும் கநOச
அருங்கேடன்-அரிதாகிய கேட்டையுடையன் உகO
அருஞ்செவ்வி-காலமரிய னாய் ருகரு
அருந்தியது-உண்டது கசுஉ
அருப்பறு-கிளைத்தல் அறுத ருஉஉ
அருமறை-பெறுதற்கரிய உபதேசப்பொருள் அசுஎ
அரும்பி-எய்தி, தோன்றி கஉஉந
அருளாட்சி-அருளாற் பயன் கோடல் உருஉ
அருளாதான்-உயிர்கள் மாட்டு அருள்செய்யாதவன் உசக
அலகு-கதிர் கOநச
அலகை-பேய் அருO
அலந்தார்-துன்பமுற்றழிந் தார் கநOந
அல்லல்-பகை சுசுO
அல்லல்-துயர், நிரயத் துன்பம் சுஉசு, கஉக
அல்லாவார்-அலமரார் ருகஉ
அல்வழி-ஆகாவழி கஉகக
அவம்-பயனில் முயற்சி உசுஉ
அவாம்-விரும்பும் உகரு
அவாய்-அவாவி சுசிஉ
அவித்தான்-அறுத்தான் சு
அவியினும்-சாவினும் சுஉO
அவிர்(தல்)-விளங்குதல் கககஎ
அவ்வித்து-பொருது கசுஎ
அவ்விய-கோட்டத்தினைப் பொருந்திய கசுக
அழிவினவை-கேட்டினைத் தரும் தீநெறிகள் எஅஎ
அழீஇ-அழித்துச்சொல்லி கஅஉ
அழுக்கறுப்பான்-அழுக்காற் றைச் செய்வான் கசுஉ
அழுக்கற்று-அழுக்காற்றைச் செய்து கஎO
அழுக்காறு-பிறராக்கம் பொறாமை உரு
அளவளாவுதல்-நெஞ்சுகலத் தல் ருஉந
அளவு-எல்லை சுஎஎ
அளியின்மை-தண்ணளி யில்லாமை ருருஎ
அளை இ-கலந்து கக
அறத்தாறு-அறத்தின்பயன் நஎ
அறவாழி-அறக்கடல் அ
அறன்வரையான்-(ஒருவன்) அறத்தைத் தனக்கு உரித்தா கச் செய்யாது கருO
அறிகல்லாதவர்-அறியமாட்டா தார் சுஉஎ
அறிகொன்று-அறிவையும் அழித்து சுநஅ
அறிவதில்லை-மதிப்பதில்லை சுக
அறிவறிந்த-அறியவேண்டு வன அறிதற்குரிய கக

அறுதொழிலோர்-அந்தணர் ருகூ0
அறுப்பான்-கெடுப்பான் ௩சகூ
அறுவாய்-குறைந்தவிடம் ௧௧௧௭
அறைபோகாதாகி-(பகைவராற்) கீழறுக்கப்படாததாய் எகூ௲
அறைப்படுத்தும்-கீழறுத்துத் திறப்பித்தும் எசஎ
அற்கா-நில்லாத ௩௩௩
அற்குப-நிலையுள்ள ,,
அற்றம்-அவமானம், மெலிவு ௬அ0, ௧௧அகூ
அற்றேம்-இலமாயினேம் அஅ
அனைத்தானும்-அத்துணையாயினும் சககூ
அன்பொரீஇ-அன்புசெய்தலையொழிந்து ௧00கூ
அன்னநீரார்-அப்பெற்றித்தாய இயல்பினையுடையார் ருஉஎ
ஆகலூழ்-ஆதற்கேதுவாகிய ஊழ் ௩எஉ
ஆகாவாம்-நில்லாவாம் உஎகூ
ஆகாறு-வருகின்ற நெறியளவு சஎஅ
ஆகுலநீர-ஆரவார நீர்மைய கூச
ஆகூழ்-ஆதற்குக் காரணமாகிய ஊழ் ௩எக
ஆக்கல்-உயர்த்தல் உகூச
ஆக்கிக்கொளல்-உளதாக்கிக் கோடல் , ௧0உகூ
ஆக்கிக்கோடல்-முடித்துக் கொள்க கூஎஅ
ஆக்கும்-வளர்க்கும் கூககூ
ஆங்கால்-விளையுங்கால் ௩எகூ
ஆசு-குற்றம் ௫0௩
ஆடியற்று-ஆடினாற் போலும் ச0க
ஆட்சி-பயன் கோடல் உருஉ
ஆண்மை-ஆளுந்தன்மை கூ0கூ
ஆயம்-வருவாய் கூ௩கூ
ஆயிடை-அவ்விருவழியும் ககஎகூ
ஆர-நிறைய அ௩எ
ஆரா-ஒருகாலும் நிரம்பாத ௩எ0
ஆரார்-ஆரப்பெறுர் கூ௩கூ
ஆராவியற்கை-நிரம்பாத இயல்பு ௩எ0
ஆருயிர்-பெறுதற்கரிய மக்களுயிர் எ௩
ஆர்க்கும்-பிணிக்கும் சஅஉ
ஆர்வம்-விருப்பம் எச
ஆர்வலர் அன்புசெய்யப்பட்டார் எக
ஆள்வினை-முயற்சி கூ௩உ
ஆறு-நெறியாக ககூக
ஆறு-பயன் ௩எ
ஆற்ற-மிக ௯ச
,, -துவர ௩கூஎ
ஆற்றலது-ஆற்றலையுடையது எகூ௫
ஆற்றறுக்கும்-களத்திடை வீழ்த்துப்போம் அகச
ஆற்றருப்பார்-கைவிடுவார் எகூஅ
ஆற்றுக்கடை-செய்யாவிடின் ௲கூகூ
ஆற்றுதார்-ஆற்றலில்லாதார் அகூச
ஆற்றுதான்-கொடாதான் ௧00எ
ஆன்ற-நிரம்பிய கசஅ
,, -அமைந்த கூஅக
ஆன்று-நிறைந்து ௩கூ௫
இகந்து-பிரிந்து ககூ0
இகவாவாம்-நீககாவாம் கசகூ
இகழ்ச்சி-சோர்வு ரு௩க
இசைபட-புகழுண்டாக உ௩க
இடிக்கும்-நெருங்கிச் சொல்லும் ௲சஎ

இடிபுரிந்து-கழறுதலை மிகச்செய்து ௬௦௭
இடும்பை-பிறவித்துன்பங்கள் ௪
இடும்பை-துன்பம் ௧௩௮
இட்டிதாயினும்-சிறிதாயிற்றாயினும் ௪௭௮
இணர்-கொத்து ௬௫௦
இமையார்-அமரர் ௯௰௬
இயலாள்-இயல்பின்கண்ணே நிற்பாள் ௧௪௭
இயல்வது-இனிது நடப்பது ௭௩௪
இயற்றல்-தனக்குப் பொருள் வரும் வழிகளை மேன்மேல் உளவாக்கல் ௩௮௫
இய்ன்றது-நடந்தது ௩௫
இயைந்தக்கால்-கூடியக்கால் ௪௮௧
இயைபு-பொருத்தம் ௫௭௩
இயையாக்கடை-முடியாத வழி ௨௩௦
இரத்தக்கார்-இரத்தற்கேற்புடையார் ௧௦௫௧
இருந்தேமா-இருந்தேமாக ௧௩௧௨
இருந்தோம்பி-இல்லின்கணிருந்து பொருள்களைப் போற்றி ௮௧
இருபுனல்-கீழ்நீர் மேல்நீர் ௭௩௭
இருமனம்-கவர்த்த மனம் ௯௨௦
இருவினை-நல்வினை தீவினை ௫
இருவேறு-இரண்டுகூறு ௩௭௪
இலம்-வறியம் ௧௭௪
இலர்-நல்கூர்வார் ௨௭௦
இலாக்கடை-இல்வழி ௧௦௫௧
இல்லல்ல-(யாவர்க்கும் முன்னே)அமைந்துகிடந்தனக௧௫
இல்லாகியாங்கு-இல்லை
இல்லாகியார்-முற்காலத்துத் தாமுளராகியே இலராகி யொழுகினூர் ௯௩௫
இல்லாக்கால்-நல்கூர்ந்தவழி ௧௦௩௪
இல்லிலோர்-இல்லாளை இல்லாதோர் ௫௧
இவக்காண்-இங்கேயன்றே ௧௧௮௫
இவர்தந்து-மேல்கொண்டு ௧௧௮௨
இவறல்-வேண்டும்வழிப் பொருள் கொடாமை ௪௩௨
இவறன்மை-உலோபத்தினது தன்மை ௪௩௮
இவறி-விரும்பி ௧௦௦௧
இவறியார்-கைவிடாதார் ௯௩௫
இவறியான்-பற்றுள்ளஞ் செய்தான் ௪௩௭
இழத்தும்-இழப்பேம் ௧௨௫௦
இழத்தொறூஉம்-இழக்குந்தோறும் ௯௪௦
இழந்தவன்-(ஆடை) குலைந்தவன் ௭௮௮
இழவூழ்-இழத்தற்கேதுவாகிய ஊழ் ௩௭௨
இழிந்த-தாழ்ந்த ௧௩௩
இழுக்கல்-வழுக்குதல் ௪௧௫
இழுக்கம்-ஒழுக்கத்தில் தவறுதல் ௧௩௩
இழுக்காமை-மறவாமைக் குணம் ௫௩௯
இழுக்காறு-தீநெறி ௧௬௪
இழைத்துணர்ந்து-நுண்ணிதாக ஆராய்ந்தறிந்து ௪௧௭
இழைந்து-உண்ணெகிழ்ந்து ௧௧௭௭
இளி-இழிவு ௯௭௦
இளித்தக்க-இளிவாகத் தக்க ௯௬௪

இறந்தமைந்த-கழியப் பெரிய ௯௦௦
இறல்-இறுதி ௯௨௦
இறல்முறை-இறத்தல் முறை ௮௮௫
இறும்-முறியும் ௯௭௫
இற்பிறந்தார்-குடிப்பிறந்தார் ௯௫௧
இனமுறையர்-எமக்கின்ன முறையினை உடையார் ௯௯௮
இனைத்துணைத்து இன்ன அளவிற்று ௮௭
இனையர்-இத்துணை அன்பினர் ௭௯௦
இன்கண் உடைத்து-இன்பமுடைத்தாயிருக்கும் ௧௧௫௨
இன்சொலினது-இனிய சொற்களைச் சொல்லுதலின் கண்ணது ௯௩
இன்புறாஉம் இன்பத்தை மிகுவிக்கும் ௯௪
இன்மையா-இல்லாமையாக ௮௪௧
இன்துணையா-இனிய துணையாக ௮௭௫
இன்னம்-இத்தன்மையம் ௭௯
இன்னாச்சொல்-கடுஞ்சொல் ௯௫
ஈகலான்-இவறன்மாலையன் ௮௯௩
ஈத்துவக்கும்-வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர் உவத்தலான் உவக்கும் ௨௨௮
ஈந்தது-உபகரித்தது ௧௧௪௨
ஈயப்படும்-இடப்படும் ௪௧௨
ஈரம்-அன்பு ௯௧
ஈர்ங்கண்-குளிர்ந்த இடம் ௧௦௯௮
ஈர்ங்கை-உண்டுபூசிய கை ௧௦௭௭

ஈன்பது-பயப்பது ௧௯௫
உகாஅமை-உமிழாமை ௯௮௫
உக்கக்கால்-இறந்துபட்ட வழி ௧௨௭௦
உஞற்றிலவர்-முயற்சி இலராயினார் ௯௦௪
உஞற்றுபவர்-முயல்வார் ௯௨௦
உடம்பாடு-மனப் பொருத்தம் ௮௯௦
உடற்றும்-வருத்தும் ௧௩
உடற்றுபவர்-முடியாதாக்கிச் செய்யாதார் ௮௧௮
உடன்று-வெகுண்டு ௭௯௫
உடுக்கை ஆடை ௭௮௮
உடையேமா-உடையேமாக ௧௨௫௦
உட்கப்படாஅர்-அஞ்சப் படார் ௯௨௧
உணக்கின்-காயவிடுவனாயின் ௧௦௩௭
உணங்க-மெலியாநிற்க ௧௩௧௦
உணர்ப்பாற்று-உணரும் பான்மையை உடைத்து ௧௧
உண்கண்-மையுண்டகண் ௧௦௯௧
உண்டற்று-உண்டாற் போலும் ௧௧௦௭
உண்ணற்க-உண்ணுதொழிக ௯௨௩
உண்பதூஉம்-உண்ணப் படுவதும் ௧௯௧
உப்பக்கம்-புறம் ௯௨௦
உயிரச்சம்-உயிர்ப்பொருட்டான்வரும் அச்சம் ௫௦௪
உயிர்த்து-மூக்கான் மோந்து ௧௧௦௪
உய்க்கிற்பின்-நுகரவல்லனாயின் ௯௪௦
உய்வில்-உய்யமாட்டாமைக் கேதுவாய ௧௧௭௪
உரம்-திண்ணிய அறிவு ௯௦௦

உரவோர்-மனவலியுடையார் ௧௩௯
உரனசைஇ-இன்பநுகர்தலை நச்சாது வேறலைச்சி ௧௨௬௩
உரியாள்-உரிமையாகியாள் ௧௪௯
உரைசான்ற-புகழமைந்த ௫௮௧
உலந்த-வற்றிவிட்டன ௧௧௭௪
உலைவிடத்து-உலைவுவந்தால், தளர்ச்சி வந்தவிடத்து ௭௬௨, ௮௮௩
உலைவின்றி-இளையாது ௬௨0
உல்கு-சுங்கம் ௭௫௬
உவக்காண்-உங்கே ௧௧௮௫
உவமை-நிகர் ௭
உவரி-கடல் ௭௬௩
உழத்தொறூஉம்-துய்க்குந்தோறும் ௯௪0
உழந்து-வருத்தமுற்று ௧0௩௧
உழப்பிக்கும் உறுவிக்கும் ௯௩௮
உழையிருந்தான்-அமைச்சன் ௬௩௮
உளவரை-தனக்குள்ள அளவு ௪௮0
உள்வீழ்ந்தக் கண்ணும்-சுருங்கியவிடத்தும் ௯௫௫
உள்ளப்படும்-நன்கு மதிக்கப்படும் ௯௬௫
உள்ளல்-கருதுதல் ௨௮௨
உள்ள வெறுக்கை-ஊக்க மிகுதி ௬00
உள்ளறிவான்-உளப்பாட்டினை அறிவான் ௬௭௭
உள்ளற்க-நினையாதொழிக ௭௯௮
உள்ளாறும்-மனத்தின்கண் அப்பொழுதே ஆறும் ௧௨௯
உள்ளியது-நினைத்த பொருள் ௫௪0
உள்ளுள்-உள்ளுள்ளே ௧0௫௭
உள்ளூர்-ஊர் நடு ௨௧௬
உள்ளொற்றி-உண்ணிகழ்கின்ற துய்த்துணர்ந்து ௯௨௭
உறவரினும்-மிக வருமாயினும் ௬௬௯
உறன்முறை-உறவுமுறைத் தன்மை ௮௧௫
உறாஅ-உறாமல் ௧0௫௨
உறாஅசவர்-நொதுமலர் ௧0௯௬
உறாஅதோ-உறுவதொன்றன்றோ ௧௧௬௩
உறுகண்-துன்பம் ௨௬௧
உறுதோறு-பெறுந்தோறும் ௧௧0௬
உறுபசி-மிக்க பசி ௭௩௪
உறுபடையான்-பெரும்படையுடைய அரசன் ௪௯௮
உறூஉம்-மிகுவிக்கும் ௯௪
உறைபதி-உறைவிடம் ௧0௧௫
உறைவது-ஒழுகுவது ௬௨௯
உற்றக்கடை-வந்துற்ற இடத்து ௩௭௨
ஊக்காது-நோக்காது ௨௫௩
ஊக்கார்-மேற்கொள்ளார் ௪௬௩
ஊக்கி-தொடங்கி ௪௭௩
ஊட்டா-உறுவியாது ௩௭௮
ஊண்மாலையவர்-உண்டலையியல்பாகவுடையார் ௧0௩௫
ஊதியம்-பயன் ௨௩௧
ஊர-அடர ௬0௧
ஊராண்மை-உபகாரியாந் தன்மை ௭௭௩
ஊருணி-ஊரின் வாழ்வார் தண்ணீருண்ணுங்குளம் ௨௧௫
ஊழ்த்தும்-மலர்ந்து வைத்தும் ௬௫0
ஊறுபாடு-துன்பம் விளைதல் ௯௪௫
ஊற்றாம்-பற்றுக்கோடாம் ௪௧௪
ஊற்றுக்கோல்-ஊன்றுகோல் ௪௧௫

ஊன் - உடம்பு உருக
ஊன்று நிலை - தாங்குந் திண்மை எஅகூ
எஃகு - படைக்கலம் எருக
,, - கூர்மை எஎங
எச்சம் -வழியினுள்ளார் (தானிறந்தழி எஞ்சி நிற்பதாகலின் எச்சம் என்றார்) ககஉ
எச்சம் - நன்மக்கள் ககச
எஞ்சாது - அஞ்சியொழியாது சுக0
எஞ்சாமை-இடைவிடாது நிற்றல் ஙஅஉ
எண்ணியாங்கு-எண்ணிய வாறு சுசுசு
எண்ணுவம் - (பின்) எண்ணக்கடவோம் சகஎ
எண்பொருளவாக-எளிய பொருளவாமாறு சஉச
எதிரதா-(வரக்கடவதாகிய வதனை)முன்னறிந்து சஉகூ
எதிர்சாய்தல்-எதிர்தலையொழிதல் அருஅ
எதிர்சாய்ந்து-எற்றுக் கொள்ளாது சாய்ந்து அருரு
எத்தன்மைத்தாயினும் - யாதோர் இயல்பிற்றாய்த் தோன்றினும் ஙருரு
எப்பால் - எவ்வகைப் பட்ட ருஙங
எய்தின்று - உற்றது கஉச0
எரிமுன்னர்-எரிமுகத்து சஙரு
எவனுவர்-என்செய்வர் ககசுரு
எவ்வது - யாதொருவாற்றான் சஉசு
எவ்வம் - இளிவரவு, துன்பம் உஉஉ, அருங
எழிலி - மேகம் கஎ
எழுநாளேம்-எழுநாளுடையமாயினேம் கஉஎஅ
எள்ளப்படும்-இகழப்படும் ககூக
எள்ளற்க-இகழாதொழிக சகூக
எறிக - செய்க ருசுஉ
எற்றா - நீங்காத சுசுங
எற்றிற்கு-எத்தொழிற்கு க0அ0
எற்றென்று-யான் செய்தது எத்தன்மைத்தென்று சுருரு
எனைத்துணையராயினும்-எத்துணைப் பெருமையுடையராயினும் கசச
எனைமாட்சித்தாகியக்கண்ணும் - மாட்சியெல்லாமுடைத்தாயவிடத்தும் எரு0
என்றற்று - என்று கருதுதலோடொக்கும் ககசஅ
ஏக்கறுதல்-ஆசையால் தாழ்தல் ஙகூரு
ஏதப்பாடு - குற்றமுண்டாதல் சகூச
ஏதில - பழுதாம் சசு0
ஏதிலார் - அயலார் கஅஅ
ஏதின்மை - பகைமை அகசு
ஏந்திய - உயர்ந்த அகூகூ
ஏமம் - காவல் எஙஅ
ஏமரா - காவலற்ற சசஅ
ஏமாப்பு - வலியாதல், அரண் ககஉ, கஉசு
ஏமார்த்தல்-ஏமஞ்செய்தல் சுசு0
ஏமுற்றவர் - பித்துற்றார் அஎங
ஏர் - அழகு க0ருங
ஐயுணர்வு - செல்லப்படுகின்ற புலன்கள்,வேறுபாட்டான் ஐந்தாகிய உணர்வு (மனம்) ஙருச
ஐயுறவு - ஐயப்படுதல் ருக0
ஒக்கல் - சுற்றத்தார் சங
ஒட்டல் - தாக்குதல் சகூகூ
ஒட்டார் - பகைவர் அஉசு
ஒட்பம் - ஒண்மை ச0ச
ஒண்மை - நல்லறிவு அசச
ஒத்தாங்கு - ஒப்ப ருசுகூ

ஒப்பாரி - ஒப்பு கOஎக
ஒரால் - நீக்குதல் கருங
ஒருவந்தம் - ஒருதலையாக, நிலைபெற்ற ருசுங, ருகூங
ஒருவுக - விடுக அOO
ஒருவுதல் - ஒழிதல் சுருஉ
ஒரூஉம் - ஒழியும் அகஉ
ஒல்காமை - தளராமை சுசுஉ
ஒல்கார் - சுருங்கார் கஙசு
ஒல்லாக்கால் - இயலா இடத்து சுஎங
ஒல்லும் வாய் - இயலுமிடத்து சுஎங
ஒல்லை - கடிது ருசுங
ஒழியவிடல் - ஒழியவிடுக ககங
ஒழுகலாற்றார் - ஒழுகமாட்டார் உஅசு
ஒழுக்காறு - ஒழுக்கநெறியாக கசுக
ஒளியார் - அறிவால் ஒள்ளியார் எகச
ஒள்ளமர்க்கண்ணாள் - ஒள்ளிய வாய் அமரைச் செய்யும் கண்ணையுடையாள் ககஉரு
ஒள்ளியராதல் - தந்நூலறிவும் சொல்வன்மையும் தோன்றவிரித்தல் எகச
ஒறுக்கிற்பவர் - எள்ளுதற்குறியார் எஎகூ
ஒற்கம் - தளர்ச்சி சகச
ஒன்றல் - கூடுதல் அஅசு
ஒன்று - இணையின்றாக உஙங
ஒன்றாக - தன்னோடிணைப்பதின்றித் தானேயாக ஙஉங
ஒன்றாமை - பகைமை அஅகூ
ஓச்சி - தொடங்கி ருகூஉ
ஓச்சும் - செலுத்தும் ருசச
ஓட்டன்றோ - புறங்கொடுத்தலாம் எஎகூ
ஓஒதல் - தவிர்தல் கூருங
ஓத்து - வேதம் கஙச
ஓம்பப்படும் - பாதுகாக்கப்படும் கஙக
ஓம்பல் - செய்தல் சங
ஓம்பி - போற்றி, மிசைவித்து அக. அரு
ஓம்புவான் - புறந்தருவான் அங
ஓரார் - கேளாது சுகரு
ஓர்த்து - ஆராய்ந்து ஙருஎ
ஓஒஇனிதே - மிகவும் இனிதாயிற்று ககஎசு
கசடற - பழுதற ஙகூக
கடப்பாடு - ஒப்புரவு உகக
கடா - ஐயுறுத ருஅரு
கடாஅக்களிறு - மதக்களிறு கOஅஎ
கடாம் - மதம் ,,
கடி - காவல் கஉOரு
கடிதல் - ஒழித்தல் ருசகூ
கடிதோச்சி - அளவிறப்பச் செய்வார்போல் தொடங்கி ருசுஉ
கடுகி - குறைந்து ருசுச
கடுத்தபின் - ஐயுற்றால் சுகூச
கடுத்தது - மிக்கது எOச
கடைப்பிடித்து - குறிக்கொண்டு கூசச
கடைமுறை - முடிவில் எகூஉ
கடையர் - இழிந்தார் ஙகூரு
கட்டபின் - களைகட்டால் கOஙஅ
கட்டளைக்கல் - உரைகல் ருOரு
கட்படாம் - முகபாடம் கOஅஎ
கணத்தர் - இனத்தர் எஉO
கணிச்சி - கூந்தாலி கஉருக
கணை - அம்பு உஎகூ
கண் சாய்பவர் - தம்மறிவு தளர்வார் கூஉஎ
கண்டற்று - உணர்ந்தாற் போலும் உசசு
கண்ணஞ்சா - பாகர்க் கடங்கா ருOO

கண்ணஞ்சாது-செயிர்த்து நோக்கிய அவர் கண்ணிற் கஞ்சாது ருஅரு
கண்ணற-கண்ணோட்ட மற கஅ
கண்ணிணை-ஒருவர் கண்க ளோடுஒருவர் கண்கள் ககOO
கண்பாடு-உறக்கம் கOசகூ
கதம்-வெகுளி கூ௩O
கதுப்பினுள்-தழைந்த கூந்த லினையுடையாள் ககOரு
கதுமென-விரைந்து ககஎ௩
கந்தா-பற்றுக்கோடாக ருOஎ
கரப்பாக்கு அறிந்து-மறைதலை அறிந்து ககஉஎ
கரப்பிடும்பை-உள்ளது கரத்தலாகிய நோய் கOருகூ
கரப்பிலார்-உள்ளது கர வாது கொடுப்பார் கOருரு
கரவு-வஞ்சனை உஅஅ
கரி-சான்று உரு
கரியார்-இருண்டிருப் பார் உஎஎ
கருக்காய்-இளங்காய் க௩Oகூ
கரைந்து-அழைத்து ருஉஎ
கலந்தற்று-கலந்த கலவை போலும் ககஉக
கலுழும்-அழும் ககஎ௩
கலுழ்வது-அழுகின்றது ககஎக
கவர்ந்தற்று-நுகர்ந்ததனோடு ஒக்கும் கOO
கவறு-சூது கூஉO
கவிகை-குடை ௩அகூ
கவிழ்ந்து-இறைஞ்சி கககச
கவின்-அழகு கஉ௩ச
கவுள்-கபோலம் கூஎஅ
கவ்விது-அலர்தலையுடைத் தாயிற்று கக௬௬
கவ்வை-அலர் கக௬௩
கழகம்-களம் கூ௩ரு
கழாஅக்கால்-தூயவல்ல மிதித்த காலை அ௬O
கழிய-மிக ௬Oச
களர்-சேற்று நிலம் ருOO
களையுநர்-களைவார் அஎகூ
கள்வார்-களவினைப் பயில்வார் உகூO
கள்வேம்-வஞ்சித்துக் கொள்வேம் உஅஉ
கள்ளற்று-கள்ளுப் போலும் கஉஅஅ
கள்ளாமை-பிறரை வஞ் சித்துக்கொள்ளாக் கரு தாமை உஅக
கள்ளார்-களவினைப் பயிலாதார் உகூO
கள்ளொற்றி-கள்ளை மறைந்துண்டு கூஉஎ
கறுத்து-செற்றங் கொண்டு ௩கஉ
கற்றக் கடைத்தும்-கற்ற இடத்தும் அஉ௩
கன்றிய-மிக்க உஅ௬
காட்சி-காண்டல் ௩அகூ
காணலுற்ற-காண்டல் வேண்டி கஉ௬௬
காண்கம்-காணக்கட வேம் க௩Oக
காண்கிற்பின்-காணவல்ல ராயின் ககூO
காண்பரிது-காண்டல் அரிது ககூ
காண்பவர்-அனுபவிப் பார் ௩எகூ
காண்பு-காண்டல் ககூ
காதலம்-காதலை யுடையேம் க௩க௬
காதலனயின்-காதல் செய்த லுடையனயின் உOகூ
காதற்று-காதலை யுடைத்து கூ௬O

காதன்மை-அன்புடைமை ருOஎ
காமக்கலன்-விரும்பியேறும் மரக்கலம் கூOரு
காமுறுதல்-அவாவுதல் சOஉ
காமுறுவர்-விரும்புவர் ந௲கூ
காமுற்றற்று-அவாவினுற் போலும் சOஉ
காம்பு-வேய் கஉஎஉ
காயார்-வெகுளார் கஉOஅ
காய்தி-காயாநின்ருய் கசகூ
காரறிவாண்மை-இருண்டவறி வினையுடையராதல் உஅஎ
கால்வல்-கால்வலிய சகூகூ
காழ் - பரல் ககககூ
காழ்த்த விடத்து-முதிர்ந்த நிலைமைக்கண் அஎகூ
கிழமை-உரிமை எஅரு
கிளவா-சொல்லாத எகரு
கிழல்லார்-சிறியராகார் கூஎந
கீழ்தல்-சிதைத்தல், விலக்கல் அOக
குடங்கர்-குடில் அகூO
குடம்பை-முட்டை நநஅ
குடிமை-குலனுடைமை கநந
குடியாக-மேன்மேலுயரும் நற்குடியாக கூOஉ
குடியோம்பல்-தளர்ந்த குடிகளைப் பேணல் நகூ
குண நலம்-குணங்களா னய நலம் கூஅஉ
குழா அத்து-அவையின்கண் அசO
குழாத்தற்று-குழாம் வந் தாற் போலும் நநஉ
குளவளா-குளப்பரப்பு ருஉந
குறுகுங்கால்-அணுகுழி ககOச
குறுகுதல்-நணுகுதல் அஉO
குறியெதிர்ப்பு-அளவு குறித்து வாங்கி அவ்வாங்கிய வாறேஎதிர்கொடுப்பது உஉக
குன்றன்னர்-குன்றத்தை யொக்கும் அருந்தவர் அகூஅ
குன்றிக்கால்-குன்றின் கரு
குன்றுவர்-தாழ்வர் கூகூச
கூத்தாட்டு-கூத்தாடுதல் செய்கின்ற நநஉ
கூப்பி-குவித்து உகூரு
கூம்பும் பருவத்து-வினை மேற்செல்லாதிருக்குங் காலத்து சகூO
கூழ்-சோறு கூச
கூழ்த்தாகி-உணவிற்ருய் எசரு
கூன்கையர்-வளைந்த கை யினை-யுடையார் கOஎஎ
கெடல்-தவிர்ந்திருத்தல் கூகஉ
கெடாஅ-உரிமையறு து அOகூ
கெடுங்காலை-கெடுங் காலத்து எகூகூ
கெடுநீரார்-இறக்குமியல் பினையுடையார் கூOரு
கெடுவல்-கெடக் கடவேன் கககூ
கெழீஇ-செறிந்த அககூ
கெழுதகை-உரிமை அOச
கெழுதகைமை-உரிமை எOO
கேடில்-அழிவில்லாத சOO
கேண்மை-கேளாந் தன்மை கOகூ
கேண்மையவர் நட்பினை யுடையார் அOஎ
கேளாத்தகைய-செவிடாந் தன்மைய சகஅ
கேளார்-பகையாய் எற்றுக் கொள்ளாதார் கூசந
கைகூப்பி-கைகுவித்து உகூO
கைதூவேன்-கையொழி யேன் கOஉக
கைம்மாறு-தலைமாருக ககஅந
கையறியா-செய்யு முறைமை யறியாத அநகூ
கையறியாமை-செய்வதறி யாமை உருகூ

கையாறு-இடும்பையாக கூஉஎ
கையிகந்த - குற்றத்தின் மிக்க கூகூஎ
கையிகந்து-கைகடந்து கஉஎக
கைவேல்-கைப்படையாய் வேல் எஎச
கொக்கொக்க-கொக்கிருக்கு மாறுபோல இருக்க சகூ0
கொடிறு-கதுப்பு க0எஎ
கொடுப்பதூஉம்-பிறர்க்கீவதும் க00ரு
கொட்க-புலப்படும் வகை சகங
கொட்பு-திரிபு எஅங
கொண்டன்னது கொண்டு வந்தாற்போலும் க0அஉ
கொலைவினையர்-கொலைத்தொழிலையுடையார் ஙஉகூ
கொளக்கிடந்தது-அடையக்கிடந்தது ருஅகூ
கொளப்பட்டேம்--நன்கு மதிக்கப்பட்டேம் கூகூகூ
கொளற்கரிதாய்-புறத்தாராற் கோடற்கரிதாய் எசரு
கொளீஇ-பண்ணி கூஙஅ
கொள்ளற்க-கொள்ளா தொழிக எகூஅ
கொள்ளாக்கடை-செய்யா வழி ககசுரு
கொற்றம் வென்றி ருஅங
கொன்றன்ன-கொன்றாலொத்த க0கூ
கொன்றாங்கு-கெடுக்குமாறுபோல ருஙஉ
கோடா-செப்பமுடையவராய் க0அகூ
கோடியுமல்ல-கோடியளவுமன்றி ஙஙஎ
கோடின்றி-கரையின்றி ருஉங
கோடு-வளைவு உஎகூ
கோடுகொடேறும்-மேன்மேற் பணைத்தொழாநின்றது கஉகூச
கோட்டக்கது உடைத்து-கொள்ளுந்தகுதியை உடைத்து உஉ0
கோட்டதாயினும்-கோட்டையுடையதாயினும் ருககூ
கோட்டம்-கோடுதல் கககூ
கோட்டுப்பூ-கோடுதலைச் செய்யும்மாலை கஙகங
கோளில்-கொள்கையில்லாத கூ
கோறல்-கொல்லுதல் ஙஉக
கௌவை-அலர் ககசங
சலம்-தீயவினை கூகூ0
சாகாடு-சகடம் சஎரு
சாக்காடு-மரணம் உஙரு
சாய-கெடும்வண்ணம் எசக
சாயல்-மேனியழகு ககஅங
சாய்தல்-ஒழிதல் அருஅ
சாய்பவர்-தளர்வார் கூஉஎ
சார-நிற்க ஙஉங
சார்தரா-சாரமாட்டா உஙக
சார்பிலார்-துணையில்லார் சசகூ
சால-பொறுக்குமளவின்றி சஎரு
சாலப்படும்-பணைத்துவிளையும் க0ஙஎ
சாலும்-அமையும் உரு
சால்பு- அமைதி க0ரு
சாவாமருந்து-அமிர்தம் (சாவாமைக்குக் காரணமாகிய மருந்து) அஉ
சாற்றுவேன்-விரியச் சொல்வேன் கஉகஉ
சிதைவிடத்து-சிதைவுவந்த இடத்து ருகூஎ
சிதைவின்றி-அழிவின்றி ககஉ
சிமிழ்த் தற்று-பிணித்தாற் போலும் உஎச

